உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்.

சீகாழி

திருஞானசம்பந்தசுவாமிகள்

திருவருள்பெற்ற

கண்ணுடையவள்ளல்

திருவாய்மலர்ந்தருளிச்செய்தது.

---

இஃது

திருப்போரூர்

சிதம்பரசுவாமிகளால்

அருளிச்செய்த-உரையுடன்.

---

திருத்திருத்தி-காயாத்திரசுவாமிகள் பரம்பரைக்குரிய

பிறைசை

அருணாசலசுவாமிகள்

மாணாக்கராகிய

பாரிப்பாக்கம்

முனியப்பமுதலியாரால்

பார்வையிடப்பட்டு.

---

புரசைபாக்கம்

ஏழுமலைப்பிள்ளையவர்களால்

விவேகவிளக்கவச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

௲அ௱அ௫.



உ

# இந்நூலுரைபாடத்திற் சிலசில இடங்களினுள்ள "மறைச்சொற்பொருட்குத் தெளிசொற்பொருள்.



௧ - பவுரிக்கூத்து - வலமிடமாகச் சூழ்ந்தாடுங்கூத்து.

௨ - குறுமன்னியர் - சிலராலறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவமுடையோர்.

ஷ - மகாமன்னியன் - பலராலு மறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவமுடையோன்.

ஷ - பிரளயாகலர் - மும்மலங்களு ளொருமலநீத்தோர் அவர். பிரமன் முதலானோர்.

௪ - ஞாதுரு - காண்பான் - ஞானம் - காட்சி - ஞேயம் - காணப்பட்டது.

௫ - சூக்குமைவாக்கு - வார்த்தைதோன்றற்கு முதற்காரணமாயுந்தியிலே நாதவடிவாய் நிற்கு மொருசத்தி - பரஞானம் - அநுபவஞானம் - அபரஞானம் - வாசகஞானம்.

௬ - பகடிக்கூத்து - உள்ளதுபோ னில்லாததைக்காட்டும் வெளிவேடம் அல்லது அகசியக்கூத்து.

௯ - அரிப்பாளன் - குப்பைமுதலிய விடங்களிற் பொன்முதலிய அரித்தெடுக்கின்றோன்.

௯ - கொழுந்தாடை - கரும்பினுனித்தழை.

௰௨ - சாயாபுருடன் - தந்நிழலைப்பார்த்துப் பின்னுகாயத்தையுற்று நோக்குகின்றார்க்கு அவ்வாகாயத்தின் கட்புருட வடிவம்போற் றோன்று மந்நிழற்காட்சி.

௰௫ - பைமறித்தல் - உள்ளிருந்தசரக்கு வெளிப்படப்பையைவாய்தொட்டு உட்புற மேற்பட்டும் வெளிப்புற முட்பட்டு மடங்கமறித்தல்.

௰௬ - கிண்கிணிவாய்ச்செய்தலர்தல் - வட்டவடிவாக முகங்கொண்டு மலர்தல்.

௨௨ - பஃறுளி - பல்துளி.

௪௫ - பற்ற - பார்க்கினும்.

ஷ - அருகித்தோற்றல் - சுருங்கித்தோற்றல்.

௫௨ - பிரேரகம் - காரியப்படுத்தல்.

௫௪ - பிரதிபலிதம் - எதிர்விம்பம்.

௫௯ - சசமலம் - அறியாமையமலம்.

௬௩ - கடா - வினா.

௬௪ - விட்டிஸ்சயாதிஸ்சத்தல் - நடுவேறில்லாமலெர்லித்தல்.

௬௫ - நக்கினம் - நிருவாணம்.

௭௭ - தேறிட்டநீர் - தேற்றாங் கொட்டையாற் றெளிவிக்கப்பட்ட நீர்.

௮௪ - கவுசனை - யாதாயினுமோர்பொருளை யுள்வைத்துமறையும் மேன்மூடிக் கட்டுமேற்கட்டு.

௮௮ - சுழல்விறிசு - கொள்ளிவட்டம்போற் சுற்றுவதாய ஒருவகை மருந்துவாணம் இத்தேயத்திக் காலத்தில் சுழல்புறிசு என்று வழங்குகின்றது.

௱௩ - அநன்னியம் - அன்னியமல்லாமை.

௱௪ - நெற்பொலி - தூற்றுநெல்.

௱௭ - தும்புசெறித்து - தும்பு அவிழ்த்து.

௱௰௩ - அநுபவிக்கச்சிதைக்கும் - அநுபவிக்கவறிகின்றபோதும்.

௱௪௨ - அவித்தியாகதம் - அஞ்ஞானமயம் வெறுவிடர் அநுபவிப்பதற் கில்லாமையால் விட்டோர் போன்றிருப்போர் கறண்டபற்களால் நெருக்கிப்புறண்டுதல்.

௱௭௧ - சேட்டித்தல் - தொழிற்படுத்தல் அல்லது குணக்கேடான தொழில் விளைத்தல்.

௱௭௭ - சிங்கி - விலங்கு.

௱௮௮ - நாங்கூழ் - நாகப்பூச்சியென்னு மோர்கிருமி.

௲ - விதளம் - மௌனம்.

௱௬௨ - மடலெடுப்பு - பனைமடலாற் குதிரைசெய்தேறுதல்.

௱௪௫ - முடிகளசமுத்தி - முடிசிரசு களசம் நீக்கம் முத்தி-வீடு.

௱௪௬ - வாசியென்றவார்த்தை - இதுசெய்க விடுகவென்று நியமாகக் கூறும்வார்த்தை.

௱௯௧ - வியாபகம் - கலப்பு வியாத்தி கலக்கப்படுவது.

௱௯௫ - விசர்க்கரித்தல் - விடுத்தல்.

௨௱ - ஐவரரசர் - பாண்டுமக்களாகிய தருமன்முதலியஐவர்.

௨௱௰ - மத்தகாசப்பிரகாசம் - புன்னகைப்பிரகாசம்.

— திருச்சிற்றம்பலம்.





# சிறப்புப்பாயிரம்.



வள்ளல் குருராயன் வாதுவென்றசம்பந்தன்
வள்ளன்மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தா - னுள்ளத்
தழிவிலடுக்குந்தேனை யன்பரெலாமுண்ண
வொழிவிலொடுக்கநூலோர்ந்து.

இச்செய்யுள் கருதிற்றியாதோவெனின், இந்நூன் முகத்தாசிரியர் பெயர் முதலிய வற்றைக்குறித்து நிற்றலிற் சிறப்புப்பாயிர வொழுக்க முணர்த்தல் கருதிற்றென்க.

வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன் - வள்ளன்மலர்த்தாடலைமேல்வைத்து-எ-து. வள்ளலாரென்னுந் திருப்பெயருடையவர் ஞானாசாரிய ருபராகிச் சமயவாதிக டருக்கச்செருக்குகள் கெடப் பட்டொழியப் பேரருணெறியான் வெற்றிகொண்டு சீகாழியென்னுந் திருநகர்க்கண்ணே மெய்ந்நெறிவிளங்க வீற்றிருந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது வள்ளற் றன்மையுடைய மலர்போலுந் திருவடிகளைத் தமது நன்முடிக் கண்ணேர் பொன்முடியாகவணிந்து.

ஓர்ந்து - உள்ளத் - தழிவிலடுக்குந்தேனை யன்பரெலாமுண்ண - வொழிவிலொடுக்க நூலுரைத்தான். எ-து. அத்திருவடிகளினருட்டுணையாற் றத்துவங்க ளனைத்துஞ் சடமென்றோர்ந் துணர்ந்தவற்றைக் கடந்து ...ற்காட்சியோடு திருவருட்காட்சியுஞ்செய் தங்ஙனம்வாதனையானசைத்தெழும்போதந் தோற்றுதலை யத்திருவரு ளொளியினடக்கி யாண்டு மேன்மேலு மெழாநின்ற சிவாநந்தத்தேனைத் தாமநுபவஞ்செய்த வாறதன்க ணன்புள்ள பக்குவருஞ் செய்தற்பொருட்டுச் சிவாநந்தாநுபவ வந்தரங்கமெல்லாம் வெளிப்பட்டு விளங்கவொழிவிலொடுக்கமென்றோ ருபதேசமுறையை யுரைத்தருளினார்-என்று.

வள்ளலென்னும்பெயர்.

ஆசிரியர்க்குத் தாமுன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண் ணவ்வா... ரிய மரபின்வழித்தாய் வந்தகார... வபிடேகச் சிறப்புப்பெயரெ

ன்க. அல்லதூஉம் பின்னர் ஞானாசாரிய நிலைக்கட் டமைதருஞான நோக்காணியைந்த கண்ணுடையவென்னுங் காரணவிசேடண மேற்கொண்டுநின்ற விவ்வள்ளலென்னும் பெயரின் டவ்விசேடணமிசையெச்ச நிலையினிற்ப நின்றதெனினு மமையுமென்க. இஃது வினைபண்பு முதலிய வடுத்ததொகை நிலைச்சொற்றொடராகாது தொகாநிலையாய்த் தனைத்தொடர் பயனிலை யுண்மைப்பொரு ளுணர்ச்சியின்றியிடையிட்டு நிற்கத்தான் செய்யுண் முதற்கட்டனித்திருந்தமையினாற்றலின் றாலோவெனின், அற்றன்று - கொடைமடங்குறித்த குணங்காரணமாகவந்த விவ்வள்ளலெனும்பெயர் தன்னுறுப்புகளுட் கொடைகுணம்புகழ் மூன்றுவளமென்னு நல்வகைகுறித்த புல்பொருட் பகுதிப்பாய வண்மையென்னு முதலுறுப்பா ஞசிரியர்க்குள வாயவக்கொடை முதலிய வருட்குணங்களைக் குறிப்பிற்புலப்பட விரித்தலிற்பொருளாற்றலுண்டென்க. அல்லதூஉம் இப்பெயர் உயர்பொருட் கிடனுயுடனிலைக்கூட்டாய் ஒரு நெறியலசைத்தா யோரினந்தழுவிப் பல்வகைக்குறிப்பிற்படர்ந்து முற்றியை புவண்ணப் பெருஞ்சொல்லாக நிற்றலிற் சொல்லாற்றலு முண்டென்க.

ஆயினிவ் வாசிரியர்பெய ரிச்செய்யுளி னிடைகடைகளி னொன்றினிறுத்தாது முதலடி முதற்சீ ரொருகைத்தொடைக்க ணிறுத்ததிற் குறித்த தியாதோவெனின், ஒன்றிரண்டெனக்கொண் டோருமறையாக மதன்றிருமுடிபி னடுநிலைநடாஅய்ப் புலம்பெறு தத்துவநியதியிற் போந்துண் மலந்தெறுமறிஞர் வாழ்த்திப்பரவும் ஆசிரியர் சன்மார்க்க முதலிய மார்க்க நான்கனுட்டலைமையிற் றலைமையாய வுத்தம சன்மார்க்கத்தினரொன்பது குறித்ததென்க. இங்ஙன முத்தமசன்மார்க்கத்தின ரொன்பதை யாசிரியர்கூறிய இதுவென்றதெல்லாம் பொய்யென்றுணென்னுந் திருவெண்பாவாற்காண்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

குருராயனென்பது - திருஞானசம்பந்தப் பிள்ளையார்க்குச்சிறப்பிற் சிறப்பாய காரணப்பெயராய்நின்று - ஓதியுணர்ந்து பன்னூற் பலசாதனங்களின் முயன்று முயன்றுசாரியத் தன்மையொருவா றரிதிற் கிடைப்பப்பெற்று மோரோர் காலங்களி னவத்தைவயப்பட்டு மயங்கு மற்றை யாசாரியர் போலாதோதாமல் வேதாகமாதிகளை முற்றுமுணர்ந் திறைப்போது மோர்சாதனங்களின் முயன்றதின்றி ஞானாசாரிய வருளிலக்கணங்க ளனைத்துந்தாமே தம்பாலிரம்பிநிற்ப வமர்ந்தன ரென்பதூஉம் - ஓதியுணர்ந்த வவ்வாசாரியர்க்கெல்லா மவரறிவின்க ணாருருவாய்நின் றறிவித்து மாசாரிய வுருவாய் ஒ

நின்றனுக் கிரகித்தும் நின்றன ரென்பதூஉம்-திருநோக்கஞ் செய்தன் முதலிய வறுவகைத்தீக்கையானுமன்றித் தமது திருவுருவைக் கண்ட வினைத்தன் மாத்திரையே பக்குவரல்லாரும் பக்குவராய்ப்பயன்பெற நின்ற திருவருட் பெருமைய ரென்பதூஉங் - குறித்ததென் றுணர்க. இங்ஙனம் ஓதாமல் வேதாகமாதி யுணர்ந்தமை முதலியவற்றை யாசிரியர் கூறியதன்மையு முன்னிலையுமென்னுந் திருவெண்பாவாற்காண்க.

அல்லதூஉம் - குருராயனென்பது வாதுவென்ற சம்பந்தனென்பதற்கு மேனிற்கவைத்த விதப்புக்குறிப்பாற் பிள்ளையாரிவ்வவதாரத்தின்மேனின்ற வவதாரத்தினுங் குமாரசற்குருவா யரனார்க்கு மகத்தியனார்க்கு முபதேசித்தருளிய வாசாரியத்தலைமையுங் குறித்த தெனக்கொள்க. (அருணகிரிநாதர்) தென்னவனங் கனஞ்சூழ் காத்திரி நகருலகாத், தென்னவனுங் கனர்தப்பதநீட்டினன் செல்வமுன்பின், றென்னவனங்க நன்னீற்றுற்றிருத்திய தென்னவின்னநீ, தென்னவனந் கனங்கைச்சிலைக் கூனையுந்தீர்த்தருளே, என்றதனாற் பிள்ளையாரிவ்வவதாரத்திற்குமேனின் றவ்வவதாரத்திற் குமாரசற்குருவென்பது காண்க-கல்லாடம்- உழன்மதிற்சுட்ட தழனகப்பெருமான் வணங்கிநின்றேத்தக், குருமொழிவைத்தோய் குறுமுநிதேற நெடுமறைவிரித்தோய் சித்தியார்,; அருமறையாகமமங்க மருங்கலை நூறெறிந்த, வகத்தியனுக்கோத் துரைக்குமருட் குருவாங்குருளே, என்பவைகளா லரனார்க்கு மகத்தியனார்க்கு முபதேசித்த் வாசாரியத்தலைமையையுணர்க.

ஆயிற்குரு வேந்தனென்னாது குருராயனென்றதென்னை குறித்தற்கோவெனின் நான்கன் வேற்றுமையானடுத்து மிக்குயர் நெறிப்பொருண்மையின் வந்தகாரகச் சிறப்பொருதலைத் தொடர்மொழிப்பெயராய் விக்குருராயனென்பதன்கட் குருவென்பதன் முதனிலையெழுத்துத் தமிழியல்விதிப்படி மொழிக்கு முதலாகியும் ராயனென்பதன் முதனிலையெழுத்துத் தமிழியல்விதியின்றி யாரியவியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் வந்திருவகையியலுங்கோடலி னிதனைத் தம் பெயராகவுடைய பிள்ளையாருந் தமிழ்நூல் வடநூலென்னு மிருவகைநூற்கு முரியாரென்பது குறித்தற்கென்க. ஆசிரியர் மறைப்புலவன் றமிழ்க்குரிசில் சீகாழிச்சம்பந்தனென்றதனு லிருவகைநூற்கு முரியாரென்பது காண்கவென்க - அல்லதூஉம்- பொருள்வேறுபடாது சிறிதே வடிவுவேறுபட்டுநின்ற குருராயனென்பது தன்னை யுள்ளுன்றி நோக்கினர்க் கிலைமறை காய்போதல் ஜாவென்னு முயிர் மெய் யேறியிருந்த தன்முன் வடிவுமுட்டுதொண்டு விளக்கங்காட்டி நிற்கின்ற வினிதனையுடைய பிள்ளையாருந்தமதுகடவுட்டன்மை வேறுபடா

யினுஞ் சாராதுநின்ற பதிதவாதிகளது பயனில் வாதமெனினு மமையுமென்க. எதிரேற்கப்பட் டெதிர்வினைமேற்பட மேற்கொள்வினையெழுச்சிப்பொருளின்வந்த வெஃகலென்னும் பிறவினைப்பகுதியான த்தமவென்ற வென்னும்பெயரெச்சஞ் சம்பந்தனென்னும் பெயர்கொண்டு முடிந்தது. இங்ஙனம் வெற்றிகொண்டபருவம் பிள்ளையார்க் கிளங்குமாரப்பருவமெனக் குறித்ததென்க. உம்மை எச்சமென்ப திளஞ்சேய் மேற்றாகலின்.

சம்பந்தனென்பது பிள்ளையார்க்கு மூவகைலக்கண முமூவுலகும் புகழப் பொற்பொடுபுணர்ந்த வற்புதத் திருப்பெயராகலின் ஆண்டு பெருமானருளப் பிராட்டியாரளித்த சிவஞானத்தேன் னமுதருந்தி யச்சிவஞானத்திற் குரிமைபூண்டமை குறித்ததென்றுணர்க. ஆயினுஞ்சிவஞானசம்பந்தனென்றது சம்பந்தனென வைத்த தென்கொலோவெனின், சிவஞானமுமதனிற் சிவானந்த மானந்தாதீதமென்பவைக்குமுரிமைபூண்ட தன்மைபற்றியும் அவற்றை யுலகுயிர்க் கிங்ஙனமென்றுணர்த்தி யுரிமைசெய்விக்கு மாட்சிபற்றியு மிங்ஙனம் வைத்ததென்க.

அல்லதூஉம் - சுருங்கச்சொல்லுதல் லெனப்படுஞ் சம்பந்தனெனவே சிவஞான சம்பந்தனென வுரிமைச்சிறப்பு வழக்காற்றானே தோன்றுமென வைத்த தெனினுமாமென்க. எங்ஙனமெனின் இந்திரனென்பது இறைமைச்சிறப்பு வழக்காற்றே தேவேந்திரனையும் உடையானென்பது பொருட்சிறப்புவழக்காற் பொன்னுடையானையுங் குறிக்குமாகலினென்க. வள்ளன்மலர்த்தாளென்றும் ஒருவகைவனப்பிருவகைச்சந்தி மூவகைமொழித் தொகைச்சொற்றொடர்க்கண் வள்ளலென்னுங் குணிப்பெயர்வினைமுதற் றொழிற்பயனுறப் படுமுடைமைக் குணப்பெயராய்நின்று பிள்ளையாரது திருவடிகடம்மை யடைந்தோர்க்குவளாயா தாநந்தப்பேற்றையளித்து இவரைத்தாங்கிக் கோடலைக் குறித்ததென்றுணர்க.

அஃதேலாநந்தப் பேற்றைத்தருதற்குத் தாங்கிக்கோடற்குங்கருத்தர் - பிள்ளையாரன்றோ வங்ஙனமிருப்பத் திருவடிகட்கிங்ஙனங்கூறலெங்ஙனமெனிற் றிருவடிகடம்மை வழிபடுவோர்க்கிரங்கி யின்பமீதற் பொருட்டெழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சிநிகழ்ச்சிக் கருவியாய்நின்று அவரை யவ்வழிபடுவோர்பால் வருவித்தலானும் ஞானதீக்ஷை பண்ணுங்கா லவர்சென்னியிற் சூட்டப்பட் டைக்கியம்வருவித்தலானு நித்தியானந்தப்பேறு வாய்க்குமாகலி னிங்ஙனமென்க.

அல்லதூஉம் - வாட்டமிலருளுங் கோட்டமில்குணனு மலசயா நிலையு நசையிழனனும், வெஃகுளாப்பண்பும் விடாப்பேரன்புஞ்,

செவ்வியின்மரீஇ யெவ்வெவ ரெவ்வகை, வேட்டனரவ்வகை விருப் பொடுகுறிப்பின், வளையாதிதல் வள்ளற்றன்மை, என்பவாகலி னிவ்வ ள்ளற்றன்மையைத், தம்பாலடைந் தோரிடையடைவித், தருளுங்கரு ணை பற்றியங்ஙனங், கூறியதெனினு மமையுமென்க. அஃதேல் வள்ள ற்றன்மை வழங்குமலர்போலுந் திருவடியென்றன் றேவுரைவிரித்தல் வேண்டுமெங்ஙனமெனின் வள்ளற்றன்மையுடையமலர்போலுந் தாளென விரித்திருக்கின்றதேயெனின் அங்ஙனமடைவித்தலும் வள்ளற்றன்மை யேயாகலினு முடையதொன்றன்றேபுதவப்படுமாகலினு மிங்ஙனம் விரித்த லங்ஙனங்கூறற்கு மமைதியாமென்க.

அல்லதூஉம்- அருளின்றியமையாத வள்ளற்றன்மைக்கவ்வருளே முதற்காரணமாமாகலின் ஆநந்தவடிவராகிய பிள்ளையா ரவ்வாநந்தப் பேற்றையளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்காரணமாகிய திருவருட் சத்தியே திருவடியென்றுகுறித்தற்குக் காரணத்தைக் காரியமாக வி ண்டுபசரித்ததெனினு மமையுமென்க.

அல்லதூஉம் - எமதுதிருவடிகளை வழிபடின் வீட்டின்பமெளி திற்றருவேமென்று பிள்ளையார்விதித்தருளிய வருள்விதிப்படியறிந்து வழிபடி னவ்வழிபாட்டா லவ்வீட்டின்பந்தரப்பெறுத லுண்மையா கலி னவ்வுண்மைநோக்கியீண்டு கூறியதெனினும் பிள்ளையார்திருமே னிமுற்றுந் தெய்வத்தன்மை பூரணமாகலி னதனையறிவிக்க வீண்டுகூ றியதெனினு மமையுமென்க. திருவடிகட்கு அடையாய வள்ளலென் பதூஉம் - ஆசிரியர்பெயராய வள்ளலென்பதூஉம் அடியிணை எது கைத்தொடையாய் எழுத்தலசைசீரொலி பொருளாதிகளாலொற்றுமை கொண்டு நின்றுபிள்ளையாரது திருவடித்தீக்கைக்கு மாசிரிய ரதிபக்கு வத் தன்மைக்குமுள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கினவென்க.

வள்ளலென்பது - பிள்ளையார்க்குக் காரணச்சிறப்புப்பெயராக க்கொண்டு பொருள்கூறுவாருமுளர் அங்ஙனங் கூறினித்துணைச் சிறப் பின்றென்றுமறுக்க என்னெனின் அவயவச்சிறப்பான வயவிக்குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலு மின்பமாகலினென்க. இதனைப்போ ற்றி மாலுன்முகனுங் காணாதபுண்டரீகம் என்பதனாற்காண்கவென்க. வ ள்ளமலர்த்தாளெனப் பாடமோதி வள்ளம்போலுங் குவிந்தவாய்ம லரென மலர்க்கடையாக வுரைவிரிப்பாருமுளர் அங்ஙனம் விரித்தலி னித்துணைப்பெரும் பயனின்றென மறுக்க. இங்ஙனமின்னும்விரிக்கிற் பெருகுமென்க.

மலரென்பது - வள்ளற்றன்மையி னருகுவைத்தமையின், சண்டு நிறைதலுங் குறைதலுமாயுள்ள, நீர்நிலைக்கட்டோன்றிய மழிந்தும்வி ரிந்தும், குவிந்தும்வாடியுநின்றவண்ணமுநறையும், வாசமுஞ்சிறிதே சிறுபோதுகொண்டு, பறித்தலாதிய சிறுதொழிற் படுமலர்களைநீக்கி, ஆண்டுதிரிபிலாத் "தெய்வத்தெண்ணீர்," நிலைக்கண்ணொழியாமலர்ச்சி யுமழியாமணமும், பொன்னிறப்பொலிவும் இன்னறவொழுக்கு, மெ ன்மையுந்தன்மையும் வியப்புறுமுருவும், கண்டோர்கண்கவர் காட்சி யுமாட்சியுங், கொண்டுமுக்காலமுங் குன்றுமலரைக் குறித்தமைகாண்க என்னெனிற் பிள்ளையார்திருவடிகள் மெய்ஞ்ஞானவிளக்கமா யருண் மணம்வீசிப் பொன்னிறம்பொலிந்து ஆநந்தமொழுக்கி மெல்லெ னவுற்றுத் தண்ணெனக்குளிர்ந்து தரிசிக்கின்றோர் வியப்புறுமுருவாய வாதுவிருப்ப நோக்கம்பரவவென்று மொருதன்மையவா யிருக்கின் றன்மையினென்க. ஆயின்மலர்போலுந் தாளென்றுவமை விரிந்தபடி நிற்றற்கிடங்கொடாது மலர்த்தாளென்ற தென்னெனின் அத்தெய்வ த் திருமலர்தனைக் கண்டோர்க்குச் சிறியவிடயாநந்தந் தருதலேயன்றி த் திருவடிபோற் சிவாநந்தந்தரமாட்டாச் சிறுமைநோக்கி யென்க.

அல்லதூஉம் - சுபவடிவாய் எவ்வகைச்சுபங்கட்கு முன்னின்றத னை விளங்குறச்செய்வதாய் மகிழ்வுடையோர்யாரு மேற்கொண்டணி யப்படுவதாய் நிற்கு நன்மலர்போலுமெனக் கூறினுமமையும் என் னெனின் திருவடிகள் அருள்வடிவா யாநந்தப்பேற்றிற்கு முன்னின் றளிப்பதா யறிவுடையோர் தந்தலைமேற்கொண் டணியப்படுவதாய் நிற்றலினென்க.

அல்லதூஉம்- மலரையடைந்த வண்டுகளதனதுதேனுண்டு களி கொள்ளுதல்போற் றிருவடிகளையடைந்தோரும் அருளாநந்தம்பெ ற்றிறுமாத்தலி னிங்ஙனங்கூறியதெனினுமமையுமென்க. இதனைத்தொ கையுவமை யணியாகக் கூறலின்றி வள்ளன் மலர்த்தாளெனக் கூட்டி யற்புதத்தொகை யுவமை யணியாகக்கொண்டு பொருள்கூறுவாருமு ளரவர்கூறுங் கூற்றிற்பெரும்பய னின்றெனமறுக்க இஃதின்னும் வி ரிக்கிற்பெருகுமென்க.

தாளென்பது - அடிகட்கன்றியும் முயலுதற்கும் உண்ணின்ற பொருள் வெளிப்படாமைக்கு மதனைவெளிநின்றோ ருட்சென்றுகவ ரப்படாமைக்குங் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்குமணிதற்கணியி னிருகடையு மிணைத்துநிற்கு மிடைப்பூட்டிற்கு மிடனுகிவரு மொரு ளொருசொல்லாகலின் திருவடிகள் தம்மையுடைந்தோர்க்கு,

ாநந்தநிலையுட்சேர்த்தலு மங்ஙனஞ்சேர்ந்தோர் மீட்டுமேல் வாநந்த லையினின்றும் போதவசைவுதோற்றி வெளிப்படாமைக்கு மவத்லைத ஞட்சென்றுதாக்கிக்கவரப்படாமைக்குங்காப்பாகவருளுருவாயதன் றன்னிற்றலுஞ் சிவத்துடன் சிவனையிடைநின்று கூட்டுவித்தலுங்குறி ததுகாண்க. இக்குறிப்புணர்த்தவன்றே மலர்க்காலென்னுது மலர்த் ாளென்ற தென்றுணர்க.

தலைமேல்வைத்து என்பது - ஆசிரியர்- தம்மாசாரியராகிய பிள் ளயார் திருவடித்தீக்கைசெய்யத் தாம் பெற்றமை குறித்ததுகாண்க. ும்மேல் வைக்கப்பட்டு எனச்செயப் பாட்டுவினையெச்சத்தா னிருத் ற் பாலதன்றோவெனின் ஆசிரியர்க்கத் திருவடிக்கண்ணேயுள்ள பிறி த்தொடர்ச்சியின் பெருமைதோன்ற விங்ஙன நின்றங்ஙனங்குறித்து தென்க. இதற்கு இவ்வாறன்றித் தலைமேற் பாவனையான் வைத்தென குறித்ததென்று கூறுவாருமுளராலோவெனின் அவ்வாறு கூறிற்- பி ள்ளையா ரிந்நூ லாசியர்க்கு ஞாநாசாரியரொன்பதும் மிவர் ஞானதீக் கையுடையாரொன்பதும் விளங்குதலின்றி மற்றையாசிரியர்போல ித்த நூலினிது முடிதற்பொருட்டுப் பாவனையான் வழிபடுகடவுட் பழிச்சின ரொன்றிலேசிற் கருதப்படுமாகலி னங்ஙனங் கூறன்மரபன் றென்க. தலையில்வைத்து என்னுது தலைமேல்வைத்து என்றமையான் மறைமுடிக்கண்ணே வயங்காநின்றவச் செல்வத்திருவடியின் சீர்மை தோன்றிற்றென்க.

ஓர்ந்துஎன்பதில் - ஓர்என்னும் பிறவினைமுதனிலை - அறிவுதனக் கெதிரிட்ட வுணர்ச்சிப்பொருட்கண் ணெதிரிடுவதுபோன் றெதிரிடா துள் ளாழ்ந்தவப்பொருட்டிற னெதிரிடப் பெயரும் புடைபெயர்ச் சியு மெதிரிட்டபின்னர் விகற்பியாதெதிர்க்குந் தோறுமெதிரிடப்பெ பரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற் கருவித்திறனுந் தன்றிறனும்அ நுட்டிறனும் உற்றுணர்ந்தவ் வுணர்ச்சிவிகற்பியாது தேறிநின்றமை யைக் குறித்ததுகாண்க. இக்குறிப்புத் தோன்றவன்றே திருவள்ளுவநா யனுரு மோர்த்துள்ள முள்ளதுணரி னென்றுரொன்றறிக.

உள்ளத்தழிவி லென்பதிலுள்ள மென்பதன் பகாப்பதவிற்று ப்பகுபதப்பொருளி னிட்வாகுபெய ராயனுப் பொருட்கண்வந்தவு ள்ளென்னும் பகுதியுட்புறத்து மப்போதமெழுஞ் சிற்றசைவும்பேர சைவுங்குறித்ததுகாண்க.

னி உள்ளமென்பது -வர்தனையாலுள் ளெழும்போதத்திற் காருபெ பெருது - வள்ளலென்பது போன்றெழுகிசையாய் வரவுள்ள வழிவி

என்பது பொருத்திசையாய்வர உள்ளத்தழிவி லென்றதென்கோ
லோவெனின், வேற்றுமை வழியாகலினும் போதவசைவு கூர்மின்றி
யமையாமை குறிக்கவேண்டுமாகலினும் சாரியையோடு புணர்த்தி
யங்ஙனங் கூறியதென்க. அழிவுஎன்பதில் அழியென்னும் பொருவினை
ப்பகுதி முயலார்த்தோற்ற நிகழ்ச்சிப் பின்னரோர்காலத்து மோரிட
த்துமின்றிக் கெடுதற்பெயர்ச்சிக்கண்வந்த தாகலி னப்போதநிகழ்ச்சி
பின்ன ரெக்காலத்தும் உட்புறமென்று மெவ்விடத்துந்தோற்ற நிகழ்
ச்சியின்றி யொடுங்கியவாறு குறித்ததென் றுணர்க. இங்ஙனமன்றி உள்
ளத்தழிவிலென்பதற்கு மனத்தினசைவற்ற விடத்தெனப் பொருள்
கூறுவாருமுளராமேலாமெனின் - மனத்தினசைவுபோத வசைவிற்று
னை யாதலாகலினு மஃதுறுதவிடத் திஃதெவ்வாற்றானு மாறுதாகலி
னுமது பொருந்தாதென்க- இதனை ஆசிரியர் கூறியபற்றுதும்போதும்
பதறுமென்னுந் திருவிவண்பாவாற் காண்கவென்க.

அடுக்குந்தேனென்பதி லடுக்குமென்பது - அடுத்தலென்னுந்
தொழிற்பெயர்க்கட்டல் விகுதிதன்னொற்றுச் சந்தியொடுநீங்க வெதி
ர்காலப் பெயரெச்சவிடைநிலையு மைமை ககரமெய்ச்சாரியையூர்ந்து த
ன்னொற்றுச் சந்திபெற்றுண்டு நின்றிறையு மிடப்பாடுதோற்று செ
றிதற்பெயர்ச்சியும்அடுக்கலென்னுந் தொழிற்பெயர்க்கண்ணல் விகுதி
நீங்க வவ்வெதிர்காலப் பெயரெச்சவிடைநிலை யும்மைவிகுதி நீங்கநி
ன்று தன்வரவுகண் டோடியகுற் றுகரமூர்ந்த மெய்க்கண்ணேறிநின்
றிறையுமிடைப்போதின்மை படாதுபன்முறை மேன்மேல் விறுதற்
பெயர்ச்சியும் பொருளாகக்கொண் டொருவகைப்பகுதி யொருவகை
யெச்சமாக நிற்றலின் சிறிதயிடத்தானுங் காலத்தானும் பிரிவுதோன்
றாது செறிந்து பன்முறை மேன்மே லெழுமாநந்தத்தேனென்று கு
றித்ததென் றுணர்க.

உள்ளத் தழிவிலடுப்பது ஆநந்தமாகலிற் றேனென்பதை யுவம
க்குறிப்பாற் சிவாநந்தத்தே னென்றதென் றுணர்க.

தேனுண்ட வண்டசைவின்றியத் தேன்மயமா யிருத்தல்போல-
ஆநந்தாநுபவத்தார் போத வசைவின்றி யிவ்வாநந்தமயமா யிருத்தலி
னுவமையாகக் குறிக்கப்பட்டதென் றுணர்க. இதனை யொப்புமைக்கூ
ட்ட மொட்டாதிகளாகக் கூறுவாருமுளராலோவெனி னவ்வாறு கூறி
னும் பொருட்சிதையாமையி னொருவாறமையுமென்க. போதவசை
வின்கட்டோற்றல் விடயாநந்தமாகலிற் போதவொழிவின்கட்டோ
ற்றல் சிவாநந்தமென்க் குறித்தற்குள்ளத் தழிவிலடுக்குந் தேனென்று

தென்றுணர்க எங்ஙனமெனின் உள்ளத்தழியாமையி னடாத்தேனெ
ா றெதிர் மறுக்கப்படுதலினென்க. மதுரம்பற்றித் தேனையாந்தந்
ற் குவண்மைகூறவாரு முளராலோவெனின் அதுநாவிடயமாயிறை
ப்போகது நிற்றலினித்துணைச் சிறப்பின்றென்க.

அன்பரொலாமுன்ன வென்பதில் அன்பர் என்பது பொருள்புக
ழ் நியைக் குறித்துப் பயில்வோரை நீக்கிச் சிவாநந்தமெந்நா ளண்
தமென் றிடைவிடாததனையே விரும்பிப்பயில்வோரைக் குறித்ததெ
ன்றுணர்க. எலாமென்பது - சரிதாதிகன்ம மார்க்கங்களைக்கூறும் பிற
நூல்களெல்லாம் பருவநோக்காது சாதிசமயாசார விகற்பங்களோ
கிச் சிலரை நீக்கியுஞ்சிலரை நிறுவியுமதிகரித்தல்போலாது அச்சாதி
மயாதிகளி னுயர்ந்தோர் தாழ்ந்தோரியாரேனும் பருவத்தராயி னி
நூற் குரியராவரொன்பது குறித்ததென்றுணர்க.

உட்கொளவென்னும் பொருளுட்கொண்டு பொருட்டுப்பொரு
ளிற்போந்த உண்ணவென்னும் வினையெச்சம் ஆநந்தாநுபவத்திற்கு
விடாதவிலக்கணை யாயிற்றென் றுணர்க. எங்ஙனமெனின் உண்ணவிற்
பசிநீங்கல்போல் ஆநந்தாநுபவத்தாற் பசுத்துவ நீங்கலினென்க. பயன்
காரணம்பற்றிவந்த வொழிவிலொடுக்கநூலென்பது- ஒழிவிலொடுக்க
மென்னுநூல் ஒழிவிலொடுக்கந் தருநூலென விருவழிக்கும் பொது
வாய சந்தியான் வந்தமையிற் றன்னைவேதாந்தத்திற்குஞ் சித்தாந்தத்
திற்கும் பொதுவென்று குறித்ததென் றுணர்க.

ஒழிவிலொடுக்க நூலுரைத்தானென்பதில் வேற்றுமைசாரியை
யுருபுமுதலியவொன்றும் விரியாதுநிற்றலின் ஞாநாசாரமன்றிக் கரு
மாசாரமொன்றும் விரியாத விந்நூலி னின்மலத்தன்மை தோன்றிற்
றென் றுணர்க. உரைத்தானென்பது-ஒருவர் மதிநுட்பத்தாற் றாங்கண்
டறிந்தமாற்றுயர்ந்த பொன்னின்றன்மையைப் பிறருமறிந்து பயன்
கோடற்குக் கட்டளைக்கல்லினுரைத்துக் காட்டல்போற் சுருதிகுருவ
நுபவத்தாற் றாமநுபவித்தறிந்த சிவாநந்தப்பேற்றின் றன்மையைப்
பக்குவருமறிந்து பயன்கோடற்பொருட்டு நூற்கணுரைத்துக் காட்
டினானென்று குறிப்புமுத்திற்றென் றுணர்க.

என்னெனி னுரையென்பது பொன்னுரையும் பொருளாகக்கோ
டலினென்க. உரைத்தான் என்னும்பயனிலை - செயப்படுபொருளினி
றுதியினியையாது செயப்படுபொருட்குங் கருவிப்பொருட்கு மே
நடுவே மேல்வைத்து என்பதனிறுதியிற்றொடர்ந்து நின்றதென்னெ

விற் சிவஞானத் திக்கையுடையரா யுரைத்தாரென்பதுமன்றித் தமதா சாரியர் திருவடிசான்ருகத் தாங்கண்டவநுபவத்தை விளங்கவுரைத்தா ரென்பதுங் குறித்தற்கென்க. என்னை.

தாடலைமேல்வைத்து எனவே சான்ருகவைத்து என்பது தானே யமையுமாகலின் - தலைமேல்வைத்து என்பதன் பின்னிற்கக்கடவதாய ஓர்ந்து என்பது செயப்படுபொருளி னிறுதிநிலையாய் நின்றதென் னெனின். இந்நூல்கற்ருேர்க்குக் கருமங்குலைந்து ஞானமேவிடுத லு ண்மைகுறித்தற்கென்க. எங்ஙனமெனின் அவ்வோர்ந்துஎன்பது வினை க்குறையாகலினென்க உள்ளத்தழீஇ லடுக்குந்தேனை யன்பரொல்லா முண்ண வொழிவிலொடுக்கநூ லோர்ந்துரைத்தான் எனக்கொண்டு ஓயாதவொழிவின்கண்ணடுப்பதாய வாநந்தத்தை யன்பரொல்லாமநு புவிக்கும்பொருட்டு வேதாகமமுடிபான ஞானநெறியையாராய்ந்து ஒழிவிலொடுக்கமென்ருேர் நூலையுரைத்தார் எனப்பொருள்கூறுவாரு முளர்-அங்ஙனங்கூறின் ஆசிரியர் பரஞானமுடையாரென்பது தோற் ருது:அபரஞானமுடையராகப் பொருள்படுமாகலினும் அபரஞான த்தாற்கூறப்பட்டநூல்மிகச்சிறவாமையானு மநுபொருந்தாதென்க.

இந்நூலியற்றற்கேற்ற நற்பொருளுடைமையுஞ் சிறப்புப்பா யிர விலக்கணத்து ளாக்கியோன்பெயரேயென முதனிறுத்தப்பட்ட நிமித்தகாரணச்சிறப்புடைமையும் இச்செய்யுண்முடிபுக் கெழுவா யாந்தலைமை யுடைமையும்பற்றி வள்ளலென முதனிறுத்தியதென்க. இந்நூலாசிரியர்க் காசிரியரிவரென்பது தோன்றற்கு அவ்வள்ளலென் ப தன்புடை குருராயனென்பதை நிறுத்தியதென்க. இங்ஙனம் ஆசா ரியரென்பவர் பிள்ளையாரென்பது தோன்றற்கு ஞானசம்பந்தனென வைத்தல்வேண்டுமாகலின் அந்தஞானத்தைக்குறிக்கும் பாச்வெற்றி யாய வாதுவென்றவென்பது முன்கூட்டிச் சம்பந்தனென வதன்பு டைநிறுத்தியதென்க.

இரண்டாமடிக்கட் பிள்ளையார் தாள்க ணிறுத்தத் தொடங்கி மு ன்னர் அத்தாள்களி னியற்கை யருளென்றுகுறிக்க வள்ளலென்றும் அதன் வடிவ மாநந்தமென்று குறிக்க மலரென்று முறையேவைத்து வுள்ளன் மலர்த்தாளென நிறுத்தியதென்க. தாள்க ளன்றியும் - பிள்ளை யாரும் அருளியற்கையரேயென்பது குறிக்கச் சம்பந்தனென்னுஞ் சுத்தந்தோற்றியவுடன் வள்ளற்சத்தந்தோன்ற நிறுத்தியதென்க. இங் ஙனம் நிறுத்தியவை- சொற்பொருண் முறைநிலை- தாளென்பதற்குந் தலையென்பதற்கு முள்ளசொற்பொருட் சம்பந்த வின்பம்பயக்க

டலையென்றும்தலையென்பதற்கும்- மேலென்பதற்குமுள்ளஉரிமை
ாக்கம்போற்றித்தலைமேலென்றும்-மேலேன்னுமிடப்பொருட்குவை
ந்தொழில்.சிறந்ததுபற்றி மேல்வைத்துஎன்றும் வைத்துஎன்பதற்
் உணர்த்தானென்பதற்கும் இறுதியுமுதலு மினமாதல்பற்றி வைத்
ணர்த்தானென்றும் முறையே நிறுத்தியதென்க. இங்ஙனம் நிறுத்தி
வ சொன்முறைநிலையும் சொற்பொருண்முறை நிலையுமாம்.

இங்ஙனம் முற்றுமுறைநிலை கூறப்புகின் மிகப்பெருகுமாகலி
ருவாறுகாட்டினம மற்றையவு மிவைகொண் டுணர்கவென்க. இச்
ய்யுட்பொருள் ஆசிரியரதருளறிவின் மாட்சிமையை வெளிப்ப
யானுங் குறிப்பானும் விளங்கவிரித்தலின் வாகைத் திணையுட்சா
முல்லைப்பொருளின் பாற்பட்டதென்க. என்னைசால்பு முல்லைப்
ருள் - வான்றோயுமலையன்ன சான்றோர்தஞ்சால்புரைத்தன்றுஎன்
லின் இச்செய்யுள்தன்னாற் செயப்படுபொருளாய்நின்ற நூற்
பத் தன்னானுந் தன்றுறப்புக்களானுங் குறிப்பாற்குறித்து நி
ன்னோக் குடைச்செய்யுளென்றுணர்க. அங்ஙனங் குறித்தவை
யனமெனின்.

இச்செய்யுள் தான் கலிப்பா வஞ்சிப்பா ஆசிரியப்பா வென்னு
பாவினுஞ் சிறந்தவெண்பாவாகலி னிக்குறிப்பால் இந்நூல் சரி
நூல் கிரியைநூல் யோகநூல் என்னு முந்நூலினுஞ் சிறந்த ஞான
லென்று குறித்ததென்க. தான் ஈரசையானும் அட் டுருவகைத் தளைத
யொழுகிசைச் செப்பலோசையான் வந்ததாகலி னிக்குறிப்பா
நூல் ஆகமமுடிவும் வேதமுடிவுங் கூறுமிருவகை நெறியுமொரு
க நெறியாத்தழீஇக்கொண் டிருந்தமைகுறித்ததென்க.

தான் ஒன்றடுத்தவிரட்டைமுப்பத்தாறெழுத்துக்களைக்கொண்டு
லி னிக்குறிப்பா னிந்நூல் பாசமொன்றடுத்த தத்துவமுப்பத்
றன்று மம்முப்பத்தாறன் றன்மையிவையென்று புகுத்தறிதல்வ
முணர்த்துவதெனக் குறித்ததென்க.தான் நான்கடுத்த முப்பத்
சைகளை யடுத்துநிற்ற லினிக்குறிப்பானிந்நூல் அத்தத்துவ மு
ந்தற்றனையு நியதிகளைதன் முறையை யுணர்த்துவதெனக்குறித்த
க. அஃதேன் முப்பத்தாறன்மேனான் கடுத்ததென்னெனின்.ஆன்
துவத்தின்வன்மைதோன்றற் கோரசையும் வித்தியாதத்துவத்தி
விதோன்றற் கோரசையு நாதத்துவத்தின் பெருமைதோன்றற்
சயுமிருந்தனவென்க. தான் - பதினைந்துசீர்கொள நிற்றலினிக்
பானிந்நூல் ஆசாரியத்தன்மை சீடத்தன்மை பதித்தன்மை ப
ன்மை பாசத்தன்மை உபதேசத்தன்மை பக்குவத்தன்மை யோ
ர்த்தி கிரியைநிவர்த்தி சரிதைநிவர்த்தி விரத்திவிளக்கந் துறவுத்த

ன்மை யருளவத்தைத்தன்மை வாதனைமாண்டார் தன்மைநிலையியல்பு என்னுமிப்பதினைந்தனையுஞ்சீர்பெறக்கொண்டதெனக்குறித்ததென்க. தானெழுவகைத்தளையினி னமைந்ததாகலி னிக்குறிப்பானிந்நூல் ஆன்மதரிசனம் அருட்டரிசனம் பரைதரிசனம் பரையோகம் பரை யோகநீக்கம் போதவொழிவு இன்பப்பேறு என்னும் எழுவகைநிலையு மறிவிப்பதெனக் குறித்ததென்க. தான்-றனிச்சொல்பெற்று நான்கடி யுடனடந்ததாகலி னிக்குறிப்பானிந்நூல்கூறுமொப்பற்ற ஞானமும் சுத்தச்சரிதை சுத்தக்கிரியை சுத்தயோகம் சுத்தஞானம் என நான்கு பாதத்தோடு நடப்பதெனக் குறித்ததென்க. தான்-ஒரூஉத் தொடை யொடு முத்தொடையா னியன்றதாகலி னிக்குறிப்பா னிந்நூல் சுருதி குருசுவானுபவமென்னுமூன்றுமொத்தியன்றதெனக்குறித்ததென்க.

அல்லதூஉம்- இச்செய்யுளடி நேரடியாய் விறுத்த வெழுத்தெல்லை யினிகவாது நிற்றலினிக் குறிப்பானிந்நூல் மெய்வீட்டினெறித்தா யவ்வீட்டினெறிக்கெல்லையாய ஞானத்தினிகவாது நின்றதெனினு மாமென்க. எல்லையென்னெனிற் பத்தெழுத்தென்ப நேரடிக்களவே யொத்த நாலெழுத்தோற்றலங்கடையே யென்பவென்க. இங்ஙனங் குறித்தற்கன்றே இச்செய்யுளீற் றடியினூற்பெயரை வேறடைகொடாது தனிமையி னிறுத்தியதென்க.

இச்செய்யுள் சிறப்புப்பாயிரத்ததாயினப்பாயிரத்திலக்கணமித னுளிருந்தவா றெங்ஙனமெனின் வள்ளலென்பதனா லாசிரியர்பெயரும் குருராயன் வாதுவென்றசம்பந்தன் வள்ளன்மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தானென்பதனால் ஞானாசாரியாராகிய பிள்ளையாரருளுபதேச வழித்தெனவுட் கொளப்படுதலின்வழியும் இந்நூற்றொடர் தமிழ்த் தொடராகலினித்தமிழ்வழங்குநிலமே யிந்நூல்வழங்குநிலமெனக் கருதப்படுதலினெல்லையும் ஒழிவிலொடுக்கநூலென்பதனா நூற்பெயரும் ஒழிவிலொடுக்கமென அன்மொழித்தொகைப்பெயர் மாத்திரையினில்லாது நூலெனவிரித்தமையி னிந்நூலுந் தொகைவிரியுடையதெனக் கருதப்படுதலின் யாப்பும்உள்ளத் தழிவிலென்பதனாற் கருதியபொருளும் அன்பரெலா முண்ணவென்பதனால் அன்பரெலா முணற் பொருட்டிஃதியற்றுகவென் றுள்ளெழுந்தெதிரிட்டுநின்றதா சிரியாது பெருங்கருணையெனக் கருதப்படுதலிற் கேட்போரும் உள்ளத்தழிவிலடுக்குந் தேனென்பதனாற்பயனும் புலப்படுமாகலி னவை யிருந்தவா றிங்ஙனமென்க.

இப்பாயிரச்செய்யுள் முற்காலத்தது.

இவ்வுரை - சி - இராமலிங்கபிள்ளையவர்களாற் செய்யப்பட்டது.

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

உ

சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்

## காப்பு*

### விநாயகர் தோத்திரம்.

நிம்பநிழற்பா - லும்பன்முகத்தார் ... ... ... ... *
செம்பதுமத்தா - ணம்புகருத்தே ... ... ... ... ௧

### சுப்பிரமணியர் தோத்திரம்.

ஒழிவிலொடுக்கத் துறைவரநாயேற்குச் ... ... ... *
செழிவிமலாநங்கருணைசேர்க்கு - முழுதின்பப் ... *
பண்டைவளநாட்டும் பரமகுருப்போரூரன் ... ... *
றண்டைவளநாட்டுதிருத்தாள் ... ... ... ... *

### திருஞானசம்பந்தசுவாமிகள் தோத்திரம்.

வள்ளலுரைத்தவழுவிலொழிவில்லொடுக்கத் ... ... *
தெள்ளுரையெல்லாந்தெரிவிக்கு - முள்ளமே ... *
யெம்பந்தநீக்குமிறைவன்றமிழ்க்காழிச் ... ... ... *
சம்பந்தன்பூஞ்சதங்கைத்தாள் ... ... ... ... *
ஆனைமுகனாறுமுகனம்பிகைபொன்னம்பலவன் ... *
ஞானகுருவாணியையுண்ணூடு ... ... ... ... *

---

“ உள்ளவுரைநாயேற் குறச்செய்யும், என்று பாடமோதலுமுண்டு.

ஈண்டு - இத் தோத்திரச்செய்யுட்கள் உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிது முடிதற்பொருட்டு இயற்றப்பட்டன.





இஃது - காஞ்சீபுரம்.

மாசிலாமணிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டது.

விருத்தம்.

வஞ்சியர்மாமோகமுறுமாதவத்தோர்புகழு ... ... *
மாதேவனருள்விளங்கிவளருநிதிப்புதைபோல் ... *
விஞ்சியசம்பந்தனடித்துணையுளங்கொள்வள்ளல் ... *
விளம்பியருளொழிவிலொடுக்கப்பெயர்கொண்முறையு.*
மஞ்சனம்போற்றிருப்போரூர்ச்சிதம்பரமாமுனிவ ... *
ரருணூலாயுமிராமலிங்கவருந்தவனுய்த்துதவத் ... *
தஞ்சமுறுமுலகுணர்வானச்சிவியையவித்தான் ... ... *
றஞ்சைநகர்க்கன்னையசற்குணபூபதியே ... ... *



# அதிகாரவட்டவணை.







உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்

## உரைபாடம்.

### முதலதிகாரம்,

வேதாகமப்

### பொதுவிலுபதேசம்.

ஆசாரிய ரநாசாரிய ரிலக்கண முதலியவையும்
இந்நூலிற்கூறிய கருத்தெல்லாவற்றையுந் தொகுத்துப்
பொதுவா னுபதேசமாகக் கூறினமையா
னிவ்வதிகாரத்திற்குப்
பொதுவி லுபதேச மென்று
பெயராயிற்று.

வெண்பா.

வேதாகமப்பவுரிவீசுங்களாசநிலை
யாதாரவெற்பிலபிடேகம் - போதத்
திருளிலெழுபாநுவென தொழிவிலின்பக்
கருணைபொழிவானெடுத்தகை.

வேதாகமப் பவுரிவீசுங் களாசநிலை—எ-து, வேதாகமங்களினது பவுரிக்கூத்தினைப் பிரம்போடுங் கைவாரங்கொண்டுவீசி நிறுத்துமோருண்மைநிலை.

ஆதாரவெற்பிலபிடேகம்—எ-து, ஆருதாரங்களாகிய பொருப்பனையன் முடியிற் சூட்டுமோர் மகுடம்.

போதத்திருளிலெழுபாநு- எ-து, ஆன்மபோதத்தின் கண்ணதாகிய வாணவவிருளைக் கிழித்தெழாநின்ற ஞானசூரியன்.

எனதொழிவிலின்பக்கருணைபொழிவானெடுத்தகை—எ-து, எனது போதநாசத்தின்கண்ணே யருளாநந்தத்தைப் பொழியாநின்ற பிள்ளையாருயரவெடுத்துச் சுட்டோடு மெய்ப்பொருளைக் காட்டிய திருக்கைமானது-என்றவாறு.

அரங்கின்கண் ணடிக்கின்ற கூத்தர் பலருக்கு முதல்வனாகிய கூத்தன் வந்து கூத்தைக் கைவாரங்கொண்டு நிறுத்தி யவ்வரங்கின் கண்ணுள்ள குறுமன்னியர்கட்கெல்லா முதல்வனாகிய மகாமன்னியனையே புகழ்ந்து சுட்டிநின்றாற்போல வேதாகமங்கள் கூறிய பலசமயநெறிகளையு மச்சமயங்கட்குரிய கடவுளரையுங் கடந்துநின்று அக்கடவுளருக்கெல்லா முதல்வனையே பிள்ளையார் பரஞானக்கண்ணினா லுணர்ந்து புகழ்ந்து சுட்டிநின்றமையால் "வேதாகமப் பவுரிவீசுங் களாசநிலை" என்றும்—நிராதாரமாகிய வருளினின்று மீதானமாகிய மெய்ப்பொருளிற் சுட்டோடு மதீதப்பட்டு நின்றமையால் "ஆதாரவெற்பிலபிடேகம்" என்றும்—ஆன்மபோதத்தைமறைத்த வாணவவிருளைநீக்கிச் சிவத்தையறிவிக்குந் திருவருளைப்போ லிறைவனைப் பிறர்க்கறிவித்தமையால் "போதத்திருளிலெழுபானு" என்றுங் கூறினார்.

"தோடுடையசெவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப்பொடிபூசி யென துள்ளங்கவர்கள்வ, னேடுடைய
மலரான் முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த, பீடுடைய பிரமாபுர
மேவிய பெம்மானிவனன்றே."

என்னுந் திருக்கடைக்காப்பான்- மெய்ப்பொருளைத்தரிசித்துச் சுட்டிப்புகழ்ந்து நின்றபோது திருவுள்ளம் மெய்ப்பொருட் கிருபாநோக்கம்வைக்க வக்கிருபாநோக்கத்தின் வழித்தாய்ச்சென்று சிவத்திலதீதப்பட்டு நின்றாரென்பதும் பிறர்க்கறிவித்தாரென்பதும் "எனதுள்ளங்கவர்கள்வன்" என்பதனானும் "பெம்மானிவனன்றே" என்பதனானுங்காண்க. இத்திருக்கடைக்காப்பு பிள்ளையார் ஞானபோநகமுண்டருளியபோது அருளிச்செயப்பட்டது. திருக்கடையாப்பு என்று பாடங் கூறுவாருமுளர்.

பிரளயாகலர்க் கநுக்கிரகித்தலும். இது-வேதாகமங்களை முதற்பொருளாக்கி யவை யொன்றோடொன் றொவ்வாதுகூறும் பலபேத சமயநெறிகளைக் கூத்தாக்கினார்.

ஆதாரமாறையுமூடுருவிநின்றசுழுமுனையை- மேருவென்றும்இடை பிங்கலைகளை-யதனைவலம்வருஞ் சூரியசந்திரரென்றும்-யோகிகள் கூறுவராகலின் "ஆதாரவெற்பு" என்றார். முடிகூறினமையால், வெற்பென்னு மஃறிணையை யுயர்திணையாகக்கூறப்பட்டது "கை" என்பதை மூன்றிடத்துங்கூட்டுக.- (கைவாரங்கொள்ளுதல்) கூத்தைநிறுத்தற்பொருட்டு ஓகோவென்னு மடுக்குமொழிகூறிக் கரமுயரவெடுத்துவீசுதல். "களாசம்" என்பது - பிரம்பு.-- பிரம்போடும்வீசுமெனக்கூட்டுக.

இத் திருவெண்பா குருதோத்திரம்.

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் சற்குருவா
மன்னுபெருஞ்சீய மதயானை - தன்னடைமேற்
சொற்பதத்தேதோன்றித் துடிப்பற்றுக்கேவலமாய்
நிற்பதுபோற் பாரா னெனின்.

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான் -து- ஒருவன் றநீ போதவொழிவைச் சாத்திரங்களைக் கற்றவற்றுட்கூறு வாறே தனது பேரறிவுத்தா னிட்டைகூடி யெங்ஙனஞ் சாதித்தடைவான்.

சற்குருவா மன்னுபெருஞ் சீயமதயானைதன்னடைமேற்சொற் பதத்தேதோன்றி-எ-து- ஞானாசாரியனாகிய 'வருணிலைபெற்ற பெரிய சிங்கம்போல்வான்- சீட்னாகிய மதயானையினது மேலாம்பக்குவத்தா ற் பிரபஞ்சமாகிய சொற்பதத்தின்கட்டோன்றி.

துடிப்பற்றுக் கேவலமாய் நிற்பதுபோல்- எ- து- மதம்பொழி யாநின்ற யானையினது சொற்பதத்தின்கட் சிங்கந்தோன்ற வதனது மதகெர்வித மியாவுங்கெட்டு மருட்கேவலப்பட்டு நின்றாற்போலச் சீ டனாகிய யானையின தட்புறனாய்ச் சிவியாநின்ற போதப்பதைப் பெ ல்லாமற்று அருட்கேவலமாய் நிற்கும்படி.

பாரானெனின்- எ து- அப்போதத்திற்கு முட்புறனாகிய கிருபா நோக்கஞ் செய்யானாயின்-எ-று.

போதவொழிவின்கண் மெய்ப்பொரு ளிருத்தலின் மெய்ப்பொ ருளைத் ,,தன்னிழப்பு,,என்றார்.

மெய்ப்போதத்தாற் பொய்ப்போத மழிவதன்றி இதனை யிதனு லழிக்கத் தொடங்கின் மேன்மேல் வளர்ச்சியா யழிவுகூடாமையில்,,த ன்னிருப்பை யென்னகற்றுச் சாதிப்பான்,,என்றார்.

யானையைச் சிங்கங்கொல்வதுபோல ஞானத்தா லஞ்ஞானத்தைக் கெடுத்தலிற் "சற்குருவா மன்னுபெருஞ் சீயம்,, என்றும் ஞாதுரு- ஞான- ஞேயமாய -விவைகளொன்றுந் தோன்றாது ஆன்மாவப் பார் வையாற் சிவத்தி லதீதப்படுதலில்"கேவலமாய் நிற்பதுபோற் பாரா னெனின்,,என்றுங்கூறினார்.

"குருவாஞ் சீயம்,, என்றமையாற் (சீடனாமியானை) என்று வரு விக்கப்பட்டது, "துடிப்பற்றுக் கேவலமாய்நிற்பதுபோல்,,என்றவ மையாகக் கூறினமையா லீண்டு மியானையுஞ் சிங்கமும் வருவிக்கப் பட்டது.

சிங்கம்போல்வான்பாரானாயினெங்ஙனஞ் சாதிப்பானெனமுடிக்க, நடை-பக்குவம்-மேலாயபக்குவம்- எனமாறுக.

சியம்பாராமெனி னெனமுடிந்தது-இராசசிங்கம் வந்தானென் பதுபோலக் கொள்க.

இத் திருவெண்பாவா லதிதீவிர பக்குவர்க்காயினும் ஞானாசாரி யரால்லதிப் போதநாசங் கூடாதென்று கூறியவாறுகாண்க. (உ)



கூலித்தொழிலாளர் கொண்டுவிற்போர் போன்றகுரு
வேலைப்பகடிகளை மேவாதே - காலம்போற்
பார்த்திருக்கவைத்த பரமகுருவைப்பரவ
வார்த்தையிலைநீண்டா மறம்.

கூலித்தொழிலாளர் கொண்டுவிற்போர் போன்ற குரு-வேலைப்பக டிகளை மேவாதே-எ-து- வேலைசெய்து கூலிவாங்கிக்கொள்ளுங் கூலி த்தொழிலாளரையும், ஓர்பொருளைக்கொண்டோர் பொருளைவிற்கும் வணிகரையும்போன்று பிறர்க்குக் கிரியைகளைச்செய்து காட்டியும், உபதேசங்களைக் கூறியும், அவர்கையிலருத்தம் பறிக்குந் தமக்கியையாத குருவென்னும்.பெயர்கொண்ட தொழிற்செய்யும் பகடிக் கூத் தாடிகளை மாணு நீ மெய்க்குருவென் றடையாதே.

காலம்போற் பார்த்திருக்க வைத்த பரமகுருவைப்பரவ வார்த் தையிலைநீண்டாமறம்- எ-து- கதிர்வலம்வருதலாற் - கணம்- நாழிகை- நாள் மாதம்-இருது- வருடம்- யுகம்- முதலிய காலங்களு மக்காலங்க டோறுந் தோன்றும் பிரபஞ்சங்களு மநந்தபேதமாய்த்திரியவுந்தன க்கோர் திரிவின்றி யவற்றோடுந் தாககற்றிருந்த காலதத்துவம்போல மாயையிற்றோற்றிய கருவிகளு மிக்கருவிகளாற் காரியப்பட்ட பிரப ஞ்சங்களு மநந்தபேதமாய்த் திரியவுந் தனக்கோர் திரிவின்றி யிவற் றோடுந் தாக்கற்றிருந்த வருளேவடிவாகக் கிருபாநோக்கம்வைத்து மாணுக்கனைச் சுட்டற்றிருக்கவைத்த மேலாகியஞானாசாரியனைத்தோ த்திரம்பண்ணவோர் வசனமுமில்லை தியானிக்கவெனின் மனமு மவ னைத் தீண்டாது ஆதலின் அக்குருவை யடைதி-எ-று.

கதிர்வலம் வருதலாற் கணமுதலிய காலபேதங்களும் பிரபஞ்ச பேதங்களு நானவாய்த் தோற்றினு மவைக டோற்றற்கும் அது வல ம்வருதற்குங் காலதத்துவம் ஏதுவானாற்போல மாயையிற் கருவிகளு ம் பிரபஞ்சங்களு நாநாவாய்த்தோற்றினு மிவை தொழிற்படுதற்கு மிவை மாயையிற் றோற்றுதற்குந் திருவரு ளேதுவாயிற் றென்பதுங் காண்க.

பரமகுரு- சூக்குமைவாக்குந் தற்போதமுங் கடந்த சிவமென் றறிவிக்கவேண்டி "வார்த்தையிலை நீண்டாமறம்,, என்றார்.

இத் திருவெண்பாவா லாசாரியனையு மநாசாரியனையு மாணுக்க
் கறிவித்தவாறு காண்க. (ங)



குட்டித் திரட்கரடி யாறெழுகக் கோன்குதித்துக்
கட்டிப் புதைந்த கதையாகுந் - துட்டமலப்
பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற் காட்டும் பொருள்.

குட்டித்திரட்கரடி யாறெழுகக் கோன்குதித்துக் கட்டிப்புதை
கதையாகும்- எ-து - பலகுட்டிகளோடுங் கரடியானது நதிவெள்
தோடுஞ்செல்ல வதனது கரைக்கணின்ற வோரிடைய னதனையா
னக்கருதி யந்நீரிற்குதித் ததனைப்பற்ற வஃதிவனைப்பற்ற வஃது
னு மவ்வெள்ளத் தாழ்ந்தனரொன் றுலகத்தார் கூறுங்கதைபோல
கும்.

துட்டமலப்பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்
் புத்திபோற்காட்டும்பொருள்- எ - து- கொடிதாகிய மும்மலப்
த்தியத்தான் முதிர்ந்த வாசாரியரல்லா ரோர்காற்கூறின தோர்கா
றுது பேய்பிடித்தாற்போலும் பிதற்றுநின்றவபக்குவர்க்குபதே
போலுங் கூறிய வருத்தம்.

பரஞானமென்பது சிறிதுமில்லாதா ரபரஞானங்களைக் கற்றுக்
ாண்டு மனைவிமுதலிய குடும்பவெள்ளத்திலாழ்ந்துகிடக்கின்றபே
லர் - டம்பநிமித்தங் கேட்க வவர்க் கருத்த நிமித்த முபதேசிக்க
ந்த வுபதேசப்பொருளா லிருவருக்குந் தோடமேலிட்டுப் பிறவிச்
கரத்தாழ்வர் ஆதலி னிக்கதையை இப்பொருளுக் குவமையாகக்
றினார்.

இடையன் கரடியை ஆடென்றுங் கரடி யவனை நதிகடத்தும்பு
யென்றுங் கருதினதுபோல- வபக்குவனைப் பக்குவனென்று மநா
ரியனை யாசாரியனென்று மிருவருமாறுபாடாய்க் கருதினரொன்ப
மாம்.

இத்திருவெண்பாவா லநாசாரியனுக்கு மவனிடத்துபதேசங்கே
வபக்குவனுக்குங் குற்றம்வருமென் றறிவித்தவாறு காண்க. (ச)



குருட்டரிப்பனுர்க்குங் குபேரனென்றுபேரோ
கருப்பிரத மோத்ததையோ காட்டு - மருட்டரித்த
வாசானைப் போல்வரோ வாறுவுக் கப்புறத்தே
பேசா திருத்தவல்லாப் பேர்.

குருட்டரிப்பனார்க்குங் குபேரனென்றுபேரோ - கருப்பிரநமோ த்தையோ காட்டும் - எ - று - பிறவியந்தகனாகிய வரிப்பாளனுக்குங் குபேரனென்று பெயருண்டுகொலோ - கரும்பினதிரதத்தின் மோத் தையாட றிந்து கூறுமோ - அவைபோலும்.

அருட்டரித்த வாசானைப்போல் வரோவாருறுக்கப்புறத்தே பே சாதிருத்தவல்லாப்பேர் - எ - து - அருள்வடிவமல்லாதமாயாவடிவங்கொ ண்டவராசாரியரானார் - முப்பத்தாறுதத்துவங்களையுங் கடந்துநின்ற சிவத்தோடுமான்மாக்களை யிரண்டறக் கலப்பித்து மவுநமாய்வைக்க அருளே திருமேனியாகக்கொண் டெழுந்தருளிவந்த ஞானசாரியனைப் போலு மாவாரோ - எ - று.

குருட்டரிப்பனுக்குக் கைப்பரிசமே யன்றிக் கட்பார்வை யின் மையாற் பொற்பொடியேதோன்று தங்ஙனமிருப்பவனையுஞ்செல் வத்தா னளகேசனென்று கூறக்கூடுமோ - வதுபோல் அநாசாரியருக் குக் கிரியைத்தொழிலன்றி ஞாநமேயில்லை. யங்ஙனமிருப்பவனையுங் குருவென்று கூறப்படுமோ - என்றும் - மோத்தையாடு கொழுந்தா டை தின்புதேயன்றிக் கரும்புதின்ன வறியாதாகலி னதனதிரதத்தை யறிந்திங்ஙனமென்று தனது குட்டிக்குங்காட்டவறியுமோ - வதுபோல அநாசாரியர் ஆகமங்கள்கூறு மந்திரகலை - தந்திரகலை - உபதேசகலைக ளுள் - உபதேசகலையைவிட் டிருவகைக் கலைகளை யாராய்ந்தவற்று ட்கூறிய சரிதாதிகளைச்செய் தவற்றான்வரும் விடயாநந்தாநுபவம் பெறுவதேயன்றிச் சிவாநந்தானுபவ மனுவளவேனு மறியார் - அங் ஙனமிருப்பப் பிறர்க்கச் சிவாநந்தாநுபவ மெங்ஙனங் கூறுவார் - என் றும்இந்த வுவமைகளா லறிவித்தவாறு காண்க.

அஃதன்றியும் ஆடோகாட்டும் என்னுமெதிர்மறை ஓகாரம் - அவ் வாட்டைமறுத் தியானையைக் காட்டிநின்றதாகலிற் கருப்பந்தோட்ட த்தைப்போற் சிவாகமம் - அதனுட்புகுதும் ஆடு யானைபோல இதனு ட்புகுதுங் கிரியாகுரு - ஞாநகுரு.

ஆடு கரும்பைவிட் டிலையைத்தின் றதனதுசுவையைத் தானும றிந்து தனதுகுட்டிக்குங் காட்டுதல்போலவும் யானை யிலையைவிட்டுக் கரும்பைத்தின்ற் தனதுசுவையைத் தானுமறிந்து தனது கன்றுக்குங் காட்டுதல்போலவுங் கிரியாகுரு - மந்திர - தந்திர - கலைகளை யாராய்ந் தவற்றுட்கூறிய சரிதாதிகளையநுட்டித் தவற்றான்வரும் விடயாநந்த த்தைத் தானுமநுபவித்துத் தன்னையடைந்தசீடனுக்கு மவ்வுபதேச ங்களா லவ்வாநந்தத்தை வருவிப்பனென்பதூம் - ஞானகுரு - மந்திர தந்திர - கலைகளைவிட்டுபதேசகலையை யாராய்ந் ததனுட்கூறிய

ந்தத்தைத் தானும்பெற்றுத் தன்னையடைந்த பக்குவனுக்குமந்த நாநந்தத்தை வருவிப்பனெனல்பதுங் காண்க.

(உ-ம்)•பிரபுலிங்கலீலை "புறம்புகாண்குவன் ,புல்லிய னீசனை யஞ்ஞாநி யகமுறக்காண்பனு,லெறும்பிகாண்குறி லிங்கருஞ்பேகொ ந்; செறிந்தவாடிலை தின்பனவென்பவே,,

அசகசாந்தரம் என்னுங் கிரந்தசமாதியும் - அது.

குருட்டரிப்பனென்பதைக் "குருட்டரிப்பனுர்,, ஏன்றிழியின்க ன்மையாகக்கூறினுர்.

கட்பார்வை யின்மைபோன் ஞாநமின்மை - கைப்பரிச மறிதல் ாற் கிரியைகளைச்செய்தல் - என்பதுங்காண்க.

இத்திருவெண்பாவா லநாசாரிய ரிலக்கணமு மாசாரியரிலக்கண ı கூறியவாறுகாண்க• (௫)



தன்னறிவு சாட்சியல்லாற் சாயுச்சியப் பயனைச்
சொன்னபிழை கெட்டேன் றொலைப்பரோ - முன்னே
நடவாவழி யொருவன் சொல்ல நடந்து
தடுமாறி நொந்தறியா தார்.

தன்னறிவு சாட்சியல்லாற் சாயுச்சியப்பயனைச், சொன்னபிழை ட்டேன் றொலைப்பரோ - எ - து - சிவாநுபவ நன்றாய்விளங்கிற் ன்பதற்கு மஃதின்றென்பதற்குந் தனக்குத் தன்னறிவுதானேசா யாயிருக்கவும் பயனைக்குறித்து மயக்கத்தா லந்தவநுபவந் தனக் டுபோற்காட்டிப் பிறர்க்குவீடடையுநெறியான வுபதேசப்பொ ளக்கூறிய பாவங்களைக்கெட்டேன், எந்தக்கால நீக்கிக்கொள்வரோ.

முன்னே - நடவாவழி யொருவன்சொல்ல நடந்து தடுமாறி ாந்தறியாதார் - எ-து - அஃதன்றியுந் த ாமுன்செல்லாத வோருர் ுப் பின் செல்லுங்கா லவ்வூ ரடையு நெறியாதென் றந்நெறிக்கட் ன் முன் நடவாவொருவனைக்கேட்ப வவனதன்கட் சென்றுன்போ று நெறியல்லா நெறிகூற வீதுண்மையெனக்கருதி யந்நெறிக்கட் சன்று முன்னிருந்தவூரும் பின்னடையுமூருமன்றி நடுவிடைத்தடு ுறி மநமுடல்வருந்தி யறிந்தவரலர்-எ-று.

ஐயன் - காளி - சந்நிதியி லசத்தியங்கூறினுர்க்கு மிம்மைக்கண் ன துன்பம்வருதலிற்•பூரணசிவத்தின்சந்நிதியி லசத்தியங்கூறியபா ந்தொலையாதாகலிற் "கெட்டேன்றொலைப்பரோ,, என்றும் -வாக்கா ந்கூட்டறிந்து காயத்தாற் சென்றடையுமூர்க்கு நெறியறியாவொரு

வனெறிகூறக்கேட்டதன்கட்சென் றதனுன்வருமிட ரநுபவித்திருந்த வர் மறந்தானுஞ் சென்றுகூடுதற்கரிய விடமையு நெறியைத் தாமறியாதிருந்து மறிந்தார்போன்று பிறர்க்குக்கூறுர் - ஆகலினிங்ஙனமுவமைகூறினூர்.

சென்றவின்கட் (டம்) என்னும்பன்மை " தன் ,, என்னுமொருமையாய் வந்தது.

"அல்லால்,, என்பதைமயக்கத்தர்லெனக்கொள்க.

"முன்னே,, என்பதை யிரண்டிடத்துங் கூட்டுக.

"கெட்டேன்,, என்பதிரக்கக் குறிப்பின்கண்வந்த வழக்கச்சொல்

இத்திருவெண்பாவால் சாத்தியனேயன்றி சாதகன் ஞானோபதேசம் பண்ணுதல் குற்றமென் றறிவித்தவாறுகாண்க.



பொய்போகப்போகப் பொருந்திப் பொருடானுஞ்
சையோக போக தரங்கத்தி - னையும்
பரிபாகங் கண்டு பதையாமற் பார்க்குங்
குருவே காண் ஞானக்குரு.

பொய்போகப் போகப்பொருந்தி - எ - று - பொய்யாகிய கருவிகண் முப்பத்தாறு நீங்கநீங்கவே யவைகளைப் பகுத்தறிந்து நீங்கிநின்றவறிவு தானென்று தன்னை யருளாலுள்ளபடி கண்டு பின்பு அருட்டரிசநம் - பரைதரிசநம் - பரையோகம் - என்னு மிவற்றை யடைந்து.

பொருடானுஞ் சையோகபோக தரங்கத்தினையும் - பரிபாகங் கண்டு பதையாமற்பார்க்கும் - குருவேகாண்ஞானக்குரு - எ-து - மெய்ப்பொருடானாகிய வநுபவசத்தியிற் றேன்று மானந்தபோக சமுத்திரத்தலையி லலைகளைந்துபோருந் தீவிரதரபக்குவ மீதென்றுகண்டுமோனுக்கனது போத மனுவளவேனும் பதையாதடங்கக் கிருபாநோக்கம்வைக்கு மாசாரியனே ஞானாசாரியனுவான்-எ-று.

சிவகரணம் பரையோகமளவுந் தொடர்தலிற் " பொய்போகப் போக,,வென்றூர்.

"சையோகம்,, என்றதனுபவசத்தி அது பரையோகத்திற்குஞ் சுகாதீதத்திற்கு மிடையே தோன்று மாநந்தப்பேற்றிற்கிடம்.

"போகதரங்கத்து"என்றமையாற்சமுத்திரம்வருவிக்கப்பட்டது

"தரங்கம்,,ஆநந்தமேலிடல்.

அவ்விடத் தான்மபோதங் கெடுமாகலின்"தையும்,,என்றூர்.

அடிதொடங்கி யநுபவமுற்றுங் கூறினமையா லிவ்வநுப

னாய்ப் பெறுமவனதிதீவிர பக்குவனென்பதுங் காண்க.

இத்திருவெண்பாவால் ஞானாசாரியராயினும் பக்குவனையறிந்து போதியாராகி னவனையுமாசாரிய ரலரென்றுங் கூறியவாறுகாண்க ()

தேனுண் டுமிழுந் திறம்போற் சிவானந்த
மோனந் துளும்பி மொழிகாலத் - தேநின்று
தோன்றிருது போதுமொன்றைச் சுட்டாது கேட்பவர்கட்
கான்றதவம் வேத மது.

தேனுண்டுமிழுந்திறம்போற்சிவானந்த, மோனந்துளும்பிமொழி காலத்தே - எ - து - தேனைநிறையவுண் டதனையீட்டுங் கக்குந்தன்மை போ லுட்புறனு மெங்குநிறைந்து மவுனமாயிருந்த சிவானந்தவெள் ளங் காருண்ணியத்தாற்றதும்பி ஞானாசாரிய ருபதேசமொழிகளைக் கூறுங்காலத்தளவும்.

நின்று - தோன்றிருதுபோது மொன்றைச்சுட்டாது கேட்பவர் கட், கான்றதவம்வேதமது - எ - து - பணிவிடை செய்துநின்று தோ ன்றப்பட்ட விருதுகாலம்போது மதுவிதுவென் றொன்றையுஞ் சுட் டாது பதைப்பறவிருந் ததனைக்கேட்பவர்களுக்கு மாட்சிமைப்பட்ட தவமுடிவும் வேதமுடிவு மங்ஙன நின்றுகேட்கும் கேள்வியாம்-எ-று.

ஆசாரியர் மாணாக்கனதுபக்குவமறிந்து வலியக்கூறுதலேயன்றி யவனையு மிவன்வலியக்கேட்க லாகாதாகலின் "மோனந்துளும்பிமொ ழிகாலத்தே" என்றும் இருதுவிற்பத்திர புட்பபலாதிகள் தோற்றினு மவ்விருது விகாரமின்றி யிருந்தாற்போற் கருவிகளோடுங் கூடியிருந் து மவற்றுட்டாக்கற்றுநின்று கேட்கவேண்டுமாகலின "இருதுபோ துஞ் சுட்டாது கேட்பவர்கள்" என்றுங் கூறினார்.

மோனந்துளும்பி மொழிகாலத் தென்றமையானும் - ஒன்றைச் சுட்டாது கேட்பவர்க ளென்றமையானுஞ் - சொல்லாமற்சொன்ன தென்றுங் கேளாமற் கேட்டதென்று மாயிற்று.

சுட்டற நிற்கவந்தது தவப்பயனாகலி னதனைத் "தவம்" என்றும். அங்ஙன நின்றுகேட்குமொழியாகலினதனை "வேதம்" என்றுங்கூறினார். அங்ஙனஞ்சொல்லுவது மிங்ஙனங்கேட்பதுஞ் சாம்பிரதாயம். இத்திருவெண்பாவா லாசாரிய னுபதேசங் கூறுமாறு மாணாக்க னேற்றுக்கொள்ளுமாறு மறிவித்தவாறுகாண்க. (௮)



இருளிற் சுடரென்ன விந்திரவி யென்ன
வருளைக்கடந்த பரானந்தர் - திருவாக்

அமுதமழை யம்பரச்சொன் னன்னிமித்த மாங்கே
மமதையிரா தென்றே மதி.

இருளிற்சுடரொன்ன விந்திரவியென்ன - வருளைக்கடந்த பராநந்தர்-திருவாக்கு-எ-து-பூதவிருளின்கட்டோற்றும் விளக்குப்போலுஞ் சந்திரன்போலுஞ் சூரியன்போலும் பிரகாசித் தாணவவிருளைநீக்குந் திருவருளையுங்கடந்து சிவாநந்தமயமா யெங்குநிறைந்துள்ள ஞானாசாரியரது அழகியவசநம்.

அமுதமழையம்பரச்சொன் னன்னிமித்தமாங்கே- மமதையிராதென்றேமதி-எ- து-.அமுதமழைபோலுமாகாசவாக்குப்போலுநல்லநிமித்தம்போலுமாமன்றி யதன்கட்சிறிதேனு மகங்காரமுண்டாகாதென்றறிதி-எ-று.

அருடோற்றுங்கான் மூவிதமாய்த் தோற்றலானுமொன்றற்கொன்றதிகமாய்ப்பிரகாசிக்கையானும் விளக்காதி மூச்சுடரையு முவமையாகக் கூறினர்.

(உ-ம்.) தத்துவப்பிரகாசம் "பொறிகரணங்களை யுயிர்ப்போற் போதம்போதத்தைப், பொருந்திநடத்திடுஞ்செயலாற் போதவுணர் வுணர்ந்தே, யறிவினதுசெயலோநாமெனவுணர்வுற்றிருப்ப வப்போதுவிளக்கெனவுமருணன்மதியெனவுங்,கறைவிடியுங்காலமெனவொளி வந்துற்பவிக்கும்,,என்பதனானுங்காண்க.

நீர்மழை கைமாறின்றிப் பொழியினு மூற்பத்திநாசமுளவாகலி னம்மழையை யுவமைகூறாமல் 'அமுதமழை, என்றும்- ஆகாசவாக்குண்மை யறிவித்தல்போ லுண்மையாகிய சிவத்தை யறிவித்தலின் 'அம்பரச்சொல், என்றும் - நல்லநிமித்தங்கேட்டோர்க்குத் தாங்கருதியபொருள் கைகூடல்போ லிதனைக்கேட்டோர்க்குத் தாங்கருதியவீடு கைகூடுதலின்'நன்னிமித்தம், என்றுங்- கூறினர்.

தற்போதத்தாற்கூறுஞ் சொற்கட்கெல்லா மமதையிருத்தலின் ,,ஆங்கேமமதையிராது,,என்றார். (க)



சாயா புருடனைப்போ லாநந்தமே தடித்த
மாயா வயிரியந மாண்ட - நேயவுணா
யாவேசர் வீர ரசர் மடலாளர்
சாவா னந்தர்க்குச் சரி.

சாயாபுருடனைப்போலாநந்தமேதடித்த, மாயாவயிரிமனமாண்ட - நேயவுணா - எ - து - வடிவமில்லாத வாகாயத்தில் வடிவம்நி

றடித்த சாயாபுருடனைப்போல் வடிவமின்றிய பேரானந்தந்தானே காருண்ணியத்தால் வடிவம்போற்காட்டி யெழுந்தருளிவந்த (மாயைக்கோர்வயிரியரான) ஞானசாரியரது மனோதீதமான கிருபாவசனம்.

ஆவேசர் வீரராசர் மடலாளர், சாவானந்தர்க்குச்சரி-எ-து-ஆவேசமேறினூர் மாவீரராயினூர் ஒருகுடைக்கீழாளு மரசர் மடலெடுத்தவர் தாஞ்சாவ தின்பமாய்க்கருதினேர் ஆகிய விவர்களது மொழிகட்குச்சரியாம்-எ-று.

ஆவேசமேறினூர் - தற்செயலின்றிக் கூறுதல்போல் முக்கரணங்களையுந் தமதிடத்தடக்கிக்கொண் டருளாய்நின்று கூறினமையானும் மாவீரராயினேர்-எதிர்த்தாரைக்கொல்வதே கருத்தாகக்கூறுதல்போலறிவுக் கெதிரீடாய்த் தோற்றுவனவெல்லா மதனூற்கொல்வதே கருத்தாகக்கூறுதலானும் - ஒர்குடைக்கீழாளுமரசர் - கூறியமொழிப்படியிம்மைப்பயனுகுதல்போ லிவர்கூறியமொழிப்படி மறுமைப்பயனுகுதலானும் - மடலாளர் - மற்றொன்றையுங்கூருது தாம்நச்சியமாதினையேபுகழ்ந்து கூறுதல்போலச் சரிதாதிகளைக்கூருது தமது ஞானநந்தத்தையே புகழ்ந்துகூறுதலானும் - சாவானந்தர்-தாஞ்சாவதேயின்பமாகக் கூறுதல்போலத் தற்போதவொழிவையே யின்பமாகக்கூறுதலானும் - ஆவேசமேறினூர்முதலிய வைவர்மொழியையு முவமையாகக்கூறினூர்.

அவரது மொழிக் குவமை கூறினமையா லிவரதுமொழி வருவிக்கப்பட்டது.

இவ்விரண்டு திருவெண்பாவானும் ஞானசாரியரது திருவாக்குச் சிறப்புக்கூறியவாறுகாண்க. (ய)



சத்திய நிர்வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து
வைத்து வழிகாட்டு மறைப்புலவன் - சுத்தன்
றமிழ்க் குரிசிற் சீகாழிச் சம்பந்தனென்பா
னெமக்கருளிச் செய்த திது.

சத்தியநிர்வாணத்தாற்றற்போதத்தாக்கறுத்து, வைத்துவழிகாட்டும் - எ - து - சத்தியநிர்வாணத் தீக்கையா லெனதுபோதத்தை யொன்றேனும் பற்றுதொழித்துச் சிவத்தோ டிரண்டறக் கலக்கவைத் தென்பால் வந்தடைந்தோர்க்கு மெனதுள்ளேதாமே நிறைந்திருந்து முத்திநெறியை யறிவிக்கும்.

மறைப்புலவன் - சுத்தன் - றமிழ்க்குரிசிற் சீகாழிச்சம்பந்தனென்பானெமக்கருளிச்செய்ததிது - எ - து - வேதங்களையெல்லா மோ

தாமுணர்ந்த ஞானப்புலவர் - மும்மலங்களையுங் கடந்துநின்ற நின்மலர் - தமிழின திலக்கணமெல்லா மளவிட்டறிந்த தமிழ்வேந்தர் - சீகாழியென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரென் றியாவரும்புகழாநின்ற சுவாமிகள் - எம்போல்வார் வீடடைந் துய்யுநிமித்த மருளிச்செய்த இந்நூலினருத்தம்-எ-று.

இந்நூல் பிறர்க்குபகாரமாகக் கூறினமையால் 'வழிகாட்டும்' என்பது பிறர்க்கெனக்கொள்க.

"மறைப்புலவன்" 'தமிழ்க்குரிசில்' என்றமையா லுபயகலைகளையு முடையானென்றறிக.

இத்திருவெண்பாவானூன்மரபு கூறியவாறுகாண்க. (௧௧)



தாக்கற்ற பூரணத்திற் சந்தற்ற தம்மைமல
நீக்குந் துயரகல நேசித்தோர் - பார்க்கும்
வழிபலநாம் பைமறித்த வாறுநீ மாளா
வொழிவி லொடுக்க முரைப்போம்.

தாக்கற்றபூரணத்திற்சந்தற்றதம்மைமல, நீக்குந்துயரகலநேசித்தோர் - எ - து - எல்லாவற்றொடுங் கூடிநின்று மவைகளொவ்வொன்றொடுந் தாக்கற்றிருந்த பரிபூரண சிவத்தோடு ஆணவ நீங்கியவிடத்திரண்டறக் கலந்து விளங்காநின்ற தம்மை யந்தவைக்கியத்தைத் தெரியவொட்டாது மறைத் திரண்டுபடுக்குமவ்வாணவமலத்துன்ப மகன்றேக வன்புகொண்டோர்.

பார்க்கும் - வழிபலநாம்பைமறித்தவாறுநீ, மாளாவொழிவிலொடுக்கமுரைப்போம் - எ - து - ஆராய்ந்தறியுஞ் சாத்திரநெறிகள் பலவுளவா மவைபோலும் மறைத்துக்கூறுது நாம்பையைவிரித் தனுளிருந்த பொருளீதென்று காட்டுமாறு மாணுக்கனே யொழியாடனியறிவென வொழியுமிடத் தொடுங்குநெறியைக்கூறுவாம்-எ-று.

ஆன்மாவிற்குச் சிவத்தோடைக்கிய மலமறைப்பிற் றெரியாதிருத்தலின் "நீக்குந் துயரகலநேசித்தோர்" என்றார்.

"பார்க்கும்வழிபல" என்றது பேதம் அபேதம் பேதாபேதங்களாய்க் கூறுநெறிகள்.

அநுபவ ரகசிய மெல்லாமறையாமற் கூறினமையாற் 'பைமறித்தவாறு' என்றார்.

ஆன்மா கெடா ததனது போதங்கெடுதலின் 'மாளாவொழிவ்' என்றார்.

அவ்விடஞ் சுகாதீதம் - அதனுளொடுங்கு நெறி யிதனுட்கூறின மையால் 'ஒழிவிலொடுக்கமுணைப்போம், என்றார்,

'இத்திருவெண்பாவா னூற்பயன் கூறியவாறுகாண்க. (௰௨)



சுருதிகுரு வாக்குச் சுவாநுபவ மூன்றுஞ்
சரியொத்த போதமுனைச் சார்வைத் - தெரிய
வுரைத்தநூற் பேர்கே ளொழிவிலொடுக்கம்
விரித்தநூற் கெல்லாம் விதை.

சுருதிகுரு வாக்குச் சுவானுபவ மூன்றுஞ், சரியொத்த போதமுனைச்சார்வை - எ - து - ஞானசாரிய ரருளிச்செய்த வுபதேசமொழிகளு மிம்மொழிகண்மே லையம்பிறவா திவற்றைத் தெளிவிக்கும். வேதாகமங்களு மிவ்விருவகைமொழிகளி னருத்தப்படியே தம்முட் டோன்றுஞ் சுவாநுபவமுமாகிய மூவகையுஞ் சரியொத்தவிடத்திற் றோன்றும் பேரறிவாகிய பதியையு மவற்று னிப்பதியையறியும் பசுவையு மிப்பதியைப் பசுவிற் குறியவொட்டாது மறைத்து நின்ற பாசத்தையும்.

தெரிய - வுரைத்தநூற்பேர்கேளொழிவிலொடுக்கம், விரித்தநூற் கெல்லாம்விதை - எ - து - உள்ளபடி விளங்கக்கூறிய விந்நூற்பெயரை மாணுக்கனே நீகேட்டி ஒழிவிலொடுக்கம் என்பதாம்-இம்முப்பொருளையும் பற்பலவாய்விரித்துக் கூறிய நூல்கட்கெல்லா மிஃதோர்வித்தாம்-எ-று.

குருமொழியே யமையுமெனினுந் தீவிரதர பக்குவமின்றிய மற்றைய மூவர்க்கு மதன்மே லையம்பிறக்குமாகலின் சுருதிவேண்டிற்று குருவுஞ் சுருதியுமுண்டாய் சுவாநுபவமின்றாயினது பாஞானமன்று - ஆகலி னிம்மூன்றுஞ் "சரியொத்தபோதம்,, என்றார்.

இக்குறிப்பா லிந்நூலுமிம்மூன்று மொத்துக் கூறிய தென்பதாயிற்று.

முப்பொருளின திலக்கண விரிவையெல்லாஞ் சுருக்கித்தற்போத வொழிவிற் குபாயமே விரித்துக் கூறலானும் - போதவொழிவி லியாவுமொடுக்கிப் போதவிரிவியாவும் விரித்தலானு மிதனை 'விரித்த நூற்கெல்லாம் விதை, என்றார்.

இத்திருவெண்பாவானூற்பெயர் கூறியவாறுகாண்க. (௰௩)



தந்திரகலை மந்திரகலை சார்பமுந்தச் சாற்றுமது
ந்திரசரி தாதி மார்க்கமிது - முந்தைத்

தபதி விரத்தியரைச் சார்பழியச் சாற்று
முபதேச மென்றே யுணர்.

தந்திரகலை மந்திரகலை சார்பழுந்தச் சாற்றுமது - மந்திரசார்தாதி மார்க்கம் - எ - து - குண்ட மண்டல வேதிகாதிகளைக்கூறுந்தந்திரகலைகளுங் - கிரியைகட் குரியவாகிய மந்திரங்களைக்கூறு மந்திரகலைகளும் ஆன்மாவை மேன்மேலு மலச்சார்போ டழுந்தக்கூறு மக்கலைகளின் மந்திர தந்திர கிரியாபாவனைகளாற்செய்யுஞ் சரிதை கிரியா யோக நெறிகளாகும்.

இது முந்தைத் - தபதிவிரத்தியரைச் சார்பழியச்சாற்று முபதேசமென்றே யுணர் - எ - து-இந்நூல் முற்பவங்களி னிட் காமியத்தவம் புண்ணின தபோதனர்க்கு மத்தவத்தா னுட்பற் றறுதியுடையோர்க்கு மலச்சார்பறும்படி கூறு ஞானோபதேசமென்று நீயறிதி-எ-று.

அக்கலைகளாற் போதவிரிவேயன்றி யொழிவின்மையாற் 'சார்பழுந்தச் சாற்றும்' என்றார்.

இது 'தபதிவிரத்தியரைச் சார்பழியச்சாற்றும்' என்றமையான் மற்றையர்க் காகாதென்பதாயிற்று

இத்திருவெண்பாவா லிந்நூ லுபதேசகலையென் றறிவித்தவாறு காண்க.



உடற்குயிர்போற் கட்கிமைபோ லாசிநா லொத்து
விடற்புலிதீ பாம்பினில்வீழ் வார்க்காஞ் - சுடச்சுடினும்
வாழைக்கா காவேதி மட்கலத்துக் காகாவா
றேழைக் காகாத திது.

உடற்குயிர்போற் கட்கிமைபோ லாசிநா லொத்துவிடற் புலிதீ பாம்பினில் வீழ்வார்க்காம்-எ-து-உடம்பை யுயி ரபிமானித்தல்போ லுங் கண்ணை யிமையானது காத்தல்போலு மூசி சென்றவிடந்தோ றுஞ் சரடு பின்சேறல்போலு ஞானாசாரியரைப் பிரியாது நின்றவர் திருமேனியை யபிமானித்தும் பாதுகாத்து மவர் திருவுள்ளக்குறிப் பின்படியே சென்றும் வழிபட்டு அவர்பார்த்துப் புலி-தீ-பாம்பாதி களிற் செலுத்தினும் பின்னிடையா தவைமேல் விழு மதிபக்குவர்க் கே யிந்நூல் கொடுக்கலாகும்.

சுடச்சுடினும்-வாழைக்காகாவேதி மட்கலத்துக் காகாவாறேழைக்காகாததிது-எ-து-மிகுந்த வக்கினியாற் சுடினும் வாழைத்தண்டைச் சுட்டக்கூடாத வாறுபோலும் பரிசனவேதி மட்கலத்திற் பரிசித்துப்

பொன்னாக்கக்கூடாதவாறுபோலும்-அங்ஙனமாசாரியனை வழிபடமாட்டாத வபக்குவர்க் கிந்நூல்கொடுப்பினு மநுபவஞ்சித்தியாது-எ-று.

உயிரானது உடம்பைத் தானாயபிமானித்துத் துன்பந்துடைத்த லொப்பனைசெய்தன் முதலிய வுபசாரங்களை யதற்குச் செய்வது போலு மவர் திருமேனியைத் தந்தேகமா யபிமானித்துச் செய்ய வேண்டு முபசாரமெல்லாஞ் செய்யவேண்டுமாகலின் 'உடற்குயிர் போல,' எ-றும் - இமையானது கண்ணைவிட்டு நீங்காதிருந் ததன்கட்டுறும் பிரதிவந்து சார்வதற்கு முன்னேநின்று பாதுகாத்தல்போலு மிரவும் பகலும் விட்டு நீங்காதிருந்தவரைத் துட்டமிருகமுதலிய வந்து சார்வதற்கு முன்னேநின்று பாதுகாக்கவேண்டும் - ஆகலிற் 'கட்கிமைபோல,' என்றுங் கூறினர்.

அதிபக்குவர் தேகாபிமானம்விட் டவரை மெய்ப்பொருளாகக் கருதினவராகலிற் புலியாதிகண்மேற் செலுத்தினும் வீழ்வா ரென்ப தாயிற்று.

அக்கினிக்கும் பரிசன வேதிக்கும் விறகைச் சுடுதற்கும் உலோகங்களைப் பொன்னாக்குதற்குங் கூடுமேயன்றி வாழைத்தண்டையு மட்கலத்தையு மங்ஙனஞ் செய்யக்கூடா ததுபோ லிந்நூலாற் பக்குவர்க்கு ஞானம் விளங்குமேயன்றி யபக்குவர்க்கு விளங்காதென்ப தறிக.

இத்திருவெண்பாவா லிந்நூற் கதிகாரிகளி னிலக்கணமறிவித்த வாறு காண்க. (௧௫)



ஆலிங் கனத்திலே யைந்திணையும் பாடுவோன்
மாலின்ப வாரி மதிநிறைபோற் - காலப்பூக்
கிண்கிணிவாய்ச் செய்ததுபோற் கின்னரிப்பாட் டெல்லாசங்
கொண்டவர்போற் கண்டவர்க் காகும்.

ஆலிங்கனத்திலே யைந்திணையும் பாடுவோன் - மாலின்பவாரிமதிநிறைபோல் - எ - து - மாதர் கூட்டரவிற்செய்யுமைவகையா லிங்கனத்தா லருமின்ப மைந்திணையு மநுபவித் தறிந் தொருவன் கூறிய பாட்டினைப் பாடுமோர்விடனுக் கக்கவி யருத்தத்தா னவ்வின்பம் பெற்றான்போன் றுளத்தின்க ணம்மயக்க வின்பவாரியெழுந் தலை மறிவது போலும்.

காலப்பூக் - கிண்கிணிவாய்ச் செய்ததுபோல்-எ-து-உதயகாலத்துத் தாமரை யரும்பு கிண் கிணிவாய்ச் செய் தலர்ந்தாற்போலும்.

கின்னரிப்பாட்டெல்லாசங் கொண்டவர்போற் கண்டவர்க்காகும் - எ - து - மற்றொருன்றினையுங் கேளா தொருவன் பாடுங் கின்னரிப்பாட்

டோசையையே யுல்லாசமா யுட்கொண்டவர்போலு மிந்நூலைக்கே ட்டறிந்தோர்க்கே ஞானநந்த முளதாம்-எ-று.

ஐந்திணையும்பாடுவோனுக் கதனைப் பாடுந்தோறு மவ்வின்பம்பெ ற்றான்போன் றுளத்தின்ப மேன்மேலெழுதலின் 'மறிதிரா, என்றார்.

அவனைப்போ லிந்நூற் கேட்குந்தோறு மிவர்க்குஞ் சிவாநந்தம் பெற்றார்போன் றுள்ளத்தின் மேன்மேற் சந்தோடந்தோன்ற வேண் டுமாகலின் 'மாலின்பவாரி மறிதிரைபோல், என்றும் - முகமலர்ச்சி தோன்றவேண்டுமாகலின் 'காலப்பூக் கிண்கிணிவாய்ச் செய்ததுபோ ல், என்றும் - மற்றொன்றையுங் கேளாதிதனையே கேட்கவேண்டுமாக லின் 'கின்னரிப்பாட்டுல்லாசங் கொண்டவர்போல், என்று மிங்ஙன மூவமைகூறினார்.

ஆலிங்கனம்-பரிசபேதத்தாற் சுகமுமைந்து பேதப்பட்டதென க்கொள்க.

அஃதைந்தென்பது - 'ஆலிங்கனமைந்து மிதழ்பானம் பதினொ ன்றும், என்னுங் காமநூலிற்காண்க.

இத்திருவெண்பாவா லிந்நூல்கேட்கு மிலக்கணங்கூறியவாறுகாண்க.()

வணங்கா வுரைக்கு வணக்கமிலை தீங்கை
வணங்கிவாழ்த் தென்னில் வளமியா - வணங்கினு
மெல்லார்க்கு நன்று யிருப்பதிலை யாதொன்று
மெல்லார்க்கும் பொல்லா திலை.

வணங்காவுரைக்கு வணக்கமிலை தீங்கை-வணங்கிவாழ்த்தென்னில் வளமியா-எ-று-போதமடங்காதே மறப்பாற்கூறு நூலுக்கடக்கமே யில்லை - தீமைகளைச் செறித்தோர் நூலாக்கி யதற்கடக்கங்கூறியிதனை யிகழாது புகழுங்கோளெனி னதனூன்வருநன்மையா தொன்றுமில்லை.

வணங்கினு - மெல்லார்க்குநன்றுயிருப்பதிலை யாதொன்று - மெ ல்லார்க்கும் பொல்லா திலை-எ-று-நன்மைகளைச்செறித்தோர் நூலா க்கி யதற்கடக்கங்கூறினு மியாவர்க்கு நன்றுயிருப்பதில்லை யிவைகளை ன்றி மற்றியாதோர் நூலாயினு மியாவர்க்கும் பொல்லாங்காயிருப்ப துமில்லை-எ-று.

அடங்காவுரையெனவே யவ னடக்கங்கூறினு மடக்கமன்றென்ப தாயிற்று.

தீங்கினைச்செய் தடக்கங்கூறிப் புகழச் சொன்னமையால் வருந ன்மையொன்று மின்றாயிற்று.

நன்மைகளியாவுஞ் செறித்தடக்கங்கூறினும் பொருமை முதலி யவற்றாற் சிலரா லிகழப்படுதலின் 'எல்லார்க்கு நன்றுயிருப்பதிலை,

என்றும் - பயனின்றாய்க்கூறு மியாதோர் நூலாயினுஞ் சில ரங்கீகரித்தலின் 'எல்லார்க்கும் பொல்லாதில, என்றுங் கூறினார்.

தீமைநன்மைகளைமுற்கூறினமையால் "யாதொன்றும்,, என்பதிவைகட்குப் பொதுவாயிருந்த வுலகக்கதைகளைக் கூறுநூலெனக்கொள்க

"உரை,, என்பதூஉந் "தீங்கு,, என்பதும் - பெயர்.

"தீங்கு,, என்றமையான் நன்மையென்று வருவிக்கப்பட்டது.

"வணக்கம்,, அடக்கம்.

"வளமியா,, வென்ப திகரக்குறுக்க மாதலிற் றளைதட்டாதென்பது காண்க.

இத்திருவெண்பாவால் (இவைக ளிங்ஙனமிருப்ப யாமெங்ஙனமவையடக்கங் கூறுமாறென்று) குறிப்பா னவையடக்கங் கூறியவாறு காண்க. (௰எ)



அறைந்த பறைகுழற்கு மாடினர்க்கு மேற்க
மறந்தழுவார் வாய்பாட்டு வாரா - திறங்கேளீர்
கூடக் கரைவதலாற் கூறிற் பயனில்லாப்
பாடற்கார் பார்ப்பார் பயன்.

அறைந்தபறைகுழற்குமாடினர்க்குமேற்க, மறந்தழுவார்வாய்பாட்டுவாரா - எ - து - கர்த்தா னறையப்பட்ட மத்தளத்தொனிக்குமித்தொனிக் கேற்பவூதுங் குழலோசைக்கு மிதுகட்கேற்ப நடனமிடுவோர்க்கு மேற்பத் தம்மை மறந்தழு மகளிர தவ்வழுகையாகிய வாய்ப்பாட்டொத்து வாரா ததுபோலுமிந் நூறற்போதமிழந் தநின்றுகூறியதாகலி னெழுத்துமுதலியவைந்திலக்கணங்களோடொத்துவாராது.

அஃதெங்ஙனமாயினு மதன்கட் கூடியபொருட்டா னன்குளவோவெனின்.

திறங்கேளீர் - கூடக்கரைவதலாற் கூறிற்பயனில்லாப், பாடற்கார்பார்ப்பார்பயன் - எ - து - இந்நூலின்பொருட் டிறமையை நீர் கேட்பீராக வஃதெங்ஙனமெனி னிப்பொருளைக்கேட்போ ரிப்பொருளோடுங்கூடத் தாமுங்கரைந்து போவதேயன்றிச் சொல்லுமிடத்துத் தாமுந் தமக்குவரு மிம்மை மறுமைப்பயன்களுமில்லாத பாடற்கியாவ ருருத்தம்பார்ப்பார்-எ-று.

தாளமு மோசையுஞ் சரியொத்த நடனத்திற்குத் துன்பமேலிடலாற் றம்மைமறந்திதன்மயமாயிருந்தழுவாரழுமோசையவற்றோ டொவ்வாததுபோ லின்பமேலிடலாற் றம்மைமறந்திதன்மயமாயி

ருந்துகூறிய விப்பாய் லிலக்கணத்தோ டொவ்வாதென்பது குறிப் பாலறியும்படி கூறினர்.

இதன் தருத்தம் போதவொழிவுஞ் சிவாநந்தப் பேறுமாகலினு மிதனைக்கேட்ட வறிபக்குவரக்கணமே போதமழிந் தாநந்தமயமாவ ராகலினுங் 'கூடக்காவது,' என்றும்- பயன்பெறும் போதமொழிவ தனாற் 'பயனில்லாப்பாடல்,' என்றுங்-கூறினர்.

இத்திருவெண்பாவாற் சத்தந்திற்குப் பஞ்சவதிகார வழுவுண்டா யினு மருத்தம் எல்லாநூல்களின தருத்தங்கட்கு முடிவென்று கூறிய வாறுகாண்க.



போத வொழிவையுரை போய்த்தீண்டா பூதலத்தோர்
பாதமனங் கண்போலப் பற்றுமோ - நீதெளியிற்
கண்ணாடியிற் கடலைக் கைவசமாய்க் காட்டுதல்போற்
கண்ணூரி சய்ஞையைப்போற் காண்.

போதவொழிவை யுரைபோய்த் தீண்டாபூதலத்தோர் - பாதமனங் கண்போலப்பற்றுமோ - எ - று - ஆன்மபோத வொழிவிற்குணயிரு த்துவ்ள சிவத்தை வேதாகம சாத்திரங்களா லளவிட்டறியக்கூடாது- அஃதன்றிக் காலானடந்து சென்று மனத்தானினைந்துங் கண்ணாற்பா ர்த்து மிப்பூதலத்தோரோரோர்பொருளை யறிந்து பிடிப்பதுபோ ற்கருவிகளாலு மதனையறிந்து பிடிக்கக்கூடாது- ஆகலினங்ஙனமறிந் துபற்றுவதன்றி.

நீதேளியிற் - கண்ணாடியிற்கடலைக் கைவசமாக்காட்டுதல்போற்- கண்ணூரிசய்ஞையைப்போற்காண் - எ - று - நீயச்சிவத்தை யறியுமி டத்துச் சிறிதாகிய கண்ணாடியிற் பெரிதாகிய கடலை மகவுகருப் பிரத் தியக்கமாகக் காட்டுமாறுபோலும் - ஓர்நாரியோர்புருடனுக்குக் கட் சைகையாற் கலவிக்கிடங்காட்டு மாறும்போலும் யாமதனை யறிவிக்குங் குறிப்பானி யறிதி-எ.று.

போதவொழிவை யப்போதத்தா னறியுங்கலைகளானுங் கருவிக ளானு மறியக்கூடாதாகலின் 'உரைபோய்த்தீண்டா,' வென்றும்-'பாத மனங்கண்போலப்பற்றுமோ,' வென்றுங்-கூறினர்.

பரிபூரண சிவத்தி னிலக்கணமெல்லா நன்றாய் விளங்கும்படி வேதாகமமுடிவிற்கூறிய சிலவுபதேசமொழிகளை யெடுத் திந்நூலிற் கூறுதலிற் 'கண்ணாடியிற்கடலைக்கைவசமாக்காட்டுதல்போல்,' என்றும் பூரண்நோக்கம் - மௌநமுத்திரை - முதலியகுறிப்பா னச்சிவத்தை

யடைதற் குபாயமறிவித்தலாற் 'கண்ணூரிசன்னையைப்போல்' என்றுங் கூறினார்.

---

ஆனைக்கைபோ லபின வத்துவிதா னந்தமா
மோனத்தை வாக்குமன முட்டுமோ - ஞானத்தாற்
காக்கை யிருந்தமனை கைமேற் பிறையென்ற
லூர்க்கருதி னீசிவ மாவை.

ஆனைக்கைபோலபினவத்துவிதானந்தமா - மோனத்தைவாக்குமனமுட்டுமோ -எ-று - பரிசமறியுங்கையுங்கந்தமறியுநாசியுமொன்று யிருக்கின்ற யானையினது துதிக்கைபோன்று பின்னமின்றிச் சிவமு மான்மாவுமிரண்டற்றிருந்த வத்துவிதமாகிய மோனானந்தத்தை வாக்காற் கூறுங்கலைகளு மனோபாவனைகளுந் தீண்டுமோ.

ஞானத்தாற் - காக்கையிருந்தமனை கைமேற்பிறையென்றலாற் கருதினீ சிவமாவை -எ-று - ஓர்மனையையும் பிறையையு மொருவனுக் கொருவ னறிவிக்குங்காற் காக்கையிருந்த மனையென்றுங் கைவிரன் மேற் பிறையென்று மிங்ஙன மறிவித்தலா னவனறிவதுபோலுமியா ஞ்சிவத்தைக் குறிப்பா னறிவிக்கு முபதேசங்களை ஞானத்தாற் கூர்ந் து விசாரித்தறிதியெனி னீயு மச்சிவமாவை-எ-று.

'கை நாசி யென்றிரண்டுறுப்பா யிரண்டு விடயங்களையும் வேறு பிரித் தறிவதாயிருந்தும் பிரிபடாததுவே யிதுவா யிதுவே யதுவாயி ருப்பதுபோலச் சிவமென்று மான்மாவென்று மிரண்டுபொருளா யிரண்டுஞானங்களும் வேறாயிருந்து மயிக்கத்துப் பிரிபடாததுவே யிதுவா யிதுவேயதுவா யிருத்தலின் 'ஆனைக்கைபோ லபினவத்துவி தம்' என்றார்.

மனைகள் பலவற்றையுங்கடந்துசென்று காக்கையிருந்தமனையை நீயடைதியென் றொருவனறிவிக்க வறிதல்போற் கருவிகள் பலவற்றை யுங் கடந்துசென்று நாதத்துவத்தின் முடிவினின்ற சைதன்னியம் நீயென்றறிவிக்க வறிதலால் 'காக்கையிருந்தமனை' என்றும்-ஒருவனுக் கொருவன் பிறையை யறிவிக்குங்கால் விரன்மேற் பிறையென்று சுட் டிக்காட்டியறிவிக்க வவ் விரனேரோநோக்கி யப்பிறையைத்தரிசித்தல் போல நாதாந்தத்தின் முடிவினின்று நீ திருவருளை முன்னிட்டுக்கொ ண்டு சிவத்தைத் தரிசிக்கவேண்டுமென் றறிவிக்க வம்முறையேசென் று சிவத்தைத்தரிசித்தலாற் 'கைமேற்பிறை' என்றுங் கூறினார்.

கண்போலும் ஆன்மா - விரல்போலுந் திருவருள் - பிறைபோ லுஞ்சிவம் எனக்கொள்க.

இவை யிரண்டுதிருவெண்பாவானு மெய்ப்பொருளை யறிவித்த ற் குபாயங்கூறியவாறுகாண்க. (உ௰)



முலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர்
சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர் - பலதாரை
வட்டிலே போலுமவர் மாயோக வாசகத்தைக்
கிட்டி னரகங் கிடீர்.

முலையுண்ணி நீருண்ணு மோட்டெருமை மூடர் - சலமின்றிச் சந்துரைப்பார் தர்க்கர் - எ - து - பசுவினது விம்மிச்சுரந்த முலையிற் கடித்த வுண்ணிபோலுந் தடாகத்திநீரருந்து முதிர்ந்த வெருமை போலு மறிவேதுமின்றியமூடர்போலு நீரின்றிச்சந்தமுரைப்பார் போலு மாவார்தருக்கராயினர்.

பலதாரை - வட்டிலேபோலுமவர் மாயோகவாசகத்தைக்-கிட்டி னரகங்கிடீர் - ௭ - து - பன்றாளை வட்டிலைப்போலும் பலபடக்கூறுநி ன்ற வவரது - மாயைக்கூட்டரவாகிய மொழிகளைக்கேட்பினு நிரய மென்றறிவீர்-எ-று.

முலையுண்ணி பாலுண்ணவறியா துதிரமருந்தல்போ னூலாற் சிவானந்தப்பேறடையா திம்மைப்பயன்கோடலான் 'முலையுண்ணி, என்றும் - தடாகத்திற் றன்றாகந்தீர்க்கு நீரருந்தாததனுள்வீழ்ந்துசே றுக்கிச்செல்லு மெருமைபோன் ஞானிகள்பாற் செல்லினு மவர்கூ றும் ஞானமொழிகளைக் கொள்ளாது தருக்கமாடி யவர் சித்தத்தைக் கலக்கிச் சேறலான் 'எருமை, என்றும் - மூடர் யாவரோது நன்குகூறி னுந்தான் பிடித்தபிடி விடாது நிற்றல்போற் றீதாயினுந் தருக்கவலி யாற் றம்பிடித்தபிடியை முற்றுஞ்சாதித்தலின் 'மூடர், என்றும்-சல மின்றிச் சந்துரைப்போர்க்குக்கைவருத்தமேயன்றிப் பயனின்றாவது போ லிவர்பலரோடுந் தருக்கமாடலான் வாய்வருத்தமேயன்றிப்பய ன்வேறின்றாகலின் 'சலமின்றிச்சந்துரைப்பார், என்றும் - பலதாரை வட்டிலினீர் தாரைகடோறுஞ் சேறல்போ லோர்நெறிகூறுங்கா லத னை முற்றுப்பெறக்கூறாது பன்னெறியாய் மலைவுபெறக்கூறலித் 'பல தாரைவட்டில், என்றும் - திருவருட்போதமன்றி மாயாபோதத்தாற் கூறலின் 'மாயோகவாசகம், என்றுங்-கூறினார்.

இதனாற் கல்வியுடையோரேனும் பிரபஞ்சிகளினுங் கேடென்ப தாயிற்று.

கல்வி - பொருள் - என்னு மிரண்டுசெல்வங்களு நல்லோர்யால் வரி னன்மையுந் தீயோர்பால்வரிற் றீமையு - மேன்மேல்வளர்தலினி வர் தீயரென்பதாயிற்று.

இவரதுமொழிகளை யுண்மையாகக் கொள்வோர்க்குந் தீதுவரு மாகலிற் கிட்டினரகம், என்றார்.

இத்திருவெண்பாவாற் றருக்கவாதிக ளேர்க்குணமு, மவரதுமொழிகளைக் கேட்கலாகாதென்பது மறிவித்தவாறுகாண்க.



குன்றழலி னொந்துநீர் தேடுங் குருடரைப்போற்
கன்றுபசுவைப்பார்க்குங் காலம்போ - லொன்றொன்றில்
வேட்ட வதிமோகி விடயம்போற் சற்குருவைத்
தேட்டமதிபக்குவமாய்த்தேர்.

குன்றழலினொந்துநீர்தேடுங்குருடரைப்போற் - கன்றுபசுவைப் பார்க்குங்காலம்போ - லொன்றொன்றில் - வேட்டவதிமோகிவிடயம் போல்-எ-து-முதிர்வேனிற்காலத்துமலைக்கட்படுந்தீவெப்பத்தான்மெய்வருந்தி நீரொங்குளவென்று தேடுமந்தகரைப்போலும்-ஆவின்கன்று தன் றாயைத்தேடுங் காலம்போலும்-விடயங்கள் பலவற்றுள்ளு மோர்விடயத்தை நச்சிய மிருந்துவந்த விடயமோகிபோலும்.

சற்குருவைத்தேட்டமதிபக்குவமாய்த்தேர் - எ - து - ஞானாசாரியரொங்குளரென்று தேடுந்தேட்டமே யதிதீவிரதர பக்குவமென் றறிதி-எ-று.

அழலினொந்த குருடர் வெப்பத்துன்பந் தணிப்பானீர் தெரியாது தேடுமாறுபோன் மிகுந்தபக்குவர்க்குப் பிறவிதுன்பமாய்த் தோற்றலி னித்துன்பந்துடைப்பா ஞசாரியரைத் தெரியாதுதேடலின் 'நீர்தேடுங்குருடரைப்போல், என்றும் - கன்று காலை மாலையாகிய காலத்துத் தன்றாயை மிகுந்தவன்போடுந் தேடல்போன் முற்காலம் போலன்றி யிக்காலத்திற்பிரபஞ்சம் பொய்யாய்த்தோற்றி மிகுந்த வன்போடு ஞானசாரியரைத்தேடலிற் 'கன்றுபசுவைப்பார்க்குங்காலம்போல், என்றும் - ஓர்விடயத்தை நச்சியவதிமோகி யதனான்வருமின்பத்தைக் கருதிக்கருதி யவ்விடயமென்று கிடைக்குமோவென் றதனையேதேடல்போற் பேரின்பத்தைக் கருதிக் கருதி யிதனைக்கொடுக்கு ஞானசாரியரை யென்றைக் கடைவோமென் றவரையே தேடலான் 'அதிமோகிவிடயம்போல்,' என்றுங் - கூறினார்.

விடயமோகிபோலென்று கூட்டுக.

இத்திருவெண்பாவாற் பக்குவிலக்கணங் கூறியவாறுகாண்க. ()

## பதிநிச்சயங்கூறல்.

பெண்ணாணலியாய்ப் பிறந்துவளர்ந் தேயழியு
மெண்ணதை யேதமியல் பின்றிப் - பண்ணுங்காந்

காரணகத் தர்வொருவ னுண்டவனைக் காட்டுநூ
லாரணமு மாகமமு மாம்.

பெண்ணாணலியாய்ப்பிறந்துவளர்ந்தேயழியு - பெண்ணாதபேத மியல்பின்றிப் - பண்ணுங்காற் - காரணகர்த்தாவொருவனுண்டு - எ-று. ஓரியல்பின்றி யனந்தபேதங்களாயும் பெண்வடிவமாயு மாண்வடிவமாயு மிவ்விருவகையுங்கூடிய வலிவடிவாகியுந்தோன்றி நின்றழிபட்ட விந் தேகாதிபிரபஞ்சத்திற்குத் தற்சுதந்தர மின்மையாற்றானே காரியப்படமாட்டா தாகலி னிதனை யனுதியிலேபடைத்தற்கு நிமித்த காரணனாகிய கருத்தனொருத்தனுண்டு -. அஃதெங்ஙனமெனின்.

அவனைக்காட்டுநூலாரணமு மாகமமுமாம்-எ-று-அக்கருத்தனையறிவிக்குநூல்கள் வேதாகமங்களாகும்-(இவற்றானறிந்துகொள்ளுதி-எ-று.

காரியங்களுண்டாவதற்குக்காரணம் - முதற்காரணந் - துணைக்காரண - நிமித்தகாரண - மென மூன்றுவகையாயிருக்கும். இவற்றுள்-முதற்காரணம் - மண். துணைக்காரணந் - தண்டு சக்கரம். நிமித்தகாரணம் - குலாலன்.

நிமித்தகாரணனாகிய குலாலன் - முதற்காரணமாகிய மண்ணைத் துணைக்காரணமாகிய தண்டு சக்கரங்களைக்கொண்டு - கடகலசாதி காரியங்களையுண்டாக்குவன். அவைபோற் குலாலன்போலு நிமித்தகாரணனாகிய சிவன் - மண்போலும் முதற்காரணமாகிய மாயையைத் தண்டுசக்கரம்போலுந் துணைக்காரணமாகிய தனது கிரியாசத்தியாற்-றநுகரண புவனபோகங்களாகிய காரியங்களையுண்டாக்குவன். ஆகலினுங் கடகலசாதி காரியங்களைக்கண் டிவற்றைக் காரியப்படுத்துங் குலாலனொருவ னுளனென் றறிவதுபோலுந் தநுகரணாதிகளைக்கண் டிவற்றைக் காரியப்படுத்துங்கருத்தா வொருத்தனுளனென் றறியவேண்டும். ஆகலினும் - 'பண்ணுங்காற் காரணகர்த்தா வொருவனுண்டு, என்றார்.

மற்றையநூல்க ளிவற்றைப்போலுண்மையா யவனையறிவிக்கமாட்டாதாகலின் 'அவனைக்காட்டுநூ லாரணமு மாகமமுமாம், என்றார்.

(பெண்ணாண்) என்னும் பன்மைபோல் அலியையும் பன்மையாகக் கூறினமையாற் பெண்ணாணுக்குரிய 'குறிகளிருவகையுமின்றிய புன்முதலியனவும் புழுமுதலியனவும் 'அலி, யெனக்கொள்க.

பண்ணுங்கால்-என்னு மேழனுருபை நான்கனுருபாகக்கொள்க.

(உ-ம்) சித்தியார் - 'காரியங் காரணங்கண் முதற்றுணை நிமித்தங்கண்டாம் - பாரின்மண் டிரிகைப்பண்ணுமவன் முதற்றுணை நிமித்த, தேரின்மண் மாயையாகத் திரிகைதன் சத்தியாக - வாரியன்குலாலனாகின் றாக்குவனகிலமெல்லாம், என்பதனாற் காண்க.

இத்திருவெண்பாவாற் பதியொன்றுளதென் றறிவித்தவாறுகாண்க.(க)



தன்னை யறியாது வேறுண்டாய்த் தானறியா
துன்னிலொழிவா முதிப்பிறமொன் றுமிலைச் - சந்நிதிக்கே
யஞ்சுதொழி லாமதனை யானந்த வாக்காலே
கிஞ்சளவு கேட்கலு மாகும்.

தன்னையறியாது வேறுண்டாய்த் தானறியா - துன்னிலொழிவா முதிப்பிறமொன்றுமிலை - எ - து - நீர்கூறிய சிவந்தன்னை யறிந்துகொண் டிருக்குமோவெனின் மலரகிதமாயிருத்தலி னது தன்னையறியாது - மற்றோர் பொருளைத்தா னறிந்துகொண்டிருக்குமோவெனிற் றனது பூரணத்திற் சகலமு மடங்கியிருக்குமாகலிற் றனக்கு வேறு யோர் பொருளுண்டா யதனையறியாது - நினைவோடுதான் கூடியிருக்குமோ வெனி னினைப்புண்டெனின் மறப்புண்டாகலினது நினைப்பு மறப்புமின்றிய நிருவிகாரி - அது தானோர்காலத் துண்டாயதோவெனி னுற்புத்தியுண்டெனி னாசமுமுண் டாதலி னது நித்தியமாகலி னுற்பத்தி நாசங்க ளொன்றுமில்லை.

இங்ஙனம் 'மலரகிதமாய்ப் பரிபூரணமாய் நிருவிகாரியா யனாதி நித்தியமாயிருந்துள்ள வச்சிவம் எங்ஙன மாயையைக் காரியப்படுத் துமெனின்.

சந்நிதிக்கே யஞ்சுதொழிலா மதனை யானந்தவாக்காலே கிஞ்ச ளவுகேட்கலுமாகும் - எ - து - அச்சிவத்தின் சந்நிதிக்கண்ணே பஞ்ச கிருத்தியங்க ளுளவா மக்கிருத்தியத்தை யான்மாக்கண்மேல் வைத்த காருண்ணியத்தான் மவுனந்தந் ததும்பியது கூறு மானந்தவாக்கா ற்சிறிதளவு கேட்கலுமாகும்-எ-று.

சூரிய னிச்சா யெத்தனமின்றி யிருக்கவு மவன் சந்நிதியிலொன் று முகையாயு மொன்றலர்ந்து மொன்றுலர்ந்துந் தாமரைமுத்தொ ழிற் படல்போற் சிவசந்நிதானத்திலே மாயையிற் சிருட்டியாதி தோ ற்றலாற் 'சந்நிதிக்கே யஞ்சுதொழிலாம்' என்றார்.

ஆனந்தவாக்கு - வேதாகமங்கள்.

'கிஞ்சளவுகேட்கலுமாகும்' என்றமையாற் பஞ்சகிருத்தியத்தின் பெருமையை யளவிடக்கூடா தென்பதாயிற்று



உதியா துளதாகி யோங்கிப் பேராமை
[illegible]ருக்கு மங்குறைந் தாகாமற் - பலதயா

வாகாய முங்காலும் போலவசை வற்ற
தேகாண் பரி பூரணம்.

உதியாதுளதாகி யோங்கிப்போராம - லதிசூக்குமங்குறைந்தாகா மல் - எ - து - தாமொன்றினு லுற்பத்தியாகா தெக்காலமுமுள்ளதாய்க்கருவிகள் முப்பத்தாறையுங் கடந்திருப்பதாய்ப் போக்குவரவற்றதாய் நுண்ணிய பொருள்கட்கெல்லாம் நுண்ணிதா யோர்காலத்திற் குறைந்தோர்காலத்தில் வளராததாய்.

பதையாத - வாகாயமுங்காலும் போலவசைவற்ற - தேகாண்பரி பூரணம் - எ - து-முடிவுகாலத்திற் சலனமின்றாய் வாயுவு மாகாயமும் பிரிவற்றொன்று யிருப்பதுபோற் சடசித்துக்களாயுள்ள பிரபஞ்சமுந் தானும் பிரிபடா தொன்று யசைவற்றிருப்பதே யச்சிவத்தினது பரிபூரண சொரூபம் -எ-று.

தநுவாதிகளை மாயையிற் றோற்றுவிப்பது மான்மாக்களை யவற்றிற் கூட்டுவிப்பது மஃதாகலினு மதற்குமேன் மற்றொன் றின்மையானும் 'உதியாதுளதாகி, என்றும் - அசலமாகலிற் 'போராமல், என்றும் யாவைக்குந் தாரகமா யுட்புறம்பா யிருந்து மொன்றேடுந் தாக்கற்றிருத்தலின் 'அதிசூக்குமம், என்றும்-அகண்டா காரமாயிருத்தலிற்'குறைந்தாகாமல், என்றும் -ஆகாயத்தில் வாயுவசரிக்கும்போ தவ் வாகாயத்தையும் வாயுவையு மிவ்வாயுக்கட் டோன்றுஞ் சீதள வுட்டணமுதலியவற்றையும் பிரித்துக்காணப்படும்.

அவற்றினடுநின்ற வாயுவந்தவாகாயத்தி லசைவறநிற்பின்முற்றோன்றிய பகுப்புக்களின்றி யவ்வாகாயந்தானுயிருக்கும்-அவைபோலும்-பெத்தகாலத்து முப்பொருள்கட்குநடுநின்ற வான்மபோதஞ்சீவிக்குமிடத்துச் சிவமென்றும்,பசுவென் றும்,பாசமென் றும்,பிரித்தறியப்படும் - முத்திகாலத் தவ்வான்மபோதஞ் சீவியாது சிவத்துளடங்கின் முற்றோற்றிய பகுப்புக்களொன்றுந்தோற்றுது சிவந்தானுயிருக்கும்-

ஆகலின் 'ஆகாயமுங்காலும்போலவசைவற்ற - தேகாண்பரிபூரணம், என்றுங் - கூறினர்.

இவை யிரண்டுதிருவெண்பாவானும்,பதியிலக்கணங் கூறியவாறு காண்க. (உரு)

பதியானது சடசித்துக்கட் கெல்லா மிடங்கொடுத்துக் கொண்டெல்லாந் தானுயிருக்குமென்றீரானல் அட்டமூர்த்தமுதலிய வடிவங்களு மத்திருமேனிகளை வழிபடுவோர்க் கதுகொடுக்கும் பயன்முதலியவு மியாவையெனின் மேற்கூறுகின்றார்.



எட்டுருவு மைந்தொழிலு மிச்சைவடி வும்பயனுஞ்
சுட்டரிய பூரணமுஞ் சுட்டுதலு - நிட்டைகளு
மூன்னிழப்பி லின்ப முநித்தொடுங்கு மொன்றிரண்டுந்
தன்னருட்கே யாமத் தனை.

எட்டுருவுமைந்தொழிலு மிச்சைவடிவும்பயனுஞ் - சுட்டரியபூரணமுஞ்சுட்டுதலும் - எ - து - பிரபஞ்சமெல்லா மோர்வடிவுமாய்க் கொண்டருளிய வட்டமூர்த்தமும், ரூபாரூபமாகிய சதாசிவன் செய்யு மைந்தொழில்களுந் தமது சுதந்தர விச்சையாற் றிருமேனிகொண்ட வுருவமாகிய மயேசுர வடிவு மிவ்வடிவுகளை வழிபடுவோர்க் கிவராற்கொடுக்கும் பதப்பிரயோசனங்களு மிவ்வடிவுகளெல்லாங் கடந்தான்மபோதத்தாற்சுட்டி யறிதற்கரிய வரூபமாகிய பரிபூரண சொரூபமுஞ் சுட்டியறியும்படி யெழுந்தருளிவந்த குருவடிவும்.

நிட்டைகளு- மூன்னிழப்பிலின்பமுநித்தொடுங்குமொன்றிரண்டுந் - தன்னருட்கேயாமத்தனை - எ - து - வீடடையுநெறியாகக் கூறியவுபாயநிட்டைகளிற் றோற்றுவனவு முனதுபோதவொழிவி லானந்தந்தோற்ற வதனையறிந் த்தனு ஶநீதப்படு மத்துவிதமென்பது மிங்ஙன மதீதப்படுவதன் முற்றோற்றுந் துவிதமென்பதுமாகிய விவையத்தனையு மச்சிவத்தின தருட்சத்தியா லுண்டாம்-எ-று.

'எட்டுரு, வென்றது - பஞ்சபூதங்களுஞ் சந்திர சூரியரு மான்மாவு மெனக்கொள்க.

இத்திருவெண்பாவாற் பதியின தருட்சத்தி யிலக்கணங் - கூறியவாறுகாண்க. (உ௬)



உனையுணர்த்திற் பாச முதவியுடை யோன்
றனையுணர்த்தி னீயே தலமாங் - கனலை
விறகிடமாய்க் காணிலதன் வெம்மையைவேறுக்கி
யறியலிலாப் போலதுநீ யாம்.

உனையுணர்த்திற்பாசமுதவியுடையோன் - றனையுணர்த்தினீயே தலமாம் - எ - து - பசுவாகிய வுன்னை யறிவிக்குமிடத்தும் உன்னை யறிவிலே மறைத்து நின்ற பாசத்தை யறிவிக்குமிடத்தும் பெத்த முத்தியென்று மிரண்டுகாலத்து முயிர்த்துணையாயிருந் துனக்குபகரிக்கும் பதியை யறிவிக்குமிடத்தும் நீயே மற்றைய விரண்டிற்குமிடமாகும் அஃதெங்ஙனமெனின்.

கனலை-விறகிடமாய்க்காணில்தன் வெம்மையைவேறுக்கி - யறியலிலாப்போலதுநீயாம் - எ - து - அக்கினியைக் காட்டத்தினிடமாய்க்

கடைந்துகாணி னவ்வக்கினிவே றுட்டணம்வேறாய்ப் பிரித்தறியக்கூடாததுபோலச் சுவாநுபவத்தான் மலத்தினைநீங்கி யுன்னையுள்ளபடியறியி னிவேறுசிவம்வேறாய்த்தோற்றாதாகலி னச்சிவ நீயாகும்-எ-று.

காட்டத்தி லடங்கியிருந்ததீக் கடைந்தபோது தோற்றினாற்போன்முன் மலபெந்தத்தாற் றோற்றாதிருந்த வான்மா விப்போது சுருதி குரு சுவாநுபவத்தாற் றோற்றலிற் 'கனலைவிறகிடமாய்க்காணில்,' என்றும் - அதிற்றோற்றிய தீயி னுட்டணமும் பிரகாசமு மிருத்தல்போற் றன்னையுள்ளபடி கண்ட வான்மாவினிடத் தானந்தமு மவ்வானந்த மேன்மேல்விளைவது மிருத்தலின் 'அதன்வெம்மையைவேறாக்கியறிய லிலாப்போல,' என்றும்-இரண்டிற்கும் 'நீயேதலம்,' என்றுங்- கூறினார்.

அக்கினியைப்போற் பசு - சூடுபோற் சிவம் - பிரகாசம்போற் பாசம்-எனவறிக.

ஆனந்தஞ் சிவம்- ஆனந்தத்தை யநுபவிப்பது ஆன்மா - ஆனந்தத்தைவிளைப்பது மலம் - எனவறிக.

தத்துவமசி வாக்கியார்த்தமு மிங்ஙனங் காண்கவென்று 'அதுநீயாம்,' என்றார்.

இத்திருவெண்பாவான் முத்தியினு மும்முதலும் பிரிவற்றிருக்குமென் றறிவித்தவாறு காண்க. (உஎ)



விடாதவத்தை மூடி விடம்புசித்தாற் போலச்
செடாதிகளுஞ் சேதனனுஞ் சேர்ந்து - படாதபடு
மச்சைக் கழற்றி லருள்வழிநீ யவ்வழியுன்
னிச்சைப் பொருண்மலமென் றெண்.

விடாதவத்தைமூடிவிடம்புசித்தாற்போலச்- செடாதிகளுஞ்சேதனனுஞ்சேர்ந்து - படாதபடும் - எ - து - அநுவளவேனு மிடைவிடா தவத்தைகண் மூட வவ்வவத்தைகடோறும் வேறுவேறாயிருந்துள்ளவுடம்பு முதலிய கருவிகளு மான்மாவுங்கலந்து விடமருந்தினாற்போற் படாதனவெல்லாம்படும்.

(ஆகலினிங்ஙனமென்றறிந்து.)

அச்சைக்கழற்றிலருள்வழிநீயவ்வழியுன்- னிச்சைப்பொருண்மலமென்றெண் - எ - து - அந்த வவத்தைகளாகிய வுடம்புகளை நீங்குதியெனி னீ யருளினிடமாவை. யவ்வவத்தைகளிடம் உன்னு லிச்சிக்கப்பட்டபொய்ப்பொருள்கள். அஃதன்றி யுன்னைவாதிக்கு மலமு மவையென்றறிதி-எ-று.

சாக்கிராவத்தையி லிருக்கும்போ ததனுட்டோன்றுங் கருவிக ளியாதொன்றி யாதொன் றமித்தததனதன்மயமாயு மதனதன்கணின் றுசொற்புணுதிகளிற் செல்லும்போ தாண்டாண்டுத் தோன்றுங் கருவி கண்மயமாயு மீண்டுவரும்போது மந்தவவத்தைபோறு மூற்கூறிய கருவிகளைச் சார்ந்துவரலானும் அந்தவவத்தைகளைவிட வான்மாவிற் கு வேறிட மின்மையானும் விடாதவத்தைமூடி, என்றார்.

விடமருந்தினுனை யவ்விடம் வாதிப்பதுபோ லவத்தை தன்னை ச்சேர்ந்த வான்மாவை வாதித்தலா னங்ஙனங்கூறினார்.

உடம்பும் விடயமுமாகிய விச்சைப்பொருளான் மற்றையவவ த்தைகண்மேன்மேற்றொடர்தலி னெல்லாவற்றையுங்கூட்டி 'அவ்வழி யுன்னிச்சைப்பொருள், என்றார், யாதோரவத்தையடுத்த தந்தவவத் தை வடிவா யான்மா விருத்தலி னதனை 'அச்சு, என்றார்.

இத்திருவெண்பாவா லான்மாச் சார்போதனென்பது மிச்சார் போதத்தாற் றுன்பமேயன்றி யின்பமின்றென்பது' மறிவித்தவாறு காண்க.



தன்னையறிவார்க் கெதிருந் தானும் பயனுமிலை
யென்னிற்சிவனை யறிவென் போமோ - சின்னாத
நீதகற்று மாற்றொளிபோற் றேய்ந்துசிவ மாயிருக்கப்
போதகத்தை நாமொழிவிப் போம்.

தன்னையறிவார்க்கெதிருந்தானும்பயனுமிலை-யென்னிற்சிவனைய றிவென்போமோ-எ - று - கருவிகள் முப்பத்தாறையுநீங்கித் தன்னை யுள்ளபடி யுணர்ந்தோர்க்கு முன்னறிவிற் கெதிரீடாய்த் தோன்றின கருவிகளுமில்லை தேகமாகியதானுமில்லை. யித்தேகத்தாலநுபவிக்கும் விடயப்பயனுமில்லையென்று வேதாகமங்கள் கூறுமெனின் அவ்வான் மாவி னக்கினிக் குட்டணம்போற் பிரிபடாதிருந்த சிவத்தை யெதிரி ட்டறியத்தொடங்கின் எல்லவிபரீதமாய்ப்போமோயாமறிகிலோம்.

சின்னாத - நீதகற்றுமாற்றொளிபோற் றேய்ந்துசிவமாயிருக்கப்- போதகத்தைநாமொழிவிப்போம் -எ-று-ஞானநாதனே, புடம்போ ட்டுக் கருமச மகற்றும் பொன்னுக்கு மாற்றொளியிருதல்போ லுன் போதங் குறைந்து நீ சிவப்பிரகாசந் தானாயிருக்க நானு வுபாயங்க ளானு மப்போதத்தை யா மொழிவிப்போம்- (யாமொழிவித்தபடி யேநீயொழிந்துபோதி) - எ - று.

பொன்னுங் கல்லுஞ் சரியொத்தபோது இருபுறனுஞ் சரயாது மேன் மூண்மீண்டிறக்குங் கீழ்முட்போலத் தன்னையுள்ளபடி யுணர்

ந்தோனுக்குக் கேவலசகலங்களிற் சென்ற தனதன்மயமா யிருந்தவழி வவைகளைச்சாராது பிரிந்தருளூட்டத்தி லசைவறநிற்றலால் 'தன்னைய றிவார்க் கெதிருமில்லை' என்றும் - தேகந் தானாயிருந்த வழி யதனைப்பி ரிந்தறிவாய்நிற்றலால் 'தானுமில்லை' என்றும் - அருட் பூரணமென்னை க்குவிளங்குமோவென் றருண்மே லிச்சையைவைத்து விடய விச்சை யை நீங்கி நிற்றலால் 'பயனுமில்லை' என்றுங்-கூறினார்.

புடம்போடுந்தோறு மிடைகுறைந்து மாற்றுயர்தல்போலத் தற்போதத்தாற் சிவத்தை யெதிரிட் டறியா தறிந் தசைவற நிற்குந் தோறு மப்போதங் குறைந்து சிவப்பிரகாச மேலிடலால் 'தீதகற்று மாற்றொளிபோல்' என்றுவமைகூறினார்.

இத்திருவெண்பாவாற் சிவத்தை யெதிரிட் டறியக்கூடா தென்ற றிவித்தவாறு காண்க.



பூரணவா னந்தமாந் தானே புறம்புபால்
வாரியின்மீன் போன்ற மலவாழ்வைப் - பாரீ
ருதியாது நின்ற வொளியை யிருளாக்கு
மதுகாணு மக்கினித் தம்பம்.

பூரணவானந்தமாந்தானேபுறம்புபால் - வாரியின்மீன்போன்ற மலவாழ்வைப் - பாரீர்-எ - று- உள்புறம் நடு கீழ் மேல்பக்கமென்று கூறப்பட்ட வெவ்விடத்து நிறைந்துள்ள பரிபூரணசுகமாகிய சிவந் தானே வதனைவிட்டுநீங்காதவான்மாவிற்குப் புறம்பு பாற்கடலிற்சஞ் சரித்து மப்பாலைப் புசிக்கறியாது செந்துக்களைப்புசிக்கு மீன்போ லுமப்பூரணா னந்தத்திருந்து மதனை யநுபவிக்கவறியாது மாயாமல மாகிய விடயங்களை யநுபவிக்கு மிந்த வான்மாக்களினது மலவாழ்க் கையைக் கண்டீர்கொலோ.

(அஃதன்றி) உதியாதுநின்ற வொளியையிருளாக்கு - மதுகாணு மக்கினித்தம்பம்-எ-று-உதயாத்த மனமின்றி யெக்காலத்துமோரிய ல்பாய்நின்ற ஞானசூரியனைந் தெரியவொட்டா திருள்போற்காட்டும் அது காணுமக்கினித்தம்ப மந்திரம்போலு மான்மாவை யநாதியே மறைத்திருந்த வாணவமானது-எ-று.

கூகைக்கு விழிக்கண்ணிருந்த குற்றத்தாற் சூரியப்பிரகாச மிரு ளாய்த் தோற்றியதுபோ லாணவமலக் குற்றத்தா லான்மாவிற்கு ஞா னவொளி யிருளாய்த் தோன்றினமையால் 'ஒளியையிருளாக்கும்' என் றும் - அக்கினியோடுமந்திரம்அபின்னமாயிருந் தவ் வக்கினிமுழுதும றையா ததனது சுட்டதை மறைத்ததுபோ லான்மாவோ டாணவம்

அபின்னமாயிருந் தவ்வான்மாமுழுது மறையாததனது ஞானத்தை மறைத்தலான் 'அதுகாணு மக்கினித்தம்பம்', என்றுங் - கூறினர்.

இத்திருவெண்பாவான் மலத்தடையா லான்மாவிற்கு ஆனந்தமுந் திருவருளுந்தோற்றா திருந்ததென் றறிவித்தவாறுகாண்க. (௯௰)



கடல்சிவநீ ரான்மாவுப்பு மலங்கன்ம
மடர்வாயுப் போத மலைகா - ணிடைவிடா
தவ்வாதி யுட்கரண மைம்பொறியிற் பம்பரம்போ
லிவ்வா றனைச்சுழற்று மெண்.

கடல்சிவநீ ரான்மாவுப் புமலங்கன்ம-மடர்வாயுப் போதமலைகாண்-எ-று - கடல்போலுஞ்-சிவம் - அதனு ணீர்போலு மான்மாவந்நீருட் பிரிபடாதிருந்த வுப்புப்போலு மாணவ மந்நீரின்மேல்வீசுங்காற்றுப்போலுங் கன்ம மக்காற்றா னெழு மலைபோலும் போதம்.

(ஆகியவிவற்றுள்) இடைவிடா - தவ்வாதியுட் கரணமைம்பொறியிற் பம்பரம்போ - லிவ்வா றனைச்சுழற்றுமெண் - எ - து-காற்றைப் போன்ற கன்மத்துக் கீடா யிச்சா ஞானக் கிரியைகள் பஞ்சமூர்த்திகளைச் செலுத்த விப் பஞ்சமூர்த்திகள் அகார முதலிய வக்கரங்களைச் செலுத்த விந்த வக்கரங்கண் மனமுதலிய வுட்கரணங்களைச்செலுத்த வவ் வுட்கரணங்க ளைம்பொறிகளிடத்து மிடைவிடாதுன்னைப் பம்பரச்சுழல்போலு மிங்ஙன மெக்காலுஞ் சுழற்றுமென் றறிதி-எ-று.

அவ்வாதிகளைக் கூறினமையா லிவற்றிற்கு முதற்காரண மாகிய விச்சா ஞானக்கிரியை முதலிய வருவிக்கப்பட்டது.

காற்றானலையெழல்போ லான்மாக்கள் கன்மத்துக்கீடாய்ப் போதம்பலப்படவிரிதலி னங்ஙனங்கூறினர்.

இத்திருவெண்பாவாற் றிருவருள் ஆன்மாக்களைக் கன்மத்துக்கீடாய் நடத்துமாறு மவ்வான்மாக்கள்கரணங்களோடுங் கூடியிந்திரியவழிச்சென்று விடயங்களைப் புசிக்குமாறு மிங்ஙனமென்றறிவித்தவாறு காண்க.



மண்ணாதி சத்தாதி வாக்குமன மாதி
கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற - வுண்மை
தனையணுவென் றேயுணர்த்துஞ் சார்பினையுங் கண்ட
வுனையறிவென் றுள்ளே யுணர்.

மண்ணாதி சத்தாதி வாக்குமன மாதி - கண்ணாதி நாதாந்தங் கண்டகன்ற - வுண்மைதனை - எ - து -பிருதிவி முதலிய பஞ்சபூதங்களுஞ் [illegible] வாக்காதி கன்மேந்திரியங்களு-மனமாதியந்தக்

கரணங்களுஞ் சட்சுவாதி ஞானேந்திரியங்களுங்-காலமாதி வித்தியாதத்துவங்களுஞ்-சுத்த வித்தையாதி நாதமீறாய்ச் சொல்லப்பட்ட சிவதத்துவங்களும் - ஆகிய விம்முப்பத்தாறையு மடிதொடங்கி வேறு வேறாய் ரூப தரிசனம்பண்ணி யறிந்தவையெல்லாந் தானன்றென்று நீங்கி யவற்றின் முடிவினின்ற சைதன்னியத்தை

அணுவென்றே யுணர்த்துஞ்சார்பினையுங்கண்ட - வுனையறிவென் றுள்ளேயுணர் - எ - று - ஆன்மாவென் றுனக் கறிவிக்குந் திருவருளையு மவ்வருளான் முன்கண்டு நீங்கிய கருவிக ளிவையென்றுங் கண்டவுன்னை யறிவென் றுனக்குள்ளே யறி-எ று.

கருவிகள் முப்பத்தாறு மொன்றை யொன் றறியாமை யானுந் தத்தங் குணங்களைத் தாமறியாமையானுங் காட்சி கண்ணை யறியாதது போ லவைக ளான்மாவை யறியா தாகலானுங் கண்காட்சிகளை யறிவது போலக் கருவிகளை பிரித்தன்று பகுத்தறிந்து நீங்கிநின்ற தான்மா வாகலானும் 'நாதாந்தங்கண்டகன்றவுனையடைதலை, என்றார்.

தன்னு லறியப்பட்ட கருவிகளைச் சடமென்றும்-அவற்றைத்தனக் கறிவித்ததருளென்றும்-(அக்கருவிகளைப்போற் சடமுமன்றித் திருவருளைப்போற் பேரறிவு மன்றியின்று) அறிந்தவறிவு நானென்றும் தன்னையும் பாசத்தையுந் திருவருளையு மவ்வருளாற் கண்டமையால் 'உணர்த்துஞ் சார்பினையும், என்றார்.

தத்துவங்களையெல்லாம் பகுத்துக் கூறினமையால் வித்தியாதத்துவம் வருவிக்கப்பட்டது.

அறிவோடுங்கூடி யறிவாயிருத்தலி னான்மாவையு மறிவென்றார்.

இத்திருவெண்பாவா லான்மாவிலைதன் றறிவித்தவாறுகாண்க. ()



அஞ்சுதொழி லாவதுவே யஞ்சவத்தைக கிஞ்சலிலா
வஞ்சிடத்துங் கொள்ளிவட்ட மாகவே - பஞ்சவன்னம்
வைத்தபடி கம்போன் மாறு துனைமயக்கல்
சித்திரக்கூத் தாகத் தெளி.

அஞ்சுதொழிலாவதுவே யஞ்சவத்தைக்கிஞ்சலிலா - வஞ்சிடத்துங்கொள்ளிவட்ட மாகவே - எ-று-சிவனது பஞ்சகிருத்தியங்களியாவையெனின், சாக்கிர முதலிய வஞ்சவத்தைகளுமாஞ் சுருக்கமில்லாத விவ் வஞ்சவத்தைகளிடத்துங் கொள்ளிவட்டம்போலாக வதிசீக்கிரமாய் மாறி மாறி வரச்சுழற்றி.

பஞ்சவன்னம் - வைத்தபடிகம்போன் மாறுதுனைமயக்கல் சித்திரக்கூத்தாகத்தெளி-எ-று-வைக்கப்பட்ட பஞ்சவன்னத்தின் மயமாம்

படிகம்போல நீசேர்ந்தவவத்தையாதுதன்மயமாகி யிடையறாதுனை மயக்குத லவன தழகிய திருக்கூத்தாக வறிதி-எ-று

முப்பத்தாறு கருவிகளோடு மான்மா தேகபோகங்களை யறிதலிற்-சாக்கிரத்தைச் சிருட்டியாயு - மிச்சாக்கிரத்திற் புசித்தவைகளை சொற்பனத்து மறிந்து நிற்றலா லிதனைத் திதியாயு மிச் சொற்பனம்போற் சித்திராதிமுதலெல்லாந் தோன்றி மறைதலாற் சுழுத்தியைச் சங்காரமாயும், பிராணவாயு வியக்கமின்றி யொன்றுந் தோன்றாதிருத்தலாற்றுரியத்தைத் திரோபாவமாயு மதீதங் கருவிகளொன்றுமின்றி யாணவவிருளாயிருந்ததாயினு மதனிமித்தமாய் மாயையிற் றநுவாதி கொடுத்தல் இருவினை யொப்புவருவித்தல் ஆசாரிய மூர்த்தமாய் வந்துபதேசித்தல்முதலிய வநுக்கிரகம் பெறுதலி னிவ்வதீதத்தை யநுக்கிரகமாயுங்கூறினார்.

'இஞ்சவிலா, என்ற விதப்பான், உடல்-தோன்றிநின்று அழிவது-சிருட்டி-திதி-சங்காரம் - உயிருண் மயக்கமுந் தெளிவும் வருவன - திரோபாவ வநுக்கிரகம் - இங்ஙனம் உடலின் மூன்றும் உயிரி னிரண்டுமாக வருவனவும்.

ஓர் இந்திரியத்தில் ஆன்மா பிரவேசித்தல் சிருட்டி - யதனாலறியும் விடயத்தை யநுபவித்தல் - திதி - அவ் விடயமயமாயழுந்துதல் சங்காரம் - அதனி லுருசிப்பித்தல் திரோபாவம்-அதனைத்தெளிந்து கோடல் அநுக்கிரகம் - இங்ஙனம் இந்திரியங்கடோறும் வருவனவும்.

மனத்தா னோர்பொருளை நினைத்தல் சிருட்டி - யப்பொருளிற் பிரியம் பிறத்தல் திதி அஃதெப்போது வருமென்று திகைத்துநிற்றல் சங்காரம் - அப்பொருளின் மயங்குதல் திரோபாவம் - அதனைத்தெளிந்து கோடல் அநுக்கிரகம் - இங்ஙனங் கரணத்தில் வருவனவும்.

இவைமுதலிய பேதத்தில் வரும் பஞ்சகிருத்தியங்களும்,

முத்தியில் அருள்வடிவமாகுதல் சிருட்டி-ஆனந்தப்பேறு-திதி-இதி லதீதப்படுதல் சங்காரம் - ஞாதுரு ஞான ஞேயமென்னுமூன்றுந் தோன்றாதிருத்தல் திரோபாவம் - இவை நான்கு மெக்காலமும் விளங்கல் அநுக்கிரகம்-ஆகிய விம்முறையே வருவனவுங்கொள்க.

இத்திருவெண்பாவாற் பஞ்சகிருத்தியத்தாலவத்தைகணிகழ்வன வறிவித்தவாறு காண்க.



இந்த வவத்தைக ளொன்றுந் தோன்றா தொழிக்கக் கூடாதோ வெனின்மேற்கூறுகின்றார்.

மாயா விகார மதுபானம்போன்றுமயங்
தோயாத துன்று லொழியுமோ - நீயதுவாய்ப்

போகாம லாடும் பவுரியவன் பொய்க்காட்சி
யாகாது போலே யறி.

மாயாவிகர்ரமதுபானம்போன்றுமயக் - கோயாதது(ன்)றலொழி யுமோ - எ - து - முற்கூறிய வவத்தை மாயாகாரியமாகிய கருவிக்கூட் டங்களினது சேட்டையது மதுபானங்கொண்டவனதுநற்குணத்தை மாறுபடுத்தித் தனது லகிரி மேலிட்டவனை மயக்குதல் போன்றனது ஞானகுணத்தை மாறுபடுத்தித் தனது குணமேலிட் டென்றுமொழிவ ற நின்றுமயக்கு மதனை யுன்று லொழிக்கக்கூடுமோ.

ஆறு லீரிங்ஙனங் கூறியவாற்று னதனை யொழிக்கவேண்டாவோ வெனி னதனை யொழியா தொழித்தற் குபாயமுண் டஃதெங்ஙன மெனின்

நீயதுவாய்ப் - போகாமலாடும் பவுரியவன்பொய்க்காட்சி - யா காதுபோலேயறி - எ - து - ஆடப்பட்டவேசர் பார்ப்பனக்கூத்தன் றேட்டி வேட்டிப்போட்டானுயினுமப் பொய்வேடக் காட்சிதானுகா து - தன்னைவேறகண்டு நின்றாற்போ லவத்தையுள்ளிருத்தியெனினுநீ யதன் மயமாய்ப் போகா துன்னை வேறுபிரித்தறிதியெனி னஃதுன் னை மயக்காதென் றறிதி-எ-று

இங்ஙனம் பிரித்துநிற்றல் சாக்கிராவத்தையி லன்றிச் சொற்பனு திகளிற் கூடாதெனினு மச்சாக்கிராவத்தையைப் பிரித்துநிற்பிற் நிரு வருடோற்று மித்தோற்றமேலிடி லச்சாக்கிராவத்தை மறையு மது ம றையவே யதனது வாசனையான சொற்பனுதிக டோன்றுவாகலிற் பொதுப்படக்கூறினுர்.

இத்திருவெண்பாவா லவத்தைநீங்கி நிற்றற்குபாயங் கூறியவாறு காண்க. (௫௪)



பஞ்சகிருத்தியத்தானுண்டா மஞ்சவத்தையுங் கடந்து சிவத்தி லதீதப்பட்டு நின்றூர்க் கோரோர் காலத்தோ ரோரவத்தைகடோன்று வோ வெனின்மேற் கூறுகின்றூர்.

பழுதையைப் பாம்பென்ற பயம்போனுற் பாவித்
தழுதடம்பை யாட்டுகினு மாமோ - தொழிலொழிவி
னின்ற சிவயோகி நினைத்தொருகா னீவாரா
யென்றழைத்தா லும்பதையா தென்.

பழுதையைப்பாம்பென்றபயம்போனுற்பாவித்-தழுதடம்பை யாட்டுகினுமாமோ-எ-து-இருளாற்பழுதையைப்பாம்பென்றுகண்ட பயகம்பனுதிகள் சுடராற்பழுதை யென்றறிந் தப்பாம்பென்றுகண்ட பயகம்பனுதிகள் போனுலிப்போதுசுடராலறிந்த பழுதையின் முன்

னிருளாற் றோற்றிய பாம்பிருப்பதாய்ப் பாவித்துப் பயந்ததுபோ லாமதுடலே நமக்கினு முன்போலும் பயகம்பாதிக ளுண்டாகாது.

(அதுபோலும்) தொழிலொழிவினின்ற சிவயோகிநினைத்தொரு காலீவாரா-யென்றழைத்தாலும்பதையாதென் - எ - து - முன்மலவி ருளான் மெய்போற் றோற்றிய வவத்தைகளையெல்லா மிப்போதுஞா னசூரியனாற் பொய்யாகக்கண் டவ்வவத்தைகளை நடத்தும் பஞ்சகிரு த்தியங்களையுங் கடந்து மேனின்ற சிவத்தி லதீதப்பட்ட சிவயோகி க ருதி அவத்தாய் ஒருதர மீட்டிங்கு நீவருதி- யென்றழைப்பினு (முன் னழையாதிருக்கவுந் தானேவந்து கொள்ளி வட்டம்போற் சுழன்றதி யிப்போது) அணுவளவேனு மசையாதிருந்தது - ஈதென்கொலோ யா மறிகிலோம்-எ-று.

சிவயோகிக்குச்சிவகாருண்ணிய முதலியவற்றான் மவுனானந்தந் ததும்பிற்றாயினுந் திருவருள்வடிவாய் நிற்பதன்றி மாயாவடிவமாகா னாகலினுஞ் சூரியப்பிரகாசத் திருடோற்றா ததுபோல் ஞானப்பிர காசத்தின் மாயாந்தகாரந் தோற்றமாட்டாதாகலினும் 'அழைத்தாலு ம்' என்றும் 'பதையாது' என்றுங்-கூறினார்.

இத்திருவெண்பாவாற் சிவயோகியை யவத்தைகள் சாரமாட்டா தென் றறிவித்தவாறுகாண்க.

இங்ஙன மிருந்த சிவயோகிக் குபதேசித்தன் முதலியவற்றான் பி றவொன்று தோற்றுவ தென்னெனின் மேற் கூறுகின்றார்.

கன்னிக் கதலிதனை நார்கழிப்பான் கண்போலத்
தன்னையறியா வறிவேதான் மீளச் - சொன்னாலு
நாவென்ற நாவேபோ னன்னெய்றசெல் லளவோ
யாமன்றுத் தானெதி ராது.

கன்னிக்கதலிதனை நார்கழிப்பான் கண்போலத்- தன்னையறியாவறி வேதான்மீளச் - சொன்னாலும் - எ - து - ஈனுவாழையினது மட்டை நார் கழிக்கத் தொடங்கினோன் கண்ணம்மட்டை யுளதுளதென்று சு ட்டிப்பார்க்குந்தோறு மவனதுகை மட்டைகளையெல்லாங் கழித்துச் சென் றதனுளிருந்த குருத்தையும்விரித்து விடுத்தபோ தாண்டு முன் போற் சுட்டுதற்கு வேறொன்றுமின்றிச் சும்மாவிருந்த வக்கண்போலு மாசாரியன் விவேகத்தான் முப்பத்தாறு கருவிகளையும் விடுவிக்கத் தான் கடந்துசென் றவற்றின் முடிவினின்ற வருளையும் பரையையுங் கடந் ததன்மேற் றோன்று மானந்தத்தையு மெதிரிடா ததனுள தீதப் பட்டிருந்த சிவயோகி தன்னை யறியா வறிவேயாவன் அவ்வறிவாயிரு

ந்தோன் மீட்டும் நீதானென்று பிரிந்தவ்வழி வேற்றுப்பொருட்டு மாணாக்கனுக் கறிவித்தானெனினும்.

நாவென்ற நாவேபோனுனெலிற் சொல்லளவே - யாமேலிறித்தானெதிராகா - எ - று - நாவானதுதன் பெயரை நாவென்றுகூறினும் மப்பெயர்க்குரிய பொருள் வேறில்றித் தானுயிருந்த வந்நாவைப்போலு நீதானென்று சொன்மாத்திரமே யாமல்றித் தானுமெதிரு மவனுக்குண்டாகாது-எ-று.

தன்னையறியா வறிவு சிவம் - இதனைத் தன்னையறியாது வேறுண்டாய்த் தானறியாதென்று முற்கூறிய பாட்டானுங் காண்க.

சிவயோகி தற்போதம்போய்ச் சிவமாயிருந்தவிற் றுனென்பது மச்சிவப்பிரகாசத்திற் பிரபஞ்சமறைதலிற் பிறனென்பது மவனுக்கில்லை யாகலில் 'நானெதிராகா, வென்றார்.

இத்திருவெண்பாவாற் சிவயோகி தான் பிறர்போற் கூறினுமிவை யவனுக்கில்லையென் றறிவித்தவாறுகாண்க. (ருரு)



தன்னைத்தானுள்ளபடியறிவதெங்ஙனமெனின்மேற்கூறுகின்றார்.

தம்மாலறிந்த தெல்லாந் தாமல்லவென் றுணர்த்தாற்
சும்மா விருப்பதுவாய்த் தோன்றுமோ - விம்மி
யரிந்ததலை வாயடங்கு மவ்வளவே யல்லாற்
றெரிந்திடுமோ நீயே தெளி

தம்மாலறிந்ததெல்லாந்தாமல்லவென் றுணர்த்தாற்- சும்மாவிருப்பதுவாய்த் தோன்றுமோ - எ - று - தமதுபோதந்தா லிதிதென்றுபகுத்தறிந்து நீங்கிய கருவிகளெல்லாந் தாமல்லவென்று வேதாகமங்கள் கூறுமெனி லவற்றைப் பகுத்தறிந்து நீங்கிநின்ற வறிவுதாமெனவருவா லறிந்து மவுனமாயிருப்பதாய்த் தோற்றுமோ.

(ஆனுற்றன்மையறிந்த வநுபவஞ் சொல்வ தெங்ஙனமெனின்.)

விம்மி - அரிந்ததலைவாயடங்கு மவ்வளவேயல்லாற் - றெரிந்திடுமோநீயேதெளி - எ - று - உறுப்புகட் கெல்லா முதலாய தலையை யரிந்தபோ தவ்வாய் திறந்தடங்கு மவ்வளவேயன்றித் தலைபோயிற்றென் றுகூற வறியாததுபோலுங் கருவிகண்முப்பத்தாறையுநீங்கி யவற்றின் மேனின்ற முத்திச்சகல முத்திக்கேவலமுநீங்கி யான்மாவருளாற்றன்மைமாத்திர மறிந்திருக்குமிடத்து ஆண்டுவேறோ ரநுபவந்தெரிந்திடுமோ நீயேயிதனைத் தெளிந்தறிதி-என்றவாறு.

தத்துவங்கண் முடிவிற்றோன்று முத்திச்சகலமுத்திக்கேவலமின்மையால் 'அரிந்ததலை, என்றும் - இங்ஙனநின்ற வறிவுக்கு வடிவின்மை

யாற் சொல்லக்கூடாதாகலின் 'வாயடங்கும், என்றுங்-கூறினார்.

தத்துவங்களை யங்கமாயுமுத்திச் சகலகேவலங்களைத் தலையாயும் வைத்து இத்தலைபோயவிடத்து வான்மாவுக் கவ் வநுபவங்களொன்று மின்றிச் சும்மாவிருத்தலின் 'அரிந்ததலைவா யடங்குமவ்வளவே யன்றித்-தெரிந்திடுமோ நீயேதெளி, என்றார்.

அரிந்ததலை விம்மியடங்குமெனக் கூட்டுக. (௬எ)



மறவாத தம்மை யறிவார் மருளோ
வறிவோ விடயம்போ லாகி - லறிவை
யறிவதறி வாகையினு லாறுறுந் தத்த
மறிவை யறியாபோ லறி.

மறவாததம்மை யறிவார்மருளோ-வறிவோவிடயம்போலாகில்-எ-று - சகலகேவலங்களாகிய நினைப்பு மறப்புகடந்தறிவாய் மறவாதிருந்த தம்மை மறந்ததுபோ லினைத் தறியத்தொடங்குவோர்க்கெதிரிட்டறியும் விடயம்போற் றம்மைத் தமக்குத் தோற்றுமானு லது மருட்போதமோ வருட்போதமோ.

அறிவை-யறிவதறிவாகையினுலாறுறுந்தத்த- மறிவையறியாபோலறி-எ-று - அறிவாயிருந்தம்மை டறியத்தொடங்குவது தம்மறிவைக்கொண்டாடலின் புப்பத்தாறு தத்துவங்களுந் தத்தமறிவைத் தாமறியா திருப்பனபோற் றம்மைப்பிரிந்தறியாது சும்மாவிருப்பதுவே தம்மை யறிவதென்றறிநீ-எ-று.

முற்சகல கேவலமா யிருந்த வான்மா தன்னை யாரென்று பார்த்தபோது தானவே றவைவேறாய்ப் பிரித்தாற்பே லிப்போது சுத்தமயமா யிருந்த வான்மா தன்னை யெதிரிட்டுப் பார்ப்பினச் சுத்தம்பிரிந்து கேவல சகலங்களிற் செல்லுமாகலின் "ஆறுறுந்தத்த மறிவையறியாபோலறி,, - என்றார்.

நினைப்புமறப்பின்றி யறிவாயிருத்தலின் 'மறவாததம்மை, என்றார்.

இவையிரண்டுதிருவெண்பாவானுந் தம்மையறிவ் திங்ஙனமென்றறிவித்தவாறு காண்க. (௬அ)



ஊன்றி னிலமசையி னுதமொழிந்த சிவந்
தோன்றாத் துணையுனக்குத் தோன்றுமோ - தோன்றில்
விரனுதியைத் தீண்டுவபோல் வாய்மூக்கத்தை மென்று
விரிப்பதுபோற் பார்த்துத் தெளி.

ஊன்றினிலமசையி னுதமொழிந்தசிவந் - தோன்றாத் துணையுன க்குத்தோன்றுமோ - தோன்றில் - எ - து - ஓர்தண்டாலூன்றிற்சடமா யுள்ள நிலமு மசையுமெனினும் எல்லாத்தத்துவங்களுக்கு முடிவாகி யநாததத்துவத்தையுங் கடந்துன துயிர்க்குட் டோன்றாத் துணையா யிருந்த சிவத்தையுன்போதத்தை யூன்றிநின் றறிவேனெனி னஃதுன க்குத் தோன்றுமோ வுன்போதத்துக் கதுதோற்றுமெனின்.

விரனுதியைத்தீண்டுவபோல்வாய்முகத்தைமென்று - சிரிப்பது போற்பார்த்துத்தெளி-எ-து- ஓர்விரற் றன்னுனியைத் தான் றொடல் போலு-முகத்தின்கண்-ணிருந்தவா யம்முகத்தை யெதிரிட்டுக்கறித்து மென்று சிரிப்பதுபோலுமா மிதனை யாராய்ந்து தெளிந்தறிதி-எ-று.

நுட்பத்தா னுன்மாவுள்ளும் பூரணத்தா லதற்குப்புறம்புமாய்ப் பிரியடாதுசிவமிருத்தலி னான்மாவா லதனைப் பிரித்தறியக் கூடாதாக வி னிங்ஙன முவமைகூறினர்.

சிரிப்பது, யான் சிவத்தை யறிந்தேனென்று பிறருக்குக் கூறி மகிழ்தல்.



பற்றியது தானும் படிகநீ பற்றுவிடப்
பற்றை யெதிரிட்டுப் பார்த்தாலென் - சற்றும்
பிரியாச் சிவனைப் பிரித்தறியத் தேடு
மறியாமை காணாணவம்.

பற்றியதுதானும் படிகநீபற்றுவிடப் - பற்றையெதிரிட்டுப்பார் த்தாலென்-எ-து - தன்னைச்சார்ந்த நிறமியா தந்நிறந் தானாயிருக்கும் படிகம்போலு மியாதோர் கருவியடுத்த ததன்மயமாவை நீயக்கருவி கணீங்குதற்பொருட் டுனக்குள்ளிருந்த சிவமாகிய பற்றை யெதிரிட்டுப் பார்த்ததனாற் பயனென்னையுள.

சற்றும்-பிரியாச்சிவனைப் பிரித்தறியத்தேடு - மறியாமை காணா ணவம்-எ-து - ஓரணுவளவேனு முன்னைவிட்டுப் பிரியா திருந்த சிவத் தை யுன் போதத்தாற் பிரித்துன்னைவிட வஃதோர் முதலாய்க் கண்ட தனை யறியத்தேடும் பேதைமைகா ணாணவமாவது-எ-று.

கேவலசகலங்களை நீங்கி யருளாற் றன்னை யுள்ளபடி யறிந்தவான் மா தனக்குவேறற விருந்தசிவத்தையு மவ்வருளா லறியவேண்டு மத னைக் குருவுபதேசத்தா லறிந்துகொள்க.

அருளா லறியவேண்டுமென்றதை - அறியாமை யறிவகற்றி யறி வினுள்ளே யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து என்னுஞ் 'சித்தி யாருள்ளுங்காண்க.

சிவத்தைப் பிரியா ததனுளடங்கிற் கருவிகள் டொடரா வதனைப் பிரிக்கிற் றொடருமாகலிற் 'பற்றுவிடப்பற்றை யெதிரிட்டுப்பார்த்தக லென், என்றார்.

ஆங்குமலமின்றாயினு மதனது வாசனையாற் போத மெழுதலி ன் 'அறியாமைகாணுணவம், என்றார்.

ஆன்மாவைப் பற்றுவிடாதிருத்தலிற் சிவத்தைப்'பற்று,என்றார்.

இவ்விரண்டு திருவெண்பாவானுந் திருவருளாற் சிவத்தை யறியும்போதுஞ் சிறிதும்போதஞ் சீவியாது நின்றறிய வேண்டுமென்று கூறியவாறுகாண்க. (சுய)



[றார்

அந்தச் சிவத்தைச் சென்றடையுமிட மெவ்விடமெனின்மேற்கூறுகின்

அருளாலே தம்மை யறிந்தருளா யந்தப்
* பரிபூரண மேபரா யாய்ப் - பரையொழிவி
லானந்தாதீதமா மத்துவித சித்தாந்த
மோனம் வேதாந்த முடிவு.

அருளாலே தம்மையறிந்தருளா யந்தப் -பரிபூரணமேபராயா ய்-எ - து - முப்பத்தாறு தத்துவங்களையுங்கடந்து நின்றவிடத்துப்பா சமீ தருளீதென்று பகுத்தறிந்தவறிவு தாமென்று தம்மை யருளா லறிந்து பின்னர் தம்மையு மவ்வருளையும் பிரித்துப்பாரா தவ்வருடா மா யிருந்து பின்னர் தம்மைச் சிறிதுந் தோற்றாத வந்தப் பரிபூரண மாகிய பரையேயாகி.

பரையொழிவி-லானந்தாதீதமா மத்துவிதசித்தாந்த - மோனம் வேதாந்தமுடிவு - எ-து - பின்னரப்பரைநீக்கத்திற் றோன்று மானந்த மயமாகி - யவ்வானந்தத்தையு மிங்ஙனமென்றறியா ததனுளதீதப்படு வதாகு மத்துவிதமான ஆகமமுடிவாகிய மௌனம் வேதமுடிவுக்கு மு டிவாம்-எ-று.

(அருள்.) தனதிச்சைப்படி யான்மா விச்சையைச் செலுத்தியுந் தனது ஞானத்தா லதன்ஞானத்தை மறைத்துந் - தனதுகிரியையாலத னது கிரியையையடக்கியும், இங்ஙன மவ் வான்மபோதஞ் சீவியாத டக்குவது - அங்ஙனமதனது போதமடங்கினவிடத்து முற்றோற்றிய விச்சாஞானக் கிரியைகள் விரியாது நீங்கினவிடம் பரை - ஆகலின் அ ருள், என்றும் 'பரை, என்றுங்கூறினார்.

* பரிபூரணமே பராயாய் என்பதை-பரிபூரணப்பரையேயாய் என்றுகூட்டுக.

வேதாந்திக்குப் பெத்தத்திசைபோன் முத்தியிலு நானென்பது தொடர்தலின் "வேதாந்தமுடிவு, என்றார்.

இத்திருவெண்பாவா லான்மா சிவத்தோ டிரண்டறக் கலந்த வத்துவித மிவ்விடமென்பது மிது வேதாந்த முடிவென்பது மறிவித்த வாறுகாண்க. (சுக)



தன்மையு முன்னிலையுந் தானுய்ப் படர்க்கையுமா
யென்னொழிவி லின்பமா யின்புமிது - வென்னுத
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்று
ேேதாமல் வேதமுணர்ந்தோன்.

தன்மையுமுன்னிலையுந்தானுய்ப்படர்க்கையுமா - யென்னொழிவி லின்புமாயின்புமிது, வென்னுத - எ-து :- உயிருக்குயிராயிருந் தறிவிக்குந் திருவருளாகிய தன்மையுந் தாமாகி யவ்வருளே திருமேனியாகக் கொண் டெழுந்தருளிவந்த வாசாரியராகிய முன்னிலையுந்தாமாகி யவ் வருண்மிகுந்து கூறப்பட்ட வேதாகமங்களாகிய படர்க்கையுந்தாமாகி இச்சுருதிகுரு சுவாநுபவங்களா லென்று போதவொழிவிற் றோன்று மானந்தமுந்தாமாகி - யவ்வானந்த மிதுவென்று கூறக்கூடாதவானந்தா தீதமுந் தாமாகி யெழுந்தருளியிருந்த.

ஓதாமல்வேதமுணர்ந்தோன் - வேதாந்தசித்தாந்தமே பிறவாவீடென்றான் - எ-து - ஓதியறியாமற் றமது திருவருண் ஞானத்தா லுன்குவேதங்களையு முழுதுணர்ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையா ரிந்த வநுபவமுமன்றி முண்டான வேதத்தின்முடிவாகிய சித்தாந்தமேமீண் வோரா முத்தியென் றருளிச்செய்தார்-எ-று.

எல்லாந் தாமாகியென்ற தவரது சுதந்தர மறிவித்தது.

ஓதியுணர்ந்தோரைப்பற்ற வோதாமலுணர்ந்தோர்க் குண்மை யெல்லா முள்ளபடிதெரியும். இங்ஙன மோதாம லுணர்ந்தோரே யிதுவே பிறவா வீடென்று கூறினமையா லிஃதுண்மை முத்தியென்றறிந்துகொள்க.

வியாசர் முதலியோ ரோதாமலுணரினு மவர்க்கு விட்டுணுபாமென்று மகம் பிரமமென்னும் பின்னர் மலைவு பிறந்ததாகலி னிவரைப்போலுமவர் சுதந்தர வுரிமையிலரெனக்கொள்க.

* இங்ஙனம் - செய்யுட்கட் 'டானு, யென்னு மொருமையை யுரைக்கட் 'டாமாகி, யெனப் பன்மையாகக்கூறியது என்னையெனின், பிள்ளையார் என்னுந் திருவருட் பெயரின் பெருமை நோக்கியென்க. ()

*இவ்வாறு கூறியவற்றிற்கெல்லாம் விதி யிங்ஙனமென் றுணர்க.

மலையேறிப் போவார்க்கு மாநிலமாய்த் தோன்றிக்
கலையாதி யைக்கழற்றிக் காட்டித் - தொலைவிலே
காட்சியொழித் தென்னைக் கரந்தகலா வாதனையின்
மாட்சிசொலின் மோனமாம் வந்து.

மலையேறிப்போவார்க்குமாநிலமாய்த்தோன்றிக்- கலையாதியைக் கழற்றிக்காட்டித் - தொலைவிலே - காட்சியொழித்து - எ - து-மாநிலத்திருந்து மலைமேலேறிச் செல்வோர்க்காண்டு மாநிலமாய்த்தோற்றி யம்மலைமுடிமே லேறிநின்று மீண்டுபார்க்குமிடத்து முன்னிருந்த மாநிலமும் பின்வந்த மலையிடமுந் தாநின்றவிடத்திற்குக் கீழ்ப்பட்டருகித் தோற்றுமாப்போலுங் கலைமுதலியவாறத்துவாவையுஞ் சோதனைபண்ணி நீக்கி யிவற்றின்முடிவினின்ற வான்மாவை யறிதன் முதலிய வநுபவங்களைக்காட்டி யிவ்வநுபவ முடிவிலே முற்றோற்றிய கருவிகளும் பிற்றோற்றிய வநுபவங்களுமாகிய காட்சிகளெனக்குத் தோற்றுவாறொழித்து.

வாதனையில் என்னைக்கரந்தகலா -மாட்சிசொலின் மோனமாம்வந்து - எ- து - எனக்கோர் வாதனையுமில்லா·தென்னைத் தமது பூரணானந்தத் தொளித் துள்ளும் புறம்புமா யெழுந்தருளியிருந்த வெனதாசாரியரது பெருமையைச் சொல்லுமிடத் தன்னைச் சொல்லவொட்டா தென்னைப் பேரானந்தம் வந்துமவுனமாக்கும். (இதென்கொலோ வறிகிலேன்) - எ - று.

"தொலைவிலேகாட்சியொழித்து,, என்றமையான் மலைமுடிமே லேறிநின்று பார்க்குமிடத் தென்றும் வருவிக்கப்பட்டது.

"கலையாதி,, ஆறு. அத்துவாவாவன - மந்திரம் பதினொன்றும்- பதம் எண்பத்தொன்றும் - வர்ணம் ஐம்பத்தொன்றும் - புவநம்இருநூற்றிருபத்துநாலும். தத்துவ முப்பத்தாறும் - கலைகள்ஐந்தும் - எனக்கொள்க.

அநுபவ முடிவுசொல்லக் கூடாமையின் 'மோனமாம்வந்து, என்றார்.



இதுவென்ற தெல்லாம் பொய்யென்று னெனக்குட்
பொதுவன்றித் தங்குமிடம் போச்சு - வதுநாங்கள்
ணென்று னதன்பே யிரவைப் பகலாக்கு
மொன்றே பரம சுகமோ.

இதுவென்றதெல்லாம்பொய்யென்றுனெனக்குப் - பொதுவன்றித்தங்குமிடம்போச்சு - எ - து - ஈதென் றுன்போதத்தாற் சுட்டிய தங்குமிடம்போச்சு - எ - து - ஈதென் றுன்போதத்தாற் சுட்டியறிந் ததியா தது தெல்லாம் பொய்யென்றார். இங்ஙன மருளிச்செய்த

வாற்றான் எற்போதத்தாற் சுட்டி யறிதற்கரிதா யெல்லாவற்றுள்ளும் பொதுவாயிருந்த திருவருளிடமேயன்றி முன்னர்க் கருவிகடோறும தனதன் மயமாய்த் தங்குமிடமெல்லா மிப்போது போயிற்று

அதுதாங்கா-ணென்றானதன்பேரிரவைப்பகலாக்கு- மொள்ளே பரமசுகமோ - எ - து - முற்கருவிகளோடுங் கூடிக் கருவிமயமாயுமி ப்போ தருளோடுங்கூடி யருண்மயமாயு மவற்றைப் பாசமென்று மிதனை யருளென்று மிருந்தறிந்த வோரறிவுண்டே யவ்வறிவெம்மை விடவேறோர் முதலன் றதுவே நாமென் றெமதாசாரிய ரருளிச்செ ய்தார். அங்ஙன மருளிச்செய்த திருப்பெயருக் கருத்தமென்னை யிற் றைவரையு மறைத்திருந்த வாணவ விரவைப்பகலாக்கு ஞானசூரிய னோ அஃதன்றி யென்றுமொழிக்கக் கூடாதிருந்த தற்போதத்தை வி ழுங்கி யெழுந்த பரமானந்த சாகரமோ யானறிகிலேன்-எ-று.

பகுப்பின்றி யெல்லாவற்றுள்ளும் பொதுவாயிருத்தலின் அரு ளைப் "பொது" என்றார்.

"அதுதாங்காண்" என்றது - ஆன்மாவைச் சிவத்தோ டிரண்டற் ற வைக்கியங் கூட்டியதெனக் கொள்க. (சச)

அறிவித்தா லன்றி யறியாய் நீ யென்றான்
மறவைக் கதுவே மருந்தா - யறியவெனி
லாகாய மெய்யவைத்த வம்பா மறிவெனினு
மாகாய வாக்கா மது.

அறிவித்தாலன்றியறியாய்நீயென்றான்-மறவைக்கதுவேமருந்தா யறியவெனி - லாகாயமெய்யவைத்தவம்பாம் - எ - து - உனதுயிருக் குயிராயிருந் தியாமொன்றினை யறிவித்தாலீ யறிவதையன்றி யுன்சுத ந்தரமா யொன்றினையு மறியாயென் றருளிச்செய்தார், யானென தென் றெழுமலப்பிணியைநீக்குதற் கத்திருவாக்கே மருந்தா யிங்ஙனமறி விக்குந் தம்மை யானறியத்தொடங்கின் யானிருத்தற்கிடமுந் தம்மை யறிதற் கெழும்போதத்திற்கிடமுந் தமதிடமேயன்றி வேறுகாணேன் ஆகலின் ஆகாயமிலக்கா யதனை யெய்யவைத்த அம்புபோலு மாகும்.

இங்ஙன முயிர்க் குயிராயிருந் தறிவிப்பதா யெதிரிட் டறியக்கூ டாததா யிருந்த வறிவின்கண் வாக்குத் தோற்றுவ தெங்ஙனெனின்.

அறிவெனினு மாகாயவாக்காமது - எ - து - அவரங்ஙனமிருந்த வறிவேயெனினு மவ்வறிவின்கணின்ற காருண்ணியத்தாற் றோற்றும் வாக்கு மவ்வாகாய வாக்குப்போலும்-எ-று.

அம்பிற் கெய்யாமுன் னிற்பதற் கிடமு மெய்தபின் சேறற்கிடமு மவ்வாகாயமேயன்றி வேறிடமின்மையா னிதனை யதற்குவமையாகக் கூறினார்.

வாக்காற் கூறியதுபோற் பிறர்கருத் தோற்றுவதேயன்றி யவர்க்குத் தோற்றாதாகலின் "ஆகாயவாககாமது" என்றார்.

தன்மையு முன்னிலையுமென்றந் திரு வெண்பாமுதல் இந்நான்கு திருவெண்பாவானுந் தமதாசாரியர் தமக்கருளிச்செய்த நிலை கூறியவாறுகாண்க. (௪௫)

---

மலமாயை கன்ம மயக்க விகற்ப
நிலைபோகப் போயொழிந்த நிட்டை - பலவோ
வறிவுக் கெதிரில்லை யாகாய நீழ
லறநிற்கு மாபோ னிற்பாய்.

மலமாயைகன்மமயக்கவிகற்ப-நிலைபோகப்போயொழிந்த நிட்டை - பலவோ - எ - து - ஆணவ மலமாகிய மயக்கத்தைக் கேவலாவத்தையாற் போகச்செய்து மாயையாகிய விகற்பத்தைக் குருலிங்க சங்கமவழிபாட்டாற் போகச்செய்து கன்மத்தைச் சுத்தநிலையாகிய வருளாற் போகச்செய்து ஆன்மா வி[illegible]த வருள்வழிச்சென்று சிவானந்தத்திற் றற்போதமற்ற வுண்மைநிட்டை பலவிதமாமோ.

அறிவுக்கெதிரில்லையாகாயநீழ - லறநிற்குமாபோனிற்பாய்-எ-று. இங்ஙனந் தற்போத மற்றுச் சிவமென்றுந் தானென்று மிரண்டற விருந்த வறிவிற் கெதிரீடாய்த் தோற்றுவ தொன்றுமில்லை, யாகாய மெல்லாப்பொருள்களோடுங் கூடியிருப்பினு மப்பொருள்களின்சாயை தன்னுட்டாக்காது நின்றாற்போ லெல்லாக்கருவிகளோடுங் கூடியிருப்பினு மக்கருவிகள் குணமு மூலினைச்சாராது நீநிற்றி-எ-று.

கேவலாவத்தையைத் தெரிசிக்கவே யாணவ நீங்குமாகலானு - மனவாக்குக்காயங்களாற் குருலிங்க சங்கமத்தை வழிபடவே யம்மனவாக்குக் காயங்களாய் விரிந்த விகற்பரூபமாகிய மாயை நீங்குமாகலானும் - இவற்றை நீங்கிச் சுத்தநிலையிற் றோன்றுந் திருவருளைத் தெரிசித்திருந்தத் திருவருளே பெத்தமுத்தியினு மெமக் குபகரிப்ப தென்றறிந்து தான் பிறனென்னு முன்னிலைச்சுட் டொழிந்து நிற்கவே கன்மநீங்கு மாகலானு "மலமாயைகன்ம மயக்கவிகற்ப நிலைபோக" வென்றார்.

சகலகேவலங்கணீங்கி யான்மபோதமுமொழிந்தநிட்டைக்குமேல் வேறுநிட்டை யின்றாகலிற் "பலவோ" வென்றார்.

ஆகாயந் தனது நுண்ணிய குணத்திற் றிரிவின்றி யிருந்தலைமையான் மற்றப்பொருள்களி னிழுக்கா திருந்ததுபோ லான்மா தனது போதஞ் சீவியாது நுட்பகுணத்தோ டிருந்ததெனிற் சிவத்தோடு கலப்புக்கூடுந் தூலமாகிய கருவிகளு மதனைத்தாக்க மாட்டாதென்பதறிக.

போதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும்
போதம் பதைத்தளவே பொய்யாகு - மீது
விழித்திமைப்பா நின்றால் வெளியசைந்தாற் காற்றும்
பழக்கமதைச் சாட்சியைப்போற் பார்.

போதம்பதைப்பறவே பூரணமாம் பூரணமும் - போதம்பதைத்தளவேபொய்யாகு - மீது - விழித்திமைப்பா நின்றால் -எ- து-ஆன்மபோதஞ் சீவியாதடங்கி னவ்வான்மா தோற்றும லருட்பூரணந்தானாயிருக்கு மப்பூரணமு மப்போதஞ் சீவித்த மாத்திரத்திற் றன்றோற்றாது மறையு மவ்வான்மாவா யிருக்கு மிங்ஙன மிப்போத மடங்கியும் விரிந்தும் நின்று லப்பூரண மோர்காற் றோற்றியு மோர்கான் மறைத்தும் விழித்தல்போலு மிமைத்தல் போலுமாம்.

(அஃதெங்ஙனமெனின்) வெளியசைந்தாற் காற்றும் - பழக்கமதைச் சாட்சியைப்போற்பார் - எ து-வெளியிலடங்கிய காற்றுத்தான் வேறொரு பொருளாய்த் தோற்றாமல் வெளியா - மவ்வெளியினின்று மசைந்தா லதனைவிடத் தானொரு பொருளாய்க் காற்றென்பதாமிக்காற்றாகிய சாட்சியைப்போ லுனதுபோதம் அருளிலடங்கியும் விரிந்துநின்ற பழக்க மதையும் பார்த்தறிதி எ-று.

போதமடங்கி லருளாகியு மஃதசையிலான்மாவாகியு மிங்ஙனம் வருதலி னதனைச் சிறிதுந்தோன்று தடக்கவேண்டு மென்பதுகருத்து.

இவையிரண்டு திருவெண்பாவானு மும்மலங்களை நீக்குதற்குபாயமு மிம்மலங்களை நீக்கி யவ்வான்மா தற்போதமுங்கெட் டானந்தாதீதப்பட்டா லதற்குமேல் வேறுநிட்டை யின்றென்பது மான்மாகருவிகடாக்காது நிற்றற் குபாயமு மடங்கிய போதமீட்டும் விரியா தடக்கவேண்டு மென்பது மறிவித்தவாறு காண்க. (௪௭)

வேதாந்தம் போலிருக்கும் வேதாந்த சித்தாந்த
நாதாந்த போத நழுவினர்க்கு - நேதி
தனைக்கழன்று தற்போதஞ் சார்பழியுஞ் சந்தி
துனக்கறிவா னந்த முதிக்கும்.

நாதாந்தபோத நழுவினர்க்கு - வேதாந்தம்போலிருக்கும் வேதாந்த சித்தாந்தம் - எ - து - நாத தத்துவத்தின் முடிவாயிருந்த வரு

ளையுங் கடந்த மெய்ஞ்ஞானிகட்கு வேதாந்தம் போற்றுவித நாட்டமி ன்றி யிருக்கும் வேதத்தின் முடிவாகிய விச்சித்தாந்த நூலாக்லின்.

நேதி - தனைச்சழன்றுதற்போதஞ் சார்பழியுஞ்சந்தி - லுனக்கறி வானந்தமுதிக்கும் - எ-று நீக்குவதாயுள்ள தத்துவ முப்பத்தாறையுங் கழன்று அவற்றின் முடிவினின்ற வருளையும் பளாயையுந் துவிதநாட் டமின்றிக் கழன்று நிற்றியெனின் நின்றற்போதமு மாணவ வாசனை யாகிய சார்புமொழியு மிவையொழிந்த விடத்திற்கு மதீதத்திற்கு மி டையாகிய சந்தியி லுனக்கு ஞானந்தந் தோன்றும். எ-று.

முப்பத்தாறு தத்துவங்களையு நீங்குமளவு மான்மபோதஞ் சீவி த்தறிவ தருட்டெரிசனமுத லானந்தா திதப்படுமளவு மப்போதஞ் சீவியாதடங்கி யவ்வநுபவங்களைப் பெறவேண்டுமாகலின் "வேதாந்த ம்போலிருக்கு" மென்றார்.

இத்திருவெண்பாவா லானந்தந் தோன்றுமிட மறிவித்த வாறு காண்க. (சஅ)



தத்துவா தீதத் திமிர்ப்படங்கித் தற்செலவு
மத்தின் வரத்து மசையாத - சுத்தத்தை
யொன்றென்று னீசற் றுளதாவை யாதலினு
லன்றென்ற தென்றே யறி.

தத்துவாதீதத் திமிர்ப்படங்கித் தற்செலவு-மத்தின்வரத்து மசை யாத - எ - து - முப்பத்தாறு தத்துவத்திற்கு மதீதமாயிருந்த வாண வமல வாசனையெல்லா நீங்கியவிடத் தான்மா சிவத்தைச்சென்று கூடு தலுஞ் சிவ மான்மாவை வந்து பொருந்துதலுமாகிய விருவகையசை வுமின்றி யிரண்டற்றிருந்த.

சுத்தத்தை - யொன்றென்றுனீ சற்றுளதாவையாதலினு -லன்றெ ன்றதென்றேயறி-எ-து-முத்திக்கட் சிவமொன்றுமேயென்று கூறுதி யெனின் அச்சிவ மொன்றென் றறிந்து கூறிய நீயுஞ் சிறிதுண்டாவை யாகலினம்முத்திக்க ணங்ஙனங்கூறுவது மன்றென்றதென்றறிதி-எ-று.

உடம்பின் குணமன்றியதன்கண் ணேறியிருந்த-திமிர்ப்புப்போ லுயிரின் குணமன்றி யிதன்கண் ணேறியிருந்தமையா லாணவத்தைத் திமிர்ப், பென்றார்.

திமிர்ப்படங்காவிடத்துக் கூடினதுபோன்றும் பிரிந்தது போன் று மநுபவந்தோன்றலி னங்ஙனங்கூறினர். (சகூ)



வெற்றவெறு மாநந்த மேலீடே கேவலத்தி
னிற்பதுபோ லிந்த நிலைகழன்றோர் - சிற்போத
வண்டங் கடந்த வமுதத்தி னோடலவும்
வெண்டிங்க ளுங்கிரண மும்.

வெற்றவெறுமாநந்த மேலீடே கேவலத்தி- னிற்பதுபோலந்த நிலைகழன்றோர் - எ - து - நியதியிட்ட விடமெல்லாங் கழன்றுசென்று தற்போத மொழிந்தெல்லா மாநந்தமயமாய்த் தோற்றுமாகலின்வெ ற்றவெறு மாநந்த மேலீடாகிய விடமே கேவலாவத்தைப்பட்டு நிற் பதுபோலத் தோன்று மிங்ஙனந்தோற்று மவ்வாநந்த மேலீடாகிய நிலையுநீங்கினோர்.

சிற்போத-வண்டங்கடந்தவமுதத்தினோடலவும் வெண்டிங்களுங் கிரணமும் - எ - து-அருளும் பரையுமாகிய ஞானாகாசத்தைக்கடந்து நின்ற வாநந்தாமுதத்தினோடு விளங்காநின்ற சிவசந்திரனோடுந் தாமத னைவிட்டு நீங்காத வந்தவாநந்தாமுத கிரணமாகி நிற்பர்-எ-று.

ஆநந்தமேலிட்டபோது பிரபஞ்சமெல்லா மாநந்தமயமாய்த் தோற்றுமாகலின் "வெற்றவெறுமாநந்த" மென்றார்.

"ஆநந்தமேலீடு" விட்டுநீயாமற் றோற்றுவது - கேவலாவத்தை யநுபவத்தை யறிந்து ஒன்றுந் தோன்றா திருந்ததென்றுசொல்ல வரு தல்போ லாநந்தானுபவஞ் சொல்ல வருதலாற் "கேவலத்தினிற்பது போ" லென்றார்.

அனாதியி லாணவமலத்தான் மறைபட்டிருந்த வுயிர்க்கநுபவஞ் சொல்லக்கூடாததுபோற் சிவத்தி விரண்டறக்கலந்து நின்ற வநுபவ ஞ் சொல்லக்கூடாதாகலின் ஆனந்தாநுபவத்திற்குவமை "கேவலாவ த்தையைக்" கூறினார்.

"வெண்டிங்களுங்கிரணமு" மென் றுவமைகூறினமையாற் சந் திரனைப்போலச் சிவமவனைவிட்டு நீங்காதவமு தம்போலா நந்த மவ னையு மமுதத்தையும் விட்டு நீங்காத கிரணம்போ லான்மா சிவத்தோ டிரண்டறக் கலந்துநின்ற நிலையேயெனக் கொள்க.

இவையிரண்டு திருவெண்பாவானு முத்தியி லொன்றென்று மிர ண்டென்றுங் கூறக்கூடாதென் றறிவித்தவாறுகாண்க. (௫௰)

நினைப்பு மறப்பறுத்து நீபறலை நீக்கா
* துனைக்கவாய நில்லங்ங னங்ங - னெனக்கதற்றல்
விட்பிரட்ட மந்திரட்டம் வேலையிலே போட்டசுணா
செப்படித்தன் ஞானச்சிறை.

* கதறல் - கதற்றலெனவிகாரமாயிற்று.

நினைப்புமறப்பறுத்து நீயறலைநீக்கா- துனைக்களாய நில்லங்ஙனு ங-னெனக்கதற்றல்-எ-து-முன்னர் நினைப்பு மறப்பாகிய சகலகேவலங் களை யறிவித்து நீக்கித் தன்னை யறிவித்துப் பின்னர்த் தனக்குயிர்க்கு யிராய்நின்ற திருவருளைத் தரிசிப்பித்து இத்திருவருளோடுங்கூடி யறி கின்றபோதந் தற்சுதந்தரமா யொன்றைப் பகுத்தறியாத தாகலின் அருளை முன்னிட்டுக்கொண்டு தற்போத வொழிவைப் பெறுதற்குபா யங்கூறியதனைநீக்காது அந்நினைப்பு மறப்பாகிய சகலகேவலங்களுள் வைத்துன் போதங் களையநியப்படி நில்லப்படி நில்லென்று மாணாக் கனுக் கோர்நிட்டைபோலுங் கூறுதல்.

விப்பிரட்ட மந்திரட்டம் வேலையிலே போட்டசுனை - செப்ப டித்தன் ஞானச்சிறை-எ-று - மிகவும்பிரட்டமு மந்திரத்தா லொருவ ருக்கு விநோதங்காட்டலும் கடற்கட்போட்ட சுனையோடுஞ் செப் படிவித்தையு ஞானத்திற்குத்தடையாயுள்ள மலபோதமுமாம் -எ-று.

அந்த நிட்டைகூடுவோர் ஞானமுமன்றி முற்செய்கிரியை யாதி களுமன்றி யுபயப்பிரட்டாய்க் கருவிகளோடு மயங்கலின் "விப்பிரட் ட,,மென்றுமொருவன் மந்திரத்தால் விநோதவித்தைதோற்றுவபோ லுள்ளேதாநாவாகிய மாயாவிநோதங்க டோற்றலின். "மந்திரட்ட,, மென்றுஞ் சுனையோடோர் துறைக்கட்சேராதலையோடு மறிதல்போ லறிவோர் நிலைநில்லாது நினைவோடுஞ்சுழல்வதனால். "வேலையிலேபோ ட்டசுனை,, யென்றுமோர் பந்துமுற்றேற்றிப் பின்னதிற் பற்பலபந் து தோற்றுதல்போ லோர் காட்சிபோன் முற்றோற்றியது முற்றுநில் லாது பற்பலகாட்சியாய் விரிதலிற் "செப்படித்த,,லென்றுமிங்ஙனந் தோற்றுவன சகலகேவல போதமாகலின் "ஞானச்சிறை,, யென்றுங் கூறினர்.

அங்ஙனங் கூறியது நிட்டையன்றாகலின் கறற்றலென்றார்.

இத்திருவெண்பாவான் மாணாக்கனுக்குச் சகல கேவலங்களை மு ன்னரறிவித்து நீக்கிப் பின்னர்போத மொழித்தற் குபாயங்கூறுதுசக லகேவலங்களிலுள்ள நிட்டைகூறுத லாகாதென் றறிவித்தவாறுகாண்க



சுத்தாதி தத்துவம்போய்த் தானுமெதிருங் கழன்றுற்
சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலை - முத்தி
யதிர்வசன மின்ப வதீதமெளனி லாங்கே
மினமிடுதல் கன்மம் பிளாய்.

சுத்தாதிதத்துவம்போய்த் தானுமெதிருங்கழன்றுற் - சித்தாந்த வேதாந்தச்சீர்மையிலை - எ - று - சுத்தமுதலிய முப்பத்தாறு தத்து

வங்களையு நீக்கி யவற்றின் முடிவினின்ற தானுந் திருவருட்டெரிசன முத லாநந்தானுபவமீரு யவ்வருளாற் றானறியாததையு மநுபவங்களாகிய வெதிருங் கழன் றானந்தாதீதப்பட்டா லிரண்டென்று கூறுஞ் சித்தாந்தச்சிறப்பு மொன்றென்றுகூறும் வேதாந்தச்சிறப்புமங்கில்லை.

முத்தி - யநிர்வசனமின்ப வதீதமெனிலாங்கே - பினமிழுதல்கண் மம்மிளாய் - எ - று -அங்ஙன மதீதப்பட்ட முத்தி சொல்லிறந்த சுகாதீதமென்றூற் பின்னா யொன்றென்று மிரண்டென் றம்அம்முத்தியைப்பின்னப்படக் கூறுதல் போதச்சேட்டையாம்-எ-று.

"சத்தாதி,, விடயங்களின்மே லான்மாவுக் கனிச்சைபிறந்தபோது சோத்திராதி பஞ்சேந்திரியங்களும் விடயங்களை யபகரியாது நீங்கு மிவைநீங்கவே முன்னபகரித்தபோது - வசன - கமன-தான - விசர்க்காநந்தங்களை விடயீகரிக்கும்.

'வாக்காதி, கன்மேந்திரியங்களைந் து நீங்கு மிவை நீங்கவே யப்பத்திந்தியங்கட்கு மிடமாய்நின்ற பூதங்கணீங்கு மிவைநீங்கவே விடயங்களைப்பற்றி நிச்சயித் தபிமானித்துச் சிந்தித்துநிற்கு மந்தக்கரணவாசனைநீங்கு மிதுநீங்கவே விடயங்களைப்புசித்தற்கோ ரெல்லையு மவ்வெல்லையி லுண்டாம்.

விடயப்பயனுமவ்விடயத்தைப்புசிக்கும்போதோர்காலங்களினு மறியாததுபோலப் புதுமையுமேலு மிவ்விடய மனுபவிக்கவேண்டுமென்னுங்கருத்து முண்டாக்குங்காலதத்துவமு நீங்கு மிது நீங்கவேவிடயங்களைப்புசிக்கும்போதிவனுக்கிவ்வளவுபுசிப் பென்னுமட்டறிந்து வரைந்துநிற்குநியதிநீங்கு மிதுநீங்கவே யான்மா விடயங்களை யிச்சித்துப்பகுத்தறிந்துபற்றி யநுபவிக்க வவ்வான்மாவுக் கிச்சாஞானக்கிரியைகளை யெழுப்பு மிராகம் வித்தைகலையென்னுமிம் மூன்றுநீங்கும்.

இவைநீங்கவே யான்மாவைப் பஞ்சேந்திரியங்களினுங் கறங்குபோற் கொண்டு சுழற்றும்புருடனீங்கு மிதுநீங்கவே யவ்விடயங்களைப் புசிக்குமிடத் தவ்விடயமென்றுநீ தனென்று மிரண்டறமயக்கி நிற்குமாயை நீங்குமிங்ஙனம்.

வித்தியா தத்துவங்க ணீங்கவே யிவற்றைய பிரேரகம்பண்ணுஞ் சுத்த தத்துவங்களைந்துநீங்கு மிங்ஙனந் தத்துவ முப்பத்தாறு நீங்கினவிடத் தான்மாவி னிச்சைபெத்தத்தில் விடயத்தின்மேற் சனித்தது போற் சிவத்தின்மேற் சனிக்கும். ஞானம், விடயானந்தம் அசுத்தந் துக்கம் அனித்தியமென்றுஞ் சிவாநந்தஞ் சத்தம் சுகம் நித்தியமென்னும்பகுத்தறிந்துகொண்டுநிற்கும்.கிரியைபழையபழக்கத்தால்விடயங்கண்மேற் செல்லினுமவற்றிற் செல்லாது மறுத்துநீங்கிச் சிவத்தை யெநாடிநிற்குமான்மா விச்சாஞானக்கிரியைக ளிங்ஙனநிற்பது.

சிவன் ஆன்மாக்களை முத்தியிலே படைவிக்கவேண்டுமென்று மி ச்சைப்படிநிற்பதாகலிற் றிருவருட்பதியு மித்திருவருளை முன்னிட்டுக் கொண்டறியும் பசுதெரிசன முதலிய வநுபவங்களாகிய வெதிரும் வைகலையறிந்த தானுங் கழன் ருநந்தா தீதப்பட்டா லிரண்டென்று மொன்றென்றுங்கூறக கூடாதாகலின் "சித்தாந்த வேதாந்தச்சீர்மை யிலை,, யென்றார்.

கன்மமென்பது சேட்டைமேலேறிற்று ஆன்மாசத் தாதிகளைத் துரிசற விடுத்தபோது மற்றைத் தத்துவ முப்பத்தொன்று மிங்ஙனநீ ங்கலிற் சத்தாதிகளை முன்வைத்துக் கூறினர்.

முத்தியையறிவிப்பதுவேதாகமமுடிவாகலிற் 'சீர்மை,, யென்று மம்முத்தியி லதனையறிந்துகூறும் போதமின்மையா "லநிர்வசன,, மென்றுங்கூறினர்.

உதாரணம். (சிவப்பிரகாசம்.) மருவியபெற்றியி லொன்றுமூழ் வது மென்றார். (திருவள்ளுவர்.) சுவையொளியூறோசை நாற்றமென் றைந்தின், வகைதெரிவான் கட்டேயுலகு. என்றும், மற்றும்வருவன வற்றானுங் காண்க.

இத்திருவெண்பாவாற்சித்தாந்தமுத்தியோ வேதாந்தமுத்தியோ வுண்மையென்கற யுறுகின்றமாணாக்கனுக்குக்"காண்பானுங்காட்சியு,, மற்றவிடத் திரண்டுஞ் சரியென் றறிவித்தவாறு காண்க. (கூஉ).



சிந்தை பயமிலச்சை சீலமரு வருப்
* பந்தைவிடுஞ் சாந்திகுல மாசார - மிந்தவழி
யெட்டுஞ் சிவயோகிக் கில்லையென மாமறைக
டட்டும் பெருமுரசந் தான்.

சிந்தைபயமிலச்சை சீலமருவருப் - பந்தைவிடுஞ்சாந்திகுல்மா சார - மிந்தவழி-யெட்டும்-எ-து-எனக்கின்னதுவேண்டுமென்னுஞ் சி ந்தனையுந் துட்ட மிருகாதி தோன்றி யச்சா லச்சமு மின்று மின்னது சொல்லப்பொறுமென்னு நாணமுஞ் சாந்திராயண விரத முதலிய சி லமு மீச்சுத்தமென்னு மருவருப்பு மகந்தையாற் செய்தபாவந் தீர்க் கும் புண்ணிய மீதென்று செய்யுஞ் சாந்தியுங் குலாசாரமுஞ் சம யா சாரமுமாகிய விந்தமார்க்க மெண்வகையும்.

சிவயோகிக்கில்லையெனமாமறைக - டட்டும்பெருமுரசந்தான் -எ-து-சிவத்தோ டிரண்டறக்கூடி நின்றசிவயோகிக்கில்லையென்று மா மறைகளாகிய பெரியபேரிகை முழக்கும்-எ-து.

* அகந்தை-என்பது-அந்தையென நிலைக்குறையாயிற்று.

“மாமறைகடப்படும் பெருமூகை,, மென்றது அவர்க்கில்லையென் றுபலபடக்கூறாத விவையெட்டுஞ் சிவத்திற் கின்றாகலி னதனையடை ந்த சிவயோகிக்கு மின்றென்ப தாயிற்று. (௫௩)



தத்துவத்தா ரல்லார் சலசந்திர னொப்பார்
தத்துவத்தார்செய்யுந்தவாதவங்கள் - சுத்தக்
ககனமழை யாற்கழுவிக் காற்றைக் கனலாற்
றெகனஞ் செயல்போற் றெளி.

தத்துவத்தாரல்லார் சலசந்திரனொப்பார்-தத்துவத்தார்செய்யுந் தவாதவங்கள் - எ-து-மெய்ப்பொருளாகிய பரதத்துவத்தையடையா தோர் தற்போதத்தாற்செய்யுந் தவாதவங்களினு மிவற்றின் பயன்க ளினு முயர்ந்துந் தாழ்ந்துஞ் சலத்திற்பிரதிபலிதமான சந்திரனைப் போலுமவர் அப்பரதத்துவத்தை யடைந்தோ ரருள் வடிவாயிருந்து செய்யுந் தவங்களு மவங்களு மிவற்றான்வரும் பயன்களுமிவர்க்கெங் ஙன மாமெனின்.

சுத்தக்-ககனமழையாற் கழுவிக்காற்றைக் கனலாற்-றெகனஞ்செ யல்போற்றெளி-எ-து-நிருமலமாயுள்ள வாகாயத்தை மழையாற்கழு விக் காற்றைக் கனலாற் சுடுவதுபோலுமா மென்றறிதி-எ-று.

ககனத்தைமழையாற்கழுவுதலுங் காற்றைக்கனலாற்சுடுதலு மின் றாயின வாறுபோற் றற்போதம் போய்ப் பேய்பிடியுண்டவனைப் போலுந் திருவருளே வடிவாயிருந்த மெய்ஞ்ஞானிக டிருமேனியி னிகழுந் “தவாதவங்க,, ளவ்வருள் விளையாட்டேயன்றி யவரவற்றைச் செய்தது மவற்றின்பய னவரைச் சார்வது மின்றென்பதாயிற்று.

“தவாதவங்கடத்துவத்தாரல்லார்க்கு,, வருவிக்கப்பட்டது - தத் துவமென்ற தீண்டுசிவத்தை. (௫௪)



காலனுக்குப் பாவமென்றுங் காற்றுங் கதிரவனுஞ்
சீலமிலா வொன்றுஞ் சிவயோகி - மேலொன்றைச்
சுட்டுவதுந் தம்மைச் சுழற்றிவிடா தாட்டுமலக்
கட்டின் பிராந்திவனுக் காண்.

காலனுக்குப் பாவமென்றுங் காற்றுங்கதிரவனுஞ் - சீலமிலாவொ ன்றுஞ் சிவயோகி - மேலொன்றைச் - சுட்டுவது - எ - து-உயிர்களைக் கோறலாற் காலனுக்குப் பாவமுண்டென்று மசுத்த நிலத்திற் சலித்த லானு மந்நிலத் தெறித்தலானுங் காற்றுங் கதிரவனு மாசார மிலனொன் றுங் கூறுதல்போற் சிவபூசையாதி நன்மார்க்கங்களைச் செய்திலனொன்

று நீராடலாதி யாசார மிலரென்று மிவைமுதலிய குணதோடங்களை ச் சிவயோகிகண்மேற் சுட்டிக்கூறுவது.

தம்மைச்சூழற்றிவிடா தாட்மேலக்-கட்டின் பிராந்திவனுக்கான் -எ-து-தம்மைவிடாது பற்றிநின்றவத்தைகடோறுஞ்சூழ்ற்றியாட்டப்ப ட்ட,மலபந்தத்தினூற்றேற்றும் பிராந்தியினதுசாமர்த்தியமாம்-எ-று.

சரிதை கிரியாயோக ஞானங்களுள் ஞானமொன்றுமே முத்திக் கேதுவாகலி னிஞ்ஞானத்தான் முத்தியை யடைந்திருத்தலாற் சரிதா திகளும் உடம்பாதியசுத்தங்களை யெல்லாங் கடந்து சுத்தமாயுள்ள வாநந்த வெள்ளத்தின் மூழ்கியிருத்தலா னீராடலாதி யாசாரங்களுஞ் செய்வதின்றிச் சிவயோகி சும்மாவிருப்பன் அங்ஙன மிருப்பது சரி தாதிகளைச் செய்வோர்க்கு மலமறைப்பாற் றெரியாது தம்மைப்போ ற்பார்த்தவனை யிகழ்தலான் "மலக்கட்டின் பிராந்திவனுக்கா,, னென் றார் - காலனுக்குப்பாவமுங் காற்றிற்குங் கதிரவனுக்குஞ் சுத்த மின்று யதுபோ னன்மார்க்கஞ் செய்யாமையாற் பாவமு மாசாரமின்மை யா லசுத்தமுமவர்க் கின்றென்பதுங் காண்க. (௫௫)



நாயேறி வீழ்ந்தென் னடாத்துகிலென் ஞானிக்குப்
பேயாஞ் சகம்பழித்தென் பேணுகிலென் - றேயார்
பெருமை சிறுமையிலை பின்னுமுன்னு மில்லை
வளாவற்று வேண்டிய செய்வார்.

நாயேறிவீழ்ந்தென்னடாத்துகிலென்ஞானிக்குப் - பேயாஞ்சக ம்பழித்தென்பேணுகிலென்- றேயார் - எ - து - நாய்மேலிவர்ந்தோ னுதினின்றும் வீழ்ந்ததனு லிகழ்ச்சியென்னை - வீழாதிருந்ததனைநடா த்தியதாற் புகழ்ச்சியென்னை - அதுபோல் ஞானிகட்குப் பேய்க்கூத் துப்போற் றேற்று மிச்சகத்திலுள்ளா ரிகழ்ந்தா லவர்க்கோர்சேதமெ ன்னை,புகழ்ந்தாலோர் இலாபமென்னை-யவரொன்றேடுந்தோயார்.

பெருமைசிறுமையிலைபின்னுமுன்னுமில்லை - வளாவற்றுவேண் டியசெய்வார் - எ - து -,அஃதன்றி யுயர்ச்சி வந்ததென்று பெருமை யுந் தாழ்ச்சிவந்ததென்று சிறுமையு மவர்க்கில்லை பின்னாகிய சகலமு முன்னாகிய கேவலமு மில்லையாகலிற் சுத்தமாகிய வருள்வடிவாயிருத் தலவின்றித் தாம் வேண்டியவாறே திருவிளையாட் டாடுவார்-எ-று.

இகழ்ச்சியாயுள்ள,நாயேறிக்கு வீழ்ந்தாலு நடாத்தினாலு மிகழ் ச்சி புகழ்ச்சியின் றியதுபோல் ஞானிக டமக்கிகழ்ச்சியா யிருந்தவு டம்பை யிகழ்ந்தாலும் புகழ்ந்தாலு மஃதவர்க் கின்றென்பதாயிற்று

செம்பிற் காளிதம்போன்றுயிரை யனுதியிற்பற்றியிருந்த சகசமலநீக்கற்பொருட்டு மாலயயிற்றனுவாதி கொடுத்தலிற்சகலத்தைப் பின்னென்று மாணவசம்பந்தமான கேவலத்தை முன்னென்றுங்கூறினர்.

சிற்றை-பயமிலச்சை யென்னுந் திருவெண்பாமுத லிந்நான்கு திருவெண்பாவாலுஞ் சிவஞானி மகிமையையறிவித்தவாறுகாண்க. ()



சன்மார்க்க மேமுதலாய்த் தாதமார்க்கத் தளவுந்
தன்மார்க்கமான வெங்கள் சம்பந்தன் - றன்னைத்
துறவி யரசுசுகி யோகி போகி
யறவன் மறவனென லாம்.

சன்மார்க்கமேமுதலாய்த்தாதமார்க்கத்தளவுந் - தன்மார்க்கமான வெங்கள் சம்பந்தன் - றன்னை - எ - து - ஞானமுதற் சரியையீறாய்ச் சொல்லப்பட்ட நான்குபாதத்திற்கு முரித்தாகிய சன்மார்க்கமுதற் றாதமார்க்க மீறாய்ச் சொல்லப்பட்ட விந்நான்கினையுந் தமதருணெறியா லெனக் குண்டாகச் செய்தருளிய வெமது சுவாமிகளாகிய திருஞான சம்பந்தப் பிள்ளையாரை.

துறவியரசுசுகியோகிபோகி - யறவன்மறவனெனலாம் - எ-து. எல்லாவற்றோடுங் கூடியிருந்து மவற்றோடு தாக்கற்று நிற்றலிற் றுறவியென்றுஞ், சகலபுவனங்களையுந் தாமேயிருந்து நடத்தலி னரசென்று மாநந்த மயனாயிருத்தலிற் சுகியென்றுஞ் சிவயோகத்தை யநுக்கிரகித்தலின் யோகியென்று மான்ம போதங்களைவிழுங்கிக் கோடலிற் போகியென்றுஞ்சகல தருமங்களுமோர்வடிவாயிருத்தலி னறவனென்று மடைந்தோர் மும்மலங்களைக்கோறலான் மறவனென்றுஞ் சொல்லலாம்-எ-று.

சன்மார்க்கஞ் சகசமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதமார்க்கமென நான்கு; இவற்றுட்சன்மார்க்கமாவது,நீயேநான்-நானே நீயென்பது.

சகசமார்க்கமாவது, தோழனுந் தோழனும், சற்புத்திரமார்க்கமாவது, பிதாவும் புத்திரனும் - தாதமார்க்கமாவது, ஆண்டவனுமடியானுமெனக்கொள்க.

ஞானம் பெற்றோரைப் புகழ்ந்து கூறிய பின்னர் இத்திருவெண்பாவா லந்தஞானத்தை யருளிச்செய்தற்குத் தலைவராகிய பிள்ளையாரைப் புகழ்ந்து கூறியவாறு காண்க. (௯எ)



தானல்லர் தன்னதல்லர் தத்துவசா லத்தலைவர்
மேனி சதாநந்தம் விளையுமிட - மியானைக்கைப்
போலே யிவருடம்பிற் போகமெலாம் பூசையித
னாலேசகம் பிழைக்கு மென்.

தானல்லர்தன்னதல்லர்தத்துவசாலத்தலைவர் - மேனிசதாநந்தம் விளையுமிடம் - எ - து - தனுகரண புவன போகங்களாயுள்ள தத்துவங்களெல்லாந் தமக்கயலாகலி னவை தாமுமல்லாமல் அசுத்தந் துக்கமனித்தியமாயிருத்தலி னவை தனதுமல்லாமல் அத் தத்துவங்களோடுகூடியுங் கூடாத சாலத்தோடுமவற்றிற்குத் தலைவராயிருந்த மெய்ஞ்ஞானிகடிருமேனி சதாநந்த மேன்மேலு முண்டாகு மோரிடமாகலின்.

ஆனைக்கை-போலேயிவருடம்பிற்போகமெலாம்பூசையித-னாலே சகம்பிழைக்குமென் - எ - து-எடுத்தபொருளின் பரிசமறிவதுபோற் றோற்றித் தன்னுளிருந்த நாசிக்குக்கெந்தவிடயமுமாகவிருந்தயானைக் கைப்போ லிந்தஞானிகளது திருமேனியாலநுபவிக்கும் போகமெல்லாமித்திருமேனியநுபவிப்பதுபோலிருந்தித்திருமேனியுள்ளிருந்தபரிபூரணசிவத்திற்கும் பூசையாமிப்பூசையினாலே சகத்திலுள்ளார்பிறவித்துன்பத்திற்குத் தப்பிவீட்டின்பத்தையெய்துவரொன்றறிதி-எ-று.

முற்ற நுகரணங்களை யாமென்றும், புவனபோகங்களை யெமதென்றுங் கருதி நின்ற தற்போதங் கெட்டிப்போதறிவுதாமா யாநந்தந் தமதாயிருத்தலிற் "றானல்லர்தன்னதல்ல,, ரென்றார்.

தேகத்திருந்த போதத்தையுங் கருவிகளையும் விழுங்கிக்கொண்டதனுட் சிவங்குடியாயிருத்தலின் மேனி சதாநந்தம்விளையு மிடமென்றும் போகமெல்லாம் பூசையென்றுங் கூறினார்.

இத்திருவெண்பாவான் ஞானிகட்குப் பத்திசெய்வார் வீடடைவாரொன் றறிவித்தவாறு காண்க. (௫௮)

---

பூசிமுடிப்பனவும் பூண்பனவும் பொற்றுகிலு
மாசை மிகுந்த வாசியர்க்காங் - காசிற்ற
முண்டையர்க் காகாசிவன் முத்தனுக்குப் போகமில்லாற்
குண்டையொப்பார்க் கேனிது வாகும்.

பூசிமுடிப்பனவும் பூண்பனவும்பொற்றுகிலு - மாசைமிகுந்த வாசியர்க்காம்-எ-து - சந்தனமாதி பூசப்படுவனவும்மல்லிகையாதிமுடிக்கப்படுவனவுங் கொத்தளப்பொன் னேலையாதி பூணப்படுவனவும் பொற்சரிகைச் சேலையாதி யுடுக்கப்படுவனவுமாகிய விலைமுதலிய

போகங்களெல்லா மனையவளுன் மிகவு மிச்சிக்கப்பட்ட சுமங்கலியாகி யவரசியர்க்கேயாகுமது போலும்.

சிவன்முத்தனுக்குப்போகமல்லாற் - காசிற்ற - முண்டையர்க்கா கா - குண்டையொப்பார்க்கே னிதுவாகும் - எ - து - சிவனதிச்சைப் படியேயவனது திருவடிசேர்ந்த சீவன்முத்தனுக்கே போகமல்றி ம ங்கலநீங்கிய வமங்கலிக்குப் போகங்களி லொன்றேனு மாகாவாறு போலுஞ் சிவனடிசேராது தவம்பண்ணுவோர்க்கு மத்தவத்திற்குரிய விரதஞ்செய்து முடிப்பதேயன்றிப் போகங்களிலொன்றேனு மநுப விக்கலாகாதஃதன்றிக் குண்டையைப்போலுஞ் சரிதாதி தொழிற்செ ய்வோர்க்கு மிப்போக மநுபவிப்பதேனுகும் - எ - று.

தம்முதலாகிய சிவத்தை யிழந்து தவம்பண்ணுவோரை முண் டையவொன்று குறிப்பாற்கூறினர்.

குண்டைக்குத்தொழிற்செய்வதேயன்றியனையவெனடுங்கூட்டரவின் மைபோற்சரிதாதிகளைச்செய்வோர்க்கு இத்தொழிற்செய்வதேயன்றி சிவத்தோடுங்கூட்டரவின்மையாலிவரைக்குண்டையொப்பாரென்றார்

இத்திருவெண்பாவாற் றிருவடியையடைந்தோர்க்கேபோகமநு பவிப்பதாமன்றி மற்றையர்தமக்குச்சொன்ன நெறிநிற்பதேயன்றிப் போகமநுபவிக்க லாகாதென் றறிவித்தவாறுகாண்க. (ருகூ)



ஆனைமதப் பட்டா லலங்கார மன்றிநாய்
தானு மதப்பட்டாற் சரியாமோ - ஞானி
தடை மீறினுஞ் சதிராகுங் கன்மி
கடைமீற லாகாது காண்.

ஆனைமதப்பட்டா லலங்காரமன்றிநாய் - தானுமதப்பட்டாற்சரி யாமோ - எ - து - மதமேறு முன்னுஞ்சிறப்புள்ள யானையின் மதமேறி த் தன்றடைகடந்து சேறினுஞ்சிறப்பேயாமன்றிப்பே யேறுமுன்னு மிழிவுள்ள நாய்தானும் பின்பேயேறினு லதுபோலுஞ்சிறப்பாமோ வவைபோலும்.

ஞானி - தடைமீறினுஞ் சதிராகுங்கன்மி - கடைமீறலாகாதுகா ண் - எ - து - முன்னின்ற நிலை கடவாதிருந்தபோதுஞ் சிறப்புள்ளமெ ய்ஞ்ஞானி பின்னைத்தமேலிட்டா லந்நிலைகடந்து சேறிலுஞ் சிறப் பேயாவன் கருமி நிலைகடவாமுன்னு மம்மெய்ஞ்ஞானிகட் கிழிவா வன் றற்போதத்தா லந்நிலைகடந்தபோது மிகவுமிழிவாவனுகலிற் றன் னிலை கடக்கலாகாது - எ - று.

ஆனைமதமேறினன் மிகவுஞ்சிறப்பு-நாய்பேயேறினன் மிகவு மி ழிவு. அவைபோல ஞானி தடைமீறினன் மிகவுஞ் சிறப்பு கன்மிகடை மீறினல் மிகவு மிழிவென்பதுங் காண்க.

இத்திருவெண்பாவான் ஞானி கிரியை செய்யினுஞ் செய்யாவி டினுஞ் சிறப்பாவ னென்பதுங் கன்மி கிரியை செய்யாவிடின் மிகவு மிழிவாவ னென்பது மறிவித்தவாறு காண்க. (௧௰)



அதி பக்குவத்தாற் கநுக்கிரகஞ் செய்யும்
புதுமைக்குச் சாத்திரங்கள் போதா - இதுவென்றுப்
பேறே யனந்தம் பிரகாரம் வந்தாலும்
வேறே யனந்த விதம்.

அதிபக்குவத்தாற் கநுக்கிரகஞ்செய்யும்-புதுமைக்குச்சாத்திரங் கள் போதா - எ-று - தீவிரதர பக்குவமுடையானுக்கு ஞானநுக்கிரக ம்பண்ணு மதிசயத்திற்கு வெவ்வேறு வகைப்பட்ட சாத்திரங்க ளெல் லாம் போதா தஃதெங்ஙன மெனின்.

இதுவென்றுப்பேறேயனந்தம் பிரகாரம்வந்தாலும் - வேறேய னந்தவிதம்-எ-று- இதுவென்றொன்றைச்சுட்டுதற்கிடம் வைக்காதுகூ றுமுபதேசப்பேறே யவனுக் கநந்தம் விதமாய்க் கூறுஞ் சாத்திரங்க ளாகு மிங்ஙனம் வந்த பக்குவனு மநந்தம் பெயர்களுள்ளும் வேறிவ னையொழித்த பக்குவர்களு மநந்தவிதமாவார்கள்-எ-று.

தீவிரதர பக்குவனதறிவு சிவத்தையேயன்றி மற்றொன்றையும்ப குத்துநாடாதாகலிற் சாத்திரங்கள் போதாதென்றார்மந்தமந்ததரந்தீ விரமென்னு மிம்மூன்று பக்குவரு நாநுபேதமாய் வருதலினு மிவர் க்குபதேச நாநுபேதமாகக்கூறிப் பக்குவப்படுத்தவேண்டு மாகலினு மநந்தவிதமென்றார்.

இத்திருவெண்பாவால் தீவிரதரபக்குவனுக்குக் கூறுமுபதேச மேபோதுமென்பது மற்றைய மூவர்க்கு மவர்கூறுமுபதேச மொ ழியுமன்றி வேதாகமங்களா லுணர்த்தவேண்டுமென்பது மறிவித்தவா றுகாண்க, (௧௧)



அறியாமை நீங்கி யறிவா யறிவே
யறியாம லாயிரண்டு மற்றுப் - பிறியாதார்
தன்னிழப்பின் ஞான சமாதிக்குச் சாதகரா
மந்நிலைக்கே சீவன் முத்தராம்.

அறியாமைநீங்கியறிவாயறிவே-யறியாமலாயிரண்டுமற்றுப்-பிறி யாதார் - எ - து - சகலகேவலமாகிய வறியாமை நீங்கித் தம்மையரு

ளார்கண் டவ்வருளறிவாகி மூன்மலமாகிய வறியாமையின் மன்றநதி ருந்தாற்போ லவ்வறிவு தானே யறியாமையாகி யதனுண் மறைந்திவ் வறிவென்பதூஉந் தாமென்பதூஉ மாகிய விரண்டுமேற் றிதனைப் பிரியாதி ருப்போர்.

தன்னிழப்பின்ஞான சமாதிக்குச்சாதகரா - மந்நிலைக்கேசீவன்மு த்தராம் -எ - று - அங்ஙனமிருக்கவே தற்சுதந்தரபோதமறும் அஃது அறவே பணைதானாகிய ஞானசமாதிக்குச்சாதகராவ ரிச்சாதகம்வந்தவ க்கணமே சீவன்முத்தருமாவர்-எ-று.

இம்முறைவந்துபணையோகத்தினின்றோர்க்குச்சுகப்பேறுஞ்சுகா தீதமுந்தாமேகிடைக்குமாகலி னந்நிலைக்கேசீவன் முத்தராமென்றார்

இத்திருவெண்பாவாற் பணையோகத்தி னிற்போருஞ் சீவன்முத் தராவரொன் றறிவித்தவாறுகாண்க. (சஉ)

---

மகவான்கண் பார்த்தவர்க்கு மாண்பாய்த் தனக்குப்
பகமாயி லச்சைவிடாப் பண்பாய்ச் - செகமாணக்
கண்ணூறி போல்வேடக் கண்ணூடி காட்டுதவ
மெண்ணூழிகால மிருந்தென்.

மகவான்கண்பார்த்தவர்க்குமாண்பாய்த்தனக்குப் - பகமாயிலச் சை விடாப்பண்பாய் - எ - று - இந்திரனது கண்களைப் பார்த்தபெ யர்க்கு மாட்சிமையாயவ்விந்திரனுக் கல்குலாயவனதுள்ளே நாணம் விடா முறைமையா யிருந்ததுபோல.

செகமாணக்-கண்ணூறிபோல்வேடக்கண்ணூடிகாட்டுதவ - மெண் ணூழிகாலமிருந்தென்- எ - று - தவவேடத்தைப் பார்க்கின்ற சகத் தோர்க்கு மாட்சிமையாயிருப்ப விவ்வேடத்திற்குரிய ஞானந்தமக்கி ன்றென்றுதம்முள்ளே நாணமுறவேசிபோன் மிளுக்கியவேடமாகிய கண்ணூடி காட்டப்பட்ட தவத்தா ரளவிறந்த காலமிருப்பினுமவ்வே டத்தாற் பய னவர்க்கென்னையுள-எ-று.

அவனுக்குக் கண்களைப் பார்க்குந்தோறு மிலச்சைவரலாலிலச் சைவிடாவென்றார், அவனை யிவர்க் குவமை கூறினமையா லிவர்க்கு மிவ்வேடத்தைப் பார்க்குந்தோறு மிலச்சைவருமென்பதாயிற்று.

தவத்தோர்க்குரிய வுள்ளொழுக்கமான ஞானசார மொன்றுந் தோற்றாது வடிவமாத்திரையே தோற்றினமையால் "வேடக்கண்ணூடி காட்டுதவ,, மென்றார்.

இத்திருவெண்பாவாற் சிவஞான மில்லார்க்குச் சிவவேடத்தாற் பயனின்றென் றறிவித்தவாறுகாண்க. (சங)

முதலாவது
வேதாகமப் பொதுவி லுபதேசம்-முற்றும்.



உ

சிவமயம்.

இ ர ண் டா வ து

# சத்திநிபாதத்துத்தமவொழிவு.



நால்வகைச் சத்திநிபாதத் துத்தமர்களது பிரபஞ்சப் பற்றொழிவை முறையே கூறினமையா லிவ் வதிகாரத்திற்குச் சத்திநிபாதத்துத்தம வொழிவென்றுபெயராயிற்று.

இவர் இந்நூற்குரியவராகலி னவ்வதிகாரத்தின்பின் னிவ்வதிகாரம்வைக்கப்பட்டது.

சரிதாதி நான்கினுக்குஞ் சாலோக மாதி
வருமா றெனக்களித்த வள்ளல் - குருராயன்
ஞானத்திற் பக்குவர்க ணால்வர்க் குபதேச
மானத்தையு நிகழ்த்தி னான்.

சரிதாதிநான்கினுக்குஞ் சாலோகமாதி - வருமாறெனக்களித்த வள்ளல்-குருராயன்-எ-து-சரிதை - கிரியை-யோக-ஞானமென்னுமிந் நான்கு பாதத்திற்குஞ் சாலோக - சாமீப-சாரூப-சாயுச்சிய மென்னு மிந்நாலுபதமும் வருமுறைமையை யெனக்கருளிச்செய்த வள்ளல் குருராயனாகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார்.

ஞானத்திற்பக்குவர்க ணால்வர்க்குபதேச-மானத்தையுநிகழ்த்தினான் -எ-து-ஞானபாதத்திற்குரியு மந்தமந்ததரந்தீவிரந்தீவிரதர மென்னு மிப்பக்குவமுடையார் நால்வரி லக்கணமு மவர்க்குபதேசித்த முறைமையையு மருளிச்செய்தார்-எ-று.

முப்பத்தாறு தத்துவங்களையு நியதிகளைவது சரிதை, யவற்றை யறிந்துநீங்கிய தன்னை யருளா லறிந்தவற்றின் முடிவிலிற்பது சாலோகபதம் ஆங்குத்தனக்கறிவித்த வவ்வருளைத்தெரிசித்துப் பின்னருளை, யன்றித் தானென்றும் பிரித்துநோக்காது தற்போதத்தை யடக்குவது கிரியை யவ்வருளே வடிவாயிருப்பது சாமீபபதம் - அங்ஙனமிருந்து தற்போதஞ் சிறிதுந்தோன்று தொழிப்ப தியோக மாங்குப்பனைதா னாயிருப்பது சாரூபபதம் - அப்பனா நீக்கத்திற்றோன்று ஞானானந்தத் தைப்பெறுவது ஞானமந்த வானந்தத்தி லதீதப்படுவது சாயுச்சிய

பதமாகலிற் "சரிதாதி நான்கினுக்குஞ் சாலோகமாதி வருமா," திங்ஙனமெனக்கொள்க. (க)



கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவளவுக் களவு
சொன்னதல வெங்கள் சுவாமியுரை - மன்னடத்தி
லாநந்த மூர்ச்சிதர்கை யாடகயாழ் தன்னிலே
தானு நலம்போல மொழிந்தான்.

கின்னரியைத்தொட்டவர்போற்கேட்டவளவுக்களவு - சொன்னதலவெங்கள்சுவாமியுரை- எ- து- வருடி வாசிப்பார் தாம்நினைத்துக் கேட்ட பாட்டி னளவுக்களவு கூறுங்கின்னரியைப்போன்றியானினைத்து வினவிய மட்டிற்கு விம்மட்டேவிடை கூறியதன் றெமது சுவாமிகளாகியதிருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவாக்கஃதெங்ஙனமெனின்.

மன்னடத்தி - லாநந்தமூர்ச்சிதர்கையாடகயாழ்தன்னிலே - தானுநலம்போல்மொழிந்தான் - எ - து - பரமேச்சுரன் திருநடனத்திலந்நடன வதிசயத்தைப்பார்த் தாநந்தபரவசராய்நிற்போர் கைப்பிடித்தபொன்னினு னியற்றப்பட்டயாழ் தன்னிலேதான் வாசிக்குநலம்போ லியான் கேளாது கேட்க வெனக் குபதேசமொழிகளை யருளிச்செய்தார்-எ-று.

அவரானந்த பரவசராய் நிற்கவுந் தெய்வயாழ் வருடாது வாசித்தல்போலப் பிள்ளையா ரானந்தாதீதரா யெழுந்தருளியிருக்கவு மவரது தெய்வவாக்கு நினையாது கூறிற்றென்பதறிக.

" கின்னரியைத் தொட்டவர்போற் கேட்டவளவுக்களவு சொன்னதல,, வென்றமையாற் கடாவும் விடையுந் தாமே யருளிச்செய்தாரென்பதாயிற்று.

தெய்வயாழ்க்குமேல் வேறியாழின்மைபோ லிந்தவாசாரியர்க்குமேல் வேறாசாரிய ரிலரென்பதூங் காண்க. யாழுன்னி வாசியாதிருக்கவும் பிறர்க்கங்ஙனஞ் செய்ததுபோற் றேற்றலிற் "றானுநலம்போலமொழிந்தா,,னென்று திருவாக்குக் கதனையுவமையாகக் கூறினர்.

இவையிரண்டுதிருவெண்பாவானுந் தமதாசிரியர் ஞாநபக்குவர் நால்வர்க்கு முபதேசிக்கு முறைமையைத் தமக்கருளிச்செய்யும்போது மாநந்தாதீதரா யெழுந்தருளியிருந்தே யருளிச்செய்தாரென் றறிவித்தவாறுகாண்க. (உ)



சும்மாதே பார்த்திருக்கச் சுத்தியா முத்தமர்க்குத்
தம்மாய்வார்க் கோருரையே சஞ்சீவ - மென்மேனு

மாற்றஞ் சகுனப் புள்வாக்கு மதுவுண்ட
போற்றும்பி யின்பாட்டுப் போல்.

சும்மாதேபார்த்திருக்கச்சுத்தியாமுத்தமர்க்குத் - தம்மாய்வார்க் கோருரையேசஞ்சீவம் - எ - து-தீவிரதர பக்குவர்க் கோர்மொழியுங் கூறாது ஞானசாரியர் மவுனமாய் நந்தநோக்காற் பார்த்திருக்கவே யான்ம சுத்தியாந், தீவிரபக்குவ முடையராய்த் தற்போத மொழிப்போர்க் கப்போதஞ் சிறிதேனும் பதையாதொழிதற் கேதுவாய்க்கூறுமோர் மொழியே சஞ்சீவம்போன்று சுத்தியாம்.

மென்மேலு - மாற்றஞ்சகுனப்புள்வாக்குமதுவுண்ட - போற்றும்பியின் பாட்டுப்போல் - எ - து- மந்ததரபக்குவர்க்கு விட்டிசை யாதிசைக்குஞ் சகுனப்புள் வாக்குப்போலச் சிற்சிலசொற்களாற் றெளிவிக்கச் சுத்தியா மந்தபக்குவர்க்கு மதுவை நிறையவுண்டதும்பி யிடையறாது பாடும் பாட்டுப்போல வேதாகம சாத்திரங்களானு நாநாவுபாய யுத்திகளானு மிடையறா தறிவிக்கச் சுத்தியாம்-எ-று.

திருநோக்கக் குறிப்பா லுந்நிலை தெரிந்துகோடலிற் சும்மாதே பார்த்திருக்க வென்றுஞ், சஞ்சீவத்தாலுடலஞ் சுத்தியாவதுபோல வோருரையா லான்மசுத்தி பெறுதலிற் சஞ்சீவமென்றுஞ், சகுனப் புள் வாக்காற் றானினைத்தபொருள் கிடைத்தல்போற் சிற்சிலசொற்க ளான் மெய்ப்பொருளைத் தெரிந்து கோடலிற் சகுனப்புள்வாக்குப் போலென்று மூர்ச்சித்துக்கிடந்த பெண்டும்பியை யாண்டும்பிசூழ்ந் துகொண் டிடையறாது பாடி யாடவே யதற்கம்மூர்ச்சை தெளிந்தி தனோடு பறந்து கூடல்போல நாநாவுபாய யுத்திகளா னிடைவிடா த றிவித் தறிவின தாணவ மூர்ச்சையை நீக்கித் தம்மோடு சேர்த்தலாற் றும்பியின் பாட்டுப்போலென்று கூறினர்.

சுத்தியாவது, சகலகேவலங்களைநீங்கி யவற்றின் வாசனையோடெ ழுந்ததற்போதமுமொழிதல்; "மென்மேலுமாற்றஞ்சகுனப்புள்," ளெ ன்றதனு லாற்றதையென்பதாயிற்று, சகுனப்புள் வாக்குப்போலென்று மதுவுண்ட தும்பியின் பாட்டுப்போலென்றுங் கூட்டுக.

இத்திருவெண்பாவான் ஞானசாரிய ருபதேசத்தா னல்வகைப பக்குவருந் தெளிந்துகொள்ளு முறைமை யறிவித்தவாறு காண்க.(எ



மூலமுதிர நாண முதிர்ந்தடங்கி மூடிக்
கலவியிலே நக்கினத்தைக் காட்டாற் - சலனபய

னானாலுந் தம்பனைசெய் தாநந்த மாக்குவது
போனாலா மிந்தப் பொருள்.

முலைமுதிர நாண முதிர்ந்தடங்கிமுடிக் - கலவியிலேநக்கினத்தை க்காட்டல்-எ-து-ஓர்பேதைப்பெண்டனது முலைமுதிரமுதிர நாணமே ன்மேலு முதிர்ந்து பிறபுருடரோடு முன்போன கையாடலாதி செய் யாதடங்கி யம் முலையினைமறைத்துத் தனது சுயபுருடனுக்குக் கூட் டரவின் கண்ணக்கினத்தைக் காட்டுவதுபோலு மொருவனறிவு முதிர முதிர முன்போல விடயங்களிற் செல்வதற்கு நாணமுதிர்ந் தவ்விட யங்களிற்செல்லும் போதத்தை யுள்ளடக்கித் திருவருளின் மறைத்து ஆநந்தத்திற் கொப்பித்து நிற்றல் அப்போதத்தை யாநந்தத்திற்கொப் பிக்கவெனி னங்ஙன மொப்பிக்குமாறே நில்லாமல்.

சலனைபய னானாலுந்தம்பனைசெய்தாநந்தமாக்குவது-போனாலா மிந்தப்பொருள்-எ-து-போதச்சலனையினாலும் விடயப்பயனை யநு பவிப்பதானாலு மிவ்விடயப்பயனை நீக்கி யப்போதச்சலனையை யட க்கி யப்போதத்தை யாநந்த மயமாக்குவ தானாலு மிவ்வாநந்தப்பொ ருளோ ரியல்பிற்றாய்த் தோன்றா தங்ஙனஞ்செய்வனபோமா யினிப் பொருளோ ரியல்பிற்றாய்த் தோற்றுவதாம்-எ-று.

முலைமுதிர்ந்த பெண் ணம்முலையையு மல்குலையும் பிறபுருட னுக்குக் காட்டாது மறைத்துச் சுயபுருடனுக்குக் காட்டுதல்போ லறி வுமுதிர்ந்தோர் தற்போதத்தை விடயங்களிற் செல்லவொட்டாது மீ ட்டுள்ளடக்கி யதனைச் சிவாநந்தத்திற் கொப்பிக்கவேண்டுமாகலி னங் ஙன முவமைகூறினார்.

போதம் விடயங்களிற் சென்றழுந்தியு மாநந்தத்திற் சென்றழு ந்தியு மிங்ஙன மாறிநிற்குமெனி னாநந்தமு மாறித்தோன்றுமாகலி “னா நந்தமாக்குவது - போனாலாமிந்தப்பொரு” ளென்றார், ஆனாலுமெ ன்பதனைச் சலனை யென்பதனோடு மாநந்தமாக்குவ தென்பதனோடுங் கூட்டுக.

இத்திருவெண்பாவா லறிவாநந்தத்தழுந்திய போதம் விரிந்து விடயா நந்தத்திற் செல்லாதோ ரியல்பிற்றாய் நின்றோர்க்கே யவ்வாந ந்தமாறாது கிடைக்குமென் றறிவித்தவாறுகாண்க. (௯)

பஞ்சமலமும் பசுவநந்த மும்பதியு
மஞ்சு தொழிலு மவத்தைகளுங் - கிஞ்சறிவுங்
கேட்டுச் சரிதாதி செய்துகிலேசங் கெடாக்
காட்சி மெழுகிற் கனகங்காணல்.

பஞ்சமலமும்பசுவநந்தமும்பதியு-மஞ்சுதொழிலுமவத்தைகளு ங்கிஞ்சறிவுங்- கேட்டு-எ-து-ஆணவமாயை காமியந் திரோதை மாமாயை யென்று கூறப்பட்ட பஞ்சமலங்களின திலக்கணமுமிம்மலங்களான் மறைபட்டிருந்தவனேகமாயுள்ள பசுவினதிலக்கணமு மிப்பசுபாசங்கட்கு ரூதன்மையா யேகமாயிருந்த பதியினதிலக்கணமு மப்பதியாற் செய்யாநின்ற பஞ்சகிருத்திய விலக்கணமு மிப்பஞ்சகிருத்தியத்தானடக்குஞ் சாக்கிராதியஞ்சவத்தையினதிலக்கணமுமிவ்வஞ்சவத்தைகடோறுஞ்சுழலு மான்மபோத விலக்கணமுங்கேட்டறிந்தும்

சரிதாதிசெய்துகிலேசங்கெடாக் - காட்சிமெழுகிற்கனகங்காண்-எ. து-சரிதைகிரியாயோகங்களைச்செய்து மப்பாசத்தை நீங்கிப் பதியையடைந்து பிறவித்துன்பத்தை நீக்கமாட்டாதா ரறிவுமாற்றறி மெழுகி லடங்கிய கனகம் போலுமாம்-எ று.

உரைத்தொட்டவேற்றிய கனகமுருக்கியெடாமையின் மெழுகின் மறைந்தாற்போலத் திரிபதார்த்தங்களின துண்மையைக் கேட்டறிந்த வறிவு சுவாநுபவத்தான் வெளியாகாது மலத்தூண் மறைந்தமையான் மெழுகிற் கனகங்காணென்றார். அவ்வறிவுபிறருக்குக்காட்சியாய்த்தோற்றலானதனைக் காட்சியென்றார்.

இத்திருவெண்பாவாற் பதிபசு பாசங்களின தண்மையை வேதாகமங்களா லுணர்ந்தாலு மப்பதியைச் சுவாநுபவத்தா லுணராரர்க்குப் பயனில்லையென் றறிவித்தவாறுகாண்க.



வாதி வடத்தினமு மாமருத்து வன்பிணியுஞ்
சாதித்த வீரன்மேற் றம்பலமுந் - தீதுபோன்
ஞானத்திலின்மை, நசிப்பித்து நானதுவா
மூனத்தை யாரொழிவிப் போர்.

வாதிவடத்தினமு மாமருத்துவன்பிணியுஞ் - சாதித்தவீரன்மேற் றம்பலமுந்-தீதுபோன் - எ-து - பஞ்சலோகங்களையும்பொன்னாக்கினேனென்றுகூறு மிரதவாதி மிடியனுயிருத்தலும் பிறர்பிணிகளையெல்லாம் போக்கினேனென்று கூறு மகாவயித்தியன் பிணியனுயிருத்தலும் பகைகளையெல்லாம் வென்று சாதித்தேனென்று கூறு மகாவீரன்மேற் பிறர்போட்ட தம்பல மிருத்தலுங் குற்றமாமதுபோல.

ஞானத்திலின்மை நசிப்பித்து நானதுவா- மூனத்தையாரொழிவிப்போர் - எ - து- சுவாநுபவத்தான் ஞானநந்தத்தை யடைதற்கேதுவாகக்கூறும் ஞான சாத்திரங்களைக்கேட் டறிந்தமாத்திரத்தில் யாமவ் வாநந்தம்பெறுததனை விடயச்சேற்றூற்கெடுப்பிக் கிவ்விடயச்சே

ற்றிலழுந்திநின் றவ்வாநந்தத்தின் மயமானேமென்று கூறுங் குற்றத்தையாவர் நீக்குகிற்பார்-எ-று.

மிடிபிணிதம்பல மவரிடத்திருத்தலாற் றாஞ் சொன்னவாறு செய்பவரலரொன் றறிந்தாற்போல விடயப்பற்றுவிடாமையா லிவரிங்ஙனங் கூறுதலேயன்றி யதனை யடைந்திலரென்பதறிக.

மிடியாதியவர்க்குக் கூறினமையால் விடயமிவர்க்கு வருவிக்கப்பட்டது இங்ஙனங் கூறுதல் மிகவுந்தோடமாகலி “ஞானத்தையாரொழிவிப்பார்,, ரென்றார்.

இத்திருவெண்பாவாற் சிவாநந்தத்தைப் பெறாதிருந்தும் பெற்றேமென்று சத்தியங்கூறன் மிகவும்பாவமென் றறிவித்தவாறுகாண்க



மயலற்றார் கேட்க மகிழ்ந்துரைத்த வார்த்தை
யயலுக் குபதேச மாகுந் - துயிலாத்
தொறுவனைப்போ னின்றுகே டேசழுக்கு நோயு
மறுமுரைத்தோ ராமுரைப் பதை.

மயலற்றார்கேட்க மகிழ்ந்துரைத்த வார்த்தை-யயலுக்குபதேசமாகும் -எ- து-தேகாதிபிரபஞ்சங்களை யானெனதென்று கருதுமயக்கமற்ற வதிபக்குவத்தார்கேட்க ஞானாசாரியா ராநந்தமகிழ்ச்சியா லருளிச்செய்த வுபதேசமொழிக ளப்பக்குவர்க்கன்றியயலிருந் தோர்க்கு முபதேசமாகுமாகலி னம்மொழிகளை.

துயிலாத்-தொறுவனைப்போனின்று கேடேசழுக்குநோயு- மறுமுரைத்தோராமுரைப்பதை- எ-து-சாக்கிரத்தினில்லாது சொற்பனத்துஞ் செல்லாதிடையான தன்மையாய்த் துயின்றுந் துயிலாத விடையனைப் போன்று கேவலசகலங்களிற் றாக்கற்று நின்றுகேட்டி யிங்ஙனங் கேட்டியெனிற் றூசின்மேலேறு மழுக்குப்போன் றேறுவதாய வாகாமிய துன்பமு மொழியு மியாமுனக்குச் சொல்லவேண்டியபுத்தியைச் சொன்னோ மிதனை நீயறிதி-எ-று.

இடையன் சோற்கண் டுயிலாது துயின்று மாட்டுமணிய ரவத்தைக்கேளாது கேட்கு முறைமைபோ லிப்போது ஞானோபதேசங் கேட்கும்போதே சகலகேவலங்க டாக்காது கேட்போ னநுபவமுற்றும் பெற்று முன்னிலைச்சுட்டு மொழிந்து நிற்பனாகலின் “தூசழுக்கு நோயுமறு,, மென்றார், தூசழுக்குநோயுமறுமென்றவும்மையாற் சஞ்சித பிராரத்தமு மறுமென்பதாயிற்று.

அஃதெங்ஙனமெனில், கருவிகள் சடமாகலி னவைகளான்மாவை யறிந்து கூட்டமாட்டா வான்மா கேவலத்தின் மறைபட்டுக் கிடத்தலி

னவைகளைச்சென்று கூடமாட்டா, கருவிகளைப் பிரேரகம்பண்ணி யிக்கேவல மறைப்பைநீக்கிச் சகலத்தில்வைத்துப் பெத்தத்திற் றேகாதி பிரபஞ்சங்களை யறிவிப்பது போலவுங் கீழாலவத்தைப்படுத்திக்கேவலத்தில வைப்பதுபோலவு மூத்தியிலிக்கேவலசகலங்கடாக்காதுவைத்துச் சுத்தாவத்தையிற்செலுத்திச் சுத்தத்தில்வைப்பதுந்திருவருளே, யென்று மிஃதன்றிக் கருவிகளைக் கூட்டுவித்தபோ தான்மாவிற்குச்சுதந்தர வறிவுதோன்றித் தானல்லாத தேகத்தைத் தானெனக் கருதிநின்றி யானே யெல்லாவற்றையுமறிவே னெல்லாவற்றையுஞ்செய்துமுடிப்பே னெனக்கெதி ரொருவரு மின்றெனநிற்கு மிங்ஙனநிற்பதனு லிதாகிதங்களு மிவற்றான்வரும் வினைகளுந் தொடரு மித்தொடர்ச்சியாலளவிறந்த பிறவிகளி னெடுங்காலஞ் சுழல்வதிங்ஙனமென் றந்தட்புல்லறிவை விட்டுநீங்கிக் கானலை நீரென்று மயங்கிக் கண்டபோதும் நீரை நீரென் றுள்ளபடி கண்டபோதுந் தனக்குக் காட்டிநின்றது கதிரொளியென்று கண்கண்டு 'நின்றாற்போ லான்மா பொய்யை மெய்யென்று மயங்கிநின் றறிந்தபோதும்.

மெய்யை மெய்யென்று தெளிந்துநின் றறிந்தபோதுந் திரோபவித்து மநுக்கிரகித்து மறிவித்து நின்றதுந் திருவருளேயென்று முள்ளபடி யறியிற்றானெல்பது மிந்தமுறையே அவன வளது வென்னு முன்னிலைக் கண்ணுந் திருவருணடப்பிக் கின்றதென்று கண்டம் முன்னிலைகளாற் றனக்கோ ரிதாகிதங்கள் வந்தகாலை யம்முன்னிலைகளை நாடாதுவினைக்கீடாய்த் திருவருணடப்பிக்கின்றதென்று அத்திருவருளை நாடி நிற்றலாற் பிறவொன்பதும்போ யெங்குந்திருவருளாய்க் காண்டலாகாமி யமறுமென்பதும் ஞானசாரியர் கிருபாநோக்கத்தாற் சஞ்சிதமறுமென்பது முண்மை.

முற்செனனம்புரிந்த வல்வினை யுடலுடனகலுமென்றும் "வினைப்போகமேயுறுந் தேகங்கண்டாய் வினைதா னொழிந்தாற்றினைப்போதளவு நில்லாதுகண்டா,, யென்று மிங்ஙன மீச்சுரவாக்கிய ஞானிகள் வாக்கியமிருக்க நீர் பிராரத்தவினையும் போமென்ற தென்னையெனின் மீண்டுக்கூறியமுறையே. நிற்றிஇ யான்பிறவொன்பதொழிந்து திருவருளே கண்ணகச்சென்று சிவதரிசனம் பண்ணியதி லதீதப்பட்டுநின்ற சிவயோகி பஞ்சகிருத்தியங்களையுங்கடந்து பரமுத்தனைப்போலிருப்பனுகலினு மவன் பிராரத்தம் வருவன போற்றோன்றி யழிவதேயன்றி யவனை வாதியாதாகலினு மவனுக்குப் பிராரத்த மின்றென்பதறிக இன்னு மப்பர் மாணிக்கவாசகர் முதலாயினோர் சரித்திரங்களினுனுங் காண்க.

(யான்பிறரென்பதனுல்வினையேறுமெனபதற்குதாரணம்.)

(திரட்டு) தானலாதொன்றுதனைத்தானெனக்கருதிக்கொண்டே யானெலாஞ்செய்தேனென்னுஞானமஞ்ஞானமத்தா, வீனமாம்வி னையிரண்டா மிருவினையாலுடம்பா, மூனமாருடம்பாலுமா முழிநு லாகாதுண்டோ.

(சித்தியார்) யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியானென் னு - மிக்கோணை ஞானவெரியால் வெதுப்பிநிமிர்த்துத் -. தான்செய் வேறின்றிட வத்ததுவன்றுனே ரோதனையளித்து முன்னிற்கும் வினை யொளித்திட்டோடு - நான்செய்தேனெனு மவர்கருத்தானங்கின்றி ந ண்ணுவிக்கும் போகத்தைப்பண்ணுவிக்குங் கன்ம, மூன்செய்யா நூ னந்தானுதிப்பினல்லா, லொருவருக்கும் யாமெனதுங்கொழியா தன் றே (சிவஞானதீபம்) யான்செய்தேன் பிறர்செய்தாரெனுங்கோணி தங்கி என்றும்,மற்றும் வருவன வற்றுற்காண்க.

பிராரத்துவ மின்றெனபதற் குதாரணம் (திருவருட்பயன்) மும் மைதரும்பயனு மூளாவா மூதறிவார்க் - கம்மையு மிம்மையேயாம் என்றுராசாரியாரும்.

இத்திருவெண்பர்வா லாசாரியருபதேசங் கூறுமிடத்து மாணுக் கன் சகலகேவலங்களிற் ருக்கற்றுநின்றுகேட்பின் மூவகைவினைகளு மறுமென் றறிவித்தவாறு காண்க. (எ)



அண்டமுதலா யநந்தம் பிறப்பில் விதங்
கொண்டுநர ராய்வினைகள் கூறுெத்துத் - தொண்டிற்
சரிதாதி செய்து தவச்சார்பி னிற்போர்க்
கரிதான பக்குவ நாலாம்.

அண்டமுதலாயநந்தம் பிறப்பில்விதங் - கொண்டுநரராய்த்தொ ண்டிற்சரிதாதிசெய்துவினைகள்கூறுெத்து - எ - து - அண்டசஞ்சுவே தச முற்பீசம் சராயசமென்னு மிந்நான்கினிற் ருேற்று மெழுவகை ப் பிறவியிலுண்டாகிய வெண்பத்துநான்கு நூறுயிர யோனிபேதங் களினு மநந்த மூருக்கொண்டு மாறிமாறிச்சுழன் றவைதொலைத்துப் பின்பு நரவடிவுகொண் டிவ்வடி வநந்தங்கோடியிற் சிவபுண்ணியநே ரிட் டச்சிவ புண்ணியத்தாற் சிவத்தொண்டு பூண்டிச் சிவத்தொண்டி னூற் சரிதை - கிரியா யோகங்களைச்செய் திச்சரிதை கிரியாயோகங்க ளா லிருவினையொப்பு மலபரிபாகம்பிறந்து

தவச்சார்பினிற்போர்ச்-கரிதானபக்குவநாலாம் - எ - து-உயிர்ச் சார்பு பொருட்சார்புகளை நீத்துத் தவச்சார்பி னிற்போர்க்குக் கிடை

த்தற்கரிதாகிய மந்தமந்ததரந் தீவிரந்தீவிரதரமெனப் பக்குவநான்குள - எ - று.

இத்திருவெண்பாவானிருவினையொப்புமலபரிபாக முடையோர்க்குப் பக்குவ நால்வகையாயிருக்குமென் றறிவித்தவாறுகாண்க.



மேலைச் சுகம்வெறுத்து மேலொடுகீழ் நற்றுவெறுஞ்
சாலப்பொய் யாயுடலார் தானார்தன் - மூலமா
ரொன்று தெரிவிப்பாரை யெய்துவோ மென்றிரண்டா
யொன்றுபடத் தேட்ட முதிக்கும்.

மேலைச்சுகம்வெறுத்துமேலொடுகீழ்நற்றுவெறுஞ்-சாலப்பொய்யாயுடலார்தானார்தன்-மூலமா ரொன்று -எ-து-மேலாகிய வனிதாதி சுகங்களைவெறுத்து மேலடையும்பதமுத்திகளினும்பூலோகபோகத்தினும் விருப்பற்றவைகளை யெல்லா மிகவும் வெறும் பொய்யாய்க்கண் டிவ்வுடலான் யாது இதனுளிருந்த நானியாவ னெனக்குமுதலாயுள்ளபதி யாதென்று விசாரித் திவை யெம்மா லறியக் கூடுவதில்லை யாகலின்.

தெரிவிப்பாரையெய்துவோமென்றிரண்டா-யொன்றுபடத்தேட்டமுதிக்கும்-எ-து-இவற்றை யறிவிக்கு ஞானசாரியரை யடைவோமென்றுகருதித்தானென்றுஞ்சிவமென்று மிரண்டாய்ப்பகுத்தறிவ்தாயபின்னர்ச் சிவத்தோ டொன்றாக விங்ஙனம்பகுத்தறிவ தொன்றாக்குமந்தஞானசாரிய ரெங்குளரென்று தேடுந் தேட்டம்பிறக்கும்-எ-று.

முன்போன் மெய்யாய்த் தோன்றாமையின் "வெறுஞ்சாலப் பொய்யா" வென்றார்.

இத்திருவெண்பாவாற் பக்குவர்க்கு ஞானசாரியரைத்தேடுந்தேட்டமிங்ஙனம் பிறக்குமென் றறிவித்தவாறு காண்க. (கூ)

---

வேர்க்குங் கண்ணீர்ததும்புங் கம்பிக்கு மெய்ந்நடுங்கும்
வார்த்தை நழுவு மனம்பதறுங் - கார்க்கதமாய்க்
காந்து முரோமாஞ் சலியாகுங் காதலித்தார்க்
கேய்ந்த குணங்கா ணிவை யெட்டும்.

வேர்க்குங்கண்ணீர்ததும்புங்கம்பிக்குமெய்ந்நடுங்கும்-வார்த்தை நழுவுமனம்பதறும் - கார்க்கதமாய்க் - காந்துமுரோமாஞ்சலியாகும் - எ - து - உடற் கண் வேர்வை யரும்புங் கண்களி லாநந்த நீரொழுகு முண்ணடுக்கு முடனடுக்கும் வசனங் குழறு மாசாரியரை யென்றுறக்கடைவோமென்று மனம்விரைந்து நற்மேகம்போ லுள்ளேகுமுறி யுள்மெலாய் வெதும்பு முடன் மயிர்க்குச்செறியும்.

காதலித்தார்க் - கேய்ந்தகுணங்காணிவையெட்டும்- எ - து-ஆகிய விவை யெண்வகையும் ஞானசாரியன்ா விரும்பித் தேடுவோர்க் கியைந்தகுணங்களாம்-எ-று.

இத்திருவெண்பாவான் 'ஞானசாரியனைத் தேடும்போது' பிறக்குங்குணமுமறிவித்தவாறு காண்க.



அரைநோட்டஞ் சிந்தை பெருமூச் சறியாச்
சுரமூட்ட மெல்லாந் துறத்த - லுரைதோற்று
மான மவுனம் விகள மற வைசா
வான விவைபத்து மவத்தை.

அரைநோட்டஞ்சிந்தைபெருமூச்சறியாச்- சுரமூட்டமெல்லாந் துறத்த - லுரைதோற்று - மானம் - எ - து - மனஞ் சகமுகத்தைவிட்டகமுகமாய் 'நிற்றலி னருகியநோக்கமு' மெப்போது ஞானசாரியனை யறிந்தடைவோமென்னுஞ் சிந்தனையு மவனை நினைக்குந் தோறு நெட்டுயிர்ப்பெறிதலு மிந்நினைவு மேலீட்டாற் பிறா லறியக்கூடாத சுரமே லெழுதலு மிதனு னூணுறக்க முதலியவெல்லாந் துறத்தலு மிதனைப் பிறருக் கியாதென்று சொல்கோமென்று சொல்லாதடக்குமானமும்.

மவுனம்விகளமறவைசா - வானவிவைபத்துமவத்தை - எ-து-இம்மானத்தா லொருவரோ டொன்றுஞ் சொல்லாதிருக்கு மவுனமு மிங்ஙனங்கூறும் விசாரமேலீட்டாற் பித்தமேறலுமிந்தவவத்தைகள்படுங் காலத்து மந்தஞானசாரிய னெதிர்ப்படாராயின் மூர்ச்சித்தலுமிறத்தலுமாகிய விவைபத்தும் பக்குவர்க்குத்தோற்று மவத்தைகளாம்-எ-று.

மறவை சாவென்னு மிரண்டவத்தையுந் தீவிரதர பக்குவர்க்கெனக்கொள்க.

இத்திருவெண்பாவான் ஞானசாரிய னெதிர்ப்படாதபோ தவர்க்கிங்ஙன'மவத்தைக டோற்று மென்றறிவித்தவாறுகாண்க. (மக)



தேட்டற் றிரண்ட திருமேனி யுட்புறம்பாய்க்
காட்டு மளவே கனைபுரண்டு - கேட்ட
வதிபக்கு வத்தார்க் ககம்புறமென் றுறு
விதிவைத்த தீக்கையாமெண்.

தேட்டற்றிரண்டதிருமேனியுட்புறம்பாய்க்-காட்டுமளவே-எ-து-தமதுயிருள்ளிருந்துந் தெரியாது தாந்தேடுந் தேட்டமாகிய பேரா

நந்தந்தானே இரண்ட ஞானாசிரியர் தமது திருமேனியை யவர் கண்ணாக்காணும்படி புறம்பாய்க் காட்டுமாத்திரத்திலே.

கரைபுரண்டு - கேட்ட-வதிபக்குவத்தார்க்ககம்புறமென்றுறுவிதிலவத்தீக்கையாமெண்-எ-து-அங்ஙனம் மாறு கரைபுரண்டெழுந்து ந்தவவ்வாசாரியரைப் பலதரம் வலம்வந் தட்டாங்கமுதலிய வணக்கஞ் செய்து பின்னெழுந் தஞ்சலியத்தராய்த் தீன் றூர்ந்தக்கண்ணீரொழுக வநேகதோத்திரம்பண்ணி யெமது சுவாமிகளே யடியேங்கட்கிவ்வுடல் வந்தவாறியா திவற்றுளிருந்தயா மியாவ ரெமக்கு முதலாயுள்ள மெய்ப்பொருள் யாதென்றுகேட்ட வதிபக்குவமுடையோர்க்கு வேதாகமங்களில் விதித்துவைத்தபடி யவர்பண்ணுந்தீக்கை யகத்தீக்கை மூன்று புறத்தீக்கை மூன்றென் றுறுவகையா யிருக்குமென் றறிதி-எ-று.

"தீக்கைகளாறுவன,, திருநோக்கம்-பரிசம்-வாக்கு-பாவனை-நூல்-யோகமென்பன, இவற்றுட்டிருநோக்கம்பாவனை யோகமென்னுமிம் மூன்றுமகத்தீக்கை-பரிசம்-வாக்கு - நூலென்னுமிம்மூன்றும்புறத்தீக்கையெனக்கொள்க, உள்ளென்பதையுயிருள்ளிருந்து மெனக்கொள்க.

இத்திருவெண்பாவான் ஞானாசாரியர் தமக்கெதிரே யெழுந்தருளியபோது பக்குவர்வணங்கி வினவுமுறைமையு மிவர்க் கவர் பண்ணுந்தீக்கை யிவையென்பது மறிவித்தவாறு காண்க. (௰௨)



பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்து மல மாயைக்
கருமத்தை யெல்லாங் கழற்றிச் - சரிதாதி
வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே
போதைசெய்து போக்கிவிடப் போம்.

பரிசித்துஞ் சிந்தித்தும் பார்த்துமலமாயைக் - கருமத்தையெல்லாங்கழற்றி-எ-து-பறவை முட்டையைச் * செட்டையாற் பரிசித்தல்போன் மாணாக்கனைக் கரசரணங்களாற் பரிசித்து மாமைகணாக்கணிருந்தமுட்டையைத் தன்மனத்திற் பாவித்தல்போ லவனைத்தமதருளுருவாய்ப் பாவித்து மீன் றனது சினையைப்பார்த்தல்போ லவனைத் தமது கிருபைப் பார்வையாற்பார்த்து மாணவமல மாயாமலங் கன்மமலமாகிய விவையெல்லா நீக்கிச்

சரிதாதி-வாதனையாம்போத மயக்கத்தைவாக்காலே-போதைசெய்துபோக்கிவிடப்போம்-எ-து-சரிதை-கிரியா-யோகங்களைச்செய்யும்

---

* செட்டையாற் பரிசித்தன் முதலியன வவ்வவ் முட்டைக டத்தம் பருவ மடைதற் கென்றறிக.

வாசனையாகிய தற்போதமயக்கத்தை நீக்குதற் கேதுவாகிய வுபதேச மொழிகளைத் திருவாக்காற் போதித்துநீக்கப்போம்-எ-று.

யோகத்தைப் பாவனையுள்ளடக்கி நாலுவாக்கிலடக்கி யவ்வாறை யுமீண்டு நான்காய்க் கூறினர்.

இத்திருவெண்பாவால் ஞானசாரியர் மாணக்கனுக்குத் தீக்கை யால் மும்மலங்களையுந் தற்போதத்தையு நீக்குமுறைமை யறிவித்த வாறுகாண்க. (ம௩)

---

காலமறை தேசமறை கன்மறைபோற் காண்பாரும்
பாலுண்ணும் புள்ளிப்பிமீன் பக்கிநிக் - காலு
மிருப்பினீர் மின்னலிலே யேற்றபணம் பார்ப்பார்
தருப்பொருளைக் கொள்ளுவார் தாம்.

காலமறை தேசமறை கன்மறைபோற் காண்பாரும்-எ-து-முன் ஞேர் காலத்தோர்பொருளை யறியா திருந்து பின்னேர்காலத்ததனை யறிந்துகொள்ளுங் காலமறைபோலு மோர்தேசத் தறியாதிருந்தபொ ருளை யோர்தேசத்தறிந்துகொள்ளுந் தேசமறைபோலு முன்மணி யென் றறியாதிருந்தும் பின்னதினோட்ட மறிவாரோடும் பழகிமணி யென் றறிந்துகொள்ளுங் கன்மறைபோலு மாசாரிய ரநுக்கிரகித்த பொருளை யறிந்துகொள்ளுவாருமுள ரென்றவாறு.

பாலுண்ணும்புள்ளிப்பிமீன்பக்கிநிக் காலு- மிருப்பினீர்மின்னலிலே யேற்றபணம்பார்ப்பார் - தருப்பொருளைக் கொள்ளுவார்தாம்-எ-து- பாலுண்ணு மன்னப்புட்போலுஞ் சிப்பிபோலு மீனுண்ணுங் கொக் குப்போலு மூலையிலெழக்காய்ந்த விரும்பினீர்போலுமின்னலொளி யிலேற்கப்பட்ட பணநோட்ட மறிவார்போலு மவ ரருளிச்செய்த பொருளை யங்ஙன மேற்றுக்கொள்ளும் பக்குவருமுளர்-எ-று.

ஆசாரியரநுக்கிரகித்தபொருளக்காலத்துத்தோற்றுதிருந்து சின்னு ட்குப்பின்னர் தம்முள்ளே தெரிந்துகோடலாற்காலமறையென்று ம வர்கொடுத்தநூலிற் றெரியாதிருந் தந்நூற் பொருளைக்கூறு மற்றோர் நூலிற்றெரிந்துகோடலாற்றேச மறையென்றுந்தாங்கற்றநூல்கற்றோ ரோடும் பழகித்தெரிந்துகோடலாற்கன்மறைபோலென்றுங்கூறினர்.

அன்னம்நீரைநீக்கிப் பாலுண்டாற்போற் சரிதாதிகளைநீக்கி ஞா னமொழியைக்கோடலாற் பாலுண்ணும்புள்ளென்றுஞ்-சிப்பி- சோதி யுண்டிக் கங்காற்றிருந்து துளிவிழுந்தமாத்திரத்தில் வாய்மூடிக்கொள் ளுதல்போ லெப்போது. கூறுவாரோன் றிதயமலர்ந்துகேட் டங்ங னங் கேட்டபொருளை யுள்ளடக்கிப் பயன்படுத்திக்கோடலா னிப்பி

யென்றுங் கொக்குநுழைக்கண் ணசைவறநின்று மீன்வந்துழிக்க வருதல்போற், சித்திரப்பாவைபோ லசைவறவிருந்து பயன்றருமொழி வருந்தோறு மேற்றுக்கோடலான் "மீன்பக்கி,, யென்றும்இரும்புதானேற்கு நீர்மாத்திரமெடுத்துக்கொண் டதனைமீளவிடா திருத்தல்போலத் தமக்குவேண்டிய வுபதேசமொழிகளை யேற்றுக்கொண்டு மீளவிடாதிருத்தலா னிரும்பினீரென்றுங் கட்கூர்மையால்விரைந்து மின்னலொளியிற் பணம்பார்ப்பதுபோ லறிவுகூர்மையா லதிசீக்கிரத்திற்கூறிய மொழிகளி னருத்தமெல்லா மறிந்துகோடலின்.

"மின்னலிலே யேற்றபணம்பார்ப்பா,, ரென்றுங்கூறினர்.

காலமறையாதி மூன்றற்குமின்ன காலத் தின்னபொரு ளுளதென்று மின்னதேசத்தி னின்னபொரு ளுளதென்று மின்னமலைக்கப்பா லின்னபொரு ளுளதென்றுந் தமகத்தனுயுள்ளவன்கூற வம்மொழியை புண்மையாகக் காண்பரர்போற் காண்பாருமுளரென்றுமாம்.'

இத்திருவெண்பாவா லாசாரியருபதேசித்தபொருள்களை மாணாக்க ரிம்முறைமைகளா யேற்றுக்கொள்வாரென் றறிவித்தவாறுகாண்க.



பதியிறக்கக் கேட்டிறந்த பத்தினிபோற் பால்போ
லதிமோகி தீப்புகல்போ லன்பாம் - விதவையர்போற்
கன்னன் கடையிற் கொடைபோலக் காணலாந்
தன்னையிழவா திழத்த ருன்.

பதியிறக்கக்கேட்டிறந்த பத்தினிபோற்பால்போ-லதிமோகிதீப்புகல்போல்-எ-று - பதியிறந்தானென்று பிறர்கூறக்கேட்ட வக்கணத்திற்றானுமிறந்த பதிவிரதைபோலுங் கடைகாலிருந்துகவிழ்ந்த பால்போலுந் தனது புருடன்மே லதிமோகியாயிருந்தாளா ளவனிறந்தகாலத் தவனோடு மக்கினிப்பிரவேச மாதல்போலும்.

அன்பாம்-விதவையர்போற்- கன்னன்கடையிற்கொடைபோலக்காணலாந்-தன்னையிழவாதிழத்தருன்-எ-து- புருடனிறந்துபோயபின்னரு முன்ன ரன்பு விடாதிருந்த விதவையர்போலு மறுமைகுறித்திட்டிய புண்ணியமெல்லாமோரந்தணனுக்குக் கன்னன்றன் றேகாந்தியத்திற்கொடுத்த கொடைபோலு மாசாரிய ருபதேசித்த மொழிகளையுட்கொண்ட பக்குவர்தம்மை யொழியாதொழித்தற்குமுறைமையைக் காணப்படும்-எ-று.

கேட்டவக்கணத்திறந்தாளைப்போலுபதேச மொழியைக்கேட்டவக்கணத்திற்போதமிறத்தலிற்"பதியிறக்கக்கேட்டிறந்த பத்தினிபோலென்றும்,,பாலெல்லாங் கவிழ்ந்ததாயினு மதனுள்வாசனை யிருத்தல்

போற் போதமிறந்ததாயினு மப்போதவர்சனை யிருத்தலிற் "பால் போ,, லென்றுஞ்சின்னூழிகை சென்றபின்னர் தீப்புகல்போற் சின்னு ளிற்போத மிறத்தலி னதிமோகி தீப்புகல்போலென்றும் புருடனோ டிறவாதிருந்து தேகபோகங்களை வெறுத்திருத்தல்போ லியானென தென்றெழும் போதவெழுச்சியை யடக்கியிருத்தலின் விதவையர் போலென்று மொன்றையுங்குறியாது கொடுத்தல்போலொன்றையுங் கருதாது எல்லாவற்றையும் விடுத்தலிற் "கன்னன்கடையிற் கொடை போ,, லென்றுங் கூறினர்.

இத்திருவெண்பாவா லாசாரிய ருபதேசித்தபொருளை யுட்கொண்டபக்குவர் தற்போதமொழிக்கு முறைமையை இங்ஙனமென் றறிவித்தவாறுகாண்க. (மரு)



மாற்றுப் பலவகையாம் பொன்னோடை வைப்பான்போற்
றேற்றிச் சிவாகமத்தாற் செப்புகினு - மேற்ற
பரிபாகத் தாலே பழுப்பாம் பலவு
மொரு பாகமன்றென் றுணர்.

மாற்றுப்பலவகையாம்பொன்னோடைவைப்பான்போற்-றேற்றிச் சிவாகமத்தாற்செப்புகினும் - எ - து - பலவகையாய்த்தோற்று மாற்றுப்பொன்களைப் பத்துமாற்று மாக்குதற்பொருட்டுப் புடம்போடு மொருவனைப்போலும் பக்குவர் நால்வர்க்கு மோர்படித்தாற் சிவாகமத்தாற் றெளிவித்துக்கூறினும்.

ஏற்ற- பரிபாகத்தாலேபழுப்பாம்பலவு - மொருபாகமன்றென் றுணர் - எ - து - மாற்றேற்றமாயிருந்தபொன் பரிபாகத்தான் முன் பழுப்பாகுமன்றிக் குறைந்த மாற்றுயர்ந்தமாற்றுக்களாகிய பலபொன்களு மொருபாகமாப் பழுப்பாகுவ தன்றதுபோ லுயர்ந்தபக்குவனுக்கு முன்னர் ஞானமேறுமன் றியெல்லார்க்குமோர்பிரகாரமாய் ஞானமேறுதென்றறிதி-எ-று.

தாழ்ந்தமாற்றப் பொன்களைப் புடம்போடுந்தோறு மிடைகுறைந்து மாற்றுயர்தல்போலத் தாழ்ந்தபக்குவர்க்குச் சிவாகமத்திற்கூறு நான்குவுபாய்புத்திகளை யுபதேசிக்குந்தோறும் பாசங்குறைந்துஞானமேறுமென்பதுங் காண்க.

இத்திருவெண்பாவா லாசாரிய ருபதேசிக்குமொழி யோர்பிரகாரமாயினும்பக்குவவுயர்ச்சிதாழ்ச்சிப்படி ஞானமேறுவதன்றியோர்படித்தாய் ஞானமேறுதென் றறிவித்தவாறுகாண்க. (மசு)

கல்லையுருவாக்குங் கழற்றியிலே யில்வாழ்க்கைச்
சில்லநீர்போலத் தெளிந்துவருந் - தொல்லுலகங்
கான்றசோ றாகுங் கதலித்தண் டைக்கனலி
யூன்றல் போன் ஞான முதிக்கும்.

கல்லையுருவாக்குங்கழற்றியிலேயில்வாழ்க்கைச்- சில்லநீர்போலத் தெளிந்துவரும் - எ - து - கல்லினையோர் பாவைவடிவாக்கு முறமை போ லருள்வடிவாக்குதற்பொருட்டு மந்தபக்குவர்க் குபதேசமொழி களாற் பாசத்தை நீக்குமிடத்துத் தேறிட்டநீர் தெளிந்து வருதல்போ லவர்க்கில்வாழ்க்கை யிஃதாரியாமாறொன்று தெளிவுபிறந்துவரும்.

தொல்லுலகங்-கான்றசோறாகுங்கதலித்தண்டைக்கனலி-யூன்றல் போன்ஞானமுதிக்கும் - எ - து- பழையதாகவரு மிப்பிரபஞ்சங் கக்கினசோறுபோ லருவருப்பாகத்தோற்றும் வாழைத்தண்டை யக்கினி யிற்சுடுதல்போ லவர்க்கு ஞானந்தோன்றும்-எ-து.

பிரிந்தசேறுந் தெளிந்தநீருங் கலந்துவருதல்போலில் வாழ்க்கை யிற் பற்றும் பற்றின்மையுங் கலந்துவருதலிற் றெளிந்துவருமென்றார் வாழைத்தண்டைப் பன்னாட் பல்காட்டத்தாற் சுடல்போ லிவர்க்குப் பன்னாளிற் பற்பல வுபதேசமொழிகளான் ஞான மேறுமென்பதறிக.

இரும்பை வடிவாக்கு மியல்பினர்க்குப் பச்சை
மாஞ்சுடுமா போன்ஞானம் வாய்க்கு - மிருந்தவிட
நீர்த்தா மரையிலைபோ னீங்கு முலகமெலாம்
பேய்த்தேர் போற்றோன்றும் பிரிந்து.

இரும்பைவடிவாக்குமியல்பினர்க்குப்பச்சை-மாஞ்சுடுமாபோ ன்ஞானம்வாய்க்கும்-எ-து-இரும்பினையோர்பாவைவடிவாக்கு முறை மைபோற் பாசத்தைநீக்கி யருள்வடிவாக்கப்பட்ட மந்ததரபக்குவர்க் குப் பச்சைமரத்தை யக்கினியாற் சுடுமாறுபோன் ஞானம்பலிக்கும்.

இருந்தவிட-நீர்த்தாமரையிலைபோனீங்குமுலகமெலாம்-பேய்த் தேர்போற்றோன்றும்பிரிந்து - எ - து - தாமிருந்தவில்வாழ்க்கை தாம ரையிலை நீர்போற் கூடவிருந்து மதிற் கூடாதுநீங்குவர் பிரபஞ்சமெ ல்லா மவர்க்கன்னியமாகக் கானற்சலம்போற் றோன்றும்-எ-து.

சிலகாட்டத்தாற் பச்சைமரஞ் சுடல்போற் சிலவுபதேசமொழி களா லிவர்க்கு ஞானமேறுமென்பதறிக. (௰அ)

மரப்பாவை போலுடம்பின் வர்த்தனையை மாற்றிக்
கரித்திகைக் கவர்வதுவாங் காமித் - திருத்த

மனைபொதுவின் மண்டபமாம் வானோர்கள் வாழ்வுங்
கனவெனவே தோன்றியிடுங் காண்.

மரப்பாவைபோலுடம்பின்வாதனையைமாற்றிக் - கரித்திடுங்கவர் வருவாம் - எ - று - மரத்தினையோர் பாவைவடிவாக்குதல்போ லருள்வடிவாக்குதற்பொருட்டுத் திவிரபக்குவர்க் குடம்பின்வாதனையாய பொறிகரணமுதலியவற்றைநீக்கி ஞானத்தையுணர்த்தக்கரித்திடேற்றுக்கொளல்போல் ஞானமுண்டாம்.

காயித் - திருந்த மனைபொதுவின் மண்டபமாம் வானோர்கள் வாழ்வுங் - கனவெனவேதோன்றியிடுங்காண் - எ - று - தாலிசசித்திருந்த மனைவாழ்க்கை நாலுபேருங் கூடியிருக்கும் பொதுமண்டபம் போலாகுங்கேள்வியாலறியப்பட்ட விந்திராதிதேவர்கள் செல்வமுஞ் சொற்பனம்போற்றோற்றும்-எ-று.

உடம்பின் வாதனையைமாற்றி யென்றமையா னிவர்க்குப் போக வாதனை மாற்றவேண்டுவ தின்றென்பதாயிற்று. வானோர்கள்வாழ்வுங் கனவெனவே தோன்று மென்றமையா னரர்வாழ்வு சுழுத்திக்காட்சி போற்றோன்றுமென்பதாயிற்று.

இருந்த வென்பது இருத்த வென்று வலித்தல் விகாரமாய் வந்தது. ()



வெண்ணெயுறு பாவையர்க்கு ஞானம் விளக்கின்மே
லண்ணின்மயிர் பஞ்சாகு மாசையில்லை - கண்ணீ
ரொழுகும் பொழுதறியா துள்ளுருகி விம்மி
யழுது சிரிப்பார் புளகமாம்.

வெண்ணெயுறுபாவையர்க்குஞானம்விளக்கின்மே - லண்ணின்மயிர்பஞ்சாகுமாசையில்லை -எ-து. வெண்ணெயினைப்பொருந்தாநின்றவோர்பாவையாக்குதல்போ லருள்வடிவாக்கப்பட்ட தீவிரதரபக்குவர்க்கு விளக்கின்கொழுந்திற்பிடித்தவண்ணலின் மயிர்போலும்பன்னியபஞ்சுபோலும் பாசநீங்கிஞானமுண்டா மவர்க்கொன்றினு மாசையின்று

கண்ணீ - ரொழுகும்பொழுதறியா துள்ளுருகிவிம்மி - யழுது சிரிப்பார்புளகமாம் - எ - று - ஆனந்தக் கண்ணீரோடும்போதுந் தாமறியா துள்ளமெல்லா நெக்குநெக்குருகி விம்மிவிம்மி யழுதுசிரிப் பாரவர்க் குடம்பெல்லாம் ரோமாஞ்சலியாம்-எ-று.

அழுவது முன்பட்ட பிறவித்துன்பங்களைநோக்கி. சிரிப்பது துன்பங்களையெல்லா மொருகணத்தில் மாற்றிய வாசாரியர்தயத்தை நோக்கி யெனக்கொள்க.

பிரபஞ்சத்தின்மே லிவ்வாழ்க்கை மேனுடம்பின் மேலாகியமூன்றிடத்து மவர்க்காசை யின்மையாற் பொதுப்பட வாசையில்லையென்றார்.

கல்லையென்னுந் திருவெண்பாமுதல் இந்நான்கு திருவெண்பாவானு மந்தமுதலிய நான்கு பக்குவங்களையு முடையோரை ஞானாசாரியர் பக்குவப்படுத்தி யவர்க்கு ஞானமேற்று முறைமை யின்னணமென்றறிவித்தவா றுகாண்க. (௨௰)



இங்ஙனங்கூறும் பக்குவர்க்கேயன்றி மற்றையர்க்கு ஞானம்போதித்தா லெருதோவெனின் மேற்கூறுகின்றார்.

புளிசேர் பழமானாற் போற்புறம்போ டுள்ளின்
முளைதானும் வேறாய் முளைபோய்த் - துளைமாண்ட
வூசிக்குப் பாச மொழிந்ததுபோ லொப்பாருக்
காசைக் கேடானந்த மாம்.

புளிசேர்பழமானாற்போற்புறம்போடுள்ளின்- முளைதானும்வேறாய்முளைபோய் - எ - து - முன்னர்ப் பிஞ்சாயிருந்தபோதோடும் வித்தும் பிரிபடா தொன்றாய்ச்சேர்ந்த புளியம்வோடும் வித்தும்பிரிபடும் பழமானாற்போல் முன்ன ரறிவுமுதிராமையிற் பிரிபடாதிருந்த மும்மலங்களு மிப்போ தவ்வறிவு முதிர்ந்தமையான் மாயை கன்மமாகிய புறம்போ டியிருள்ளிருந்த முளையாகியவாணவமுந் தமக்கன்னியமாய் நீங்கி யிவற்று னேறுவதாய வாகாமிய முளையும்போய்.

துளைமாண்ட - வூசிக்குப்பாச மொழிந்ததுபோ லொப்பாருக்-காசைக்கேடானந்தமாம்-எ-து-காதற்றவூசிக்குச்சரடொழிந்ததுபோற் றற்போதத்தோ டெல்லாப்பாசங்களையு மிங்ஙனமொழிந்தோர்க்கப்போதத்தாற் றோற்றுமாசை நாசமே சிவாநந்தப்பேறும்-எ-று.

மாயையுங் கன்மமும் புறம்பாய்க் காணப்படுதலிற் புறமென்று மவை நீங்கியபோதுந் தானீங்கா துயிருள்ளிருத்தலி னாணவத்தை யுள்ளின் முளையென்று மாகாமியம் பிறவிக்கேதுவாகலி னிதனையு "முளை"யென்றுங்கூறினார்.

காதமரு முற்றொடர்ந்த பாச மகன்றற்ற போதொழிந்தாற்போற் போதமரு முற்றொடர்ந்த பாச மகன்றற்றபோ தொழிதனி "னூசிக்குப் பாசமொழிந்தாற்போ லொப்பாருக்"கென்றார்.

தேகபோகங்களாகிய துன்பத்தை யின்பம்போன் மாறுபாடாய்த் தோற்றுவித் துயிர்க்காசை யுண்டாக்குவதாணவ மதனதுவாசனை பேர்ந்தொழியுமளவு மிருத்தலி னதன்காரியமாகிய வாசைகெடவே

காரணமாகிய வவ்வாணவ வாசனையு மவ்வாசனையாலெழும் போதமு ங்கெடுமாகலி "னாசைக்கேடானந்தமா,, மென்றார்.

இத்திருவெண்பாவாற் பக்குவமுடையோர்க்கே ஞானம்போதி த்தாற் பாசநீங்கி யாநந்தப்பேறுளவாமன்றி மற்றையர்க் கப்பயனமு ண்டாகாதென் றறிவித்தவாறு காண்க. (௨௧)



அருண னுதயம்போற் றம்வீழ்வா ராசை
பெருகுவபோற் கப்பற் பிழைத்துக் - கரைகாணு
மாபோற் சிறையு மரும்பிணியு நீங்கியிடு
மாபோ லதிசயம்போ லாம்.

அருணனுதயம்போற்றம்வீழ்வாராசை - பெருகுவபோற்கப் பற்பிழைத்துக்-கரைகாணு-மாபோல்-எ-து-மழையிருளின்னெறி தெரி யாதுழல்வோர்க்குச்சூரியனுதயமானதுபோலுந் தம்மால்விரும்பப் பட்டமாதர் மேலாசையுள்ளமுமறையமேன்மேல் வளர்தல்போலுந் திசைதவறிய கப்பல் தப்பித்துறைசேர்க் காணுமாறுபோலுங்.

சிறையுமரும்பிணியுநீங்கியிடு- மாபோலதிசயம்போலாம்-எ-து- விடாச்சிறை யிருந்தோர்க்கச்சிறைநீங்கியவாறுபோலுமாறாநோயர்க் கந்நோய்நீங்கிய வாறுபோலு மோர்காலமுங்காணாத வதிசயங்கண்ட துபோலுந் திருவருண் ஞானம் பேற்றோர்க்குத் தோற்றும்-எ-று.

முன்னராணவவிருளாற் பொய்யிது மெய்யிதுவென்றொன்றுந் தோன்றா திருந்தோர்க்கிப்போ தருளொளியா லெல்லாஞ் சிவமாய்த் தோற்றலி "னருணனுதயம்போ,, லென்று மவ்வருண் ஞானத்தாற் றோன்று மாநந்தத்திற் றமேன்மேல் மறைதலிற் "றம்வீழ்வாராசை பெருகுவபோ,,லென்று மிந்தஞானாநந்தத்தை யென்றைக்கடைவோ மென் றிருந்த தமக்கிப்போது கிடைத்தலிற் கப்பல் "கரைகாணுமா போ, லென்றுமுன்னுடலா யிருந்ததாமிப்போ ததற்குட்புறனாய்விள ங்குஞ்சிவமாயிருத்தலிற் சிறைநீங்குமாபோலென்று முன்னிருந்தபிற வித்துன்பமிப்போதுநீங்கலிற்பிணிநீங்குமாபோலென்றுமோர்காலங் களினுங்கண்டறியாதகாட்சியாகலி 'னதிசயம்போ, லென்றுங்கூறினார்

இத்திருவெண்பாவாற்பக்குவர்க்குப் பாசநீங்கிஞானோதயமான போதுதோற்றுமதிசயகுண மிவையென்றறிவித்தவாறுகாண்க. (௨௨)



பாசநீங்கி ஞானந்தோன்றினவர்க்கிக் குணங்க டோற்றுமவெ ன்னையெனின் மேற் கூறுகின்றார்.

உடல்பொறிக ளுட்கரணந் தோடுகுணம் வாயு
விடவிடவே நாதாந்தவீடு - நடுநிலையாய்த்
தன்னொழிவும் பேரின்ப சாகரமுஞ் சந்தழிவா
றொன்னபடார் கண்டறியாரோ.

உடல்பொறிக ளுட்கரணந் தோடுகுணம் வாயு- விடவிடவேநாதாந்தவீடும் - எ-து-உடலும்பொறி கரணங்களு மந்தக் கரணங்களு மவற்றுடனே குணங்களும் பிராண வாயுவுமாகிய விவ் வைந்தையு மொன்றொன்றாயறிந்துநீங்கநீங்கவேவருநாததத்துவத்தின்முடிவாகிய விடுதலையையும்.

நடுநிலையாய்த்- தன்னொழிவும்பேரின்பசாகரமுஞ்சந்தழிவா-சொன்னபடார்கண்டறியாரோ-எ-து-அவ்விடுதலைக்குஞ்சுகாதீதத்திற்குநடுநிலையாய்த்தோன்றுந்தற்றெரிசனந் திருவருட்டெரிசனம் பரைதெரிசனம் பரையோகம் பரையோக நீக்கத்தையு மவற்றின்மேற்றற்போதவொழிவையு மதன்மேலாநந்தசாகரத்தையு மநுபவமாகக்கண் டதன்மேற் சிவத்தோடிரண்டற் றிருக்கின்றசொன்ன வாச்சரியப்படார் முன்னோர் காலங்களினு மவற்றைக்கண் டறியாதார்-எ-று.

உடலத்தையுள்ளபடி யறிந்துநீங்கவே யஞ்சபூதகாரியமாகியபுறக்கருவிகளிருபத்தைந்து மீடணைத்திரையங்களுந் தசநாடிகளுநீங்கும்ஞானேந்திரியங்களை யுள்ளபடியறிந்துநீங்கவே யவற்றானபகரிக்கப்பட்டசத்தாதிகளைந்து மவ்விந்திரியங்களவ்விடயங்களை யபகரித்தபோது தொழிற்படுங்கன்மேந்திரியங்களைந்தும் விடயீகரிக்கப்பட்ட வசனாதிகளைந்து மிவ்விருவகை யிந்திரியங்கட்கு மிடமாய்நின்ற பூதங்களைந்து நீங்கு மந்தக்கரணங்களை யுள்ளபடியறிந்து நீங்கவே சூக்குமையாதிவாக்குநான்குநீங்குமுக்குணங்களையுள்ளபடியறிந்துநீங்கவேயிம்முக்குணகாரமான மூலப்பிரகிருதி நீங்குமூலப்பிரகிருதி நீங்கவே யிதாகிதங்களாய்வருங் கன்மஞ்சீவனமின்றி நிற்குமாகலின் அக்கன்மத்தைக்கூட்டநின்றகாலமுமதனைவரைந்துநிற்கின்ற நியதியுநீங்குமிவை நீங்கவே யான்மாவிற்குப் புசிப்பின்மையா னிச்சா ஞானக்கிரியை சீவியாதாகலிற் கிரியையை யெழுப்புங்கலையு மறிவையெழுப்பும் வித்தையு மாசையை யெழுப்புமிராகமு மாசைப்பட்ட பதார்த்தத்தின் மயக்கும் புருடனும் நீங்குமிங்ஙனங் கலாதிகணீங்கவே காலத்தையு நியதியையுங் கலையையும் பிரேரித்த சத்தி தத்துவமும் வித்தையைப் பிரேரித்த சுத்தவித்தையு மிராகத்தைப் பிரேரித்த வீச்சுரதத்துவமும் புருடனைப் பிரேரித்த சிவதத்துவமு மூலப்பிரகிருதியைப் பிரேரித்த சாதாக்கிய தத்துவமுநீங்கு மிங்ஙனஞ் சுத்ததத்துவங்கணீங்கவே பிராணவாயுவு மாத்திரமியங்கு மிப்பிராணவாயுவையுள்ள படியறிந்துநீங்

ில் தசவாயுக்களு மசபை நாதமு நீக்குமிம்முறையே தத்துவந்தொ ன்னூற்ற்று நீங்குமாகலின் "விடவிடவே நாதாந்தவீடும்,, என்றார்.

நடுநிலையா.மென்றதனாலும் பேரின்பசாகரமு மென்றதனாலுந் நற்றெரிசனமுதலிய வருவிக்கப்பட்டது.

கண்டத்தானத்தி லந்தக்கரணங்களோடுங் கூடி மத்திமைவாக்கை நன்று யறியப்படுதலின் மத்திமை வாககுக்காரணமாகிய சூக்குமை யைசந்தியு மத்திமையாற் காரியப்பட்ட வைகரியு மந்தக்கரணங்களை நீங்கவே நீங்குமாகலி னந்தக்கரணங்களை நீங்கவே சூக்குமையாதி வா க்குகணீங்குமென்று சொல்லப்பட்டது, பிராணவாயு வியக்கத்தை ய டக்கத்தொடங்கி னடங்காது மேன்மே லியங்குமாகலினின் றவ்வியு க்கத்தைத் தன்றாலறியப்படுதலானுந் தன்னை, யஃதறியாமையானு ம தனைச் சடமென்று மதனையறிந்த வறிவு தானென்றுந் தனக்கறிவித்த து திருவருளென்று மறிந்து தான்திருவரு ளாட்படத்தினிற்கவே யதுநீ ங்குமெனக்கொள்க. கண்டறியாரோ வென்றதனு லிப்போது கண்டெ ன்பது வருவிக்கப்பட்டது.

உடல்பொறிகரணமுதலிய கருவிகளை உள்ளபடி யறிந்து நீங்கு தலை "ஐம்புலநாலா மந்தக்கரண புக்குண மிருவுளியொருங்கிய வா ஞேரொத்த நின்றனையென்னுந்,, திருவெழுகூற் றிருக்கையாற் காண்க.

இத்திருவெண்பாவாய் மூன்றோர்காலங்களினுங் கண்டறியாராகலி னிப்போ தக்குணங்க ளவர்க்குத் தோற்றுமென்றறிவித்தவாறுகாண்க.



இங்ஙனம் ஞானத்தாற் பாசத்தை நீங்கிப் பதியையடைந்தோ ரை மீட்டப் பாசமயக்காதோ வெனின் மேற் கூறுகின்றார்:

அறிவு மறிவாரு மறியா மலையு
மறியிற் றடையே தவர்க்குப் - பிறிவரோ
வாகாயஞ் சூழொளி லஞ்சி யடிக்களைக்குப்
போகாது போலாம் பொருள்.

அறிவுமறிவாருமறியாமலையு-மறியிற்றடையேதவர்க்குப் - பிறிவ ரோ - எ - து - உயிர்க்குயிரா யுள்ளும் புறம்பு மேறுமின்றி வேறும் விட்டுநீங்கா திருந் தறிவிக்கு மறிவாகிய பதியையுந் தந்தந்தரமா யொவ்வொன்றையுமறியா தப்பதி யறிவிக்க வறிவதாகிய பசுவையு மிங்ஙன மறியும் பசுவிற்குத் தன்னையுந் தனக்கறிவிக்கும் பதியையு மறியவொ ட்டாது மறைத்திருந்த வறியாமையாகிய பாசத்தையு மப்பதியாலு ள்ளபடி யறிபினவர்க்கு மூன்போலுந் தடையா தேதன்றி யப்பதியை

யோர்கணமேனும் பிரிவரோ வானு லப்பதியை யவர்பிரியாது நாடிக்கொண்டு நிற்பரோவெனின்.

ஆகாயஞ்சூழைகொளிலஞ்சியடுக்களைக்குட் - போகாதுபோலாம்பொருள் - எ - து - எல்லாப்பொருள்கட்கு மிடங்கொடுத்திருந்த வாகாயந்தானே யப்பொருள்களைக் கொள்ளைகொளும்மெனி னதற்கஞ்சி யடுக்களை விட்டிற்புகுந் தொளிக்கக்கூடாததும்போ லவ்வாகாய முதலிய வெப்பொருள்கட்கு மாதாரமாகி யிருந்துள்ள மெய்ப்பொருடனினை யறிந்தோர்க்கிடம் வேறின்மையா னவரை விழுங்கிக்கொள்வதாம்-எ-று.

பாசத்தையறியும்போது முப்பத்தாறுகருவிகளையு மிஃதிதென்றறிந்துசென் றவற்றின் முடிவினின்ற தன்னு லவையறியப்படலானுந் தன்னை யவையறியாமை யானுந் தனக்கன்னியமென்றுஞ் சடமென்று மறியப்படுந் தன்னையறியும்போ தக்கருவிகளை யெல்லாமறிந் தவற்றை நீங்கி நின்ற வறிவு தானென்றுந் திருவருளாலன்றித் தற்சுதந்தரமா யறிவதிலனென்றுந் தான் கருவிகளோடு கூடியபோ தவை மயமாயு மவற்றைநீங்கித் திருவருளோடு கூடியபோ தென்மயமாயு மிருத்தலிற் முன்பாசவறிவுமன்று பதியறிவு மன்றென்றறியப்படும் பதியையறியும்போது பெத்தமுத்தி காலத்தினுந் தன்னைவிட்டு நீங்கா திருப்பதென்றுந் தனக்கறிவிப்பதென்றும் பாசத்தைப் பிரேரகம் பண்ணுவதென்றும் ஞானானந்தச் சொரூபமென்று மறியப்படு மிங்ஙனநடுநின் றறிந்த பசுபாசத்தை நீங்கிப் பரிபூரணமாகிய பதியையடைந்தப்பூரணமெல்லாந் தானுயிருத்தலி "னறியிற்றடைபேதவர்க்" கென்றும்பிரிதற்கேதுவாய போதமிறத்தலிற் "பிரிவரோ" வென்று மிங்ஙனம் பிரியாதிருந்தோரை மெய்ப்பொரு டன்மயமாய்க்கோடலி "னடுக்களைக்குட்போகாதுபோலாம்பொரு" ளென்றுங்கூறினர். (௨௪)



பொய்போல மெய்யு மறியப் பெருப்போக
மைசயோகர்க் கொன்றேநுஞ் சார்பில்லை - துய்ய
விழிக்கு ஞதித்த விரிகதிர்போற் றம்மை
யழித்ததுவேயாச்சரியமாம்.

பொய்போலமெய்யு மறியப்பெருப்போக - மைசயோகர்க்கொன்றேநுஞ்சார்பில்லை -எ - து - முன்னர்ப்பொய்யாகிய வுடலத்தோடு கூடியபோ தவ்வுடலமென்றுந் தாமென்றும் பிரித்தறியாத தன்மையா யிருந்ததுபோலிப்போது மெய்ப்பொருளையுந் தம்மையும்

பிரிக்கப்பெறு மிம்மெய்ப்பொரு ளாநந்தத்தோடுங் கூடிக் கலந்திருந்தோர்க் கோர்பொருளோடுஞ் சார்பில்லை யஃதெங்ஙனமெனின்.

துய்ய - விழிக்குளுதித்தவிரிகதிர்போற்றம்மை - யழித்ததுவே யாச்சர்யமாம் - எ - து - எல்லாவற்றையு மெதிரிட்டறியு மாசற்ற விழிக்குள்ளே முன்போலெதிரிடவொட்டா துதித்த சூரியனைப்போன் ஞாதுருஞான ஞேயமென்னுந் திரிபொருளையு மெதிரிட்டறிந்த வான்மபோதத்தை யங்ஙன மெதிரிடவொட்டாதிதனுட் சிவசூரியனுதித் தப்போதத்தையழித்துத் தானாயிருந்ததுவே மிகவுமதிசயமாம்-எ-று.

கதிர்புறம் புதித்தபோது கண்ட கட்குள் ளுதித்தபோது காண்டற்கிட மின்மைபோற் போதந்தாற் புறம்புபோற் றோற்றிய ஞானசூரிய னிப்போதவொளியைத் தன்னொளியான் மறைத்துயிர்க்குளுதித்தமையா னிதற்குமெதிரிடற்கிடமின்றென்பதறிக. (௨௫)

தன்னை யிழப்பார்க்கென்ன சார்வூழி சங்கார
மென்னிலொளித் தெங்கே யிருக்கலா - முன்னே
புலிபார்க்கப் போனகதை போலிமையா நாட்டஞ்
சலியாமன் மூடுந் தனை.

தன்னையிழப் பார்க்கென்ன சார்வூழிசங்கார - மென்னிலொளித் தெங்கேயிருக்கலாம் - எ - து - தற்போத மொழிப்பார்க்கு மற்றைச் சார்புக ளென்னையுள்ளன. முப்பத்தாறு தத்துவமென்பது மிதனைக் கடந்த வானந்தமென்பது மின்றி யானந்தாதீதராயிருத்தலி னவர்க் கிதுவே சர்வசங்கார காலமென்று மெய்ஞ்ஞானிகள் சொல்லுவாரொணி னவர்க்கெவ்விடத் தொளித்திருக்கலாகும் ஆனாற் சிவத்தை யருளாலறிந் தடையவேண்டுமென்ப தென்னையெனின்.

முன்னே-புலிபார்க்கப்போனகதைபோலிமையாநாட்டஞ்-சலியாமன்மூடுந்தனை-எ-து-முன்னே புலியினைப்பார்த் தறியச்சென்றோர்புருட னஃதிருந்த முழைக்கெதிர்ப்படுந் தறுவாயிலவன் றேகப்பதைப்பற வதுபிடித்துக்கொண்டதென்று கூறுங்கதைபோற்சிவத்தையறியவேண்டுமென்று முப்பத்தாறுகருவிகளையுங் கடந்துசென் றருணோர்நிற்குந்தறுவாயி லிவன்றன்னை யிமையா நாட்டமாகியவச்சிவந் தானேயிவன துபோதப் பதைப்பறும்படி மூடிக்கொள்ளும்-எ-று.

இமைத்தல் விழித்தலின்றிய விமையா நாட்டம்போன் மறப்பு நினைப்பின்றிய பேரறிவாகலிற் சிவத்தை "யிமையாநாட்ட" மென்றார், புலிமுழைவாய் நின்றோனா யதுமூடிக்கொளல்போ லருணோர் நின்றோனைச் சிவமூடிக்கோடலா னங்ஙன முவமைகூறினார்.

அறிவு மறிவாறு மென்னுந் திருவெண்பா முதலிவை மூன்று திருவெண்பாவானுந் தற்போதமிழந்த ஞானிகள் சிவமயமா யிருப்பாரேயன்றி யவரைமீட்டும் பாசமயக்காதென் றறிவித்தவாறு காண்க. ()



அறிந்ததுவாய் நின்ற வறியாமை கண்டு
மறந்தறியார் வாழாது வாழ்ந்த - வெறும்பாழ்
விளைந்தசுகஞ் சொல்லில் வெளியைப்படியா
லளந்தறியு மாபோல வாம்.

அறிந்ததுவாய்நின்றவறியாமைகண்டு - மறந்தறியார்வாழாதுவாழ்ந்த-எ-து-முப்பத்தாறு கருவிகளையுநீங்கி யவற்றின்முடிவினின்ற தம்மையருளாலறிந் தவ் வருட்டெரிசனம் பரைதெரிசன மானந்தப்பேரூகிய விவற்றையுங் கடந்து சிவமயமாய் முன்னீங்கிநின்ற கருவிகளை மீட்டுங்கண் டச்சிவத்தை மறந்தும் பின்னு மிக்கருவிகளை நீக்கி யச்சிவத்தையறியாதா ரிப்பிரபஞ்சஞ் சிறிதுந்தோன்றா தச்சிவத்தோடும் வாழ்வறவாழ்ந்த.

வெறும்பாழ்-விளைந்தசுகஞ்சொல்லில்வெளியைப்படியா-லளந்தறியுமாபோலவாம் - எ - து - ஓர்பொருளோடுந் தொடர்வின்றிய வெற்றவெறுஞ் சூனியத்திலுண்டாகிய பேரானந்தத்தைச் சொல்லோமெனி லாகாயத்தை நாழியா லளந் தளவிடு மாறுபோலுமாம்-எ-று.

"அறியாமைகண்டுமறந்தறியா" ரென்றமையாற் கருவிகளின் மீளாது சிவமயமா யெக்காலமு மிருப்பாரென்பதாயிற்று வெளியையளக்கும்படிக்கு ளவ்வெளி நிறைந்திருத்தலி னதனையளக்கக் கூடாதுபோற் கருதிக்கூறு மனவாக்கெல்லா மவ்வானந்த நிறைந்திருத்தலி னதனைக்கூறக்கூடாதென்பதறிக.

இத்திருவெண்பாவா னங்ஙனமிருந்த ஞானிகள்பெற்ற வின்பத்தை யிங்ஙனமிருக்குமென் றவரார் கூறக்கூடாதென் றறிவித்தவாறு காண்க. (உஎ)



அறிவுக்கறிவென்னு மாகமங்கள்சுத்த
வறிவென்னும்வேதத்தி னந்தம் - பிறியா
நிலைக்குச்சரியாகு நீயென்றுரைனென்
றலைக்குமரிபிரமரை.

அறிவுக்கறிவென்னுமாகமங்கள்சுத்த - வறிவென்னும் வேதத்தினந்தம் - பிறியா - நிலைக்குச்சரியாகும் - எ - து - சச்சிதானந்தசிவத்தை யியம்பிய வறிவுக்கு அறிவிக்கும் அறிவென்றுகூறுமாக மாந்தங்கள்

வேதாந்தங்கள் அறியுமறிவு மறிவிக்குமறிவுஞ் சுத்தவறிவுதானே யென்றுகூறுந் தற்போதம்போய்ச் சிவத்தைப்பிரியாத நிலைக்குஞ் சிவத்துவம்போய்ப் பிரமத்தைப்பிரியாதநிலைக்கு மவ்வாகம வேதங்கள்கூறிய வாக்கியஞ் சரியையாகும்.

நீயென்றுனானென்-றலைக்குமரிபிரமனை - எ - து - அந்நிலை நில்லாது வாசகஞானமாக (நீயதுவென்று லதுநானெனல்) திங்ஙனம் விண்டு பிரமாதிகளையு மலைக்கும்எ-று.

நீ யதுவென்பதாகமம், மதுநானெனல்பது வேதம்.

இத்திருவெண்பாவாற் பரஞானத்தாற் சிவத்தைக்கூடிப் பிரியாதிருந்தோர்க்கு வேதாகமங்கள்கூறு ஞானமிரண்டுஞ் சரியென்பதூஉம் அபரஞானிகட்குச் சரியின்றென்பது மறிவித்தவாறுகாண்க.

இரண்டாவது

சத்திநிபாதத்துத்தம்பொழிவு

முற்றிற்று.



ஆ திருவெண் - கக.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

மூன்றாவது

## இயோகக்கழற்றி.



சரிதாதியினிற்போர்களு ளோரொருவர் முன்விட்டகுறையான் ஞானத்திற் பக்குவராய்வருவார்க ளவர்கட்குத் தற்போதத்தை யொழித்து ஞானம்வருவித்தற்பொருட் டத்தற்போதத் தாற்செய்யுஞ் சரிதாதிகளைப் போதனைகளானீக்க வேண்டுமாகலி னவ்வதிகாரத்தின்பின்ன ரிவ் வதிகாரங்கள் வைக்கப்பட்டன.

ஆயின்முறையே வைத்துக்கூறு நியோகக்கழற்றியை முதற் கண்வைத்த தென்னையெனி னியோகம் ஞானத்திற் கருகமாகலினு மிவ்வியோகத்தினின்ற ஞான பக்குவ னதிபக்குவனாகலினு முதற் கண் வைக்கப்பட்டது.

இவ்வதிகார மியோகத்தைக் கழலப்பண்ணினமையா னிதற் கியோகக்கழற்றியென்று பெயராயிற்று.

இதன்பின்னரி கூறு மிரண் டதிகாரத்திற்கு மதிகார வரைவும் பெயரு மிம்முறையே கொள்க.

சரிதைகிரியைகளைச் சற்றுக்கிச்சாகாக்
கருமயோகத்தைக் கழற்ற -வரிதவர்க்குந்
தோன்றியதுபொய்யாகக் காண்கையிலேதோன்றாத
வூன்றியபோதங் கழலுமோ.

சரிதைகிரியைகளைச்சற்றுக்கிச்சாகாக் - கருமயோகத்தைக் கழற்ற -வரிது-எ-து-சரிதைகிரியைகளைச் செய்வ தற்பமெனக்கருதி யுடனுசமாகாவகை செய்யு மியோகிகளது கிரியாயோகத்தை யாவராலு நீக்குதற்கரிது.

அவர்க்குந் - தோன்றியதுபொய்யாகக் காண்கையிலேதோன்றாத-வூன்றியபோதங்கழலுமோ - எ - து - அக்கிரியாயோகிகளுக் காருதாரங்களினு மோரோர்மூர்த்தியைத் தியானித் ததனைவிட்டு மற்றோர்மூர்த்தியைத் தியானிக்கும்போது முன் தியானித்தது பொய்ப்பொருளாய்ப்போகத் தமக்கநுபவமாகக் காணுமிடத்துந் தெரியா ததனை மெய்ப்பொருளாய்ப்பிடித்த போத மெங்ஙனங்கழலும்-எ-று.

இத்திருவெண்பாவாற் போதமியா தொன்றினைப் பற்றினும் விடாதென்பது மப்பற்றைப் பிறராலும் விடுவித்த லரிதென்பது மறிவித்தவாறுகாண்க. (க)



அட்டமாசித்திகளு மத்துவாமூர்த்திகளுங்
கிட்டிலதற்கங்கங்கே கீழ்மேலாய் - விட்டு
வரும்போதுந் துக்கமாய் வந்துவந்துமாய்ந்து
பெரும்பாவஞ்செய்யப்பெறும்.

அட்டமாசித்திகளுமத்துவாமூர்த்திகளுங் - கிட்டில்-எ-து- அக்கிரியாயோகத்தா லணிமாமுதலிய வட்டமாசித்திகளுந் தமக்குக்கைவல்லியமாகக்கிடைப்பினும் விநாயகன்முதலிய வாறத்துவாமூர்த்திகளையுஞ் சடாதாரங்களில் வழுவறத் தியானிக்கக் கிடைப்பினும்.

அதற்கங்கங்கேகீழ்மேலாய் - விட்டு - வரும்போதுந் துக்கமாய் வந்துவந்துமாய்ந்து-பெரும்பாவஞ்செய்யப்பெறும்-எ-து -அச்சித்திகளாலொடுக்கு முருவுகளு ளோருருவிற் கோருருவு தாழ்ந்துமுயர்ந்துந்தோற்ற வவ்வுருவுகளை யாங்காங்கு விடுத்து வரும்போதுந் துக்கமா யம்மூர்த்திகளை யாறுதாரங்களினும் வெவ்வேறு யாங்காங்குக்

கீழுமேனுமாய்த் தியானித்து விடுத்துவரும்போதுந் துக்கமாயவ்வுரு வெடுக்கும்போது மதனை விடுக்கும்போது மம்மூர்த்திகளைத் தியானிக்கும்போதும் விடுக்கும்போதும் பிறந்துபிறந்-திறந்திறந் திவற்ருன்மிகுந்த பாவங்களைச்செயப்படும்.-எ-று.

சித்தியா லொருருவைமறைத் தோருருவைக்காட்டலுந் தியானத்தா லொராதாரம்விடுத் தோராதாரஞ்சேறலு மோர்பிறவியைநீங்கி யோர்பிறவியை யெய்தலு மோரவத்தையைநீங்கி யோரவத்தையை யெய்தலும்போ லிருத்தலின் வந்துவந்து மாய்த்தென்றுஞ் சித்தியாற் சாபாநுக்கிரக முளவாகலின் முனிவு பிறந்தபோது பிறனைச் சபித்தலானுந் தம்மைப் படைத்தழிக்கு மூர்த்தியைத் தாம்படைத் தழித்தலானும் பாவம்வருதலிற் "பெரும்பாவஞ் செய்யப்பெறு," மென்றுங் கூறினர்.

வரும்போதுந் துக்கமென்பதனை யக்கினிசக்கிரமளவுஞ் சென்றுமீண்டுவரும்போது மெனவுங்கொள்க. சகமுகத்திற்செய்யுந் தொழிற்போல் நகமுகத்துஞ்செய்யலாற் றுக்கமென்றார்.

"அட்டமாசித்திகளாவன," அணிமா-இலகிமா - கரிமா- மகிமா-பிராத்தி-பிராகாமியம்- ஈசத்துவம் - வசித்துவம் - ஆகியவிவை யெண் வகையெனக்கொள்க.

அதற்கென்னு நான்கனுருபை யதனுலென்று மூன்றனுருபாகக்கொள்க.

---

அறிவடங்காவாயு வடங்கவசைவற்றுத்
தறியிருந்தாற்போலச் சமாதி - பெறுகி
னடந்தகுருட்டுமே னஞ்சருந்திப்பாழூர்க்
கிடந்தகுழிப்புக்கதினுங் கேடு.

அறிவடங்காவாயு வடங்கவசைவற்றுத் - தறியிருந்தாற்போலச் சமாதி-பெறுகில் - எ- து- தமதறிவா னதனிச்சைப்படிசென் றடங்காத பிராணவாயுவைத் தமதிச்சைப்படி யிரேசித்தும் பூரித்துங்கும்பித்துமுள்ளடங்கச் செய்து தாமுமதனோ டசைவற்றுக் கம்பமிருந்தது போற் சமாதிபெறுவாராயி னிச்சமாதி.

நடந்தகுருட்டுமேனஞ்சருந்திப்பாழூர்க்- கிடந்தகுழிப்புக்கதினுங்கேடு - எ -து-நடக்கப்பட்டபிறவியந்தகனாகிய வோருமையன்விடத்தினைப்புசித்துக் குடிபோகிய வூரின்கண்ணுள்ள பாழுங்கிணற்றிலெடுப்பாரற்று வீழ்ந்துகிடந்த வதனினுங் கேடாம்-எ-று.

வாயுவடக்கன்முதலிய தொழிற்செய்தலி னடந்தவென்று மதற்குமேலாய் ஞானமின்மையாற் 'குருட,'னென்று மந்தஞானக்கூறுஞ்

சாத்திரமறியாமையா னுமனென்றுஞ் சடமாயுள்ள வாயுவுடன்கூடினமையா னஞ்சருந்தியென்று மூலிகைப்ப தொழின் மறந்தமையானுமாண்டுத்திருவருள் விளக்காமையானும் பாழூர்க்கிடந்த குழியுக்கென்று மிங்ஙன மூவமைகூறினார்.

இவற்றுள்நடந்த குருட்டமென்பது அவர்க்குவமையும் நஞ்சருந்திப் பாழூர்க்கிடந்த குழிப்புக்கெப்ப தவர் சமாதிக்குவமையுமெனக்கொள்க.

அவனறியாதுவீழ்ந் தவனிவரறிந்து வீழ்ந்தவராகலி னதனினுங்கேடென்றார்.

இனியிரண்டு திருவெண்பாவானுங் கிரியாயோகஞ் செய்வது துன்பமென்று மங்ஙனந் துன்பப்பட்டுச் செய்யினு மான்மலாபமின்றென்று மதனருகருத்தை யெடுத்தறிவித் தவ்வியோகத்தை மறுத்தவாறுகாண்க.

கவிப்பயனுமாதனமுங் கண்சிமிட்டாநோக்குந்
தவப்பகடியாட்டங்காண் சாரவைத் - தவிர்க்கின்
மறந்தறியலாகா மலட்டறிவாய்வான்போ
னிறைந்ததுளும்பாம னில்.

கவிப்பயனுமாதனமுங்கண்சிமிட்டாநோக்குந் - தவப்பகடியாட்டங்காண்சாரவைத் - தவிர்க்கின் - எ - று- யோகநூலைக்கற்றுக்கொண்டு பிறர்க்கதனருத்தங்கூறுதலும் பதுமாதனமுதலிய வாதனங்கட்டலு மனத்தையோர் தானத்தினிறுத்தி இமையாநாட்டமாய்ப்பார்த்திருத்தலு மிவைமுதலிய நீசெய்யுந் தொழில்கண் ஞானதபோதனர் முன்னர்த் தவப்பகடிக் கூத்துக்கட்டியாடுவதா மினியிவ் வியோகவாதனையை நீங்குதியெனி னேரேவீடடைதற் கோருபாயமுண் டஃதெங்ஙனமெனின்.

மறந்தறியலாகாமலட்டறிவாய்வான்போ- னிறைந்ததுளும்பாமனில் -எ-று- நீயோகசமாதி கூடும்போ தோர்காணினைந்து மோர்காண்மறந்து முன்னரறிந்ததுபோ லறியாதிப்போதந் நினைப்புமறப்புமுதலிய வொன்றுந்தோன்றாத வறிவா யெங்கும் பூரணமா யொன்றோடுந் தாக்கற் றசைவற்றிருந்த வாகாயம்போ னீயுமெங்கும் பூரணமா யொன்றோடுந் தாக்கற் றசைவற்று நிற்றி-எ-று.

“கண்சிமிட்டாநோக்கு,, மென்றது நாசிநுனி புருவமத்தியங்களிற் பார்த்துக்கொண்டிருத்தல் நல்லகூத்தாடுவான் முன்னர் அவன் வேடத்தாலும் போட்டுக்கொண்டகூத்திற்குமாறாய வசியக்கூத்தாடுவானைப்போல ஞானிகளைப்போலும் வேடமுநடையுங் கட்டி

பவாது பூரண வறிவிற்குமாறுகக் கிஞ்சிக்கிய வறிவனுயிருத்தலிற் றவ ப்பகடி யாட்டமென்றார்.

"மலட்டறிவு ஒன்றுங் கலவாத வறிவு,

இத்திருவெண்பாவாற் கேவலசகலங்கடாக்காதருள் வடிவாய்நிற் றற் குபாயங்கூறியவாறு காண்க. •(௪)



இங்ஙனமிருவருக்குஞ் சமாதிகூடுதல் சரியெனி னியோகியை ஞானிகளிகழ்ந்து கூறுவமௌதென்னையெனின் மேற்கூறுகின்றார்.

தத்துவமுட்டாக்காய்ச் சமாதியினைச்சார்போதப்
பித்தனென்பார்பேரிற் பிழையுண்டோ புத்திபோய்க்
கம்பக்களிறுகட்டக் கல்லிறுார்க்காணுமிவ
ரம்பரத்தைவந்து பிடிப்பார்.

தத்துவமுட்டாக்காய்ச் சமாதியினைச்சார்போதப் - பித்தனென் பார்பேரிற் பிழையுண்டோ - எ - து - தத்துவங்களை யெல்லா நியதி பண்ணி நீங்கித் தமமை, யருளாலறிவு மறிவின்றி யத்தத்துவங்களைத் தன்மேன் முட்டாக்காய் மூடிக்கொண்டு சமாதிகூடுங் கிரியாயோகி யைச் சார்போதனுகிய பித்தனென்று கூறும் ஞானிகண்மேற்குற்ற மியாது.

புத்திபோய்க் - கம்பக்களிறுகட்டக் கல்லிறுார்க்காணுமிவ-ரம்பர த்தைவந்து பிடிப்பார் - எ - து - பூகபுத்தியின்றிக் கம்பத்தின்கண்ண டங்கா மதகளிற்றைக் கட்டுதற்குக் கல்லின்கண் ணுருரிப்பாருந் தாமி ருத்தற் கிடங்கொடுத்திருந்த வாகாயத்தைச்சென்று பிடிப்பாருமிவர் காணும்-எ-று.

"தத்துவ முட்டாக்காய்ச் சமாதி" யென்றது மனத்தால் வாயு வைவாங்கி யுண்ணிறுத்தி யதனுட் டாமறைந்திருத்தலின் இங்ஙனமிரு ப்போர்க் கறிவிக்க வறியும் போதமே யின்மையால் எங்ஙனஞ் சிவத் தை யறிவாரென்பது குறித்துக் "கம்பக்களிறுகட்டக்கல்லிறு" வென் றுந் தம்முயிருட் பூரணமாயிருந்த சிவத்தையறியாது மற்றோரிடத் திருப்பதாய்க் கருதி யதனைப் பிடிக்கச்சேறலின் "னம்பரத்தைவந்துபி டிப்பா," ரென்றுங்கூறினார்.

சார்போதஞ்சேர்ந்த கருவிமயமாயிருத்தல். மனமும் பிராண வாயுவு மிருந்தவிடத் தெல்லாக்கருவிகளு மிருக்குமாகலிற் றத்துவ மென்று பொதுப்படக்கூறினார்.

இத்திருவெண்பாவாற் சமாதிகூடுதலிருவருக்குமொத்ததாயினு மியோகி யிங்ஙனஞ்செய்தலாலின் ஞானிகளாலிகழ்ந்து கூறப்பட்டா னென் றறிவித்தவாறு காண்க. (௫)



நெய்யினிழற்போ னிழலிற்புருடனைப்போற்
பொய்யில்விகற்பம் புகுவதுவுந் - துய்ய
வொளியோசையாகி யொடுங்குவதுந்தம்மைத்
தெளியாதார்செய்யுஞ் செயல்.

நெய்யினிழற்போ னிழலிற்புருடனைப்போற் - பொய்யில்விகற்பம் புகுவதுவும் - எ - து - நெய்யின்கட்டோற்று நிழலைப்போலும் அந்நிழலைப்பார்த் தாகாயத்தைப்பார்க்கில் அந்நிழற்போற்றோற்றுஞ் சாயாபுருடனைப்போலுங் கருவிகளாகிய பொய்யிற்கூடிய தற்போத விகற்பத்தாற் றூழுந் தம்மாற்றியானிக்கப்பட்ட மூர்த்திகளுமா யாருதாரங்களிற் றோற்றுவது.

துய்ய - வொளியோசையாகி யொடுங்குவதுந்தம்மைத் - தெளியாதார்செய்யுஞ் செயல் - எ - து - நிருமலமாகிய விந்துதரிசனமு நாததரிசனமுமாய்த் தோற்றி யங்ஙனந் தோற்றியவாறே நில்லாது மீட்டு மொடுங்குவதுமாகிய விச்செயல்களெல்லாந் தம்மை யருளாற்றெளிந் தறியாதார்செய்யுஞ் செயல்களாம்-எ-று.

நெய்போற் கருவிக ளதிற்றோற்று நிழலு மந்நிழற்போ லாகாயத்திற்றோற்றுஞ் சாயாபுருடனும்போற் றூழுந் தம்மாற்றியானிக்கு மூர்த்தியுமென்ப தறிக.

விந்துநாததரிசன மாயையுட்டோற்றுவதாகலி னதுபொருளன் றென்பதூங் காண்க (௬)



சாக்கிரத்தேகேவலத்தைச் சார்ந்துவிடத்தத்துவத்தை
நூக்கியொழிப்பார்போ னுழைவதையு - நீக்கியே
கண்ணூடிபார்த்தகுரக் கறிவாய்க்காண்பதையு
மெண்ணூவத்தை யறியில்.

சாக்கிரத்தேகேவலத்தைச் சார்ந்துவிடத்தத்துவத்தை - நூக்கியொழிப்பார்போ னுழைவதையும் - எ - து - சாக்கிரத்திலதீதத்தைப்பெறும்பொருட்டுத் தத்துவங்களைத் தள்ளி யொழிப்பார்போன் றவற்றுட் டாமறைந்திருப்பதையும்.

கண்ணூடிபார்த்தகுரக் கறிவாய்க்காண்பதையு - மவத்தையறியி னீக்கியேயெண்ணூர் - எ - து - கண்ணூடிபார்த்த குரங் கதனுட்டோற்

றிய வுடலைத் தன்னிழலென் றெண்ணாது மற்றோர் குரங்கென் றதனை மெய்யாகக்கருது மதனறிவுபோலத் தற்போதத்தாற் றியானித்தறியு ம்பொருளை யத்தியானத்தின்படிக் கருவிகளிற் றோற்றுவதென் றறியாததனை மெய்ப்பொருளாய்க் காண்பதையுஞ் சுத்தாவத்தையி னிலக்கண மறிவாரொளி னவர் பொய்யென நீக்கி யோர்பொருளா யென்றார்-எ-று.

ஆதாரமாறையு மூடுருவி நீக்கின்றோந் தத்துவங்களை யெல்லாங் கடந்தோமென்று கருதிப் பிராணவாயுவின் மறைந்திருத்தலி "னூக்கி யொழிப்பார் போனுழைவதையு,, மென்றார். சுத்தாவத்தையி லருண்மயமாய் நிற்போர்க்கெதிரிட் டவையெலலாம் பொய்யாகலி,, னவத்தையறியிலென்னு,, மென்றார்.

இவை யிரண்டு திருவெண்பாவானுஞ் சகலகேவலங்களை நீங்கித் தம்மை யருளா லறிந்து சுத்தாவத்தையி னிற்போ ரியோகி கருதிய பொருளை யென்னுமொன் றறிவித்தவாறு காண்க. (எ)



உபதேசப்பித்தோ வுபமானப்பித்தோ
விபரீதமோபழக்கோ வேறோ - தபசிநீ
கண்மூடாவின்மூடத் தேடுங்கவுசனைபோ
லெண்மூடாயோக மிதுவென்.

உபதேசப்பித்தோ வுபமானப்பித்தோ- விபரீதமோபழக்கோ வேறோ - தபசிநீ - எ - து - உனக்குக் குருசொன்ன வுபதேசப்பித்தமோ சாத்திரங்கூறிய வுபமானப் பித்தமோ வுனது விபரீத புத்தியானோ மூற்சனனங்களிற் றொன்றுதொட்டு நீ செய்துவந்த பழக்கத்தானோ வஃதன்றிப் பிறர்செய்வது கண்டு பாவனையாச் செய்தனோதவிய மற்றியாதோ தவவேடம்பூண்டு தவத்தைப்பண்ணப்பட்ட நீ யத்தவத்திற்குரிய ஞானயோகம் புரியாது.

கண்மூடாவின்மூடத் தேடுங்கவுசனைபோ - லெண்மூடாயோக மிதுவென் - எ - று - விண்ணைமூட வேண்டினோ னதனைநாடுங் கண்ணை மூடாதுயைத் தவ்விண்ணை மூடுதற்குக் கவுசனை தேடுதல்போன்றெண்ணப்பட்டமூடனே பஞ்சபூதாதி கருவிகளையொழிக்கத் தொடங்கிய நீயவற்றை நாடுந் தற்போதத்தைக் கட்கிமைபோ லுனதுயிலாவிட்டு நீங்காதிருந்த வருளின்மறைந்தடக்காதித் தற்போதத்தா லேப்பஞ்சபூதாதி கருவிகளை யொழிப்பலென்றுகருதிப் பிராணவாயுவை யுண்மறித் திதனோடும் போராடி நீசெய்யு மியோக மிதென்னைசொல்-எ-று.

அருளின் மறைந்தலைசந்தோறுக் கவ்வருளே தோன்றுங்கருவியின் மறைந்தலைசந்தோறுக் கக்கருவியே தோன்றுமாகலி னவ்வியோகத்திற்கு மிவ்வியோகத்திற்கும் பேத மிவ்வநுபவத்தாலுங் காண்க.

ஓ்காரமடுக்கிவந் திதுவென்னென முடிந்தது. (அ)



வாலேமுகமாய் வரவானையேறினோர்
போலேயும்போதமோ போய்த்தீண்டுஞ் - சாலப்
பெருஞ்சிரிப்பாந்தன்னைப் பிடித்தாட்டும்பேயைத்
தெரிஞ்சிருக்கத்தேடுஞ் செயல்.

வாலேமுகமாய் வரவானை - யேறினோர் - போலேயும்போதமோ போய்த்தீண்டும் - எ - து - தான்கருதிய வூருக்குச்செல்லத் தலைப்புறத்தைப் பின்னிட்டு வாற்புறமுகமா யானையேறினோனைப்போலும் நீகருதிய சிவத்தையடைதற் கருளைப் பின்னிட் டுன்போதத்தை முன்னிட்டுச் சென்று நின்போதமோ வச்சிவத்தைப்போய்த் தீண்டுவது.

ஆயின் அவ்வருளைத் தானடைய வேண்டாவோ வெனின்.

சாலப்-பெருஞ்சிரிப்பாந்தன்னைப் பிடித்தாட்டும்பேயைத் தெரிஞ்சிருக்கத்தேடுஞ்செயல் - எ - து - தன்னைவிடாது பற்றிநின்றதன திச்சைப்படி யாட்டும்பேயை யெதிரிட்டறிந்திருக்க வஃதெங்குளதென்று தேடுமொருவ னறியாமைபோலப் பெத்தமுத்திகளினு முனதுயிரைவிட்டு நீங்காதிருந் தூட்டியுறக்கி யுபகரித்து வீட்டைக் கொடுக்குந் திருவருளை வேறுபிரித் தஃதெங்குளதென்று தேடுவ தித் திருவருண்ஞானம் பெற்றோர்க்கு மிகவு நகையாம்-எ-று.

வாற்புற முகமாயேறினானை யவன் கருதியவூருக்கு மாறாகியவூரைச் சார்விக்கும், தலைப்புற முகமாயேறினானை யவன்கருதிய வூருக்கு நேரே சார்விக்கு மதுபோ லருளைப் பின்னிட்டுப் போதத்தை முன்னிட்டுச் சென்றானைக் கருவிகளைச்சார்விக்கு மத்திருவருளை முன்னிட்டுப் போதத்தைப் பின்னிட்டுச் சென்றானைச் சிவத்தைச்சார்விக்குமென்பதறிக. (௯)



குறங்குகுத்திக்கொண்டு குறேக்கைகத்திக்கூட்டை
மறந்தழைத்தாற்றூக்கம் வருமோ - வெறுங்கெடுவீர்
தன்னையழித்தெழுந்த சச்சிதானந்தத்தை
யுன்னிலொளித்து விடாதோ,

குறங்குகுத்திக்கொண்டு குறேக்கைகத்திக்கூட்டை - மறந்தழைத்தாற்றூக்கம் வருமோ - எ - து - பாயலிற் படுத்துக்கொண்டு துடை

குத்திக்கொண்டு குறேருக்கை விட்டுக்கொண்டு உடம்பைமறந்ததாப் பாவித்துக்கொண்டு தூக்கமே நீ வாராயென்றழைத்தாற்றூக்கம்வருமோ வங்ஙன நினைத்துச் செய்யுநினைவை யழித்தெழுங் கேவலம்வந்தாலன்றி அதுபோலு முன்போதத்தாற் பிராணவாயுவை மறித்து நீ செய்யு மியோகத்தா லாநந்தநித்திரையை வரச்சொன்னா லந்நித்திரை வருமோ வப்போதத்தை யழித்தெழாநின்ற வருட்கேவலம் வந்தாலன்றி அவ்வருட்கேவல மெங்ஙனம் வருமெனின்.

வெறுங்கெடுவீர் - தன்னையழித்தெழுந்த சச்சிதாநந்தத்தை - யுன்னிலொளித்துவிடாதோ-எ-து-அந்தோ வெறுங்கெடுவீர் தற்போதத்தை யழித்துத் தானாயிருக்குஞ் சச்சிதாநந்த வடிவாகிய சிவத்தை யுன்போதத்தாலுன்னி லுன்னையறியா துன்க்குளொளித்துத் தன்னைவிட வுன்னையொருமுதலாக்கிப் பிரித்துவிடுமாகலி லுனதுயிர்க்குள்ளிருந் தறிகுவிம் பூரணமெனக்காண்டி-எ-று.

சுபாவ நித்திரைபண்ணுவோன் செயலெல்லாங்காட்டி நித்திரை பண்ணா திருந்தோனைப்போ லேகாந்தத்திருத்த லாசனங்கட்ட லசைவறவிருத்தன்முதலிய ஞானிகணடையைக் காட்டி யவரைப்போலு மாநந்த நித்திரைபண்ணாது தற்போதத்தோடி யிருத்தலி னிங்ஙன முவமைகூறினார்.

உபதேசப் பித்தோவென்னுந் திருவெண்பாமுத லிவைமூன்று திருவெண்பாவானுந் திருவருளை யறிதற்குந் தற்போதமொழித்தற்கு முபாய மியாதுகூறினுந் தெளிந்துகொள்ளாத யோகியைப்பார்த்து வெறுத்துப் போதத்தையறிந் தடக்கினாலன்றிக் கருவிகளடங்காதென்பது மப்போதத்தைப் பின்னிட் டருளைமுன்னிட்டுச் செல்லவேண்டுமென்பது மவ்வருளை முன்னிட்டுச் சென்றபோது மதனைத் தற்போதத்தா லெதிரிட்டுப் பார்க்கலாகாதென்பது மறிவித்தவாறுகாண்க. ()

---

நீர்கூறியவாறே யோகியருஞ் சிவம் வாக்கு மனாதீதகோசரமென்றுகூற நீரவரை மறுப்ப தென்னையெனில் மேற்கூறுகின்றார்.

மனவாக்குக்காயத்தான் மாய்ந்தளவைமாண்ட
தெனவாய்ப்பறையறையி லென்னா - நினைவதெலாஞ்
சாக்கிரப்பொய்தானுந் தனியன லதற்பாழு
நீக்கமற்றபூரண மென்னில்.

மனவாக்குக்காயத்தான் மாய்ந்தளவைமாண்டதென - வாய்ப்பறையறையி லென்னா - நினைவதெல்லாஞ் - சாக்கிரப்பொய் -எ- து- மன வாக்குக் காயத்தால் வருந்தி யோகசமாதிகூடிச் சிவத்தைப்பெ

ரூதம் மனவாக்குக்காயங்களா லளவிடப்பட்ட வளவைகளையெல்லா ங்கடந்த தச்சிவமென்னப் பிறர்க்கு வாய்ப்பறையறைந்து கூறியவா ற்ருனவர்க்குப் பயனென்னை யுண்டாமவர் பாவிப்பதெல்லாஞ் சாக் கிரப் பொய்யாகலின்.

நானுந்தனியனல தற்பரமு- நீக்கமற்றபூரண மென்னில்-எ-து- ஆன்மாவுஞ் சிவத்தைவிட வேறாய் தனிமுதல்வ னன்றென்று மச்சிவமு மான்மாவைவிட்டு நீங்கா துட்புறம்பாய் நிறைந்துள்ள பரிபூரணமெ ன்றும் வேதாகமங்கள் கூறுமெனின்-எ-று.

கூறுமெனின் பொய்யாகலின் பயனென்னை யுண்டாமென மு டித்துக்கொள்க.

மனத்தால் வருந்துவது, வாயுவை யுண்மறித்தல். வாக்கால் வரு ந்துவது, சாத்திரம் பார்த்தல். காயத்தால்வருந்துவ தாசனங்கட்டல விழ்தம் புசித்தன் முதலியன.

அளவையென்பது, காட்சியநுமான மாகம முதலியன - அவ்வ ளவைமாண்ட தான்மாவுஞ் சிவமு மிரண்டறு் திருந்தவிட மதனையறி யாது மானதக்காட்சியினின் றளவை மாண்டதென்றமையால் "வாய் ப்பறையறையிலென்று,, மென்முர்.

இத்திருவெண்பாவா லவரங்ஙனங் கூறினாராயினு மனுதிகளைக்கட ந்துநின்ற பூரணத்தை யுணர்ந்தவரல்லரென் றறிவித்தவாறுகாண்க.



வாயுமனங்கண்ணசையா வாறடக்கிமக்கினமாய்
நீபுதைந்துபோய்க்கூட னீதியோ - காயத்துக்
குட்புறம்பாய்நீதானு யுண்டில்லையாயதற்கு
மப்புறமாய்த்தாக்கற் றதை.

வாயுமனங் கண்ணசையா வாறடக்கி மக்கினமாய் - நீபுதைந்து போய்க்கூட னீதியோ-எ-து-'வாயுவுமனமுங் கண்ணுஞ் சிறிதுமசை யாவா றடக்கி யங்ஙனமடக்கிய போதமுந்தோன்று தவற்றுண் மறை ந்து நீ சென்றடையத் தொடங்குதன் முறைமையோ.

காயத்துக் - குட்புறம்பாய்நீதானு யுண்டில்லையாயதற்கு - மப் புறமாய்த் தாக்கற்றதை - எ - து - வறுங்கடத்திருந்த' வாகாயம்போ ன்றிக்காயத்திற் குள்ளும்புறம்புமாய் நீயருடானுகிய காலத்துண்டெ ன்று மில்லையென்றுஞ் சொல்லப்பட்ட வநுபவமா யதற்குமப்பாலா யொன்றேடுந் தாக்கற்றிருந்த சிவத்தை-எ-று.

ஆன்மா வருள்வயப் பட்டபோதெல்லா மவ்வருள் வடிவாய்த் [illegible]

மாயிருக்கின்றதென்று சொல்லக்கூடாமையா னில்லையென்றுமதனை யுங்கழன்று சுகாதீதப்பதவி னதற்கு மப்புறமா யென்றுங் கூறினார்.

இத்திருவெண்பாவாற் பூரணத்தையடைதற் கிதுவுபாயமன்றென் றறிவித்தவாறுகாண்க. (௰௨)



ஒட்டாதிருக்கவென்று லொட்டாதுறக்கமாஞ்
சுட்டாதிருக்கிற் சுடர்க்கொழுந்தாந் - துட்ட
மனத்தோடுவாயுவைநீர் மண்டையிலேவைக்க
நினைப்பீரிதென்ன நிலை.

ஒட்டாதிருக்கவென்று லொட்டாதுறக்கமாஞ் - சுட்டாதிருக்கிற் சுடர்க்கொழுந்தாம் - எ - து - உமதுயோகத்தாற் கருவிகளொன்றுந் தாக்காதொழிந் திருப்போமென்று நீர்கருதினா லக்கருவிக ளொழிந்த போதவை யொழிந்தபடி நிற்கவொட்டாது கேவலம்வந்து சாருமக் கருவிக ளொன்றையு மெதிரிடாது பார்த்திருப்போமெனிலாண்டோ ரொளிதோற்று மனத்தான்வாயுவையடக்கி நிற்பி னங்ஙனமாமெனின்.

துட்ட - மனத்தோடுவாயுவைநீர்மண்டையிலேவைக்க - நினைப் பீரிதென்ன நிலை - எ - து - அக்கொடிய மனதுடனே வாயுவையும்பி ரமரந்திரத்தி னிறுத்துதலே முத்தியென் றப்பிரமரந்திரத்திலவற்றை நிறுத்தக் கருதுவீ ரிஃதென்ன வுண்மை நிலை - எ - று.

மனத்தையும்-வாயுவையும் - பிரமரந்திரத்தினிறுத்தினாற்கருவிக ளெல்லா மொழியு மவையொழியவே கேவலமூடு மதுமூடவே தம் மோடு தமக்குள்ளிருந் தறிவிக்குந் திருவருளுந் தெரியாதாகலி னந் நிலையை யீதென்ன நிலையென்றார்.

அத்திருவெண்பாவா லியோகியரது கருத்தை யெடுத்துக்காட் டியிங்ஙன நிற்பி னங்ஙனந் தோற்றுமெனி னெங்ஙன நிலையைப்பெறு வீரென் மறுத்தவாறு காண்க. (௰௩)

வாயு ட்டு மனத்தைமாத்திர நிறுத்தினாற் சிவத்தைப் பெற லாமோவெனின் மேற்கூறுகின்றார்.



கூட்டிற்குரங்கைநிழற் கோரணிக்கூத்தாமனத்தை
யாட்டிப்பிடித்தா ரடக்குவார் - காட்சியறச்
சும்மாதிருக்கி லசையாதுசுற்றுவிழி
சும்மாணையம்பரங் காணும்.

கூட்டிற்குரங்கைநிழற் கோரணிக்கூத்தாமனத்தை - யாட்டிப் பிடித்தாரடக்குவார் - எ - து - கூட்டி லடைத்துவைத்த குரங்கைப்

போது நிழற்பார்வைக் கோரணிக்கூத்துப்போது மொருவர்பிடியா திருக்கவுந் தானே சேட்டிக்கு மனத்தினைப் போதத்தாற்பற்றிப் பிடித்தாட்டி யவ்வரடக்கிக்கொள்வார்.

காட்சியறச் - சும்மாதிருக்கி லசையாதுசுற்றுவிறி - சம்மானைபம்பரங்காணும் - எ - து - போதமொழிவறையு மெதிரிட்டுநாடாது சும்மாதிருப்பினு மொருவர் பிடித்தசைக்காது தானேசுற்றப்பட்ட விறிசுபோது மொருவ னெறிந்து பிடியாது தானேசுழலு மம்மானைபோது மொருவ னாட்டாதாயும் பம்பரம்போதுந் தானே விரைந்தெழுந் தசைவதெனின் -எ-று.

உடம்பினின்று சேடித்தலிற் "கூட்டிற்குரங்கை,, யென்று நிழற்பார்வைக் கோரணிக்கூத்தைக்கண்டன் மாத்திரமன்றிப் பிடிக்கக்கூடாததுபோன் மனத்தினது போக்குவரத் தறிவதேயன்றி யதனையறிந்து பற்றக்கூடாமையி "னிழற்கோரணிக்கூத்,, தென்றும்புன்முகமாய்ச் சிதறியெழலின் விறிசென்றுங் குதித்துக் குதித்தெழலி "னம்மானை,, யென்றுமோர்கணத்தி லனேகஞ்சுழலாச்சுழல்வதனாற் "பம்பர,, மென்றுங்கூறினர்.

கூட்டிற்குரங் கசைவு நிழற்கூத்தசைவுந் தூலமாகலின் போத மசைந்தவிடத் ததனசைவிற் குவமையும், விறி சம்மானைபம்பரத் தசைவு சூக்குமமாகலிற் போதஞ் சிறிதடங்கியவிடத் தம்மனத்தினசைவிற் குவமையுமாகக் கொள்க. (௰௬)

பற்றுதபோதும் பதறும்பழக்கமதைக்
கற்றுலென்னுக் கலக்காது - சற்றேநீ
தீண்டிவிடிற்றுல்காண் செனனமரணமது
மாண்டுவிடினீ சிவமாவை.

பற்றுதபோதும் பதறும்பழக்கமதைக்- கற்றுலென்னுக் கலக்காது -எ- து ஓர்பொருளையும் போதங்கருதா தசைவற்றிருந்தபோது முன்ன ரசைந்தவப் போதந்தோடுங் கூடியபழக்கத்தான் விரைந் தெழுமனத்தைப் போதத்தாற் பிடித்துச் சாதித்தடக்குவனெனி னுன்னை யெங்ஙன மயங்கக் கலக்காது.

சற்றேநீ - தீண்டிவிடிற்றுன்காண் செனனமரணமது - மாண்டுவிடினீ சிவ்மாவை - எ - து - உன்போதத்தா லம்மனத்தினைக் கணப்போதாயினும் பிடித்து விடுத்தியெனி னதுதானேபிறப்பு மிறப்புமாம் அங்ஙனம் பிடித்து விடுக்கும் போத மிறக்கு முபாயமறிந்திறந்தி யெனினம்மனமுமிறக்கு நீயுஞ் சிவமாவை-எ-று.

பிடித்தபோது நினைப்பும் விடுத்தபோது மறப்பும் வருதலிற் "செனனமரண" மென்றார்.

இவையிரண்டு திருவெண்பாவானுந் தற்போதத்தான் மனத்தை யடக்கக்கூடாதென் றறிவித்தவாறுகாண்க. (௯௫)

அறிவாயிரீர்மயக்க மாகாதசையில்
விறிசாய்விடாதோவிகற்பம் - பிறியாத்
தராசினுனிபோற் சமாதிவரின்ஞான
விராசனுமக்கொப்பா ரெவர்.

அறிவாயிரீர்மயக்க மாகாதசையில் - விறிசாய்விடாதோ விகற்பம் - எ - று - கருவிகளெல்லாநீங்கி-நின்ற வுயிரறிவை விட்டுநீங்காத வரு ளறிவாயிருங்கோ ளங்ஙன மிருப்பிரெனின் மயக்கம்வந்தடாத வ்வுயி ரறிவைப்பிறியா தவ்வறிவைத் தற்போதத்தா லெதிரிட்டுப்பார்ப் பதா யசைவில் விகற்பஞ் சுழல் விறிசுபோலாய்ச் சுழலுமாகலி னங் ஙனம் பார்த் தசையாது.

பிறியாத் - தராசினுனிபோற்சமாதிவரின் ஞான - விராசனுமக் கொப்பா ரெவர் - எ - று - இரண்டுதட்டிலு மிட்ட பொன்னுங் கல் லுஞ் சரியானபோது கீழ்நின்ற முள்ளோர்பாற் சாயாதுமேனின்ற முள்ளைட் பிறியாதிருந்தவத் தராசு முண்ணுனிபோன் மயக்கமும் வி கற்பமுமடா தவ்வரு ளறிவினோ டுமதுபோத மசைவற் றிருக்குஞ் சமாதி வருமாயி னப்போது நீர் ஞானராசாவாவீ ரஃதன்றி யுமக்கொ ப்பாரு மியாவ ரிவ்வுலகத்து-எ று.

கற்போலுங் கேவலம், பொன்போலுஞ் சகலம்,அக்கன்மிகுந்த போது கற்றட்டுப் புறத்தும் பொன் மிகுந்தபோது பொற்றட்டுப் புறத்துஞ்சாயுங் கீழ்நின்ற முட்போ லான்மா விம்முட் சாய்ந்தபோ துஞ் சாயாதசைவற நேரேநின்றபோது மசைவறமேனின்ற முட் போ லருளெனவறிக. மேனின்ற முட்போற் கீழ்நின்றமுள்ளு மசை வற நேரே நிற்றல்போ லான்மாவருளி லசைவற நிற்கவேண்டுமாகலி ற் "றராசுநுனிபோ" லென்றார் இங்ஙனநிற்கின்ற சமாதிவருதலரிதா கலின் வரினென்றார்.

இத்திருவெண்பாவாற் கேவலசகலங்கடாக்காது திருவருட்க ணிற்றற் குபாயங்கூறிய வாறுகாண்க. (௯௬)

இங்ஙனங் கேவல சகலங்களை நீக்கித் திருவருளி லசைவறநிற்கக் கூடாததாயினு மந்தக் கரணங்களை யடக்குதற் குபாய மேற்கூறு கின்றார்.

நீர்க்குப்பதமு நெருப்புச்சுடுந்தொழிலுங்
காற்றைச்சலிக்கவுமார் கற்பித்தா -ரார்க்குமிது
போகாமனுதி புதைக்குநிழற்போலாநீ
யாகாயம்போற்பா ரறும்.

நீர்க்குப்பதமு நெருப்புச்சுடுந்தொழிலுங் - காற்றைச்சலிக்கவுமார் கற்பித்தா - ரார்க்குமிது - போகாமனுதி - எ - து - நீர்க்குக்குளிர்ந்து பதஞ்செய்யுங் குணமு நெருப்பிற்குச் சுடுதலொன்றுவிக்குங் குணமுங் காற்றிற்குச் சலித்தறத் திரட்டுங் குணமுங் கற்பித்தாரியாவரவற்றிற் கிக்குணங்க ளியல்பான வாறுபோன் மனத்திற்கோர் பொருளைப்பற்றுங் குணமும் புத்திக்கது பற்றியபொருளை நிச்சயிக்குங் குணமு மகங்காரத்திற் கது நிச்சயித்தபொருளை யபிமானிக்குங் குணமுஞ் சித்தத்துக் கபிமானித்த பொருளைச் சிந்திக்குங் குணமு மியல்பா மாகலினி யாவர்க்கு மனமாதியந்தக் கரணங்களீங்காது ஆயினீரிங்ஙனங் கூறியவாற்று னக்கரணங்க ளெங்ஙன மிருப்பனவன்றி யவற்றை நீக்கவேண்டாவோவெனின்.

புதைக்குநிழற்போலாநீ-யாகாயம்போற்பாரறும் - எ - து - தன்னைப்புதைக்க மண்போடுந்தோறு மம்மீது மேன்மே லெழப்பட்ட புதைக்குநிழற்போலு மக்கரணங்களை - யுன்போதத்தா னடக்குந்தோறு மிப்போதத்தின் மீது மேன்மே லெழுவதாமாகலி னுனதுயிருட் பிறிவற்றிருந்த வருளை யுட்புறமு மொன்றேயாந் தாக்கற்றிருந்த வாகாயம்போ லவ்வருண் ஞானக்கண்ணாற் றேகாதி பிரபஞ்சங்களி னெல்லா முட்புறமுய் நிரந்தரமாய்ப்பா ரிங்ஙனம் பார்த்தபோ தக்கரணங்க ளறும்-எ-று.

இதனு லந்தக்கரணம் பொறிவழிச்சென்றுபிரபஞ்சத்தை நாடும்பொழுது மங்ஙனஞ் செல்லாவிடத் தவ்வாசனையா னுள்ளே யசையும்போதுந் தற்போதத்தா லடக்கி னடங்காது மேன்மேலெழுமாகலின் புறம்புமுள்ளுந் திருவருளைப் பரிபூரணமாய்க்காணின் கரணங்களடங்கு மென்பதாயிற்று.

நீராதி யியற்குணங்களைப் போதத்தா லடக்கக்கூடாததுபோன் மனுதியியற்குணங்களையு மிதனுலடக்கக்கூடாதென்பதூங் காண்க.

இத்திருவெண்பாவாற் றிருவருளையுயுள்ளும்புறனும் பரிபூரணமாய்ப் பாவித்தாற் கரண மடங்குமென் றறிவித்தவாறுகாண்க. (௰௭)



இங்ஙனம் உள்ளும் புறனும் பரிபூரணமாய்ப் பாவிப்பதருளன்றோ வெனின் மேற்கூறுகின்றார்.

மண்ணைமலையை மறிகடலைவானகத்தை
யெண்ணிலளந்தறிய வெட்டுமோ - வுண்மையைநீ
யுண்டென்னிலோர்வார்த்தை யுண்டல்லாதுன்னொழிவைக்
கண்டறியிலன்னியமாங் காண்.

மண்ணைமலையை மறிகடலைவானகத்தை - யெண்ணிலளந்தறிய வெட்டுமோ - எ - று - மண்ணை முழுதையும் வானகமுழுதையு நீட்டலளவையானு மலையையெடுத்த லளவையானு மறிகடலை முகத்தலளவையானு மெண்ணுமிடத் தொருவரா லிவ்வளவென் றளவிட்டறியக் கூடுமோ வதுபோல.

உண்மையைநீ - யுண்டென்னிலோர்வார்த்தை யுண்டல்லாதுன்னொழிவைக் - கண்டறியிலன்னியமாங்காண் - எ - று - இருநூற்றிருபத்துநாலு புவனங்கட்கு மவற்றி லிருந்த சராசர வுயிர்கட்கு முட்புறம்பாய் நிறைந்துள்ள திருவருளை நீ யுண்டென்று சொற்றியெனின வ்வோர் சொல்லு முண்டாவதன்றி யிச்சொற்குப் பொருளீதென்றுன்போதத்தா லிதனது நாசத்தாற் றோற்றுமவ்வருளைநீகண் டளவிட்டறியக் கூடுமோ வங்ஙனமளவிட்டறிவேனெனி லுனக்கனன்னியமா யிருந்தவவ்வருளன்னியமாநிற்கும்-எ-று.

இதனாற்போதத்தாற் சிறிதளவிடப்படு மண்ணாதி பொய்ப்பொருளையே முற்று மளவிடக்கூடாதெனி லப்போத நாசத்திருந்த மெய்ப்பொருளை யெங்ஙன மளவிடக்கூடு மென்பதாயிற்று.

அருளனன்னியமாயிருந் துள்ளதாயினும் போதந் தடித்தபோது மலவாசனைதோன்று மிம்மலவாசனையோடுங்கூடிய போதத்திற்கு மலரகிதமாயிருந்துள்ள வவ்வருடோற்றாதாகலி "னன்னியமாங்கா,, ணென்றார்.

இத்திருவெண்பாவா லருளை யெதிரிட்டறியி லன்னியமாமென் றறிவித்தவாறுகாண்க. (௰அ)

உதித்தொடுங்கும்பொய்க்கா ருபாதானமென்னு
துதிப்பையுதிப்பா லொடுக்கிற் - பதைத்தெழுந்த
பந்தன்றேசாட்சியைப்போற் பார்வேர்பறித்தமரங்
கொந்தலர்ந்துகாயா தொக்கும்.

உதித்தொடுங்கும்பொய்க்கா ருபாதானமென்னு - துதிப்பையுதிப்பா லொடுக்கிற் - பதைத்தெழுந்த - பந்தன்றே சாட்சியைப்போற் பார் - எ - று - ஆகாயத்திற்றோன்றி மறையுங்கார்ப்போன் மாயையிற்றோன்றி யொடுங்கும் பொய்யாகிய காரணங்களை யம்மாயையென்

றருளாற் கண்டு நீக்காததனை மெய்போற்கருதி யக்கரணங்களைப்போ தத்தாலடக்கி லவை கரத்தாலறையுந்தோறும் விரைந்தெழுந்த பந்து போலாகாதோ வப்பந்தைக் கரத்தா லறையாதுவிடுத்தா னிலத்திற் கிடக்குமாகலினி தன்சாட்சியைப்போ லுன்போதத்தா லவற்றையடக் கின் மேன்மேலெழுமென்பதையு முன்போதஞ் சும்மாதிருப்பிலவை தாமே யடங்குமென்பதையும் பார் த்தறிதி யஃதறியும்.

வேர்பறித்தமரங் - கொந்தலர்ந்து காயாதொக்கும் - எ - து - நி லத்திலூன்றியமுதல் வேர்ப்பறித்தமரம் பூத்துக் காயாததுபோலு முன்போத மற்றபோதுகரண விந்தியங்க ளொன்றுந் தோன்றுதலும் -எ-து.

"உபாதான,, மென்றது மாயை யதுகாரியத்தைக் காரணமாய்க்கூறியது காணம்போற்றோன்றி மறைதலிற் போதத்தையு முதிப்பென்றார் - கரணங்கள் போதமிருந்தபோதிருந்து மிழந்தபோதிறந் தும் வருதலின் (வேர்) க்குவமையாகக் கூறினார்.

இத்திருவெண்பாவா லருளாற் கருவிகளினதுண்மையையறிந்து நீக்கி னீங்குமென்பதும் போதத்தா லடக்கின் மேன்மேலு மெழுமென்பதுங் கருவிகளை நியதிகளைந்து தற்போதத்தையு மடக்கினான் மீட்டுங் கருவிக டோற்றுதென்பது மறிவித்தவாறுகாண்க. (யக)



இங்ஙனங் கருவிகளும் போதமுமிறந்து நின்றவிடத்துவரு மி லாபமென்னையெனின் மேற்கூறுகின்றார்.

சுட்டுப்போதங்கழன்ற சுத்தமனோமாத்திரையின்
மட்டுத்தானற்றநிட்டை வாய்க்குமாற் - கெட்டேன்
றலைச்செய்யுமாநந்தஞ் சற்றேபால்வாரி
முலைக்கண்ணிற்றோன்று முறை.

சுட்டுப்போதங்கழன்ற சுத்தமனோமாத்திரையின் - மட்டுத்தான ற்றநிட்டை வாய்க்குமாற்-கெட்டேன்-றலைச்செய்யுமாநந்தஞ்சற்றே எ - து - அனைக்கணப்போதாயினு மிதுவதுவென்று சுட்டியறியுந்த ற்போதமொழிந்த வோர்வரம்பின்றிய சுத்தமாகியநிட்டை வாய்க்கு மாயிற் கெட்டேனுண்டுப் பிரவேசிக்கும் போராநந்த கற்பமோ.

பால்வாரி - முலைக்கண்ணிற்றோன்றுமுறை - எ - து - முலையின துசிறியகட்டுவாரத்திற் பெரியபாற்கட லுதயமான முறைமைபோ ற்பரிபூரணமாய்த்தோற்றும்-எ-து.

கண்டுச் சுத்தமென்றது பஞ்சயோக மிப்பஞ்சயோகத்தி லான்ம போதமிகவுந்தேய்ந்திருத்தலி னதனை முலைக்கண்ணென்று மிங்ஙன

யிருந்தபோ தலக்கணத்திற் பழையோகநீங்கிப் பரிபூரணானந்த மநுபவமாய்த் தோற்றலி லதனைப் "பாழ்வாரி" யென்றுங்கூறினார்.

இத்திருவெண்பாவாற் கருவிகளும் போதமுமிறந்த சுத்தநிலையி னின்று லாநந்தலாப முண்டென் றறிவித்தவாறு காண்க.



ஆகாயத்தேபலவுந் தோன்றியடங்காதோ
நீகாயத்தோடமூந்தி நீங்கியரு - ளாகாதோ
வென்றுசலிப்பானே னெதிரற்றபூரணத்தே
யொன்றுமிலை காணுனக்கு.

நீகாயத்தோடழுந்தி நீங்கியரு - ளாகாதோ - வென்றுசலிப்பானேன் - எ - று - நீ காயத்தோடு பொருந்தி யிருப்பதாய்க் கருதி யிக் காயநீங்கி யெனக்கோர்காலந் திருவருள்வடிவ மாகாதோவென்றுசலித்துத் துயருறுவானேன்.

ஆகாயத்தேபலவுந்தோன்றியடங்காதோ-வெதிரற்றபூரணத்தே யொன்றுமிலை காணுனக்கு - எ - று - ஆகாயத்தினிடமாய்ச் சராசர தேகங்கள் பற்பலவுந் தோன்றிநின் றழியாதோ வதுபோ லுன்போத மோர்பொருளையு மெதிரிடாதற்றபோ தல்லை விழுங்கிநின்ற வருட் பூரணத்தி லுனக் கத்தேகாதிப் பிரபஞ்சங்களொன் று மில்லைகாணும் எ-று.

ஆகாயத்தினிடமாய்த் தோன்றி யொடுங்குங் காயங்க ளவ்வாகாயத்திற் கநன்னியமான துபோன் றும்தேகாதிகளை யானெனதென்றுற்றுநின்ற போதத் திருவருளிலழுந்திப் பூரணமாய்ப்போகத் தேகாதிப்பிரபஞ்சங்க ளன்னியமாய்த் தோன்றுமாகலி னாகாயத்திற் பலவுந்தோன்றி யடங்காதோவென்றும் பொய்யாய்த்தோற்றலி "னொன்றுமிலை" யெனறுங்கூறினார்.

இத்திருவெண்பாவா லருள்வடிவமா யென்றைக் கிருப்பனென் மாணுக்கனுக் கவ்வருள் பூரணமென்று முன் சுட்டும்போதமற்றுலனவிட நீயொரு முதலன்றென்று மறிவித் தவனதுதுயரை மாற்றியவாறுகாண்க. (உ௧)



அவனியோகப்பழக்க நீங்கற்பொருட்டுப் பழக்கவிலக்கணமெது மேற்கூறுகின்றார்.

பழக்கங்கொடியதுபார் பாறையினுங்கோழி
கிழிக்கும்பொலியைக் கிளறும் - விழித்துநம்

குருடர்க்கொளிபகையாய்க் கூசிக்கோல்போடா
ரருளைப்பகுக்கு மான்மா.

பழக்கங்கொடியதுயார் பாறையினுங்கோழி - கிழிக்கும்பொலியைக் கிளறும் - எ - து - யாவர்க்கும் பன்னாட்டொன்று தொட்டுவரும்பழக்க நீக்கக்கூடாமையினே மிகவுங் கொடிய ததனை நீ பார்த்தறிந்தியல்லதெங்ஙனமெனிற் பன்னாட் குப்பைசீய்த்த பழக்கத்தாற் கோழிகற்பாறையாயினுஞ் சீய்க்கு நெற்பொலிமேல் விடுப்பினுஞ் சீய்க்குமதென்றி.

விழித்துக் - குருடர்க்கொளிபகையாய்க் கூசிக்கோல்போடா - ரருளைப்பகுக்குமான்மா - எ - து - காசநோய்படர்ந்த குருடர் கண்ணோய்தீர்ந்து விழித்தபோதுங் கதிரொளி யிருட்பகை போலாய்க்கூசி முன்பிடித்தகோல் கைவிடா ரவர்போ லருளையடையா முன்னது விதுவென்று நானுவாய்ப் பகுத்தபழக்கத்தா லிப்போது பகுத்தற்கிடமின்றி யென்றுந் தானாயிருந்த வவ்வருளையடைந்து மான்மாவதனைப்பகுத்துநாடும் - எ - று.

சீய்க்கக்கூடாத பாறையைச்சீய்த்தல்போற் பகுக்கக்கூடாதவருளைப் பகுத்தலானுங் கிளறவேண்டுவ தின்றிநின்று தின்னுதுபொலியைக் கிளறுதல்போற் பகுக்கவேண்டுவதின்றியிருந் தருளானந்தத்தை யநுபவியா தவ்வருளைப் பகுத்தலானுங் காசமிருந்தபோது கூசிப்பிடித்தகோலை யக்காசநீங்கிக் கதிரொளிகண்டு மிவ்வொளி முன்னின்றிய விருளாய் கூசிக் கைவிடார்போலு முன்ன ராணவமறைப் பானது விதுவென்று பகுத்தபோதத்தை யிப்போ தவ்வாணவநீங்கி யருளொளிகண்டு மிவ்வருளொளியை முன்னராணவ விருளொளிபோற் பாவித்து விடாராகலினு மிங்ஙன முவமைகூறினர்.

தேகாதிபிரபஞ்சங்களையெல்லாந் திருவருளே வடிவாய்க் காணபதேயன்றி யவற்றை நானுவாய்ப் பகுப்பினு மிவ்வருளைப் பகுப்பதென்ப துங்காண்க. (௨௨)



கட்டியநாண்விட்டாலுங் கந்தகலாக்கன்றுகளைத்
தட்டிப்புறப்படுத்துந் தன்மைபோ - லொட்டொழித்து
நின்றாற்போ னீசிவமாய் நில்லென்று நீக்கமறத்
தொன்றாக்கிலொன்றிரண் டாகும்.

கட்டியநாண்விட்டாலுங் கந்தகலாக்கன்றுகளைத் - தட்டிப்புறப்படுத்துந்தன்மைபோல் - எ - து - தறியோடுங்கட்டிய தும்பைத்தெறித்து விட்டபினு முற்கட்டி யிருந்ததுபோற்கருதி யத்தறியைவிட்டு

நீங்காத கன்றுகளைக் கரத்தாற்றட்டி யோட்டி வெளியிற்புறப்படுத்து முறைமைபோல.

ஒட்டொழித்து - நின்றாற்போனீசிவமாய் நில்லென்றுநீக்கமறத் தொன்றாக்கிலொன்றிரண்டாகும்-எ-து-முற்பந்தமாயிருந்துள்ளமுப் பத்தாறுகருவிகளையும்விடுத்துத் தன்னையுந் திருவருளையுமறிவித் தவ் வருளோடுஞ் சேர்த்தியவ்வரு ளாசைவறநின்றாற் போனீயும்போத மசைவற்றுச் சிவமயமாய் நில்லென்றுகூறிச் சிவத்தைவிடத் தானொ ருமுதலென்று கருதுந் துவிதபாவனையைமாற்றி யச்சிவத்தோடொ ன்றாக்கினும்போதமொழிவாலதனோடொன்றானவான்மாபோதவசை வாலிரண்டாகுமாகலி னதனதுபோதமிருந்தவாறென்னை-எ-று.

தும்பு செறித்து விடுவித்தபோதே தாயைச்சென்றுகூடிப் பா லுண்ணுங் கன்றுபோ லோட்டொழித்தபோதே தற்போதமொழிந் தருள்வழிச்சென்று சிவத்தையடைந்து பேரின்பத்தைப்பெறும் பக் குவர்போ லாகாது "கட்டியநாண்விட்டாலுங் கந்தகலா" து நின்றக ன்றுகளைக் கரத்தாற்றட்டி வெளியிற்புறப்படுத்தித் தாயோடுஞ்சேர்த் தி முலையைப் பிடித்துண்ண விடுப்பினுமுண்ணாது மீளுமாறுபோ லொட்டொழித்தலுமன்றி யருளோடுஞ்சேர்த்தித் துவிதபாவனையை மாற்றிச் சிவத்தோ டொன்றாக்கினுமச்சிவத்தோ டிரண்டற்றிருந்தா னந்தப்பேற்றை யடையாது தற்போதவசைவா லிரண்டாகலா னிவ ர்க்கிக்கன்றுகளை யுவமைகூறினார்.

---

குரங்கைநினையா திருமென்றுகூறத்
திரும்பியதுவேதியானம் - வருங்கதைபோ
னீசிவமாய்நில்லென்றா னீங்கியதுவாய்நினைந்து
மாய்வையதுவன்றோமலம்.

குரங்கைநினையா திருமென்றுகூறத் - திரும்பியதுவேதியானம்- வருங்கதைபோல் - எ - து - ஓர்புருட னொருபேதைக்குக் குரங்கினை நினையா திருத்தியென்றுகூற வவனங்ஙனங் கூறியமாத்திரத்தின் மீண் டக்குரங்குத்தியானமே யிவனுக்குமனத்திற் குடியாயிருந்ததென் று லகத்தில் வழங்குங்கதைபோல்.

நீசிவமாய்நில்லென்றா னீங்கியதுவாய்நினைந்து - மாய்வையது வன்றோமலம் - எ - து - நீயொன்றையு மெதிரிடாது சிவமயமாய் நில்லென்றுகூறினா லங்ஙனமெதிரிடும் போதமொழிவதே யச்சிவமய மாய் நிற்பதென்றறியாது போதத்தாற் சிவத்தை யெதிரிட்டுப் பார்த் தியான் சிவமயமாயினே னாயினேனென்று கருதிவருந்துவா யிங்ஙன ங்கருதி வருந்தப்பண்ணுவதன்றோமலமாவது-எ-று.

கூரியபுத்தி புடையோனுக்கு நீ குரங்கைநிலையா திருவென்றுகூ றினாலக்கணமே யற்றினைவை யொழித்திருப்ப னதுபோலத்தீவி ரதர பக்குவனுக்கு நீ சிவமாய்நில்லென்றால் கணமே சிவமென்றுந்தானெ ன்றுங் கருதுந் துவிதபோதமொழிந்து சிவமாய்நிற்பனென் றதற் கெதிர் மறையும் வருவித்துக்காண்க.



மணிப்பாம்பிருளின் மறைந்திருக்கத்தேடுங்
கணக்காந்தற்போதத்தைக் காட்டி - புணர்த்துகினு
நீரிற்கிணறுநிழ லுயுத்தமும்போலா
மாரித்தைநீக்கி யிருப்பார்.

மணிப்பாம்பிருளின் மறைந்திருக்கத்தேடுங் கணக்காந்தற்போ தத்தைக்காட்டி - புணர்த்துகினும் - எ - து - சென்னியின்மீது மணி யையுடையபாம்பு தானிருளிடத்து மறைந்திருப்ப விருளைத்தேடு முறைமைபோலாகும் நியுன்போதத்தை முன்னிட்டருளிடத்து ம றைந்திருப்ப வருளைத்தேடு முறைமையென்று போதஞ்சீவிப்பதை க்காட்டி யருளையு முன்னை விட்டுநீங்காத பரிபூரணமென் றறிவிப்பி னுந் தெளிந்துகொள்ளாரு.

நீரிற்கிணறுநிழ லுயுத்தமும்போலா - மாரித்தைநீக்கி யிருப்பார் - எ - து - பிரளயமாய்க் கோத்துநின்ற சுத்தசலத்திற் கிணறுதொட்டு நீர்தேடு மொருவனைப்போலுந் தனதுநிழலை யெதிராய்க் கருதியத னோடு யுத்தஞ்செய்யு மொருவனைப்போலும் பின்னரு முன்போதஞ் சீவியாநிற்கு மாகலி னிப்போதத்தை நீக்கிச் சிவமாயிருப்பா ரியா வர்-எ-று.

சென்னியின்மீது மணிச்சுடரை யுடையபாம் பிருளைத்தேடுந் தோறு மவ்விருணீங்குவதன்றி நில்லாததுபோலத் தற்போதத்தை மு ன்னிட் டருளைத்தேடுந்தோறு மிவ்வருணீங்குவதன்றி நில்லாதென்ப தும் பாம்பு சென்னிமணியைப் புனைவழிக்கொணர்ந்து வாய்க்குளட க்கி னிருட்டவேண்டுவதின் றதுபோன் முன்னிட்டபோதத்தைப் பி ன்னிட்டா லருட்டேவேண்டுவ தின்றென்பது மவ்விருணிறைந்தாற் போ லிவ்வருணிறைந்திருப்பதென்பது நீர்வெள்ளமாயிருக்கவு மந் நீரிற் கிணறுதொட்டு நீர் சம்பாதிக்கத் தொடங்கினேனைப்போ லரு ளெங்கும் பிரிவற்ற பூரணமாயிருக்கவு மவ்வருளுட்டேடி யருளைச் சம்பாதிக்கத் தொடங்கினுனென்பதுந் தன்றேகவசைவா னிழலசைவ தென் றறியாததற்கோ ரசைவுவேறுளதென்று கருதி யதனோடு யுத்த ஞ்செய்வானைப்போற் றன்போதவசைவாற் கருவிகளசைவதென் றறி

ாதற்கோ ரசைவுவேறுளதென்று கருதியவற்றை யடக்கத்தொடங் கேனென்பது மிவ்வுவமைக் குறிப்புகளாற்காண்க.

இங்ஙனமெழும் போத மொழிப்பாரியாவராகலி "ஞரித்தைநீ கியிருப்பா,, னென்றார்.

மணிப்பாம்பிருளையென்பது - தற்போதத்தைமுன்னிட்டருளை ாடுதற் குவமை.

"நீரிற்கிணை,, றென்ப தருளை யேகதேசமாக நாடுதற்குவமை.

"நிழலுயுத்த,, மென்பது - தன்னையருளுக் கூறாய்க் கொடுத்து ற்கவே கருவிகளொழிபுமென் றறியாது தற்போதத்தா லவற்றைய க்கத் தொடங்குதற் குவமையெனக்கொள்க.

பழக்கங் கொடியதுபா ரென்னுந் திருவெண்பாமுத லிவை நா கு திருவெண்பாவானும் அளவில் காலந் தற்போதத்தா லத்துவித ாட்ட நிற் பழகிவருதலின் றன்போதமொழித்துச் சிவந்தோடிரண ற்றிருத்தற் குபாய மியாதுகூறினும் நீ அங்ஙனமிருத்தலும் பழக்க குறியா லான்மாக்களத் த்விதநாட்டமொழித்து நிற்றலு மிகவுமரி தல் றறிவித்தவாறுகாண்க. (உ௫)



ஆயினிப்பழக்க நீக்குமாறெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

உட்புறப்பாம்பூசனையு மியோகசமாதிகளுஞ்
சுட்டறிவுகெட்டவர்போற் றாக்குவதும் - விட்டுப்
பகல்விளக்குமூச்சிப் படிகமும்போற்பாச
மகலநிற்பார்க்காரசரி யொப்பார்.

உட்புறப்பாம்பூசனையு மியோகசமாதிகளுஞ் - சுட்டறிவுகெட் வர்போற்றாக்குவதும் - விட்டு - எ - று - அந்தரியாகம் - பகிரி யா ாய்ச்செய்யும் பூசைகளு மாருதார பாவனை யோகசமாதிகூடுதலு துவதுவென்று சுட்டியறிபுந் தற்போதங்கெட்டுப் பரமானந்தநித்தி பன்னு மெய்ஞ்ஞானிகளைப்போல் மனத்தாற் பிராணவாயுவை ஙமித்துப் பிரமரந்திரத்தி லதனுண்மைமறைந்து தாக்குவதுமாகிய வற்றை யெல்லாம் பொய்யென்றுவிட்டுநீங்கி.

பகல்விளக்குமூச்சிப் படிகமும்போற்பாச - மகலநிற்பார்க்கார் யொப்பார் - எ - று - பகற்காலத்தேற்றிய தீபம்போலு மூச்சிக் த்துப் படிகம்போலுங் கருவிகளை முப்பத்தாறு மகன்றுபோகத் வருளிலசைவற நிற்போர்க்கிணை யொப்பாரியாவர்-எ-று.

இருளிற்றோன்றியதுபோலவன்றிச் சூரியப்பிரகாசத்தால் மூத கடர் தொளிகெட்ட பகல்விளக்குப்போல் மூன்ன-ாணவவந்தகா

ரத்திற் றேன்றியதுபோலன்றி யருட்பிரகாசத்தால் மூதல்கெடாது போதங்கெட்டுநிற்றலிற் "பகல்விளக்குப்போ,, லென்றும் பொழு தேறுங்காலஞ் சாயங்காலத்தன்றி யுச்சிக்காலத்திற் பஞ்சவன்னங்களை யுங் கவராத படிகம்போலச் சகலகேவலத்தன்றிச் சுத்தமாகிய வரு ணோ கருவிக ளொன்றேனுந் தாக்கற்றுநிற்றலி "னுச்சிப்படிகம் போ,, லென்றும் "பாசமகல நிற்பா,, ரென்றுங்கூறினார்.

பகல்விளக்கென்றது தற்போதஞ் சிவியாதருளி னிற்றற்குவமை யு "முச்சிப்படிகம்போ,, லென்றது கருவிகளொன்றேனுந் தாக்கற்று நிற்றற்கு வமையுமாகக்கொள்க. (உ௬)

இத்திருவெண்பாவானி யிந்நாட்பழகிய யோகப்பழக்கத்தைவி ட்டு ஞானயோகத்திற் பழகுதியெனிற் சிவத்தைப் பெறலாமென்றறி வித்தவாறு காண்க.



ஆயி னொன்றையுங் கருதாது சும்மாநிற்பிற் சிவத்தையடைவதெ ங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

இருட்கேவலத்தின் றெழுப்பியெதிரிட்ட
மருட்கேவலசகல மாற்றித் - திரிச்சுடர்போற்
றன்னறிவுதின்னிக்குத் தானுணவாய்ப்போவதல்லா
லுன்னுதலேயோட்டுதல் காணும்.

இருட்கேவலத்தின் றெழுப்பியெதிரிட்ட - மருட்கேவலசகல மாற்றி - எ - து - கருவிகண் முப்பத்தாறுமிறந் தான்மபோதமு மி றந்தந்த காரமாயிருந்த கேவலத்தினின்று மிப்போது தனதருட்சத்தி யாற் கருவிகளைக் கூட்டப்பண்ணித் தற்போதத்தை யெழுப்பிச் சுருதி குருவாகிய படர்க்கை முன்னிலையாய்நின்று ஞானசமாதிகூடப் பண் ணி யத்தற்போதத்திற் கெதிரிட்ட மருளாகிய கேவலசகலங்களைப் பூ ரணமாகிய தன்மையாய் நின்றுமாற்றி.

திரிச்சுடர்போற் - றன்னறிவுதின்னிக்குத் தானுணவாய்ப்போவ தல்லா - லுன்னுதலேயோட்டுதல்காணும் - எ - து - விளக்குத்திரி மேலேறிய சுடர் சிறுகச்சிறுகத் தின்றுவந்து முடிவி லத்திரிமுழுதை யும் விழுங்குதல்போலத் தன்னை யருளாலறிவித்தபோது தானிவ்வரு ள்வழி வரவரச் சிறுகச்சிறுகத்தின்று முடிவிற் றனதுபோதமெல்லாம் விழுங்கித் தானாயிருக்குஞ் சிவத்திற்குத் தான்புசிப்பாய்ப் போவதன் றித் தான் வேறொரு முதலாய்நின் றச்சிவத்தை யெதிரிட்டு நாடுதலே யதனை நீக்குதல்-எ-று.

கருவிகளும் போதமுமிறந்து கேவலவிருளிற்கிடந்த நீ இஞ்சிக் கியலுகலி னவ்விருளை நீக்கிக் கருவிகளைக் கூடமாட்டாய் கருவிகள் சடமாகலி னுன்னை யவைவந்து கூடி யெழுப்பமாட்டா வாகலிற் சுதந்தரமாயுள்ள வருட்சத்தி கருவிகளைக்கூட்டி யுன்னையெழுப்ப விக்கருவிகளோடுங்கூடி நீ சுகிர்தனுவைவ இங்ஙன முனக்குப் பெத்தத்திசையிற்சுதந்தரமின்மைபோன் முத்தித்திசையினுமின்றாகலி னீயுன் போதத்தா லொன்றையுமெதிரிடாதசைவற நிற்றியெனினச்சிவந்தானே யுன்னைவிழுங்கிக்கொண்டு நிற்குமென்றறிவிக்கவேண்டி "யிருட்கேவலத்தின்றெழுப்பி,, யென்றுந் "தன்னறிவுதின்னி,, யென்றுங்கூறினார்.

இன்றெழுப்பியென்றதனு லனுதியிலெழுப்பியது மிவ்வாறெனக்கொள்க.

இத்திருவெண்பாவாற் சுட்டறிருந்தாலன்றிச் சிவத்தைப்பெறக் கூடாதென்பது மங்ஙனநிற்பிற் சிவந்தானே விழுங்கிக்கொள்ளுமென்பது மறிவித்தவாறுகாண்க. (உஎ)



ஆயினீ ரிங்ஙனங்கூறியவாற்றான் வேதாந்திநிலையே நன்றென்றமாணுக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

அறிந்ததெல்லாம்பொய்யென்ற வத்துவிதியார்க்கும்
வெறும்பாழிலூன்றல் விடாது - பிறந்திறப்பை
யானுனதொழிவு மாதந்தமாமுதிப்பும்
போனாற்காணுன்பிறப்பும் போம்.

அறிந்ததெல்லாம்பொய்யென்ற வத்துவிதியார்க்கும் - வெறும் பாழிலூன்றல்விடாது - பிறந்திறப்பை - யானல் - எ - து - தம்மாலெதிரிட் டறிந்ததெல்லாங் கண்ணினாலறிந்த காட்சியெல்லாங் கண்ணுகாதவாறுபோ லியாமல்லோ மிவை மித்தையாரூபமென் றவற்றை நீக்கிநின்ற வேதாந்தியாருக்கு மங்ஙன மெதிரீடாய்த் தோன்றுவன யாவுமின்றிச் சர்வசூனியம யிருந்த பிரமம் நாமென் றிச்சூனியத்திற்றற்போத மூன்றிநிற்ற லவர்க்கும் விடாதாக்லி னுனியவர்போ னிற்றியாயினுஞ் செனனமரணப்படுவை இங்ஙனநிற்பினு முற்பத்திநாசமுளவென்றீ ரினியுற்பத்திநாசமின்றாய முத்தியாதெனின்.

உனதொழிவுமாதந்தமாமுதிப்பும் - போனாற்காணுன் பிறப்பும் போம் - எ - து-உனதுபோத வொழிவாகிய பரையோகமு மிப்பரையோகத்தின்மேலிடு மானந்தோதயமும்போனு லப்போதுன் பிறப்பும்போங்காண்-எ-று.

பணையோகமு மாநந்தப்பேறு மான்மாவிற் கநுபவமாய்த்தோற்றலானு மவ்விடங்களி லான்மாவிற்குச் சிவத்தோ டத்துவிதமின்றாகலானும் “போனாற்காணான் பிறப்பும்போ,, மென்றா ரவைபோன விடஞ் சுகாதீதம்.

இத்திருவெண்பாவால் வேதாந்திய ரிங்ஙனநிற்றலி னவர்க்கும் பிறப்புநீங்காதென்பதும் பிறப்பிறப்பு நீங்குமிட மிவ்விடமென்பது மறிவித்தவாறுகாண்க. (௨௮)



அறிவுக்கறிவா யகண்டமாய்நின்ற
நிறைவைக்குறைய நினைந்து - மறவையுமாய்த்
தாமேசிவத்தைப்படைத் தழிப்பார்தற்றோடம்
போமாறிலைபிறப்பேன் போம்.

அறிவுக்கறிவாயகண்டமாய்நின்ற - நிறைவைக்குறைய நினைந்து - மறவையுமாய் - எ - து - உயிர்க்குயிராய் நின்றறிவிக்குமறிவாய் கண்டிதமெல்லாங் கடந்ததாய்த் திரிவின்றியோ ரியல்பிற்று யெக்காலமும் விளங்காநின்ற பரிபூரணசிவத்தை யேகதேசவடிவாய்த் தற்போதத் தாற்றியானித் தங்ஙனந் தியானித்தவடிவை மறந்துபோந் தன்மையுடையருமாகி.

தாமேசிவத்தைப் படைத்தழிப்பார்தற்றோடம் - போமாறிலை பிறப்பேன்போம் - எ - து - தம்மைப் படைத்தழிக்குஞ் சிவத்தைத் தாமே படைத்தழிப்பாராகலி னிவரிங்ஙனஞ்செய்தலான் வருந்தமது பாவமே நீங்குமாறிலையெனிற் பிறப்பென்னை நீங்கும்-எ-று.

தியானித்தபோது வடிவுதோன்றியும் விடுத்தபோ தவ்வடிவுநீங்கியும் வருதலிற் “படைத்தழிப்பா,, ரென்றுஞ் சிவத்தைப்படைத்தழிப்பது தோடமாகலிற் “றோடம்,, மென்றுங்கூறினார்.

இத்திருவெண்பாவா லியோகியினது கருத்தையெடுத்துக்காட்டி யிங்ஙனம் ஞானபக்குவன்செய்வது பாவமென்றறிவித்தவாறுகாண்க.



மறப்புநினைப்பு மயக்கும்விகற்பும்
வெறுப்பும்விருப்பும் விடாம - லிறப்பேனைப்
பானுவும்வேதியும்போற் பார்த்தும்பரிசித்தும்
ஞானபத்தன்றா னாக்கினான்.

மறப்புநினைப்பு மயக்கும்விகற்பும் - வெறுப்பும்விருப்பும்விடாம - லிறப்பேனை - எ - து - மறப்புநினைப்புமாயுள்ள கேவலமுஞ் சக

லரு மாறிமாறிவரலாற் றேகாதி பிரபஞ்சங்கண்மேல் விருப்பும் வெறுப்புஞ் செனனங்கடோறும்விட்டு நீங்காமற் றுன்பதீதைய நுபவிக்கச் சிதைக்குமதனை யானவத்தா லின்பமெனக்கருதி யிறுமாந் து கொண்டிருப்பேனை.

பானுவும்வேதியும்போற் பார்த்தும்பரிசித்தும் - ஞானபந்தன் றுணுக்கினன் - எ - து - பூதவிருளை நீக்கும்பானுவையுந் தன்னைச்சேர்ந்த செம்பைப்பொன்னுக்கும் பரிசன வேதியையும்போன்று தமது ஞானப்பிரகாச நோக்கத்தாற்பார்த்துங் கரசரணங்களாற் பரிசித்து மும்மலங்களையுநீக்கித் திருவருளாலெடுத்துத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் தமதுதிருவடியி லொன்றுக்கினார்-எ று.

தானல்லாததேகத்தை யானென்றுந் தனதல்லாதபோகத்தை யென்தென்றுங் கருதப்பண்ணுவது மயக்கமாத்தேகபோகங்களில் வெறுப்பும் விருப்பும்வரச்செய்வது விகற்பமாகலி னிவற்றைத்தொடர்ந்து நின்றிருவினைகளு மிவ்விருவினைகளாற் பிறப்பிறப்பும்விடாதுவரலான் மயக்கும்விகற்பும் வெறுப்பும் விருப்பும் விடாமலென் றிம்முறைவைத்துக்கூறினார்.

ஞானதீக்கைபண்ணும்போது கிருபாநோக்கம்வைத்துத் திருவடிசூட்டவேண்டுமாகலிற் "பார்த்தும்பரிசித்து" மென்றார்.

அங்ஙனம்பண்ணுந் தீக்கையிற் பாவனையுமிருத்தலி னதுகூறாரயினு ரப்பாவனையாற் றம்மோடயிக்கும் பண்ணிக்கோடலிற் றுணுக்கினுனென்றார்.

இத்திருவெண்பாவாற் றமதாசாரியார் தீக்கையினுற் றம்மைத்திருவடிக்கண்ணைக்கியமாக்கிய முறைமையறிவித்து நீயு ஞான்றீக்கைபண்ணிக்கொள்ளுதியென் றறிவித்தவாறுகாண்க. (௩௰)



மூன்றுவது

இயோகக்கழற்றி.

முற்றிற்று.



ஆக திருவெண்பா - ௱உக.

திருச்சிற்றம்பலம்.





உ

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

# கிரியைக்கழற்றி.

தத்துவத்தையெல்லாஞ் சடமென்றுதாக்கற்றுச்
செத்தசத்தின்கண்போற் றிரியாது - வைத்தெடுத்தும்
பூரணமேயென்றழைத்துந் தேடிப்புரண்டழுதுங்
கோரணிகாட்டும் பேய்க்குவால்.

தத்துவத்தையெல்லாஞ் சடமென்றுதாக்கற்றுச்-செத்தசத்தின் கண்போற்றிரியாது - எ - து - தத்துவங்களையெல்லா மிதுவிதுவென் று தன்னாலறியப்படலானுந் தன்னை யவைகளறியாமையானு மவநி றைச்சடமென் றறிந்தவைகளொன்றோடுந் தாக்கற்றுச் செத்தாட்டுக் கண்போற்சுட் டறிவுகெட்டுச் சும்மாய்த்திரியாமல்.

வைத்தெடுத்தும் - பூரணமேயென்றழைத்துந் தேடிப்புரண்டழுதுங் - கோரணிகாட்டும்பேய்க்குவால் - எ - தி - தற்போத நாசத்திருந்த பூரணசிவத்தை யப்போதத்தா லோர்வடிவிலா வாகனம்பண்ணி யதனைமீட்டுந்தியானம்பண்ணி யிங்ஙனம் பூசனைபுரிந்து மவ்வடிவைப்பரிபூரண சொரூபமேயென் றேவிட்டழைத்து மச்சிவமெங்குமில்லை மகாத்தலங்களி லுண்டென்றுகருதி யத்தலங்களிற் றேடிச்சென்று நிலத்தில்வீழ்ந்து புரண்டழுது மிங்ஙனங் கிரியையாளரென்னும் பேய்க்கூட்டங்கள் கோரணிக்கூத்தாடிக்காட்டும்-எ-று.

"செத்தசத்தின்கண்" உயிர் அசத்தின்கண்போ லிருப்பினுமிதனது சுட்டறிவதற் கின்மைபோன் மெய்ஞ்ஞானிகள் பிரபஞ்சிகள் போ லிருப்பினு மிவரது சுட்டறி வவர்க்கின்றியிருப்ப ரவர்போ னீருமிராதென்னை செய்கின்றீரென் றவரது நடையை யிவர்க்கறிவிக்கவேண்டி யந்நடையின்றிய விவரைப்பார்த்துச் "செத்தசத்தின்கண்போற்றிரியாது" என்றார்.

சுட்டறிவு கெடுத்துநிற்ப தருள்.சுட்டச்செய்வது மருளாகலினிவரைப்பேய்க்கூட்டமென்று மிவர்தொழிலைக் கோரணிக்கூத்தென்று மிவர்க் கான்மலாபமின்மையாற் பிறர்க்குக்காட்டுமென்றுங்கூறினார்.

இத்திருவெண்பாவாற் கிரியையாளரைப்பார்த்து ஞானிகளுடைமையை யெடுத்துக்காட்டி யிவரைப்போனீருஞ் செய்யாதென்செய்கின்றீரென் றிகழ்ந்து கூறியவாறுகாண்க். (௪)



கிரியைக்கிளைத்துவந்து கேட்டவர்க்குச்சும்மா
திரியச்சுகம்விளைத்த சீமான் - குருவன்றிச்
சற்றேபதைப்பத் தரினுஞ்சகம்படைக்கக்
கற்றானுங்காலனுமாங் காண்.

கிரியைக்கிளைத்துவந்து கேட்டவர்க்குச்சும்மா-திரியச்சுகம்விளைத்தசீமான் - குருவன்றி - எ - து - மனத்தாற் பாவிக்குந் தொழிலும் வாக்காற் றோத்திரம்பண்ணுந் தொழிலுங் காயத்தா லருச்சனையாகச் செய்யுந்தொழிலுமாகிய விக்கிரியைகளான் மிகவு மதத்துமெலித் திவற்றைவெறுத்து ஞானத்தைவிரும்பி வந்தடைந்து கேட்டவதி பக்குவர்க் கிம்மன வாக்குக் காயங்க ளசைதற்கேதுவாய தற்போதயசைவை யொழித் தருள்வடிவாக்கி யெனக்கின்னதுவேண்டுமென்ப தொன்றுமின்றிச் சும்மா சஞ்சரிக்கவைத்துப் பேரின்பத்தையுண்டாக்கிய விவ்வானந்தச்செல்வனே ஞானகுருவன்றி.

சற்றேபதைப்பத் தரினுஞ்சகம் படைக்கக் - கற்றானுங்காலனுமாங்காண் - எ - து - அப்பக்குவர்க்கோ ரணுவளவேனுந் தற்போதமசைதற்கேதுவாய வுபதேசங்களைக்கொடுப்பினு மக்குரு சகத்தைப் படைத்தற்குக் கற்றுள்ள பிரமனு மிவனாற் படைத்துள்ள சகத்திலுண்டாகிய வுடல்களை யழிக்குங் காலனுமாவனன்றி ஞானகுருவலனென்றறிதி-எ-று.

போதம் படைத்தற் கேதுவாகிய வுபதேசங்களைக்கூறலிற் சகல கேவலங்கணீங்கா விவை நீங்காமையாற் பிறப்பிறப் புண்டாமாகலிற் "கற்றானுங்காலனுமாங்கா" ணென்றார், சீவன்முத்தனைப்பூதலத்திற்சஞ்சரித்தலில் திரியவென்றார்-எ-று.

இத்திருவெண்பாவான் ஞானபக்குவனுக்கு முன்னிருந்த சரிதா திவாதனைகளை யெல்லாம்போக்கித் தற்போதம் பதையாது மவுனமாயிருக்கும்படி போதிப்பவனே ஞானகுருவென்றும் போதஞ்சிறிதேனும் பதைப்பக்கூறு மவன்குருவலனென்று மறிவித்தவாறுகாண்க. ()

அக்கினிதேவற்க சீர்த்தியென்றுசுக்கைாத்து
வைக்கோலான்மூடி மலையடுப்பிற் - றக்கியாய்
நீரைக்கழுவி நிழலைப்புதைத்தளப்பா
ராரைப்போல்வா ரென்னலாம்.

அக்கினிதேவற்க சீர்த்தியென்றுசுக்கைாத்து - வைக்கோலான்மூடிமலையடுப்பிற் - றக்கியாய் - எ - து - அக்கினிதேவனுக் கசீரணம் பிறந்ததென்று கருதியது போதற்குச் சுக்கைாத்துக்கொடுத்துச் சீதளம்பிறந்ததென் றவனைவைக்கோலான்மூடி யவனுக்குமுன்னோயின்

னஞ் செய்யாதிருந்தோமென்று மலைவந்து தம்மேலடுத்ததுபோ லுந் துக்கத்தையுடையவராகி.

நீரைக்கழுவி நிழலைப்புதைத்தளப்பா - ரரைப்போல்வா ரென்னலாம் - எ - து - நீரைநீராற்கழுவித் தமது நிழலை மண்ணுட்புதைத் தந்நிழலைத் தம்மடியாலளந் திவ்வளவென் றளவிடுவாரை யாவரைப் போல்வாரென்று கூறலாம்-எ-று.

எவரெவர் புசித்த புசிப்புக்களையெல்லா மவரவர் வயிற்றாடிருந்து சீரணிக்கப்பண்ணுமக்கினிதேவனுக் கசீரணம்பிறந்ததென் றுபசரிக்குமுறைமைபோ லுயிர்கட்கெல்லா முயிராயிருந்தூட்டி யுறக்கி யுபசரிக்குஞ் சச்சிதானந்த ரூபமாயுள்ள சிவத்திற்கோர் குறையுள்ளதுபோற்கருதி அட்டவிதார்ச்சனை சோடசவுபசாரங்களைச்செய்தலா, “வக்கினிதேவற் கசீர்த்தியென்று சுக்கரைத்து வைக்கோலாண்டிடு” யென்றும்.

இன்றைக்கிந்நாழிகையளவும் பூசைநைவேத்திய வுபசாரங்களைச் செய்திலமென்று மனத்திற்றுயருறலாற் றுக்கியாயென்று மசுத்தத்தையெல்லாஞ் சுத்தமாக்கு நீரைக்கழுவிச் சுத்தமாக்கத் தொடங்குவான்போன்று தன்னைச்சேர்ந்த வுயிர்களினது மும்மலங்களையுந் துடைத்து நின்மலமாக்குஞ்சிவத்தை நீராட்டி நின்மலமாக்கத்தொடங்கினராகலி “னீரைக்கழுவி” யென்றும் புதைப்பதற்ககப்படா நிழலைப்புதைக்கத்தொடங்கினாற்போலொன்றிற்கு மகப்படாதபொருளைத் தற்போதத்தா லகப்பட்டதுபோற்பாவித் தாவாகனம்பண்ணலி “னிழலைப்புதைத்” தென்றுந் தனது நிழலையளந்து செல்லுந்தோறு மந்நிழல்கடந்து கடந்துசேறல்போ லிங்ஙனமிருக்குமென்று சிவத்தைத் தியானிக்குந்தோறு மத்தியானங் கட்கப்பாலப்பாற்சேறலி னிழலளப்பாரென்றுங் கூறினார்.

சிவத்தின துண்மையைக் கேட்டிருந்து மிங்ஙனஞ் செய்தலா “லரைப்போல்வாரென்னலா” மென்றார்.

இத்திருவெண்பாவான் மலரகிதமா யாநந்தவடிவாயிருந்தசிவத்திற்கு மாயாகாரியமாகிய நீராதி யுபசாரங்களாற் சுத்தமுஞ் சுகமுமுண்டாகாதென்பது மதனைப் போதத்தா லளவிட்டறியக் கூடாதென்பது மறிவித்தவாறுகாண்க. (௬)



நீர்க்கும்வழிக்குந் துயரில்லைநீந்திநடந்
தார்க்குத்துயரென்றறிவறியா - ரூர்க்கருகா
யாற்றுக்குவாய்கட்டி யம்பார்த்துக்கேணியிட்டுக்
காற்றுக்குக்காற்பிடித்தல் காண்.

நீர்க்கும்வழிக்குத் துயரில்லைநீந்திநடந் - தார்க்குத்துயரென்றறி வறியா - மூர்க்கருமை-எ - து-வெள்ளமாய் நிறைந்துள்ள நீரிற்குமோ ரூர்க்குச்செல்லும் வழிக்குந் துன்பமேதுமில்லை யவ்வெள்ளத்தை நீந்திச்செல்வோர்க்கு மவ்வழிநடந்து செல்வோர்க்குந் துன்புமென்ற றிவதுபோலப் பூரணமாய்மவுனமா யாநந்தமாயிருந்த சிவத்திற்கோர் துன்பமுமின்றதற்கோர் துன்பமுளதுபோற்கருதிப்பூசைநைவேத்தி யவுபசாரங்களைச்செய்யத்தொடங்குமெமக்கே துன்பமென்றறிந்திங் ஙனஞ்செய்யும் பூசனையாதிகளைவிட்டு நீக்கி யச்சிவத்தை யறிவித்தற் கேதுவாய ஞானசாரியனையடைந்து திருவருண்ஞானத்தை யறியாத கிரியாகுருவாகிய துற்சனர் பிறர்க்குபதேசம்போற் கூறுமுறை.

யாற்றுக்குவாய்கட்டி யம்பரத்துக்கேணியிட்டுக் - காற்றுக்குக் கால்பிடித்தல்காண் -எ - து - பிரளயமாய்ச்செல்லு மாற்றுக்கு வாய் கட்டியதனையடக்கச் செல்லுதல்போலு மாகாயத்தின்கண் ணேணிநா ட்டியிதன்மேலேறி யதனைப்பிடிக்கச் செல்லுதல்போலுங் காற்றுக் குக்கால்பிடித்தன்முதலிய வுபசாரங்களைச் செய்யச்சொல்லுதல்போ லுமாங்காண்-எ-று.

மலைக்கணின்றுகடலளவு மூடுருவிக் கோத்துநின்ற வாற்றுக்குவா ய்கட்டி யடக்கச்சொன்னதுபோற் பிருதிவிமுதன் முப்பத்தாறுகரு விகளையு மூடுருவிப் போராநந்தக்கடலாய் நிறைந்திருந்த சிவத்தை போர்வடிவத்தா வாகனம் பண்ணச்சொல்வதனை "லாற்றுக்குவாய்கட் டி;, யென்றும்.

ஏணிநிற்றற்கு மதன்மேலேறிச் செல்வோனுக்கு மிடங்கொடு த்து நின்றவாகாயத்தை யவ்வேணிமேலேறிப் பிடிக்கச் சொன்னது போ லத்தரியாக பூசைக்குத் தான்சொலுந் தானத்திற்கு மத்தான த்திருந்து பூசனைசெய்வோனுக்கு முட்புறம்பாய் நிறைந்துள்ள சிவ த்தை இங்ஙன மிருப்பதென்றறியா தப்பூசனையாலறியென்று சொல் வதனை "லம்பரத்துக்கேணியிட்,, டென்று மருவமாயிருந்த காற்றிற் குக்காலேயின் றஃதங்ஙனமிருப்பவு மதற்குக்கால்பிடித்தன் முதலிய வுபகாரங்களைச் செய்யச்சொல்வதுபோ லுருவமருவ முருவருவங்க ளையெல்லாங்கடந்து நின்றசிவத்திற்கு வடிவேயில்லை, இஃதிங்ஙனமி ருப்பவு மிதற்குச்சோடசாதி உபசாரங்களைச் செய்யச்சொல்வதனைக் "காற்றிற்குக்கால்பிடித்தல்,, என்றுங்கூறினர். உபசாரஞ்செய்தலைஇரு வகைப்பூசைக்கும் பொதுவாகக்கொள்க.

இத்திருவெண்பாவாற் கிரியாகுரு வுபதேசத்தா லான்மலாபமி ன்றென் றறிவித்தவாறுகாண்க.



ஆயின் ஞானிக்குக் கிரியைசெய்ய வேண்டாவோவெனின் மேற் கூறுகின்றார்.

*ஆகாயம்போவார்க்கு மாவிகையோவாழ்கடலோ*
*மீகாமன்போற்றிரிய வேண்டுமோ - யோகிக்குங்*
*கன்மமோபூரணன்காண் காலமுமாகாயமும்போ*
*யென்னதொழிலை யியற்றும்.*

ஆகாயம்போவார்க்குமாவிகையோவாழ்கடலோ-மீகாமன்போற்றிரிய வேண்டுமோ - எ - து - ஆகாயகமனம் பண்ணுவோர்க்கோர் பற்றுக்கோடோ வவ்வாகாயமாழ்கடலோவிவ்வாழ்கடலிற்செல்லுமீகாமனைப்போற் பற்றுக்கோடுபற்றி யோர்துறை சார்தற்பொருட்டுத்திசைநாடி யிங்ஙனஞ்சுழல வவர்க்குவேண்டுமோ வதுபோல.

யோகிக்குங்- கன்மமோபூரணன்காண் காலமுமாகாயமும்போ-யென்ன தொழிலையியற்றும் - எ - து - சிவயோகி யானந்தபூரணனாகவிற் றேகாந்தனாயிருந்துள்ள கிரியையாளனைப்போ லவனுக்குங்கிரியைசெய்யவேண்டுமோ வஃதன்றிக் காலமுமாகாயமுந் தாமிருந்தபடியிருப்பத் தம்மிடத்திற்பிறபொருள்க டொழிற்படுவன வன்றித்தாம்போய்ச்சென்றியாதுதொழிலைச் செய்யுமதுபோற் பூரணனாகியவச்சிவயோகி சந்நிதானத்திற் கருவிக டொழிற்படுவனவன்றித் தானொருகருவிகளோடுங்கூடித் தொழிற்செய்யான்-எ-று.

ஆகாயகமனம் பண்ணுவோன் றனினைத்ததானத்தின் வாயுவினாற் சென்றிருத்தல்போலச் சிவயோகி தான்கருதிய வீட்டையருளாலடைந்திருத்தலின் "ஆகாயம்போவார்க்கு மாவிகையோ" வென்றும் ஆழ்கடலிற்செல்லு மீகாமனுக்குக் கப்பலாகிய பற்றுக்கோடுபற்றி யோர்துறைக்கண் சார்தற்பொருட்டுத் திசைநாடிச் செல்லவேண்டுமென்பதுபோலக் கிரியாவானுக்கோர் வடிவைச் சிவமாய்ப்பாவித்தோர் பதவியையடைதற்பொருட் டதற்கு விதிமார்க்கமா யருச்சனையாதிகளைச் செய்யவேண்டுவதுபோ லவர்க்குச்செய்யவேண்டுவதின்றாகலின் "மீகாமன்போற்றிரியவேண்டுமோ" வென்றுங்கூறினார்.

சிவயோகி தானறிவாய்யு மானந்தஞ் சிவமாயுங்கண் டறிவாகியதானந்தமாகிய சிவத்திற்கலந்திருப்பன் கிரியாவான்றன் றேகமாயுஞ்சிவஞ் சிலையாதிகளாற்செய்யு மோர்வடிவாயுங்கண் டதனைத் திரிகரணங்களால் வழிப்பட்டினிமே லோர்பதவியையடையக்கருதியிருப்பன்கலி னிவரிருவருக்கு மிங்ஙன் றுவமைகூறினார். (௬)



நெருப்பில்விறகுதியா னெய்யிற்பாறோன்று
வருக்கனிருளையடர்த்தாற்போன் - மருட்கெடுத்த
ஞானத்தின்பேர்கிரியை நாசமெனின்ஞானிகளு
மூனத்தொழிலுழைப் பாரோ.

நெருப்பில்விறகுதியா நெய்யிற்பாறோன்று - வருக்கனிருளைய டர்த்தாற்போன்-மருட்கெடுத்த - ஞானத்தின்பேர்கிரியைநாசமெனி ன் - எ - து - நெருப்பிற்கண்விறகு தோன்றாததுபோலு நெய்யிற் பால்தோன்றாததுபோலு மாதித்தன் பூதவிருளை யழித்தெழுந்தாற் போன் மும்மலமாகிய விருளை யழித்தெழுந்த ஞான மவற்றினதுகா ரியமாகிய கிரியையுந்தோன்றா தழிக்குமாகலினிந்த ஞானத்தின்பேர் கிரியாநாசமென்று வேதாகமங்கள் கூறுமெனின்.

ஞானிகளு- மூனத்தொழிலுழைப்பாரோ - எ - து- இந்தஞான த்தைப்பெற்றிதுவேவடிவாயிருந்துள்ள மெய்ஞ்ஞானிகளுங் குற்ற ம்பொருந்திய கிரியைத்தொழிலைச் செய்வாரோ செய்யார்-எ-று.

விறகையழித் தெழுந்த நெருப்பில் விறகும் பாலையழித் தெழுந் தநெய்யிற் பாலுந்தோன்றாததுபோற் கிரியை யழித்தெழுந்தஞான த்திற் கிரியை தோன்றாதாகலி னிங்ஙன முவமைகூறினார்.

கிரியைப் பிறவித்துன்பத்திற் கேதுவாகலானு மதனு லான்ம லாபமாகிய வாநந்த மின்மையானு "மூனத்தொழி" லென்று "மூ ழைப்பாரோ" வென்றுங்கூறினார்.

இவையிரண்டு திருவெண்பாவானும் ஞானிக்குக் கிரியைசெய்ய வேண்டுவ தின்றென் றறிவித்தவாறுகாண்க. (௬)



கிரியையான்ஞானங் கிடைத்தாலுங்கேடு
கருவால்வருவதுபோற் காணு - மொருகோடி
சூரியனைக்கூரிருளா லேசுருட்டனீரகில
காரணனைத்திண்ட நினைக்கை.

கிரியையான்ஞானங் கிடைத்தாலுங்கேடு- கருவால்வருவதுபோ ற்காணும் - எ - து - கிரியைத்தொழிலான் ஞானங் கிடைத்ததாயினு மந்தஞானத்திற்குக் கெர்ப்பத்தின்கண் ணுற்பத்தியாய் வரும்பொரு ள்கள்போற் கேடுண்டா மஃதன்றி.

ஒருகோடி-சூரியனைக்கூரிருளாலேசுருட்டனீரகில- காரணனைத் தீண்டநினைக்கை - எ - து - ஒருகோடி சூரியனை மிகுந்தவிருளினாற் சுருட்டிப் பிடித்தல்போலுஞ் சடசித்துக்களாயுள்ள பிரபஞ்சங்களை யெல்லாங் கடந்துநின்று மவற்றை நடத்துங் காரணனாகியிருந்த சிவ னை நீருமதுகிரியையாற் றொடர்ந்துபற்றக் கருதல்-எ-று.

சரிதைகிரியா யோகங்கண் ஞானாசாரியனை யடைதற்குப் பக்குவமாக்குவனவன்றி ஞானத்தைக்கொடாதாயினு முன்விட்டகுறையாற்கிரியை யநுட்டிக்குங்காலை யோர்கால் ஞானந்தோன்றிற்றாயினு மத்தஞானம் ஞானாசாரியராற் பெறுமையாலுந் தான்செய்யுங்கிரியைமேலிட்டாலு நிலைபெறாது மறையுமாகலின் "கிரியையான்ஞானங்கிடைத்தாலு" மென்றுங் "கருவால்வருவதுபோற்கேடுண்டா" மென்றுங்கூறினார்.

ஞானத்தாற் சிவத்தைப் பெறவேண்டுமென்ப தறியாது மாயா காரியமாகிய கிரியையா லதனைப்பெறத்தொடங்கலி "னொருகோடி சூரியரைக் கூரிருளாலே சுருட்டலென்" றுவமைகூறினார்.

கிரியையேதுவான் ஞானம் வந்ததாயினு நண்டிப்பிறந்தவியத மதுகருவா னாசமாவனபோலந்தஞானமேலிட்டாற் கிரியைகெடுமென் பதுமாம்.

இத்திரு வெண்பாவாற் கிரியை யநுட்டிக்குங்காலைத் தெய்வகதியாய் ஞானந்தோன்றிற்றாயினு மக்கிரியைமேலிட்டா லந்தஞானம் நிலைபெற்றுநில்லாது மறையுமென் றறிவித்தவாறுகாண்க. (௭)

---

சுகாதீதம்வேண்டிற் றொழில்செய்வோமென்று
னகாரோதுயில்வார் நடந்தோ - விகாரமெனச்
சாத்திரமும்பூசைச் சமாதிகளுஞ்சார்போதக்
கோத்திரங்காண்மாயக் குழாம்.

சுகாதீதம்வேண்டிற்றொழில்செய்வோமென்று - னகாரோதுயில்வார்நடந்தோ - எ - து - ஆநந்தாதீதமாகிய வீட்டையவிரும்பி னதனையறிவிக்கும் ஞானாசாரியனையடைந்தருண் ஞானம்பெற்றிவ்வருண் ஞானத்தா லவ்வீட்டையடையாது வித்தக கிரியைத்தொழிலான் அவ்வீட்டையடையாமென்றுகருதி யக்கிரியைகளைச் செய்வோமெனின் மெய்ஞ்ஞானிக ணகையாரோ அஃதென்னெனி னித்திரைபண்ணவேண்டினோ ரோரிடத்துப் படுத்துக்கொண்டு நித்திரைபண்ணுவதன்றி யோரூர்வழிநடந்து சென்றோ நித்திரைபண்ணுவா ரஃதன்றி.

விகாரமெனச் - சாத்திரமும்பூசைச் சமாதிகளுஞ்சார்போதக் கோத்திரங்காண்மாயக்குழாம் - எ - து - ஞானிகளோடு மாறுபட்டது போன்று நீரோதுஞ்சாத்திரமு மந்தரியாக பூசையிலோர் வடிவைத் தியானித்து நீர் சமாதிகூடுதலு முமது சார்போதத்தின்கூட்டமுமாயைக்கூட்டமுமவைகாண் - எ - று.

போதவொழிவினின்ற சுகாதீதத்தை விரும்பினோர் கருவிகளொழிந்தபோது மசைவறுத போத மலவகைகளோடு கூடித் தொழிற்செய்

தாலப்போது நெய்சொரி தழல்போன் மேன்மேல்வளர்தலிற் "சுகாதீதம்வேண்டித் தொழில்செய்வோமென்று" லென்ற மித்தொழிலாலச்சுகாதீதம் பெறுத லரிதென்பதூஉம் ஞானிக ளறிவாராதலி "னகாரோ" வென்றுங் கூறினர்.

தேகமலசந்து செல்லும்போது நித்திரைவரினு மவ்வசை வந்நித்திரையை வரவொட்டாது தடுத்தல்போலக் கருவிகளசைந்துதொழிற்செய்யும்போது தெய்வகதியா லாநந்தநித்திரைவரினு மித்தொழிலந்நித்திரையை வரவொட்டாது தடுக்குமாகலினுந் தேக மசைவறவோரிடத்துக் கிடந்தபோது நித்திரை நன்றாய்வருவதுபோற் கருவிக டொழிற்செய்யா தடங்கியபோ தாநந்தநித்திரை நன்றாய்வருமாகலினுந் "துயில்வார்நடந்தோ" வென்றார்.

போதமொன்றாயினு மடுத்தகருவிகடோறு மதனதன்மயமாய்ச் சென்றிருத்தலிற் "சார்போதக்கோத்திரமென்று" பன்மையாகக்கூறினர். "மாயக்குழாம்" என்றது கருவிகளைப்போதமுங் கருவிகளுங் கூடிச்செய்தலா னிரண்டையுங் கூட்டிக்கூறினர். பாசஞானம்-பசுஞானமென்றுமாம்.

இத்திருவெண்பாவாற் கருவிகளையும் போதத்தையுங் கடந்துநின்ற சுகாதீதமுத்தியை யவற்றாற்செய்யுங் கிரியைக ளானடையக் கூடாதென் றறிவித்தவாறுகாண்க. (அ)



தொழிலிறுதிதானே சுகவுதயமென்றுந்
றொழிலுதயந் துக்கமெனச் சொல்லோந்-தொழில்செயினும்
வந்திப்போகம்போல வுண்டுடுத்தல்மாத்திரமாய்ச்
சிந்திப்பாரைப்பேணிச் செய்.

தொழிலிறுதிதானே சுகவுதயமென்றுந் - றொழிலுதயந் துக்கமெனச்சொல்லோம் - எ - து - இம்மையைக் குறித்துச்செய்யு முழுவாதி யறுவகைத் தொழில்களு மறுமையைக்குறித்துச் செய்யுஞ் சரித்தாதிதொழில்களும் வீட்டைக்குறித்துச் செய்யுங்கருவிகளை நியதிகளைவதாகிய தொழில்களு மதற்குமேல் ஞாதுரு ஞானஞேயமாய் நிற்கும்போதவசைவுகளு மற்றவிடந்தானே சிவாநந்தோதய மென்று வேதாகமங்கள்கூறுமெனி னணுவளவேனுந் தொழிலுதயமானவிடத்துத் துன்பமுண்டாமென் றியாங்கூறுகிலோ மாண்டுத் துன்பமுண்டென்பது தொழிலிறுதிதானே சுகவுதயமென்ற மொழிதானே விளக்கலின் ஆயினீரிங்ஙனங்கூறியவாற்றாற் றொழில் சிறிதேனுஞ் செய்யவேண்டாவோவெனில்.

தொழில்செயினும் - வந்திப்போகம்போல வுண்டுடுத்தன்மாத்திரமாய்ச் - சிந்திப்பாரைப் பேணிச்செய் - எ - து - இன்றியமையாதசிற்சிலதொழில்களை நீ செய்யினு மினிமேலைக்கு வேண்டுமென்றொன்றையுங் கருதா துண்டுடுக்கும் வந்திப்போகம்போ லிம்மை மறுமைப்போகங்களி லொன்றையுஞ்சிந்தியாது காடிகூழேனுங் கிடைத்ததை யுண்டலுங் கரித்துணிகந்தையாதேனுங் கிடைத்ததை யுடுத்தலுமாகிய விஃமாத்திரமே சிந்திக்கும் பெரியோரைப்பார்த் தவரைப்போல நீயுஞ்செய்தி-எ-று,

ஓர்தொழிலுஞ்செய்யாது நிழற்கண்ணிருப்பது சுகமென்றுவெழுந்து வெய்யிலிற்சென்று தொழிற்செய்த றுன்பமென்பது சொல்லவேண்டுவதின்றாகலிற் "றொழிலுதயந் துன்பமெனச் சொல்லோ" மென்றார்.

வந்திசுகத்தைச் சுதரின்மையான் மேலைக்கொன்றையுங் குறியாததுபோல் ஞானிகட் கிகபரங்களெல்லாம் பொய்யாகலினிவருமொன்றினையுங் குறியாராகலினு மவ 'ளுண்டுடுத்தன்மாத்திரமா, யிருத்தல்போ லிவரு "முண்டுடுத்தன்மாத்திரமா,, யிருத்தலினு மிங்ஙனமுவமைகூறினர்.

"சிந்திப்பாரைப்பேணிச்செய்,, யென்பது நீ தொழில்செய்தியானுமிம் ஞானிகளனைடையைப் பார்த்தவர் செய்யுந்தொழின்மாத்திரமேயன்றி யதிகஞ்செய்யற்க வென்பதெனக்கொள்க.

இத்திருவெண்பாவான் ஞானக்கிரியைமாத்திர மேலைப்பயன்குறியாது செய்கவென் றறிவித்தவாறுகாண்க.



சும்மாதிருக்கவைத்த சூத்திரமாஞ்சாத்திரத்தை
விம்மாக்கதறுவதும் வேலைகளுந் - தம்மறிவா
னீட்டிப்பிடித்திருக்கு நிட்டைகளுஞ்ஞானிகண்முன்
காட்டும்பரியா சகம்.

சும்மாதிருக்கவைத்த சூத்திரமாஞ்சாத்திரத்தை - விம்மாக்கதறுவதும்வேலைகளுந்-தம்மறிவா - னீட்டிப்பிடித்திருக்கு நிட்டைகளும்- எ-து- தற்போதத்தையொழித் தாநந்த மவுனமாயிருக்க ஓதிவைத்தவுபாயமாகியசாத்திரங்களை விம்மியழுதோதலும் நீராடலாதி கிரியைகளைச் செய்தலுந்தமதுபோதத்தா லோர்வடிவைத் தியானித்துடலைநீட்டிப்பிடித் தாசனங்கட்டியிருக்குநிட்டைகளுமாகிய விவையெல்லாம் ஞானிகண்முன் - காட்டும்பரியாசகம் - எ - று - இவைகளொன்றுமின்றி மவுனாநந்தமாயிருக்கு மெய்ஞ்ஞானிகண்முன்னர்க் காட்டப்பட்ட பரியாசகமாம்-எ-று.

வேதாகமவழிகூறு ஞானசாத்திரங்களெல்லாந் தற்போதத்தை யொழித்துச் சிவமாயிருத்தற் குபாயங்கூறுமாகலிற்,, சும்மாதிருக்க வைத்தசூத்திரமாஞ்சாத்திரத்தை,, யென்றும் ஞானசாத்திரத்தி னருந் தங்களைநாடிக் கலுழ்தலான் விம்மாவென்று மவ்வருத்தப்படி நில்லாமையாற் கற்றுவதென்றுங் கிரியைகளியாவு மறிவன்றாகலினு முலகர் வேலையோடிதுவு மோர்வேலையாகலினும் வேலைகளென்றுந் தற்போதத்தாற் கூடு நிட்டை ஞான நிட்டையன்மையா "னீட்டிப்பிடித்திருக் குநிட்டை,, டென்று மிவையெல்லாம் ஞானிகட்குப் பரியாசகமாயிருத்தலிற் பரியாசகமென்று கூறினார்.

"தம்மறிவா னீட்டிப்பிடித் திருக்கு,, மென்றமையா னருளறிவா னிட்டைகூடுத னிட்டை யென்பதாயிற்று.

இத்திருவெண்பாவாற் போதமிறந்துநிற்பதே நிட்டையென்றும் போதத்தோடுங்கூடிச் செய்வது நிட்டையன்றென்று மறிவித்தவாறுகாண்க. (௰)



குடையுஞ்செருப்புங் கொடுநடப்பதல்லாற்
படியும்விசும்பும் பரப்பி - யிடையாடு
மாத்திரம்போலேசமய வாதமனம்போதாத
சாத்திரங்கற்றார் விடுற்றார்.

குடையுஞ்செருப்புங் கொடுநடப்பதல்லாற் - படியும்விசும்பும் பரப்பி - யிடையாடு - மாத்திரம்போலே - எ - து - ஓரூருக்குச் செல்லவேண்டினே னுடம்பின் மழை வெயி லாதிகள்படாது கையிற்குடையும் பிடித்துக்கொண்டு காலிற் கன் முண் மண்டாக்காது செருப்புந் தொட்டுக்கொண்டு நடப்பதேயன்றி யாகாயமெங்குங் குடைபரப்பிப் பூமியெங்குந் தோல்பரப்பி யவற்றிற் கிடையேசெல்லு மாத்திரம்போலே.

சமயவாதமனம்போதாத - சாத்திரங்கற்றார்விடுற்றார் - எ - து - சமயிக ளனைவருக்கூறுந் தருக்க வாதங்களையு மத்தருக்க வாதத்தாலநந்தபேதமாய்த்தோற்று மனோவுத்திகளையு மளவுகூறினு மவ்வளவு போதாத சாத்திரங்களைக்கற்று விடடைத்தாரியாவர்-எ-று.

ஓரூரடையக் கருதினேன் மேனுக்குங் காலுக்குந் துன்பமணுகாவகை குடையுஞ் செருப்பும் பிடித்திட்டுக்கொண்டு சென் றவ்வூரடைவதுபோல் வீடடையக்கருதினு னாசாரியர் கூறுமுபதேச மொழிகளு மவர்கொடுக்கு மோர்சாத்திரமுங்கொண் டவற்றினருத்தப்படி கிரிகைகளா னொன்றையும் விருத்திசெய்யாது தற்போதத்

தையேயொழித் தவ்வீட்டையடையா தளவிடப்படாத வாகாயத்தினும் பூமியினுங் குடையுந் தோலும்பரப்பி நடுவிடைசெல்லத் தொடங்குவோனைப்போலுந் தருக்கவாதங்களையு மவ்வாதத்தாலெழு மனோவுத்திகளையு மளவிடினு மளவிடப்படாத சாத்திரங்களைக்கற்று நீர் வீடடையத் தொடங்குவதென்பதுஞ் சிலகற்பினு மதனால் வீடு கூடாதென்பது மிதனாற்காண்க. சாத்திரங்களை மிகவுங் கற்றோர்க்குத் தருக்கவாதமு மனோவுத்தியு மிகவும் விரியுமாகலிற் சாத்திரங்கட் களவுகூறுவார் வேறுகூறா தவற்றையேயளவுகூறினார். வாதமென்பது மனமென்பது மாகுபெயர்.

இத்திருவெண்பாவால் அபரஞானத்தால் வீடடையக்கூடாதென்றறிவித்த வாறுகாண்க. (௯௧)



அறிவாலேபற்றி யனுபவித்துவிட்ட
கிறியால்வருமோ கெடுவீ - ரறிவாய்நீ
ராம்போதறிவிப்பான் றானுமவையிரண்டும்
போம்போதும்வாராப் பொருள்.

அறிவாலேபற்றி யனுபவித்துவிட்ட-கிறியால்வருமோகெடுவீர் - எ - து - தற்போதவறிவா லொன்றைப்பாவித்துப் பற்றியிஃதிங்ஙனமிருப்பதென் றப்போதத்தா லநுபவித்தறிந்து மீட்டு மப்பாவனையைவிடுத்த பொய்யினால்வருமோ கெடுவீர்காள்.

அறிவாய்-நீராம்போதறிவிப்பான் றானுமவையிரண்டும்-போம்போதும்வாராப்பொருள் - எ - து - கருவிகள் முப்பத்தாறையுநீங்கியவற்றின் முடிவினின்ற வறிவியாமென்ற வவ்வறிவாய் நீராகும்போதும்மையுந் தன்னையு மறிவிப்பான் றானாகியத்த வறியுமறிவு மறிவிக்குமறிவுமாகிய விவையிரண்டு நீங்கியபோதும் வாராதசிவனாகிய மெய்ப்பொருள்-எ-று.

பாவனையிற்றோன்றும் வடிவுமாயை யவ்வடிவி லிதம்பிறத்தல் கருமமவ்வடிவை மெய்யாகக் கருதப்பண்ணுவ தாணவமாகலிற் “கிறியால்வருமோகெடுவீ” ரென்றார் அருளுமான்மபோதமு நீங்கியபோதான்மா சிவமயமா யிருக்குமாகலி னவையிரண்டும் “போம்போதும் வாராப்பொரு” ளென்றார். (௯௨)

இத்திருவெண்பாவா லருளையும் போதத்தையுங் கடந்துநின்ற சிவம் போதத்திற்ககப்படாதென் றறிவித்தவாறுகாண்க



அழிப்பேயவனுக்கு மிச்சையதுவாறு
விழப்பேயுனக்கிச்சை யென்று - மிழப்பை
யறியாதது கா ணறியாவஞ்ஞானங்
கிறிகேளுல்போதக் கெடல்.

அழிப்பேயவனுக்கு மிச்சையதுவாறு - விழப்பேயுனக்கிச்சை யென்றும் - எ - து - உன்போதத்தை யொழிப்பதே சிவனுக்குமிச்சை யவன திச்சா சத்தித்தொழிலு மதுவாறு லவரதிச்சைபோ லுன் போதத்தையொழிப்பதே யுனக்கு மிச்சையாக்கருதுவாய்நீவிடையை விரும்பினையெனின் ஆயினீ ரிங்ஙனங்கூறியவாற்றா லஞ்ஞானங்கெடுதல் விடன்றென்பதும் போதங்கெடுதல் வீடென்பதுமாயிற் றினி அஞ்ஞானமாவதியாதெனின்.

இழப்பை - யறியாதது கா ணறியாவஞ்ஞானங் - கிறிகேளுன் போதங்கெடல் - எ - து - அப்போதவிழப்பை யறியாது கிரியையாதிகளை நீ செய்தலே யறியாமையாகிய வஞ்ஞானமென் றறிதியாயின ப்போதவிழப்பை யறிதற் குபாயமெங்ஙனமெனின் பொய்யனேயி னி யுன்போதங்கெடுதற் குபாயஞ்சொல்லுது நீகேட்டி-எ-று.

சிவன் பெத்தத்திச்சையி லுடலையொழித்து மாயையில்வைத் தினைப்பாற்றுதல்போன் முத்தித்திச்சையிற்போதத்தையொழித் தாநந்தக்கடலில்வைத் தினைப்பாற்றுவனாயினு மவனொழிக்கு மிச்சைபோற் றன்னையிழக்கு மிச்சைவைத்த வான்மபோதத்தை யொழிப்பனன்றி யப்போதத்தை யொழிக்கு மிச்சையின்றிய வான்மபோதத்தையொழியானாகலி "னிழப்பேயுனக்கிச்சையென்று" யென்றார்.

இத்திருவெண்பாவாற் றற்போதநாசத்தை விரும்பினோர்க்கு மெய்ப்பொருள் கிடைக்குமென் றறிவித்தவாறு காண்க. (௰௩)



மருந்துபிணியோடே மாண்டுபுகைதீ
யெரிந்தவிறகோடிறக்கில் - விரிந்த
தொழின்மனத்தின்மட்டேநீ தோயுமதென்றுடி
நிழல்புதைத்தாற்போ லெதிர்போய்நில்.

மருந்துபிணியோடே மாண்டுபு கைதீ - யெரிந்தவிறகோடிறக்கில் - எ - து - பிணிமாண்டபோ ததுநீங்கற்பொருட் டுண்டமருந்து மப்பிணியோடு மாண்டுபோமெனி னெரிந்த விறகிறந்தா லவ்விறகோடும் புகையுந் தீயுமிறக்குமெனி னவைபோ லுன்போதமிறந்தாலப்போதத்தோடுங் கிரியையிறக்குமென்றுங் கிரியையிறந்தா லதனோ

டுகருவியும் போதமுமிறக்குமென்று மறியா துன்போதத்தாற் கிரியை செய்யாநின்றனே.

விரிந்த - தொழில்மனத்தின்மட்டே நீதோயுமதென்றுடி - நிழல்புதைத்தாற்போலெதிர்போய்நில் - எ - து - நானுவாய்விரிந்தவுனது கிரியைத்தொழில்கண் மனத்தினளவேயன்றி வேறின்றாகலிற் கருவிகள் முப்பத்தாறையும் போதத்தையுங் கடந்துநின்றசிவத்தைக் கிரியையேதுவாகக்கொண் டப்போதத்தாலுடியச்சிவத்தை யடையத் தொடங்குமுன் கருத்தென்னை நீ யக்கருவிகளை நியதிகளைந் தவற்றின் முடிவினின்ற வுன்னை யருளாலறிந்து பெரியநிழலிற் சிறியநிழன் மறைந்தாற்போ லியத்திருவருளின்மறைந் தெதிரீடெல்லாம்போய் நிற்றி யிங்ஙன நிற்றியெனிற் போதமொழித்தற் குபாயமுஞ் சிவத்தைப்பெறுதற் குபாயமுமிதுவேயாம்-எ று.

போதந் தோன்றியபோது கிரியைதோன்று மப்போதஞ் சிவத்திலிறந்தபோ தப்போதத்தோடுங் கிரியையிறக்குமாகலி ற் போதத்தைப் பிணியாகவுங் கிரியையை மருந்தாகவும் வைத்துக்கூறினர்.

விறகெவ்வளவிருந்த தவ்வளவும் புகையுந்தீயுமிறவா தவ்விறகிறந்தபோ ததனுடனே புகையுந் தீயுமிறக்கு மவைபோற் கிரியையெவ்வளவிருந்த தவ்வளவுங் கருவிகளும் போதமுமிறவா தக்கிரியை சிறிதுந்தோன்றாதிறப்பி னதனோடு மிக்கருவிகளும் போதமு மிறக்குமாகலின் "புகைதீயெரிந்தவிறகோடிறக்கி,, னென்றார்.

கிரியையிறந்தபோது கருவிகளும்போதமு மிறக்குமென்றதெங்ஙனமெனிற் கிரியையிருந்தபோது போதம் வளர்வதேயன்றி யிறவா தக்கிரியையிறந்தாற் போதத்திற் கசைவின்றிக்கெடு மிப்போதங்கெடவே யிதனைத்தொடர்ந்துநின்ற கருவிகளுங் கெடுமாகலி னிங்ஙனமென்றறிதி.

பெரியநிழலிற் சிறியநிழற் புறம்போகா தடங்கின் மறையுமது போற் பூரணமாகிய சிவபோதத்திற் கிஞ்சிக்கியமாகிய வான்மபோதமெதிரீட் டசையாதடங்கி னதின்மறையுமாகலி "னிழல்புதைத்தாற்போ,, லென்றார்.

நீங்கிநின்ற கருவிகளையு மடைந்துநின்ற திருவருளையுமெதிரிடாது நிற்கவேண்டுமாகலி"னெதிர்போய்நில்,, லென்றார். (௰௪)

இத்திருவெண்பாவாற் போதமடக்குதற் குபாயங்கூறிய வாறு காண்க.

காணுமறிவுநீ காட்டறிவுநாமவற்றைக்
காணக்கழலுங்கழற்றியிலே-நாணி
நமைத்திரும்பிப்பாராதே நான்றானென்னாதே
யமிழ்ந்துகரகம்போ னிற்பாய்.

காணுமறிவுநீ காட்டறிவுநாமவற்றைக் - காணக்கழலுங் கழற்றியிலே - எ - து - கருவிகளை யிழவிதுவென்று காணுமறிவு நீயவற்றை யுணர்துயிர்க்குயிராயிருந் துனக்குக்காட்டுமறிவு நாமக்கருவிகளினது குணங்களை நீ காணக்காணவவைகளெல்லா முனக்கன்னியமாய் நீங்கு நீக்கத்தி லவற்றின்முடிவினின்ற வுன்னைக்கண்டபின்னர்.

நாணி - நமைத்திரும்பிப்பாராதே நான்றானென்னாதே - யமிழ்ந்துகரகம்போனிற்பாய் - எ - து - அக்கருவிகளை யறிந்துநீங்கவு மென்னை யுள்ளபடியறிபவு மியாங்காணு மறிவாகவி னெனக்குச்சுதந்தர மின்றென்று நீ நாணி யெமக்குக்காட்டு மறிவொன்றுளதென் றெம்மை யெதிரிட்டுப்பாராதே யங்ஙனங்காணுமறிவுங் காட்டு மறிவுமாயி ருந்தோமாயினுங் கண்ணொளியுமாதித்தனொளியும் பிறிபடாததுபோ ற்பிறிபடாதிருப்போமாகலி னன்றென்றி யிங்ஙனம் பிறிபடாதிருந்த பரிபூரணத்தை நான்றானென்று கருதாதே கடலிலமிழ்ந்தியகரகஞ்ச லத்தை யுள்ளேமொண்டக்கடலின் மறைந்தாற்போ னீயுமப்பரிபூ ரணத்துக்குள்ளேயமிழ்ந்தி நீதானென்று ததனுண்மறைந்துநிற்பாய்-எ-

கருவிகளினது குணங்களை யெதிரிட்டறியாதபோ தவைகளான் மாவிற் கன்னியமாய் நீங்காதகலிற் 'காணக்கழலு'மென்றார். கருவி களையெல்லாநீக்கி யான்யா னென்ற வடிவாயபோ தவ்வருட்பூரணமெ ல்லாந் தானாய்த்தோற்றுமாகலி 'னான்றானென்னாதே,, யென்றார்,

இத்திருவெண்பாவாற் கருவி னீங்குதற்குபாயமு மவற்றைநீக் கித் தன்னையருளாலறிந் தருட்பூரணம்விளங்கியபோது போதஞ் சி வியா தருளின்மறைந்து நிற்றற்குபாயமு மறிவித்தவாறுகாண்க

---

வதுவைச்சடங்கதனை மைதுனமாக்கொண்ட
புதுமைச்சிவாநந்தம் போதும் - பதையா
விளக்கெரியிலெண்ணெய் வியாபியானற்போற்
கொளக்கொடுத்தல் சத்தியமாக்கொள்..

வதுவைச்சடங்கதனை மைதுனமாக்கொண்ட - புதுமைச்சிவா நந்தம்போதும் - எ - து - தன்புருடனைக்கூடி யின்புறுதற்கேதுவா ய்ச் செய்யுங் கலியாணச்சடங்கினை யவனொடுங்கூடி யின்புறுதலாகக் கருதிக்கொண்ட பேதைப்பெண்போற் சிவனாகியபுருடனை ஆன்ம

நாயகிகூடி யின்புறுதற்கேதுவாச் செய்யுங் கிரியைத்தொழிலை யவனோடுங்கூடி நீ யின்புறுதலாகக் கருதிக்கொண்ட விந்தப்புதுமையாகிய சிவாநந்தமமையு மினிக்கிரியையைச் சிவாநந்தமாகக்கருதுங் கருத்தைவிட்டு.

பதையா - விளக்கொளியிலெண்ணெய் வியாபியானாற்போற் - கொளக்கொடுத்தல் சத்தியமாக்கொள் - எ - று - அசையாதுநின்று விளக்கொளிக்குள் ளெண்ணெய் வியாபியானாற்போ னீசிவத்தில் வியாபியா யசைவறநின் றதுவிழுங்கிக்கொள்ள வுன்னைக்கொடுத்த துண்மையாயுள்ள முத்தியென்றறிந்துகொள்ளுதி-எ-று.

விளக்கொளியி லெண்ணெய் வியாபித்துக் கொண்டுநிற்க விவ் வெண்ணெய்யை யவ்வொளிவிழுங்கித் தான்பிரகாசித்தல்போ லச்சிவ பூரணத்தி லான்மாவியாபித் தசைவறநிற்கவே யச்சிவபூரண மிவ்வான் மாவை விழுங்கிக்கொண்டு தான் பிரகாசிக்குமாகலின் "விளக்கொளி யிலெண்ணெய் வியாபியானாற்போற்கொளக்கொடுத்த" லென்றார்.

தன்னைக்கொடுப்பது சத்தியமெனவே தன்னாற்செய்யுங் கிரியை யசத்தியமென்பது தானேயாயிற்று.

இத்திருவெண்பாவாற் போதத்தாற்செய்யுங் கிரியை முத்திக்கேதுவன்றென்பதும் போதத்தைச் சிவனுக்கூணாகக்கொடுத்து நிற்றலே யேதுவென்பது மறிவித்தவாறுகாண்க.



நான்காவது

கிரியைக்கழற்றி.

முற்றிற்று.



திருவெண்பா - ௱௨௧.

திருச்சிற்றம்மதல்.

ருக்குச்செ,

ச் சுமெலின.

வ்திருக்குச்செ



உ

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது

# சரியைக்கழற்றி.

நடந்துங்குளித்துமிகு நல்லநாளூனை
விடுந்தொழிலால் மெய்வருந்தி விட்டேன் - நடங்காதா
னென்றுசுகமேயிருப்ப ரிப்போதேதுக்கமிவர
சென்றெதிர்போயின்ப முதிக்கும்.

நடந்துங்குளித்துமிகு நல்லநாளூனை - விடுந்தொழிலால் மெய் வருந்திவிட்டேன் - நடங்காதார் - எ - று - பூட்பாதெக்கணமாய் நடந்துசென்றுங் கங்கைமுதலிய தீர்த்தங்களுட்படிந்து நல்லநாளெல்லா மூனைவிடுத்து மிலைமுதலியன செய்யுஞ் சரியைத்தொழிலால் மெய் வருந்தி யிங்ஙனஞ் செய்வனவே விட்டேனென்று துணிந்து தற்போதமடங்காதார்.

என்றுசுகமேயிருப்பரிப்போதேதுக்கமிவர் - சென்றெதிர்போ யின்பமுதிக்கும் - எ - று - எக்காலமோரிதொழிலையுஞ் செய்யாது சுகமேயிருப்பரித்தொழில்களாலெரிக் கிடைக்கவென முன்பு பி த்தொழில்வாசனை மறுமைக்கண்ணுந் தொடருமாகலி னிக்காலத் தானென்றுஞ் சிவமென்று மெதிரிய போதமொழிந் தானந்தந் தோன்றும்-எ-று.

தாங்குறித்தது வீட்டின்பமாயிருந்து மதனைப்பெறுதற் கேது வல்லாத சரியைத்தொழிலை மிகவு மெய்வருந்தச்செய்தலாலவ்வின் பத்தைப் பெறுதற்கேதுவாய்த் தற்போதத்தையு மெளிதிலொழித் ததனை யெக்காலம் பெறுவரோவென்னுங் காருண்ணியத்தா "ற்சென் றெதிர்போ யின்பமுதிக்கு,, மென்றார். (௨)



இத்திருவெண்பாவால் வீடடையத்தொடங்கிற் றறியாமையா னித்தொழிலைச்செய்து வருந்துகின்றா ரந்தோவென்றிரங்கிக் கூறிய வாறுகாண்க.

உடலாலுழைத்தா லுமதுகூலியுமென்று
கெடுவீரிதையெங்கேதன் புருடனுடலே
நடையாடியபிணமிங்கிணை யவலையத்திரியக்
கிடைப்பதோவென்றப்பெண்பேற்

உடலாலுழைத்தா லுடலொழியுமென்று - கெடுவீரிதையெங்கே கேட்டீர் - எ - து - உடலால்வருந்தி யாத்திரைசேறன்முதலிய விச்சரிதைத்தொழிலைச் செய்தாற் பிறப்புநீங்குமென்று கெடுவீர்காளிந்த வுபதேசத்தை யெந்தக்குருவினிடத்துக் கேட்டீர்

உடனே - நடையாடியபிணம்போலும்போய்த்திரியக் - கிடையாதோவென்றுகேளீர் - எ - து - இந்தவுடலுடனே நடையாடியபிணம்போலத் தற்போதங்கெட்டு நிலத்தின்கண்ணுலாவ வெமக்குண்டாகாதோவென்று ஞானாசாரியனைக்கேளாத நீங்கள் - எ - று.

ஞானாசாரியனையடைந் தனுக்கிரகம்பெற்ற மெய்ஞ்ஞானிகட்ருக் கருவிகண்முப்பத்தாறுந் தற்போதமுங்கெடலா னக்கருவிச்சேட்டையும் போதச்சேட்டையு மின்றாமாகலி னவரது திருமேனி யுள்ளும்புறமும் வானுங் கடத்தாகாயம்போற் சிவமேநிறைந்திருக்குமவர் நிலத்திற் சரிக்கும்போது மக்கட மாகாயத்திற்செல்வதுபோலுந் தோற்றமாகலி “நடையாடியபிணம்போலும்போய்த்திரிய„ வென்றார்.

“கேளீர்„ எனக்கேகேட்டீரெனமுடிக்கவிடையைத்தொடங்கியி னனுஞ்செய்தலாற் “கெடுவீர்„ என்றார். (உ)

இத்திருவெண்பாவா லவர்கேட்டவுபதேசத்தை மறுத்தவாறுகாண்க.



எந்தவூர் நீரென்று மிப்போதிருந்துநாம்
வந்தவூர் தன்னைமறந் தோமே - வந்தவூர்க்
கின்றுநாம்போம்வழியே தென்னிலுமக்கேழுலகு
மொன்றுபோலொன்று தோன்றும்.

இந்தவூர்நீரென்று மிப்போதிருந்துநாம் - வந்தவூர்தன்னைமறந்தோமே - எ - து - யாமிந்தவூரிலிருந்து மற்றோரூருக்குச்சென்றபோ தவ்வூரிலிருந்தா னொருவ னெந்தவூர் நீரென் றெமைக்கேட்டா லிப்பொழுதிருந்த வந்தவூர்தன்னை யவனுக்கின்னவூரென்று சொல்லமறந்தோமென்னின்.

வந்தவூர்க் - கின்றுநாம்போம்வழியே தென்னிலுமக்கேழுலகு - மொன்றுபோலொன்றுதோன்றும் - எ - து - முன்னிருந்துவந்தவூருக் கிப்போது நாம் போதற்குவழியாதென்று நீர்நாடினுமக்கேழுலகு மொன்றுபோற்றோன்றி யந்தவூருக்குச்செல்லும்வழிபோல் மற்றோரூருக்குச் செல்லும்வழி தோன்றுமென்னி னிங்ஙனங்கேட்டோனுக்கூர்ப்பெயருஞ் சொல்லமறந் தவ்வூருக்குச்செல்லும் வழியுந்தெரியாது

மயக்கிய விப்போதங்கொண்டோ திரிகரணங்களையுங் கடந்துநின்ற பூரணசிவத்தை நீரடையத்தொடங்கினீர்-எ-று.

அவர்க்குந் தம்மைப்போ லிவருந்தோற்றலா னவரை யிவர் தம் மோடுங்கூட்டி "மறந்தோமே,, லென்றார்.

ஊர்ப்பெயர்சொல்ல மறந்துபோவது தூலபுத்தியாற்றெரியா திபா மங்ஙன மறப்பதிலமென்ற வரைத் தம்மைவிடப் பிரித்துநோக்கி உடக்கேழுலகு மொன்றுபோலொன்று தோன்றுமெனத் தூலமாகியவழித் திகப்பையெடுத்துக்காட்டினார்.

நெறிக்கட்டிசை தப்பியபோது முன்போ லன்குதிசையும்பிரிந்து தோன்றுதாகலி "னேழுலகுமொன்றுபோ,, லென்றார். (ரு)

இத்திருவெண்பாவான் ஞானசாரியராலன்றி யான்மாக்கள் சுதந்தரத்தால் வீடடையக்கூடாதென்று சுதந்தரவீன மறிவித்தவாறு காண்க.



வேட்டியுந்தாழ்வடமும் வெண்ணீறும்வெண்பல்லுங்
காட்டுவதுஞானக் களவுகாண் - தேட்டமற்றோன்
பூரணன்காண்சிற்றறிவன் பொய்ப்பாசமென்றறிந்தார்க்
கோர்வடிவும் வார்த்தையுமுண்டோ.

வேட்டியுந்தாழ்வடமும் வெண்ணீறும்வெண்பல்லுங் - காட்டுவதுஞானக்களவுகாண் - எ - து - காவிவேட்டியு முருத்திராக்கத்தாழ்வடமு மெய்முழுதும் பூசும் வெண்ணீறு மடைக்காய்தின்னாத வெண்பல்லு மிவைமுதலிய சிவவேடங்களை மெய்யிற்காட்டுவது ஞானத்திருட்டேகாண்.

தேட்டமற்றோன் - பூரணன்காண்சிற்றறிவன் பொய்ப்பாசமென்றறிந்தார்க் - கோர்வடிவும்வார்த்தையுமுண்டோ-எ து-ஓர்பொருட்கண்ணும் விருப்பமற்றோனாகிய சிவன் பரிபூரணன்-சீவன் சிற்றறிவன் பாசம் பொய்யென்றறிந்த ஞானிகட்கோர் சமயவேடமுஞ் சமயவபிமானவார்த்தையு முளவோவில-எ-று.

அகத்துஞானமின்றிப் புறத்துவேடத்தானும் வசனத்தானும் ஞானிபோற் காட்டினமையால் "ஞானக்களவுகா ணென்றார்,,

அகத்துஞானமும் புறத்துவேடமு முளவெனின் ஞானக்களவன்றாயிற்று - சிவமனுத்திரணமுதலிய பொருள்கட்கெல்லா முட்புறனாகிய பரிபூரணவறிவாகலி னதற்கோர் சமயமில்லை சிற்றறிவு பொய்யாகிய பாசத்தைவிட்டுநீக்கி யப்பரிபூரண வறிவோடுங் கலந்தபோ

தப்பரிபூரண வறிவாய்நிற்குமன்றி யதுவிதுவென்னும் பகுப்பில்லை யாகலி னோர்வடிவும் வார்த்தையுமுண்டோ வென்றார்.

இத்திருவெண்பாவால் வேடத்தான் மிகவுஞ்சிறப்புளாராயினு மகத்து ஞானமிலரெனிற் சிறப்பிலரென்பதும் வேடமியாது மிலராயினு மகத்துஞானமுள்ளார் சிறப்புளரென்பது மறிவித்தவாறுகாண்க.



கல்வியாய்ப்புத்தகமாய்க் காவிகடுக்குட்கட்டாய்ப்
பல்லின்வெளுப்பொத்த பசுமார்க்க - மெல்லை
கழன்றதியானத்திற் கண்சிமிட்டுமோங்காண்
சுழன்றபெருமாயைத்தொழில்.

கல்வியாய்ப்புத்தகமாய்க் காவிகடுக்குட்கட்டாய் - பல்லின்வெளுப் பொத்தபசுமார்க்கம் - எ - று - தாங்கற்ற கல்விகளைப் பேசுவதாய்ப் புத்தகங்கையிற்கொள்வதாய்க் காவிவேட்டியுடுப்பதாய்த் திருமேனிக்கடுக்கன் காதிலேயிடுவதாய்க் கண்டத்திற்கெவுடங் கட்டுவதாய்ப்பேச்சிற்கும் வேடத்திற்கு மொப்பமேற்பல் வெளுப்புமொத்திருந்த பசுஞான நெறியினையுடையார்.

எல்லை - கழன்றதியானத்திற் கண்சிமிட்டுமோங்காண் - சுழன்றபெருமாயைத்தொழில் - எ - று-பிருதிவிமுத னாதமீறென்றளவு கூறப்பட்ட கருவிகள் முப்பத்தாறையுங் கழன்றசிவத்தியானத்தை யுடையவரைப்போலக் கண் மேற்செருகி யாசனங் கட்டிக்கொண்டிருப்பரிவ ரிங்ஙனமிருப்பதாங்காண் சுறங்குபோற் சுழலாநின்ற பெரியமாயையினது தொழிலாவது-எ-று.

ஞானமின்றி வேடங்கொண்டோர் வேடதாரிகளோ டொப்பாகலிற் "பசுமார்க்க,, மென்றார். அகத்துப் பரிபூரணஞானமின்றிக் கண்சிமிட்டிப் புத்திந்திரியங்களையு மப்போதடக்கி யாசனங்கட்டி யிருப்போர்க்கு முன்னர் ஞானேந்திரியங்களாலறிந்து கன்மேந்திரியங்களாற் றொழில்செய்யுமன மப்புத்திந்திரியங்களு மடங்கலி னவற்றின்வாசனையோடு முன்னரேறியவாசனையோடு முள்ளேசுழலுமல்லது யடங்காதாகலிற் "சுழன்றபெருமாயைத்தொழில்,, என்றார். (௫)

இத்திரு வெண்பாவால் ஞானநிட்டையல்லமையா னவரதுநிட்டையை மறுத்தவாறுகாண்க.



ஞானக்கிரியை நடிப்பவர்க்குநாடோறும்
போனத்தளவேபுசிப்பன்றி-யேனைத்

துறவாயவாவறுத்து மெய்யுணர்ந்ததூய
வறிவார்க்கறியாவின்பம்.

ஞானக்கிரியை நடிப்பவர்க்குநாடோறும் - போனத்தளவேபுசிப்பன்றி - எ - து - அகத்து ஞானமின்றிப் புறத்து ஞானாசாரமாய் நடிப்பவர்க் கெக்காலமு மன்னபானத்தளவுவரும் விடயாநந்தானுபவமன்றி.

துறவாயவாவறுத்து மெய்யுணர்ந்ததூய - வறிவார்க்கறியாவின்ப - மேனும் - எ - து - துறவினையுடையராகித் துறந்த வப்பொருள்கண்மேன் முன்னிருந்த வாசனையாகிய வாவினையறுத்து மெய்ப்பொருளையுணர்ந்த நிருமல ஞானிகட்குத் தோன்றாத சொரூபாநந்தானுபவமேனுண்டாம் - எ - று.

இவர் மெய்ய மாசாரத்தைப் பிறர்கண்டு பெரியரெனப் போனகங்கொடுத்தலிற் "போனத்தளவேபுசிப்பன்றி" யென்றார்.

பேரின்பம் போதநாசத்திற் றோன்றுமாதலின்றோன்றலா "வறிவார்க் கறியாவின்ப" மென்று மிவ்வின்பம் பெறுதற்கேதுவாய ஞானமின் மையா "லேனு" மென்றுங்கூறினார்.

துறவுபுறப்பற்று நீங்குத லவாவறுத்த லகப்பற்றுநீங்குத லிவ்வி ருவகைப்பற்றுநீங்கவே சகலகேவலங்களுநீங்கு மிவைநீங்கவே மெய் புணர்வுதோன்றுமாகலிற் "றுறவாயவாவறுத்து மெய்யுணர்ந்த தூய வறிவா" ரென்றார். போனகமென்பது போனமெனநின்றது.

இத்திருவெண்பாவால் ஞானமின்றி ஞானாசாரமாத்திரஞ் செய் வோர்க்குப் பிறப்பின்பமேயன்றி வீட்டின்ப மில்லையென்றறிவித்தவா றுகாண்க. (கூ)



இத்தகவின்ப மியாவராலறியக்கூடுமென் றிரங்கிக்கேட்ட மாணாக் கனைநோக்கிமேற்கூறுகின்றார்.

இன்பவறிவுக்கிடம்புள்ளினந்தமபோற்
றன்பயனும்பொருப்பாய்த்துக்கிக்கு-நன்குணத்தாற்
பேரின்புக்கிச்சைபிறந்ததினிக்கேதுனக்குப்
பேரின்பந்தேடிப்பெறாய்.

இன்பவறிவுக்கிடம் - எ - து - இந்தப்பேரின்பம் பரிபூரணமாகி யிவ்வின்பமே யான்மாவிருத்தற்கிடம் ஆகு மவ்வின்ப மிங்ஙன மிருக்குமெனி னிதனையா னிப்போதடையவேண்டு மினிப்பிறவித்து ன்பஞ்சிறிதும் படமாட்டேனென்ற மாணாக்கனைநோக்கி மேற்கூறு கின்றார்.

புள்ளினைந்தனுபோம் - றுன்பேயனுப்பொருப்பாய்த் தூக்கிக்கு - நன்குணத்தாற் - பேரின்புக்கிச்சை பிறந்ததினிக் கேனுனக்குப் - பேரின்பந்தேடிப்பெறும் - எ - று - உரைப்பொருட்கீது தோலற்றினுமதனைப் பேரொலியாசைக்கலைடகணைப்புள்வருந்திய துபோ லியித் தேகாதிப் பிரபஞ்சங்களான்வருந் துன்பமனுவவாயினு மதனைப் பொருப்பளவாகக்கண்டு துன்புறுநற்குணத்தா லுனக்கிப்போது பேரின்பத்தின்மே லிச்சைசெனித்ததாகலி னினி யதனையடைதற் குபாயஞ்சொல்லுறுங் கேட்டு யப்பேரின்பத்தை யாங்கூறியவுபாயப்படி தேடிப்பெறுதி - எ - று.

விடயசுகத்தைத் துன்பமெனக்கூறினுவிதனையங்ஙனங்கண்டோர்க்குச் சொரூபசுகத்தின்மே லிச்சைசெனிக்குமாகலிற் "றுன்பேயனுப்பொருப்பாய்த் தூக்கிக்குநன்குணத்தாற், பேரின்புக்கிச்சைபிறந்ததென்றார். (எ)

இத்திருவெண்பாவாற் பேரின்பம்விரும்பிக் கேட்டமாணுக்கனுக்கு விடைகூறியவாறுகாண்க.



பேரின்பமுன்னைப் பிரியாதுன்னுண்மையது
வோரின்பமாய்விடயத் தூறிப்பும் - பேரின்
பழிவிலேதோன்று மறிவுமயலா
மொழியுமிரண்டின்பமும்.

பேரின்பமுன்னைப் பிரியாதுனதுண்மையது - எ - று - அந்தப் பேரின்ப முன்னைவிட்டெக்காலமு மே சனுவளவேனும் பிரியாதிருப்ப தவ்வின்பமே யுனக்குரித்தாய மெய்ம்மையாயுள்ளது ஆங்ஙனமென்னைவிட்டு நீங்கா ததனைக்குரித்தாய மெய்ம்மையா யிருப்ப தெனக்குத்தோன்று திருப்பானேனெனின்.

ஓரின்பமாய்விடயத் தூறிப்பும் - பேரின் - பழிவிலேதோன்றும் - எ - று - உன்றலறியப்பட்டோ ரின்பமாயவனைதவிடயத்தூடுதோன்றுவது மியாங்கூறிய வந்தப்பேரின்பமு மெதிரிடற்றவிடத்துத் தோன்றும்.

அறிவுமயலா - மொழியுமிரண்டின்பமும் - எ - று - ஆணறிவும் பெண்ணறிவு மெதிரிட்டபோ தவ்வறிவுகளு மயலாமறிவு மயலாமென்ற வும்மையா லாண்குறியும் பெண்குறியு மெதிரிட்டபோதிக்குறிகளுமயலா மிவைகளயலாகவே யிவ்விருவகைக் கூட்டரவுகளால் வருமிரண்டின்பங்களு மயலாயொழியும் - எ - று.

ஆண்குறியும் பெண்குறியுங்கலந் தெதிரிட்டழிந்தபோது மாணறிவும் பெண்ணறிவுங்கலந் தெதிரிட்டழிந்தபோது மவ்வின்பமுமவ்வின்பமுந் தோன்றலா "னழிவிலேதோன்று,, மென்றிருமைக்கும் பொதுவாகக்கூறினர்.

குறிகளு மறிவுகளு மெதிரிட்டபோ தின்ப மின்மையாலொழிபு மிரண்டின்பமுமென்றார்.

இருவகைக்குறிகளுங்கலந்தபோ தவையிருந்துந்தோன்ற தழிதலானு மாண்குறி பெண்குறிக்குள் ளிடாயிருத்தலானு மின்பந்தோற்றலானு மவற்றினது கூட்டமவை யிவற்றினது கூட்டாவிற்குவமையாகக்கூறினர்.

"அழிவிலேதோன்று,, மென்றமையா னழியா தெதிரிட்டபோ தென்பதும் வருவிக்கப்பட்டது - விடயாநந்தமேலீட்டாற் பரவசமாவதுபோற் சொரூபாநந்தமேலீட்டாற் பரவசமாவதுங்கொள்க.

இத்திருவெண்பாவாற் பேரின்பமான்மாவைவிட்டு நீங்காதென்பது மதனைப்பெறுதற் குபாயமுங் கூறியவாறுகாண்க.



விடயாநந்தமறிதல்போ லவ்வாநந்தமு மறியக்கூடாதோவெனின் மேற்கூறுகின்றார்.

விடயமுதிர்த்துநின் றுவிட்டவிடக்கீழ்மே
விடைவிடாதேநிறைந்தவின்பந் - தொடுவரோ
தோன்றியழிவதுவே துக்கசுகமுன்னுண்மை
தோன்றுவடங்காச்சுகம்.

விடயமுதித்துநின்று விட்டவிடக்கீழ்மேல்- விடைவிடாதேநிறைந்தவின்பந் - தொடுவரோ - எ - து - ஓர்விடயத்தின்கட்டோன்றிநின் றழியப்பட்ட வின்பங் கீழாயவின்பம் வெவ்வேறுவகைப்பட்ட பொருள்களினு மிடையறாது பரிபூரணமாய்நிறைந்த வின்ப மேலாய வின்பமாகவி னிவ்வின்பத்தைப் பெற்றுள்ளார் தற்போதத்தா லதனைப் பற்றுவரோ வஃதெங்ஙனமெனின்.

தோன்றியழிவதுவேதுக்கசுகமுன்னுண்மை - தோன்றுவடங்காச்சுகம் - எ - து - போதத்தாற்பற்றி யறிந்தநுபவிக்கு மவ்வின்பந் தோன்றியழிவ தங்ஙனந்தோன்றியழிவதுவே சுகமுந்துன்பமுமாகலினு முனதுண் மெய்ம்மையாயிருந்தவின்ப மோர்காலங்களினு முற்பத்திநாசமின்றுய வீட்டின்பமாகலினும்-எ-று.

அவ்வின்ப மோர்விடயத்திற்றோன்றி யழிதலாற்பற்றி விடப்பட்ட திவ்வின்பம் பூரணமாகலானு முற்பத்திநாச மின்மையானும் பற்றுதல் விடுதலிதற் கின்மையாயிற்று.

தோன்றியபோது சுகமுமறைந்தபோது துன்பமும்வருதலிற் "றோன்றியழிவதுவேதுக்கசுக,, மென்றார்.

இச்சுகதுன்பங்களால் விழைவு வெகுளியு மிவ்விழைவுவெகுளிக ளா லிருவினைகளு மிவ்விருவினைகளாற் பிறப்புமுண்டா மென்பதுங் கொள்க.

அவ்வின்பம்பற்றியபோது தோன்றும் விடுத்தபோது மறையு மிவ்வின்பம் பற்றியபோது மறையும் விடுத்தபோது தோன்றுமென் பதுங்காண்க. (௧)

• இத்திருவெண்பாவா லிவ்வின்பம்போ லவ்வின்பம் போதத்தால றியக்கூடாதென் றறிவித்தவாறுகாண்க.



ஆயி னவ்வின்ப மித்தலத்திற் றோன்றுவதில்லையாகலின் மற்றோ ர்தலத்திற் சென்றிருந்து தவத்தைப்பண்ணி யதனைப்பெறுகின்றே னென்ற மாணாக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

எங்கும்பரிபூரண மென்னிலீதல்ல
வங்கங்காமென்னும் போதங்கிலையோ - பங்காகே
ளாகாயந்தீண்டிவிடு மற்பவறிவழிவி
லேகாண்பேரின்பமுதிக்கும்.

எங்கும்பரிபூரண மென்னிலீதல்ல - வங்கங்காமென்னும்போத ங்கிலையோ - பங்காகேள் - எ - று - அப்பேரின்ப மிருநூற்றிருபத்து நாலு புவனமெங்கு முட்புறனும் நிறைந்துள்ள பரிபூரணமென்று வேதாகமங்கள் கூறுமெனினவ்வின்பம் பெறுதற்கேது இத்தலமன்று காசிமுதலிய வந்தந்தத்தலங்களிற் பெறலாமென்று நீ கூறும்பொழு து நீயிருந்த வத்தலத்தி லவ்வின்பமின்றுபதோ பகுப்பறிவுநீங்காத வனே கேட்டி.

ஆகாயந்தீண்டிவிடு மற்பவறிவழிவி லேகாண்பேரின்பமுதிக்கும் எ - று - புரையோகமாகிய ஞானுகாசத்தைப பெற்றவிடத் ததற்கு மேற்றோன்று மநுபவத்தைநாடித் தானின்றநிலையை வழுவுமற்பவறி வழிந்த விடத்திலே யுனக்குப் பேரின்பந் தோன்றுமென்றறிதி-எ-று.

பரையோக நிட்டைபெற்றகாலை யதற்குமேற் றோன்றுஞ்சிவத் தைநாடா தவ்வருளையு மறவாதிருப்பிற் சிவதரிசனந் தானேதோன்று மதுதோன்றவே கிஞ்சிக்கியபோத மழியு மஃதழியவே பேரின்பந் தோன்றுமாகலி "ஞாகாசத்தீண்டிவிடுமற்பவறிவழிவி லேகாண்பேரின் பமுதிக்கு,,மென்றார்.

(உதாரணம்) சித்தியார் - வாடாதேகுழைந் திருப்பையாகிற் பி றியாதசிவந்தானே பிறந்துந்தோன்றும் பிரபஞ்சபேதமெல்லாந் தா னாய்த்தோன்றிநெறியாலேயிவையெல்லாமல்லவாகிநின்றெய்ந்துந்தோ ன்றிடுமிவை நிராதாரனுமே, என்றும்.

(திருவாசகம்) இறைதேர்கொக்கொத்திரவுபகலேசற்றிருந்தேவே சற்றேன், கறாசோடியார்களிசிறப்பம் காட்டிகொடுத் துன்னடியேன் பாற், பிறாசேர்பாலினெய்போலப் பேசாதிருந்தாலேசாமோ. என் றுமற்றும் வருவனவுற்றுற்காண்க.

இத்திருவெண்பாவாற் பூரணவிற் பமுறுதற்குத் தலமிடமின்றெ ன்றும் போதநாசமிடமென்று மறிவித்தவாறு காண்க.



அப்பேரின்பமடைதற் கிச்சிற்றின்பமாகிய விடயந்தடையாக வி னிதனையொழித் ததனையடைவேனெற மாணுக்கனைநோக்கி மே ற்கூறுகின்றார்.

உடம்புள்ளமட்டும் விடயமொழிங்கா
வொழிங்குகிலோ கேவலமாமும்ப - ரிடம்புட்
பறந்தாற்கலங்குமோ பாசத்திறுண்மை
யறிந்தார்சுடாத்தடைபோலாம்.

* உடம்புள்ளமட்டும் விடயமொழிங்கா - வொழிங்குகிலோகேவல மாம் - எ - று - விடயசுகங்க ளநுபவித்தற்கேதுவாய வுடம்பிருக்கு மளவு மவ்விடயங்க ளொழியாவுடம்போ டொற்றுமையாயிருந்தஞா னேந்திரியங்களைந்திற்கு மெதிரீடாய் விடயங்கடோன்றுந்தோறு மவ ற்றையொழிப்பேனெனி னெங்ஙனமொழிக்கிற் கருவிகளெல்லாமொ ழியு மவையொழியிலோ கேவலம்வந்தடுக்கும் ஆயினவற்றையொழி க்குமா றெவ்வாறெனின்.

உம்ப - ரிடம்புட் -பறந்தாற்கலக்குமோ பாசத்திறுண்மை-ய றிந்தார்சுடாத்தடைபோலாம் - எ - று - ஆகாயத்தினிடமாய்ப் புட்ப றந்தா லவ்வாகாய மசையாததுபோ னீயிம்மாயாவடிவத்தை யானல னென்று நீக்கி யருள்வடிவா யிருத்தியெனி னப்போது விடயங்கள் வந்தடுப்பினு நீ யசையா திருப்பையாயின் மாயாவடிவமா யிருந்த போது வருத்தியவிடயந் திருவருள் வடிவாயிருந்தால் வருத்தாதிருப் ப தெங்ஙனமெனின் அசுத்தத் துக்கமநித்திய மன்னியமென்றுபாசத் திறுண்மையைத் திருவருளா லறிந்தனையாயி னக்கினிச்சூட்டைத்தடு க்கு மந்திரம்போலவ்வறிவு கருவிச்சேட்டையைக் கெடுக்குமாகலி ன க்கினியிருந்துஞ் சுடாததுபோற் கருவிகளிருந்து முன்போலவாதியா தாரும்-எ-று.

தான்கருவிகட் கன்னியமாய்ப் பிரிந்துநின் றருளாலடக்கா தக்க ருவிகளோடுங் கூடிநின்றபோதத்தா லடக்கினமையாற் "கேவலமா,, மென்றார்.

அருள்வடிவாயிருந்தபோது கருவிகளசைவதேயன்றித் தானசை யானாகலி "னும்பரிடம்புட்பறந்தாற்கலங்குமோ,, வென்றார்.

இத்திருவெண்பாவாற் கருவிகளையுள்ளபடி யருளாலறிந்துநீங்கி யவ்வருளின் மறைந்துநின்றான் மீட்டு மலவகன்வந்து வாதியாதென் றறிவித்தவாறுகாண்க.



விடயங்களை யிந்திரியங்களாலறிந் தநுபவித்தற்கேதுவாய விவ்வு டலையொழித்திவ்வின்பத்தைப் பெறுவேனெனின் மேற்கூறுகின்றார்

உடலிருந்தென்போமென் னுருவருவமூன்று
மடைவர்தொழிலுமனுதி - குடமுடைத்து
மண்ணென்னவேண்டுமோ மாயாவயிர்துவத்து
முண்ணின்றுபார்திதிரிப்போதும்.

உடலிருந்தென்போமென் னுருவருவமூன்று - மடைவர்தொழி லுமனுதி - எ - து - இவ்வுடலிருந்ததனு லவ்வின்பம்வருதற்குத் தடை யென்னை யிதுபொய்யதனு லவ்வின்பம் வருமாறென்னை யவ்வின்பம் வருதற்குத்தடை யிவ்வுடலாலியாது மின்றுருவமு மருவமு முருவரு வமுமாகிய விம்மூன்று வடிவத்தினையுமுடைய சர்வக்கினானுதியிலே யாணவமலத்திற் கிடந்தவுன்னைக் காருண்ணியத்தாலெடுத்து மாயை யிற்றநுகரண புவனபோகங்களைக்கொடுத் திருவினையொப்பு மலபரி பாகம் வருவித்து விடைவிக்கும் பொருட்டுச்செய்யும் பஞ்சகிருத் தியங்களு மனுதியாகலி னீ யிக்காயத்தை யொழிப்பலெனக்கருதற்க.

குடமுடைத்து - மண்ணென்னவேண்டுமோ மாயாவயிர்துவத் து - முண்ணின்றுபார்த்தி ரிப்போதும் - எ - து - ஒருவருக்குக்குடத் தை மண்ணென் றறிவிப்பதேயன்றி யக்குடத்தையுடைத்து மண் ணென்றறிவிக்க வேண்டுமோவதுபோ லுனக்கிவ்வுடம்பை மலமென் றறிவிப்பதேயன்றி யிதனையழித்து மலமென்றறிவிக்க வேண்டுமோ வாகலி னிதனுளிருந்தே யிவ்வுடம்பையு மற்றுமுள்ளனவாய் கருவிக ளையு மாயாமலமென்று முனக்கன்னியமென்றுங் கண்டு நீங்கி வயிந்து வமாயையாகிய சுத்தநத்துவத்தின் முடிவினின் றுன்னை யருளாற்கண் டவ்வருளி லசைவறவிருத்தி யிப்போது மவ்வாநந்த முதயமாந்தேக முடிந்த வப்போது மவ்வாநந்தமயமே யாவை-எ-று.

பெத்தத்திசையிற் பஞ்சகிருத்தியத்தாற் பஞ்சாவத்தைகளையு முண்டாக்கி நடத்தாநின்ற சர்வக்கிய ரிப்போது முத்தித்திசையினு

மூனக்குப் பஞ்சாவத்தைகளையு நீக்கித் தமது திருவடியாநந்தத்தைக் கொடுப்பர் நீ யுடலையொழிக்கவேண்டுவ தேதுக்கென் றறிவித்தற் "கடைவர்தொழிலுமனுதி,, யென்றார்.

இப்போது மென்றமையா னப்போதுமென்பது வருவிக்கப் பட்டது.

இத்திருவெண்பாவா லவ்வின்பம்பெறுதற் குடலொழித்தலேது வன் றிவ்வுடலாதிகளையெல்லாந் தனக்கன்னியமென் றருளாற்கண்டுநீ ங்கி யவ்வருளினிற்ற லேதுவென் றறிவித்தவாறுகாண்க



வேதாந்தமுத்தியோ சித்தாந்தமுத்தியோ வுண்மையென்ற மா ணுக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

கயிற்றரவுங்கட்டையினிற் கள்ளனும்போன்மாயா
மயக்கமற்றவேதாந்த வாழ்வு - முயற்சிகெட்ட
வாநந்தாதீதத்தே யாணவராமாகமமுந்
தானந்தினார்க்குச் சமன்.

கயிற்றரவுங்கட்டையினிற் கள்ளனும்போன்மாயா - மயக்கமற் றவேதாந்த வாழ்வும் எ - து - உள்ள கயிற்றினிடத்தில்லாத பாம்பு கற்பிதமாத்தோற்றுதல்போலு முள்ளகட்டையினிடத்தில்லாத கள் வன் கற்பிதமாத் தோற்றுதல்போலும் உள்ள பிரமத்தினிடத்தில்லாத மாயைகற்பிதமாத்தோன்றுகிறதென் றறிந் திம்மாயாமயக்கஞ்சிறிதுந் தோன்றுதிறந்தவிடம் வீடென்றுகூறும் வேதாந்தச்செல்வமும்.

முயற்சிகெட்ட - வாநந்தாதீதத்தே யாணவராமாகமமுந் -தான ந்தினார்க்குச்சமன் - எ - து - தற்போதமுயற்சி சிறிதுந்தோன்றுதிற ந்த வாநந்தாதீதத்திற் பெத்தத்திசையி லாணவராகி யிருப்பானைப் போலு மிருப்பதே வீடென்றுகூறு மாகமச்செல்வமுந் தானெனவ் றெதிரிட்டெழும் புல்லறிவு கெட்டார்க்குச்சமனும்-எ-று.

அவித்தியா கதமாயிருந்த சீவனது புன்மையறிவா யிருந்து நா னென்றெதிரிடு மவ்வறிவுகெட்டபோ தச்சீவசாட்சியாயிருந்த பிரமந் தானுகலானு மாணவமயமாயிருந்த வான்மாவினது புன்மையறிவா யிருந்து நானென்றெதிரிடு மப்போதங்கெட்டபோ தவ்வான்மா த னக்குமுதலாகிய சிவமயமாதலானு மிங்ஙன மாயபோதிருவர்க்கு மாநந்தானுபவ மிருத்தலானுந் "தானந்தினார்க்குச்சம,, மனன்றார் தா னந்தாத வபரஞானிகட்குச் சமனன்றென்பது தானேயாயிற்று.

இத்திருவெண்பாவால் வேதாந்த சித்தாந்தமுத்தி யிரண்டுந் தற்போத மொழிந்தோற்குச் சமமென்றறிவித்தவாறு காண்க.



என்றுணையென்றுணை யென்றுணையேகமிரண்
டென்னுமற்சும்மா விருவென்று - சொன்னான்
திருஞானசம்பந்தன் சீகாழிநாட
னருளாளன்ஞான விநோதன்.

என்றுணையென்றுணை யென்றுணையேகமிரண் - டென்னுமற்சும்மா விருவென்று - சொன்னான் - எ - து - முக்காலுந் தமதுபேரிற் றிருவாணைகூறி முத்தியில் வேதாந்தியைப்போ லேகமென்றும் பேத சித்தாந்த வாதியைப்போ லிரண்டென்றுங்கூறு திங்ஙனங் கூறுதற்கே துவாய வுன்போதத்தையொழித்து நீ மவுனநந்தமா யிருத்தியென்றருளிச்செய்தார்.

திருஞானசம்பந்தன் சீகாழிநாட னருளாளன் ஞானவிநோதன் எ - து - திருஞானசம்பந்தப் பிள்ளையாரென்னு நாமதேயத்தையுடையார் சீகாழிநாட்டிற் கதிபதியான வருளாட்சியுடையார் ஞானத்திருவிளையாட்டினையுடையார்-எ-று.

ஒன்றெனிற்பெறுவானும் பேறுமின்றாமாகலினுமிரண்டெனிற் பதமுத்தியேயன்றி யயிக்கியமுத்திகூடாதாகலினும் போதவறிவிவிரண்டாயும் போதவொழிவி லொன்றாயுமிருத்தலினும் ஏகமிரண்டென்னுமற் "சும்மாவிருவென்றுசொன்னு,, னென்றார்.

இத்திருவெண்பாவான் முத்திநிச்சய மீதென் றறிவித்தவாறுகாண்க. (௰௪)



ஐந்தாவது.

சரிதைக்கழற்றி முற்றிற்று.



ஆ திருவெண்பா-௱௩௪.

திருச்சிற்றம்பலம்.





உ

திருச்சிற்றம்பலம்.

ஆறாவது

# விரத்திவிளக்கம்.



இங்ஙனஞ் சரிதாதிகளை நீத்து நின்றாராயினும்
முட்டுறவில்லார்க்கு ஞானம்விளங்காதாகலி னிவ்வதிகாரத்தினுட்
டுறவிவிளக்கங்கூறி யுட்டுறவினிலக்கண மறிவித்தாராகலி
னிவ்வதிகாரத்திற்கு விரத்திவிளக்கமென்று
பெயராயிற்று.

விரத்தியெனினுந் துறவியெனினுமொன்று.

அறிந்தவிடத்தின்ப துன்பமாகாததுவு
மறந்தவிடத்தின்ப மயக்கு - மறிந்த
வலியறிவுநீயென்று னத்துவிதாநந்த
முலையமுதமுண்ட*முனி.

அறிந்தவிடத்தின்பதுன்பமாகாததுவு - மறந்தவிடத்தின்பமயக்கு - மறிந்த - வலியறிவுநீயென்றான் - எ - து - கருவிகண்முப்பத்தாறையுங்கடந் தருளையறிந்தவிடத்தான் டின்பமுந் துன்பமு முண்டாகா தவ்வருளைமறந்தவிடத்து முன்னீங்கிநின்ற கருவிகள்வந்து கூடலானத் துன்பமு மின்பமும் வந்திடு மயக்குமாகலிற் பதியறிவோடுங்கூடி யின்பதுன்பமின்றிய வப்பதியறிவாயும் பாசவறிவோடுங்கூடி யின்பதுன்பமாயுநின் றதனையுமிவற்றையுமறிந்த வலியறிவு நீயென் றெனக்கருளிச்செய்தார்.

அத்துவிதாநந்த - முலையமுதமுண்டமுனி - எ - து - இரண்டற்ற வத்துவிதத்திற் றோன்றும் பேராநந்தமாகிய திருமுலையமுதத்தை 'யம்மை பொற்கிண்ணத்தேந்திக் கொடுப்ப வாங்கியுண்ட' 'திருஞானசம்பந்தப்பிள்ளையார்-எ-று.

" பதியறிவு - ஆணறிவு - பாசவறிவு - பெண்ணறிவு - இவ்விருவகையறிவும்போலன்றிப் பதியறிவோடுங்கூடிப் பதியறிவாயும் பாசவறிவோடுங்கூடிப் பாசவறிவாயு மாண்வடிவும் பெண்வடிவுந் தழுவிநின்ற வலிபோலிருத்தலிற் பசுவறிவை யலியறிவென்றார்.

“அம்மை„ யாநந்த வடிவமாகலி னவளது திருமுலைப்பாலை யாநந்த வமுதமென்றார்.

அதுவுமென்பதனை யத்துன்பமு மின்பமு மயக்குமெனக்கூட்டுக.

இத்திருவெண்பாவா லான்மாவொன்றுண்டென் றறிவித்தவாறு காண்க.

அறுசமயத்தோர்க்கு மறுதியிட்டகூடற்
றுறவாயவாவறுத்த தூய்மை - பிறவா
முடிகள்சமுத்தி முயற்சியெல்லாமூத்த
கடைகருமநாச மிதுகாண்.

அறுசமயத்தோர்க்கு மறுதியிட்டகூடற் - றுறவாயவாவறுத்த தூய்மை - எ - று - அறுவகைச் சமயத்தோர்க்கும் வீடடைதற்குமட்டிட்டுவைத்த பொதுநெறி யாதெனிற் கூடற்கட் சங்கப்பலகையிலேறியிருந் துட்பற்றுப் புறப்பற்றென்னு மிருவகைப்பற்றினையுந் துறப்பதா யித்துறவுகளால் மெய்ப்பொருளை யுணர்வதாய்ப் பிராரத்துவவாசனையா னேர்காலையி னுள்ளத்தெழு மவாவினையுமறுத்த தூய்மையாய்க்கூறிய விம்மூவகை யதிகாரங்களி னெறிகளேயாம்.

பிறவா - முடிகள்சமுத்தி முயற்சியெல்லாமூத்த - கடைகருமநாசமிதுகாண் - எ - று - அங்ஙனன்றியும் பிறவாமைக்கேதுகூறிய பலவாற்றுள்ளுஞ் சிரசாய கருவிகளின் முப்பத்தாறையும் போக்கப்பட்டவீடுந் தற்போதமுயற்சி யெல்லாமுதிர்ந்த கடையாகிய கருமநாசமுமிம்மூவகை யதிகாரத்திற்கூறிய நெறியாங்காண்-எ-று.

சமயிகளறுவரும் வீடடைதற்கு மட்டு வேறுவேறு கூறினாராயினு மொருவர்கூறியதொருவருக்குஞ் சம்மதமன்று துறவாய் மெய்யுணர்ந்து அவாவறுத்த லனைவர்க்குஞ் சம்மதமாமாகலின் "அறுசமயத்தோர்க்கு மறுதியிட்டகூடற்றுறவா யவாவறுத்த,, லென்றார்.

துறவு மவாவறுத்தலுங் கூறினமையா னிடையில்மெய்யுணர்வு வருவிக்கப்பட்டது.

இங்ஙனஞ் சங்கப்பலகையின் மேலேறிக்கூறிய மூன்றதிகாரங்களென்றது (திருக்குறள்) ளுட்டுறவாதி மூன்றதிகாரங்களையு மாமென்றறிக.

இம்மூவகை யதிகாரங்களி னெறிகளி னொழுகுத லுயிர்ச்சுத்தியிங்ஙன முயிர்ச்சுத்தி பண்ணுவோர்க் குடற்சுத்தி பண்ணவேண்டுவதின்மையாற் "கடைகருமநாசமிதுகா,, ணென்றார்.

இத்திருவெண்பாவா னுட்டுறவு புறத்துறவுடையவனாஞ் சமயிகளெல்லாரும் ஞானிகளென் றங்கீகரிப்பரென் றறிவித்தவாறுகாண்க.

வாசிக்குச்சாவிரர் வைதாற்பொருதது போ
லாசைக்கேடர்க்கிதுவா மட்டதென - நேசித்த
வொட்டையைப்போல்வார்க்கா ரூடப்ப ராவண்பழுகும்
பெட்டருக்கிதோகாப்பிழை.

வாசிக்குச்சாவிரர் வைதாற்பொருததுபோ - லாசைக்கேடர்க்கி துவாம் - எ - து - வாசியென்றவார்த்தைக்கு மனம்பொருதிறந்துவி டத் துணிந்தவீரனைவைதான் மனம்பொருததுபோற் பெண்ணாசை யாகாதென் றோர்வார்த்தை கூறியமாத்திரத்தி லவ்வாசை மனத்தின்க ண் மீட்டெழாதடகரு மவ்வாசை நாசர்க்கே யிவ்வதிகாரத்தி னருத்த ஞ்சம்மதமா மென்றவாறு.

அட்டதென - நேசித்த-வொட்டையைப்போல் வார்க்காரூடம் பாராவூண்பழுகும் - பெட்டருக்கிதாகாப் பிழை - எ - து - அறுசுவை யடிசில்போல் வேப்பந்தழையாதி கைப்பினையிச்சித்த வொட்டகத் தைப்போற் காடிகூழ் களி முதலியவற்றைச் சுவையாய் விரும்பு வோர்க்குஞ் சம்மதமா ரூடல்பருக்கும்படி யறுசுவையடிசில்களை ந ன்று தீதென்று பகுத்தூண்பழகும் பேடிகளுக்குங் காமிகளுக்கு மி தனருத்தஞ் சம்மதமாகாத குற்றமாம்-எ-று.

மற்றநூலின்கண் ணொரிடத்துப் பெண்ணாசை யாகாதென்று கூ றக் கண் டதனைவிடுத்தோர்க்கே யவ்வாசையுடையோனை மிகவுமிகழ் ந்து கூறு மிதனருத்தஞ் சம்மதமாமாகலின் "வாசிக்குச்சாவிரர் வை தாற்பொருததுபோ லாசைக்கேடர்க்கிதுவா" மென்றார்.

அருந்தலாசை வைத்துக் கூறினமையா லாசைக்கேடர்க்கென்ற தைப் பொருந்த லாசையாகக்கொள்க. (௩)

இத்திருவெண்பாவா லருந்தல் பொருந்தல்களிலாசையற்றோர்க் கே யிந்நூலாமென் றறிவித்தவாறு காண்க.



நீரிங்ஙனங் கூறியவாற்றானாசையறுதலோ முத்தியெனின் மேற் கூறுகின்றார்.

பாசங்கழன்றாற் பசுவுக்கிடம்பதியா
மூசல்வடங்கழன்ற தொவ்வாதோ - நேசித்த
பற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்பாட்டுமெக்கோ
மற்றச்சமயமெங்கு மாம்.

பாசங்கழன்றாற் பசுவுக்கிடம்பதியா - மூசல்வடங்கழன்ற தொ வ்வாதோ - எ - து - உயிர்ச்சார்வு பொருட்சார்வாகிய விருவகைச்சா

ரீவு மிச்சாரீவுகளை நீங்கியபோது மிவற்றின்மே லெழாநின்றவவாவு மிப்வவா நீங்கியபோதுங் கண்ட பொருள்கண் மேற்சென்று பற்று மிந்திரியங்களு மிவ்விந்திரியங்க ளடங்கியபோது முன்னேறியிருந்த வாசனையா லுள்ளெழு மனநினைவுகளு மிவைமுதலிய பாசங்களெல்லா நீங்கழன்றபோ திவற்றினின்ற பசுவுக்குப் பதியேயிடமா மஃதெங்ஙனமெனி னந்தரமாநின்ற ஆசற்கயிற்றிலிருந்தோனுக் கவ்வூசற்கயிறற்றபோது நிலமிடமாமதுபோ லஃதொவ்வாதோ வதனை நீயறிதி யஃதன்றி.

நேசித்த - பற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்பாட்டுமெக்கோ-மற்றச்சமயமெங்குமாம் - எ - து - தம்மாலிச்சிக்கப்பட்ட பற்றுக்களெல்லா மற்றபோதே யப்பற்றறுதி பிறப்பினை யறுக்குமென்று (திருவள்ளுவநாயனூர்) கூறியகுறள் வெண்பாப்பாட் டுமெக்குமாத்திரமோசம்மத மற்றைய சமயங்களுக்கெல்லாஞ் சம்மதமாம்-எ-று.

ஊசலிருந்தபோது மொழிந்தபோது மதனுளிருந்தோனுக்கசைவு மசைவின்மையு முண்டாவதுபோற் பாசமிருந்தபோது மொழிந்தபோது மசைவு மசைவின்மையு மான்மாவிற் குண்டாமென்பதுங்காண்க.

இத்திருவெண்பாவா லான்மாவிற்குப் பாசமுழுவதும் நீங்கிற்பதியைத்தேடவேண்டுவ தின்றென்றறிவித்தவாறு காண்க.

---

உனக்குமெய்யாய்த்தோன்றி யொழித்துவிடும்பாசம்
வினைச்சடமேயென்னின் விடம்போ - லுனைச்சுழற்று
மானுலுந்தன்னை யறியாததுன்னறிவு
தானுகுஞானத் தடை.

உனக்குமெய்யாய்த்தோன்றி யொழித்துவிடும்பாசம் - வினைச்சடமேயென்னில் விடம்போ - லுனைச்சுழற்று - மானுலும் - எ - து- உனக்குத்தோன்றும்போ தியானெனதென்று கருதும்படிமெய்யாகத்தோன்றி நீக்கும்போ தூன்னைப் புறம்பாயொழித்து நீங்கிவிடுந்தேகபோகங்களாகிய பாசம் வினைக்கீடாய்வரு மாயாகாரியமாகிய சடமென்றறிவிப்பினும் நீ யிங்ஙனமறியாமையா னின்னைவிடம் புசித்தவனை மயக்குதல்போன் மயக்குமெனினு மப்பாசம் ஞானத்தடையன்றினி ஞானத்தடையாவ தியாதெனின்.

தன்னையறியாததுன்னறிவு - தானுகுஞானத்தடை - எ - து-தனுவாதிகளையெல்லா மிதுவிதுவென்று நானுவாய்ப் பகுத்தறிந்துமவற்றையறிந்த தன்னையறியாத துனது புல்லறிவாகலி னிவ்வறிவே ஞானத்திற்குத் தடையாகும்-எ-று.

ஆணவத்தான் மறைபட்டிருந்த வான்மாவிற்குச் சிவன்மாயையிற் றனுகரண புவனபோகங்களைக்கொடுத் திச்சாஞானக்கிரியைகளை விளக்குவித்தலானு மித்தனுவாதிகளாற் சுருதிகுரு சுவானுபூதிகளையறிந்து வீடடைதற் கேதுவாகலானு மிவற்றைச்சடமென்றுந் தனக்கன்னியமென்று மறிந்தபோது மயக்காமையானு மூனைச்சுழற்று மாறானுமிவை ஞானத்தடையலவென்றுந் தானென்றுந் தனதென்றுந் தன்னலறியப்பட்ட தேகபோகங்களைத் தானுந்தனதுமலவென் றவற்றைத்தனக் கன்னியமாக்கண்டு தன்னை யுள்ளபடியறியமாட்டாத தனதறிவே ஞானத்தடையாகலி னுன்னறிவு "தானுருஞானத்தடை,,யென்றுங்கூறினர்.

தனுவாதிநான்கினுட் டனுவோடு கரணமும் போகத்தோடு புவனமு மொத்துமையாயிருத்தலிற் றேகபோகமென் றிரண்டாகக்கூறப்பட்டது. (௫)

இத்திருவெண்பாவாற் றனுவாதிகளைத் தனக்கன்னியமாக்காணிற் றிருவருடோற்றுமென் றறிவித்தவாறுகாண்க.



ஆன்மாவிற் கிவையுருவமன்றாயி னிவற்றின்மயமாயிருப்ப தென்னையெனின் மேற்கூறுகிறார்.

சிற்றறிவனுய்மறைப்பைச் சேர்ந்தவடிவொண்படிகம்
பற்றுகினுமொன்றாகாப்பான்மைபோ-லுற்ற
வுருவசொரூப சுபாவமுனக்கு
வருமடைவுசொன்னோமதி.

சிற்றறிவனுய்மறைப்பைச் சேர்ந்தவடி வொண்படிகம் - பற்றுகினுமொன்றாகாப் பான்மைபோல் - எ - து - கிஞ்சிக்கவறிவனுய்ச்செம்பிற்களிம்புபோன்ற வாணவமறைப்பைச்சேர்ந்த வடிவான்மாவினதுசுபாவம் படிகமடுத்த வுன்னமயமா யிருப்பினுந் தன்னிற மந்நிறத்தோ டொன்றாகாத முறைமைபோலத் தானடுத்த கருவிமயமாயிருப்பினுந் தன்னறிவக்கருவியறிவோ டொன்றாகாதிருப்பதான்மாவினதுருவம் படிகம்பற்றுகினு மொன்றாகாவெனவே யொன்றையும் பற்றுதிருந்த படிகநிருமலமா யிருத்தல்போ லான்மா மும்மலங்களையும் நீங்கி நிற்றல் தனதுசொரூபம்.

உற்ற-வுருவசொரூபசுபாவமுனக்கு-வருமடைவுசொன்னோமதி -எ - து - இங்ஙன முனக்குற்றசுபாவ வுருவசொரூபங்கள் வருமுறையைச்சொன்னோ மிவற்றை நீயறிந்துகொள்ளுதி-எ-று.

ஆணவஞ்சகசமலமாகலி னதனைச்சேர்ந்தவடிவு சுபாவமென்றும்படிகத்திற்குச் சிவப்புவன்னமுதலிய செயற்கையாய் வந்ததுபோ

லான்மாவிற்குக் கருவிகள் செயற்கையாய்வந்து பொருந்தலி னிதனை யுருவமென்றும் படிகம் வன்னங்களைநீங்கியபோது தனது சுயசொரூ பத்தோ டிருத்தல்போ லான்மா கருவிகளையெல்லாம் நீங்கியபோது தனது சுயசொரூபத்தோடிருத்தலி னிதனைச்சொரூபமென்றுங் கூறப்பட்டது. (௬)

இத்திருவெண்பாவா லான்மாவின துருவசொரூப சுபாவமறிவித்த வாறுகாண்க.



நினைப்புமறப்பற்று நிறைந்தவறிவா
யனைத்துடனுநின் றம்பரமாய்த் - தனக்கருளித்
தன்னுநந்தத்தைத் தனக்களித்தசர்க்கரையே
யன்னுனுக்கின்னவைமூன்றும்.

நினைப்புமறப்பற்று நிறைந்தவறிவா - யனைத்துடனுநின் றம்பரமாய்த்-தனக்கருளி - எ - து.- நினைப்புமறப்பாகிய சகலகேவலங்களை யறுதியிலேநீங்கி யெங்கும்பரிபூரணவறிவா யெல்லர்வற்றோடுங் கூடிநின்று மாகாயம்போ லொன்றோடுந் தாக்கற்றிருப்பதா யான்மாவிற் கருள்செய்து மும்மலங்களையும் நீக்கி.

தன்னுநந்தத்தைத் தனக்களித்தசர்க்கரையே - யன்னுனுக்கின்னவைமூன்றும் - எ - து - தன்துபோாநந்தத்தை யவ்வான்மாத் தனக்குக் கொடுத்தருளிச்செய்த நாவிற்குச் சர்க்கரையே யன்னசிவனுக்கு மின்னவுருவ சொரூபசுபாவ மூன்றுமுண்டாம்-எ-று.

"நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவா,, யெனவேசிவனதுசுபாவ மனுதியிலேநின்மலமாயிருத்தலெனவு "மனைத்துடனுநின்றம்பரமா,, யெனவே யிங்ஙனமிருப்ப தருளாகலி னவனதுருவ மிச்சாஞானக்கிரியைகளெனவுந் "தன்னுநந்தத்தைத்தனக்களித்த,, வெனவே யாநந்த மவனதுசொரூபமெனவுங்காண்க. (எ)

இத்திருவெண்பாவாற் சிவனதுருவ சொரூபசுபாவ மறிவித்த வாறுகாண்க.



அறிந்துபற்றிநின்றழுந்து மற்பவறிவை
யறிந்துசுத்தியே பேரறிவாய் - நிறைந்துசிவந்
தோயாமனின்றதுபோற் றோற்றமுதலைத்துடனுந்
தோயாமற்சுத்தத் துறவு.

அறிந்துபற்றிநின்றழுந்து மற்பவறிவை - யறிந்துசுத்தியே பேரறிவாய் - எ - து - பஞ்சவிடயங்களையும் ஞானேந்திரியங்களாலறிந்து

கன்மேந்திரியங்களாற்பற்றி யந்தக்கரணங்களா லவற்றுளழுந்துங் கிஞ்
சிக்கபோதத்தை யான்மாவின தியற்குணமன்றென்று மதுபானங்
கொண்டோனுக்கு லகிரிதோன்றியதுபோ லவ்விருவகை யிந்திரியங்க
ளையுங் கரணங்களையுங்கூடிய விடத்துத்தோன்றிய விடயபோத மீதெ
ன்றறிந் தவ்விந்திரியங் கரணங்களோடு மப்போதத்தை நீத்துத் தன்னை
யுள்ளபடியறிந் தங்ஙனந் தன்னையறிந்தபோது தனக்கிந்திரிய கரணங்
களையும் வேறுக்கித் தன்னையுமறிவித்த தருளெனக்கண் டவ்வருளேவ
டிவாகியிருந்து தான் மலமுமாகாமற் சிவமுமாகாமற் சிவானுயோக
த்தி லிரண்டற வழுந்திநிற்ப தான்மசுத்தி யிந்தவான்மசுத்தியே சிவத்
தில் வியாபகமாகிய பேரறிவாகலி னிப்பேரறிவாகி.

நிறைந்துசிவந் - தோயாமனின்றதுபோற் றேற்றமுதலைந்
துடனுந் - தோயாமஞ்சுத்தத்துறவு - எ - து - தனக்கு வியாத்தியாயிரு
ந்த சிவமெல்லாவற்றோடும் பூரணமாய்நிறைந்திருந்து மொன்றோடு
ந் தோய்வற்று நின்றாற்போலச் சிருட்டியாதி யைந்தொழில்களோடு
ந் தோயாமனிற்பதே பரிசுத்தமான துறவு-எ-று.

இச்சா ஞானக்கிரியைகள் சிவதத்துவங்களைச்செலுத்தச் சிவதத்
துவங் கலாதிகளைச்செலுத்தக் கலாதிக ளான்மாவினிச்சா ஞானக்கிரி
யைகளையெழுப்ப வான்மாவினிச்சை யந்தக்கரணங்களி னிடத்தும்
ஞானம் ஞானேந்திரியங்களிடத்துங் கிரியை கன்மேந்திரியங்களிடத்து
நின்று விடயங்களையறிந்து பற்றி யழுந்துமாகலி னிவ்விருவகையிந்
திரியங்களுங் கரணங்களும் நீங்கவே ஆன்மாவினிச்சா ஞானக்கிரியை
நீங்குமிவைநீங்கவேகலாதிகணீங்கும் இவைநீங்கவே சிவதத்துவநீங்கும்
இவைநீங்கவே தன்னையறியப்படுமாகலி "னறிந்துபற்றி நின்றழுந்து
மற்பவறிவையறிந்" தென்றார்.

அவனவளது முன்னிலையாயிதாகிதங்கள் வருதலையு மவற்றைத்
தாம்பெறுதலையுந் திருவருட்கண்ணாற் பார்த்தழிந்துப் பேய்பிடியுண்
டவனைப்போற் சிவத்துண்மறைந்து நின்றமையாற்றான் மலமுமாகா
மலென்று மங்ஙன நின்றழியாத வாநந்தபோகம் பெறுதலாற்றான் சி
வமுமாகாமலென்றுங் கூறப்படுமிங்ஙனமிருப்ப தான்மசுத்தியாகலி
ற் "சுத்தி" யென்றார்.

ஒன்றையும் பகுத்துக்காணாது வியாத்தியாய்நின்ற சூரியனொளி
யில் வியாபகமாகிய கண்ணொளியு மொன்றையும் பகுத்துக்காணாது
நிற்பதுபோ லொன்றையும் பகுத்தறியாது நின்ற சிவவியாத்தியில்வி
யாபகமாகிய வான்மாவும் பஞ்சகிருத்தியங்களால் விளங்கும் பிரபஞ்
சங்களொன்றையும் பகுத்தறியாது நிற்கவேண்டுமாகலின்" இவந்தே

யாமனின்றதுபோற் றோற்றமுதலைந் துடனுந் தோயாமற்சுத்தத்துற,,
வென்றார்.

பஞ்சகிருத்தியங்களாவன வோரிந்தியத்திற்பிரவேசித்தல் சிருட்டி யவ்விந்தியத்தினின்றோர் விடயத்தைப்பற்றாத நிதிபற்றியவிடயத் திரண்டறவழுந்துதல் சங்கார மதிக்தம் பிறத்தறிரோபாவ மதனைத் தெளிந்துகோட லநுக்கிரக மிங்வன மோரிந்தியத்திற் பஞ்சகிருத்தியங்களும்வரலாலைந்திந்திரியங்களினுந்தோயாமனிற்பதே யைந்தொழிலினுந் தோயாமனிற்பதெனவறிக.

அறிந்துபற்றி நின்றழுந்துதலை விடயபோதமென்றறித லான்மரூபக மவற்றைநீக்கித் தன்னையருளாற்கண்டவிட மான்மதரிசனந்தான்மலமுமாகாமற் சிவமுமாகாமற் சிவத்தோடிரண்டறக் கலந்துநிற்பதான்மசுத்தியெனக்கொள்க. (அ)

இத்திருவெண்பாவாற்-பரிசுத்தமாகிய துறவிதுவென் றறிவித்தவாறுகாண்க.



ஞானிகளிங்ஙனம் பிரபஞ்சத்திற் றோயாமனிற்பரோ வெனின் மேற்கூறுகின்றார்.

கூரிருளின்மின்மினியின் கூட்டம்போல்வாழ்சகத்தை
யாரறிவாரந்த வறிவுதயஞ் - சூரியன்கா
ணுன்னிழலைக்கெடுத்த வுச்சியிலேஊனமறச்
சொன்னாரவத்தைகளைந் தும்.

கூரிருளின்மின்மினியின் கூட்டம்போல்வாழ்சகத்தை - யாரறிவாரந்தவறிவுதயஞ் - சூரியன்காண் - எ - து - மழைக்காலத்தனையிருளின் மின்மினிப்புழுக்கூட்டம்போன் றனவாந்தகாரத்திலான்மாக்கள் கிஞ்சிஞ் போதத்தோடும்கூடிப் பொய்ம்மையாய் வாழாநிற்ற விப்பிரபஞ்சத்தை ஞானிகளாயினு ரியாவரறிவார் அவர்சகத்தோடுங் கூடியிருக்கச் சிதேயும் தனையறியாரென்று நீர் கூறியதென்னையெனி னவர்க்கந்த ஞானோதயஞ் சூரியோதயம்போற் றோற்றுமாகலி னச்சகத்தையறியார் ஆயி னிந்தஞானத்தை யடியேன்பெறுமாறெங்ஙனமெனின்.

உன்னிழலைக்கெடுத்தவுச்சியிலேஊனமறச்-சொன்னாரவத்தைகளைந்தும் - எ - று - காலையினுமாலையினு நீளுமுனது நிழலைக்கெடுத்த வுச்சிகாலத்தைப்போற் சகலகேவலங்களிற்செல்லு முன்போதமடங்கிய நடுவிடத் துரியாணவக் குற்றமறவும் ஞானச்செல்வம் வரவுமே

றவிக்ச் சுத்தாவத்தைகளைந்தினையுஞ்சொன்னார் பெரியாவற்றை யா ஞ்சொல்லக்கேட்டு நீயறிதி-எ-று.

இருளைப்போலாணவ மின்மினிபோற்கவிப் போதத்தோடுங் கூடியவான்மாக்கண் மின்மினிமின்னிய வாறேதோன்றா மறைந்து மறைந்து மின்னல்போ லான்மாக்களினது மறப்புநினைப்புக ளாகவி து "கூரிருளின்மின்மினியின் கூட்டம்போல்வாழ்சக" மென்றார்.

சூரியோதயத்திற் பூதவிருளு மின்மினியொளியுந் தோற்றாதது போன் ஞானோதயத்தி லாணவவிருளுங் கருவிப்போதமுந் தோற் றாதாகவி "னறிவுதயஞ்சூரியன்கா" னென்றார்.

இந்திரியங்கள்பத்தும் பஞ்சபூதங்களிடமாய்நின்று விடயங்களை நேரேயபகரித்து விசற்கரிக்கப் பொருந்தியபோத மிறக்கவிருந்தவி ட நின்மலசாக்கிர மவ்விந்திரியங்களிடமாய் விடயங்களைப் பகுத்தறிய ப்பட்ட வான்மாவினிச்சா ஞானக்கிரியைகளுக் கிடமாகிய மனம் புத்தி யாங்காரங்களின் வியாத்தியறுமிட நின்மலசொற்பன மான்ம சைதன்னியத்திற் கதிட்டானமான சித்தவிகற்பமொடுங்கின விடநின் மல சுழுத்தியச்சைதன்னியாவாகனமானபிராணவாயுநீங்கின விடநின் மல துரிய மூசல்வடமற்ற போததற்கு விழ்ந்தவிட மாதாரமானாற் போ லிங்ஙனங் கருவிப்போத மெல்லாங் கழிந்தவிடத் தான்மாவரு ளா தாரமாயநின்ற சுத்தாவத்தை நின்மலாதீத மிக்கருவிப் போதங்கழ ன்றசுத்தாவத்தையிற் சுடர்காட்டக்கண்ட கண்போலருளாற் றன்னைய றிவது நின்மலசாக்கிர மிங்ஙனந் தன்னையறிந்தவிடத் துத் தனக்கொரு சேட்டையற் றந்தவருளே தனக்காதாரமா யவ்வருளிற் றானசைவற நின்ற விடமவ்வருட்டரி சனமிங்ஙன மிவ்வருளைத்தரிசிப்பது நின்மல சொற்பன மிச்சாஞானக் கிரியைதோன்றாது நின்றவிடம் பரையிந் தப்பரையினது நின்மலமெல்லாந் தனதிச்சாஞானக்கிரியை தோன் றாதுதனதாகி யெதிர்பிறிதுமின்றி யிப்பரையே தானாகியிருந்தவிட நின்மலசுழுத்திதா னிப்பரையாகிய விடத்துக்கதிரொளி நேரேநின்ற கண்ணைக்கதிரிடத் ததீதப்படுத்தறுவாயி லிக்கண்ணுக் கந்தக்கதிரினது வட்டப்பளபளப்புமாத்திரந் தோற்றுவதுபோற் பரையைநீங்கி யா னந்தசத்தி நேரேநின்று தான் சிவத்திலதீதப்படுத்தறுவாயி லாநந்தானு பவம்பெறுவது நின்மலதுரிய மக்கதிரினது வட்டப்பளபளப்பாகிய சோபையைக் கண்டகண்ணைக் கதிராகாதிருக் கச்சிதேயுந்தன் பார்வை யுமிழந்து தன்னாற்காணப்பட்ட முதலையு மிழந்தக்கதிர்தானாய் மிகவு மதீதப்பட்டாற்போ லிங்ஙனமானந் தானுபவம்பெற்ற வான்மா வந் தவானந்தமாகா திருக்கச்சித்தேயு மவ்வர்தத்தானுபவத்தையறிந்ததானு

யின்றியாநந்தமாய் நின்றமுதலுமின்றி யவ்வாநந்தமே தானுயதீதப் பட்ட விடநின்மலாதீத முன்சொன்னவைந்துங் கருவிகண்முப்பத்தா று நீங்குதற்கேது பின்சொன்னவைந்துந் தற்போதங்கெட்டுச் சிவத் திலதிதப்படுதற்கேது "சொல்ஞூாவத்தைகளைந்து,, மென்றதிலையெ னக்கொள்க.

"உச்சியிலேசொன்னூரவத்தைகளைந்து,,மென்றமையானவ்வுச்சி நேர்படுதற்கேதுவாகிய வவத்தைகளைந்தினையுஞ் சொல்லப்பட்டது.

இருளைப்போற் கேவலமுடுக்களைப்போற் சகலமுமுவின்றி யிரு ளைமாத்திரங் காணுங்கண்போலவு மிருளிடத்துடுவாற் காணுங்கண் போலவுங் கேவலசகலங்களை யறியுமான்மாசூரியவுத்பத்தி யிருளுமு டுவுமின்றிச் சூரியப்பிரகாசமாத்திரங்கண்ட கண்போலரு டோற்றிய காலத்துமுன் றோன்றியகேவல விருளுங் கருவிக்கூட்டங்களுந் தோ ன்று தவ்வருளைமாத்திரங் கண்டுகொண்டிருப்ப தருட்டரிசனஞ் சூரி யப்பிரகாசத்தைக்கண்ட கண்புடைபெயர்ந்து நோக்கா தச்சூரியப்பி ரகாசத்திலேகிபாவமாய் நிற்பதுபோ லருளென்றுந் தானென்றுஞ் சிறிதுந்தோன்று தவ்வருளே தானுய்நிற்பது பராதரிசனம்.

சூரியப்பிரகாசத்தைவிட்டச்சூரியனது வட்டப்பளபளப்பைப் பார்த்தகண்போ லான்மா பராயைநீங்கி யாநந்தபோகம் பெறுதல் சூரியனது வட்டப்பளபளப்பைப் பார்த்தகண்டன் பார்வையுமிழந் தப்பளபளப்பாகிய காட்சியையுமிழந்தச் சூரியனுள தீதப்பட்டது போ லாநந்தபோகத்தைப் பெற்றவான்மா வதனைப்பெற்றதானென் பது மவ்வாநந்தமென்பதுமின்றி யவ்வாநந்தந்தாகு யதனுளதீதப்ப டுவதீண்டிருவகையாய்க்கூறியவவத்தைகட்குவமை யிதனுனுங்காண்க

இத்திருவெண்பாவால்ஞானிகளுலகத்தையறியாரென்றும்-ஞான ம்நின்மலாவத்தையினின்றூற் பெறலாமென்று மறிவித்தவாறுகாண்க.



அந்தஞானத்தை நீர்கூறியநின்மலாவத்தையினின்று பெறுவதே யன்றித் துறவின்கண்ணின்று தவத்தைப்பண்ணிப் பெறக்கூடாதோ வெனின் மேற்கூறுகின்றூர்.

மெய்யாகத்தோன்றிவிடும் பொய்யைவிசாரிக்கிற்
பொய்யாய்ச்சுவர்ப்பாம்பாய்ப்போமன்றி - யையா
தொழிலைச்செயிற்றுனுஞ் சோரனைப்போற்றோன்றிக்
கழலப்பறையறைதல்காண்.

மெய்யாகத்தோன்றிவிடும் .பொய்யைவிசாரிக்கிற் - பொய்யா ய்ச்சுவர்ப்பாம்பாய்ப் போமன்றி-யையா-தொழிலைச்செயில்.எ - து-

விசாரியாதபடியினாலே மெய்யாகத்தோன்றும்-பொய்யாகிய கருவி க்கூட்டங்கள துண்மையை நின்மலாவத்தையினின்று விசாரித்தறியிற் சுவரிலெழுதிய பாம்புபோலாய்ப் பொய்யாய்த்தோன்று மஃதன் றியவற்றை யங்ஙனம் விசாரித்தறிந்து நீக்காதுவைத்துக்கொண் டவை போம்படிக்கு மாணாக்கனே நீ தவத்தொழில்களைச் செய்தியெனின துதான்.

தானுஞ்சோரனைப்போற்றோன்றிக் - கழலப்பறையறைதல்கான் எ - து-சடமாகிய கட்டையைத் தீபத்தாற் பாராதபடியினாற் கள்வனை ப்போற் றோன்றக்கண்டு வெருண்டக் கள்வனிக்கும்படிக்குப் பறை யறைதலோடொக்கும்-எ-று.

சுவரிலெழுதிய பாம்பிற்குத் தோற்றரவு மாத்திரமேயன்றிச்சே ட்டையின்றாயதுபோற் கருவிகளை யெதிரிட்டறிந்தபோது பிரபஞ் சந் தோற்றரவுமாத்திரமேயன்றி முன்போற்சேட்டியாதாகலி னங்ங னமுவமைகூறினார். நின்மலாவத்தையினின் றருட்கண்ணா லெதிரிட்டு ப்பார்க்கும்போது சடமாய்நீங்குற்கருவிகளைமெய்யாகக்கருதிக்கொ ண்டவை நீக்கும்படிக்குத் தவத்தொழிலைச் செய்யத் தொடங்கினமை யாலிங்ஙன முவமைகூறினார். (ம)

இத்திருவெண்பாவாற் கருவிகளின துண்மையைக் காணினெல் லாம் பொய்யாய்விட்டு ஞானந்தோன்றுமன்றித் தவத்தா னங்ஙனம் விடுதலு ஞானந்தோற்றமு மின்றென்றறிவித்தவாறு காண்க.



கருவிகள துண்மையையறிந்தா லெல்லாம் பொய்யாய்ப்போ மென்றீ ரப்பிரபஞ்சமுந் தேகமும் பரிச்சேதமின்றாய்ப் போமோ வெனின் மேற்கூறுகின்றார்.

உலகத்தைமாயா வுடலைப்பொய்யென்று
லலகைத்தேர்போலறிவ தல்லால்-விலகித்
துடைத்தொழித்தலாகுமோ சொப்பனத்திச்சூழ்ந்தாற்
கடக்கவிடுஞ்சாக்கிரம்போங் காண்.

உலகத்தைமாயாவுடலைப்பொய்யென்று - லலகைத்தேர்போலறி வதல்லால்-விலகித் - துடைத்தொழித்தலாகுமோ - எ - து - மாயாகா ரியமாகிய விப்பிரபஞ்சத்தினையு முடம்பினையும் பொய்யென்றறிவி த்தாற் பேய்த்தேர்போற் பொய்யாகக்கண்டறிவதன்றி யத்தேகாதி பிரபஞ்சங்களைப் பரிச்சேதமாய் நீக்கித்தள்ளி யொழிக்கக்கூடுமோ நீரிங்ஙனங் கூறியவற்றான் ஞானமு மஞ்ஞானமுங் கூடியிருக்குமோ வெனின்.

சொப்பனத்தீச்சூழ்ந்தாற் - கடக்கவிடுஞ் சாக்கிரஞ்சேர்போற்கான் எ - து - சொற்பனவத்தையி லொருவனைக் கடக்கும்வழியின்றி யக்கினிசூழ்ந்துகொண்டா லவ்வக்கினியைக் கடக்கவிடுஞ் சாக்கிராவத்தைபோ லுன்னைச்சூழ்ந்து கொண்டுநின்ற தேகாதிப்பிரபஞ்சங்களை ஞான சூரியன்வந்துதோன்றி யுனக்குப்பொய்யாகக் காட்டிவிடுமென்றறிதி-எ-று.

பேய்த்தேர்நீரைப் பொய்யென்று கண்டபோது நீர்போற்றோற்றாவு முன்னர் மெய்யென்றுகண்ட வாசனையுமிருக்குஞ் சொற்பனத்தியைக் கடக்கவிட்டசாக்கிரத்தி லித்தோற்றரவின்றி முன்கண்டவாசனைமாத்திரமிருக்கு மங்ஙனம்போற் சுத்தாவத்தையினிற் போர்க்குஞ் சுத்தத்தினிற் போர்க்கும் பிரபஞ்சத் தோற்றுமாகலி னவ்விரண்டுவமையுங்கூறினார். (௰க)

இத்திரு வெண்பாவாற் கருவிகளதுண்மை யறிந்தவிடத்துத் தேகாதிபிரபஞ்சங்கள் முன்போல் மயக்குதலின்றிக் காட்சிவாதனை மாத்திரையாய் நிற்குமென் றறிவித்தவாறுகாண்க.



கருவிகண் முப்புத்தாறையும் பொய்யாகக் கண்டுநீங்கினு லந்த ஞானந் தோன்றுமோவெனின் மேற்கூறுகின்றார்.

பொய்யென்றவார்த்தை புரையற்றுமெய்யானுன்
மெய்யென்பதுதேடவேண்டுமோ-மையிருளைத்
தீர்த்தவெயிலைத் திரும்பியசைத்திமைத்துப்
பார்த்ததிலென்சந்தயம்வைப்பாய்.

பொய்யென்றவார்த்தை புரையற்றுமெய்யானுன் - மெய்யென்பதுதேடவேண்டுமோ - எ - து - கருவிகளெல்லாம் பொய்யென்று நீசொன்னவார்த்தைபோற் குற்றமற்றனதறிவிற்கவை பொய்யென்ப துண்மையாய்த் தோற்றுமேனின் மெய்யாகிய ஞானமென்பது வேறுதேடவேண்டுமோ வவத்தையைப பொய்யாய்த்தோற்று வித்த துதானே ஞானமன்றோவாயினிங்ஙனந் தோற்றுவித்த ஞானத்தையா ன்கண்டுகொண்டிருக்க வேண்டாவோவெனின்.

மையிருளைத்-தீர்த்தவெயிலைத் திரும்பியசைத்திமைத்துப் - பார்த்ததிலென்சந்தையம்வைப்பாய் - எ - து - மயக்கமாகிய வாணவவிருளைத் தீர்த்தஞானப்பிரகாசத்தை யுன்போதத்தாலெதிரிட் டசைத்துப்பார்த்து மங்ஙனம் பாராதொழிந்து மந்தஞானப் பிரகாசத்தை யிதம்தாமோ வன்றோவென்று நீயென்னையயுறுகின்ற யங்ஙனமையுற தத்துளசைவற நிற்றி-எ-று.

சூரியப்பிரகாசத்தா லிருளிங்கி யப்பிரகாசத்தைக்கண்ட கண்ணின்பிரகாசமோ வன்றோவென்றதன்மேலையறு தவ்வொளியிலேகிபாவமாய் நிற்பதுபோ லருளிலசைவறநிற்க வேண்டுமாகலி னங்ஙனமுவமைகூறினார். (௫௨)

இத்திருவெண்பாவாற் கருவிகளனைத்தும் பொய்யாகவுள்ளபடியறிதலே ஞானமென் றறிவித்தவாறுகாண்க.

தேகாதிப் பிரபஞ்சமெல்லாம் பொய்யென்றும் பிறவிதுன்பமீதாகாதென்றும் ஞானசூநு ஞானிகளெல்லாருங் கூறுகின்றாரிவருள ஞானிகளை யறிவதெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.



வேண்டாம்பிறப்பென்ற வார்த்தையினின் மெய்விடயந்
தீண்டாததிலே தெரியாதோ - காணீர்
உடம்புமிகைபொன்றிலா மையேநோன்பென்
றடங்கவடங்கினரை.

வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினில் - எ - து - பிரபஞ்சம் பொய்யென்றும் பிறவியாகாதென்றும் மெய்ஞ்ஞானிகளும் பொய்ஞ்ஞானிகளுங் கூறியவார்த்தையிலவர்களைப்பிரித்துக் காணக்கூடாதாயினும்.

உடம்புமிகைபொன்றிலாமையேநோன்பென் - றடங்கவடங்கினரை-மெய்விடயந் - தீண்டாததிலேதெரியாதோ-காணீர்-எ - து-உடம்பைச்சத்துருவென்று மோர்விடயங்களினும் பற்றிலாமையே நோன்பென்றுமறிந்தத் தேகபோகங்களை யானெனதென்று கருதும் புறத்துறிற்றபோத மடங்கவுள்ளிற்ற போதமடங்கிய மெய்ஞ்ஞானிகளை யவரதுடம்புவிடயங்களைப்பற்றுததனாற் றெரியுமாகலினிகருதிப்பாற் கண்டுகொள்வீர்-எ-று.

மெய்யாற்காண்டு மொற்றுமையால் வார்த்தையிலேகாணக்கூடாதாயினுமென்பது வருவிக்கப்பட்டது.

மெய்யோடிந்திரியங்க ளொற்றுமையாயிருத்தலின் "மெய்விடயந்தீண்டாதென்,, றுருபெயராகக்கூறினார்.

என்றுஎன்பதனை-யுடம்புமிகை-யென்றதனோடுங்கூட்டுக. (௫௩)

இத்திருவெண்பாவால் வாசகஞானிகளையும் அநுபவஞானிகளையுமறிதற்கேது கூறியவாறுகாண்க.

ஆறாவது விரத்திவிளக்கம் முற்றிற்று.

௫௰௩ திருவெண்பா-௱௩௪.



உ

திருச்சிற்றம்பலம்.

# எழாவது - துறவு.



எத்தனையுட்டுறவுடையாராயினும் புறப்பற்றொன்றிருப்பினப்
பற்றோர் காலையறிவை மயக்குமாகலிற்
புறத்துறவும் வேண்டுமென்றிதனுட் புறத்துறவிலக்கணங்
கூறினாராகலி னிவ்வதிகாரத்திற்குத்
துறவென்றுபெயராயிற்று.

தேடப்படும்பொருளைச் சிக்கனவாகப்புதைத்துக்
கோடிக்கொருதிமிடங் கொள்ளுகினுங் - கூடாத
வாணாளைவீண்கழிக்கு மானிடனைப்போன்மயக்கம்
பூணார்பொய்கண்டு துறப்போர்.

தேடப்படும்பொருளைச் சிக்கனவாகப்புதைத்துக் - கோடிக்கொருதிமிடங்கொள்ளுகினுங் - கூடாத - வாணாளைவீண்கழிக்கும் - எ - து - தம்மாற்றேடப்பட்ட திரவியங்களையெல்லாஞ் சிலவழியாது பத்திரமாகச் செமஞ்செய்துவைத்துக்கொண்டு தானுடலைவிட்டுப்போங்காலை திமிடகால மவ்வுடலிருக்கக் கோடிதிரவியத்துக்குப் பிறர்கையிலாயுர்வாங்கிக் கொள்ளுவோமெனினுங் கூடாத விவ்வுடலோ டுயிர் வாழ்நாளைத் தவத்திற்கழியா தவத்திற்கழிக்கும்.

மானிடனைப்போன்மயக்கம் - பூணார்பொய்கண்டு துறப்போர் - எ - து - பேதைமானிடனைப்போற் றேகாதிபிரபஞ்சங்களை மெய் யாகக்கண் டிவற்றின் மயக்கம்பூணாராகி யிவற்றைப் பொய்யாகக்கண்டு துறப்போர் - எ - று.

கடவுளராயினு மங்ஙனமா யுட்கொடுக்கவுங் கொள்ளவுங் கூடா தாகலிற் கூடாதவென்றார். (க)

இத்திருவெண்பாவா லிளமைக்கண்ணே வனிதாதிபோகங்களைத் துறந்து ஞானாசாரியனையடைந்து வீடடையவேண்டுமென்று கூறியவாறுகாண்க.



ஊர்க்குருவியும்வளர்த்த குஞ்சுமொருமனையிற்
பாக்கனையும்பார்த்திதுநம் பற்றென்றோ - மூர்க்க
ரரிபிரமரிந்திரர்கள் வாழ்வனித்தநம்வாழ்
வொருபொருளோவென் றொழிவாரோ.

ஊர்க்குருவியும்வளர்த்த குஞ்சுமொருமனையிற் - பாக்கனையும் பார்த்திருநம் பற்றென்னோ - மூர்க்கர் - எ - து - ஓர்மனையில்வாழா நின்ற ஊர்க்குருவியு மதுவளர்த்த குஞ்சுகளு மம்மனையிற் பூனையு மப்பூனையினது குட்டிகளு மிளமையி னல்வினைக்கீடாய்த் தம்முளுறவாய்க் கூடியிருந்ததையு முதிர்ந்தபோது தீவினைக்கீடா யுறவாயிருந்த தாமே தம்முட்பகையாய்ப் பிரிந்துபோனதையு மம்மனையுளிருந்து நாம்பார்த்திருந்து மங்ஙனம் வினைக்கீடாய்வரு மனைவிமக்கண்முதலிய விப்பிரபஞ்சத்தினைத் துறவாதிதன்மேன் மனதுபற்றியிருத்தலி தென்னைகொலோ ஆயினவற்றைப்பார்த்திருந்து மெல்லோருமிவ்வாழ்க்கையோடு மிருக்கவில்லையோ நீ யிங்ஙனங்கூறிய தென்னையெனின் அம்மனைவிமக்கண்முதலிய விப்பிரபஞ்சம் வினைக்கீடாய்வந்ததென்றறியா தப்பிரபஞ்சத்தோடுங்கூடி வாழ்பவர் மூர்க்கர்.

அரிபிரமரிந்திரர்கள் வாழ்வனித்தநம்வாழ் - வொருபொருளோவென் றொழிவாரோ - எ - து - அப்பிரபஞ்ச மிருவினைக்கீடாய் வந்ததென்றறிந்த உத்தமராயினு மியாவர்க்குமேலாய வரிபிரமரிந்திரர் முதலிய தேவர்கள்வாழ்வு மனித்தியமென்று வேதாகமங்கள் கூறுதலானமதற்பவாழ் விதோர்பொருளோவென்று கருதி யப்பிரபஞ்சத்தைத் துறவாதொழிவாரோ-எ-று.

ஒருவ னல்வினை யநுபவிக்குங் காலத்துத் தாய்தந்தை மனைவி மக்கள் சுற்றம் நட் பிவர்முதலியோ ருறவாயிருந் திதஞ்செய்வ ரவன் றீவினை யநுபவிக்குங்காலத் தங்ஙன முறவாயிருந்தவர்தாமே பகையாயகிதஞ்செய்வாராகலி னிவ ரிருவினைக்கீடாய் வந்தவரென்றறிந்து துறக்கும்படிக் கவைகளையுவமைகூறினார். (௨)

இத்திருவெண்பாவான் மனைவியாதிகுடும்பம் வினைக்கீடாய்வந்ததன்றித் தமக்குறவன்றென்பது மனித்தியமென்பது மறித்தவாறாண்க.



இங்ஙன மெல்லாவற்றையுந் துறந்தவரியாவரோவெனின் மேற்கூறுகின்றார்.

பட்டினத்துப்பிள்ளையினைப் பத்திரகிரியைப்பரவி
விட்டுவிடமாட்டார் வெறுவிடர் - வெட்ட
வெறுவெளும்பைநாய்கறண்ட வேந்தர்வாநாய்ப்பார்த்
துறுமுவதைக்காட்டுவோ மோ.

பட்டினத்துப்பிள்ளையினைப் பத்திரகிரியைப்பரவி - விட்டுவிட மாட்டார் வெறுவிடர் - எ - து - அளவற்ற செல்வராயிருந்து மச்செல்வங்களெல்லாந் துரிசறத்துறந்த பட்டினத்துப்பிள்ளை நாயனாரையும் பத்திரகிரிநாயனாரையுந் தோத்திரம்பண்ணி மனைவியாதிய பற்றுக்களைவிட்டுத் துறக்கமாட்டார்கண் மிகுந்தமிடியராயிருந்தாராயினு மனைவி மக்கண் முதலாயினோரை யாம்விடுத்துத் துறந்தோமே லவரை யயலார் கைக்கொண்டு போகாரோவெனில்.

வெட்ட - வெறுவெலும்பைநாய்கறண்ட வேந்தர்வரநாய்பார்த் துறுமுவதைக்காட்டுவோமோ - எ - து - ஊன்சிறிதுமின்றிய வெள்ளெலும்பை யோர்நாய் தனது பற்கொடு கறண்ட லந்நாய் முன்னரைய ரெதிர்வர வந்நா யவ்வெலும்பை யவர்கவர்ந்து கொள்வரென்றுகருதி யவரைப்பார்த் துறுமுவதைப்போ லியாமுங்காட்டுவோமோ-எ-று.

அளகேசனைப்போன்ற செல்வத்தினையு மருந்ததிபோன்ற கற்பினையுடைய மனைவியையுங் காமனைப்போலுங் கட்டழகினையுந் துறந்தோர் பட்டினத்துப்பிள்ளைநாயனாரும் பத்திரகிரிநாயனாருமாகவினவரைத்துறந்தோரென் றெடுத்துக்காட்டி யம்மூவகையுமொன்றேனுமில்லாரு மவரைப்போற் றுறக்கமாட்டாமையால் “விட்டுவிடமாட்டார்வெறுவிடர்,, என்றார்.

எலும்புகறண்டு நாய்க்குத் தனதெயிற்றிலது தைத்ததுன்பந் தெரியா தின்பமாந்தோற்றம்போலவனிதாதிபோகங்களாகிய துன்பத்தை யாணவமின்பம்போன் மாறுபடுத்திக்காட்ட வின்பமாகக்கருதலான் “வெறுவெலும்பைநாய்கறண்ட,, வென்றார், தாம்பற்றியவெலும்பை யயலார்கவர்வரெனக்கருதி யவரைப்பார்த்துறுமுவதுபோற் றாம்பற்றியகுடும்பத்தைப் பிறர்கவர்வரெனக்கருதிக் கூறலானு “முறுமுவதைக்காட்டுவோமோ,, வென்றார். (௬).

இத்திருவெண்பாவாற் செல்வமிளமை யழகுமுதலானவற்றுட் சிறந்திருந்து மவற்றிற்பற்றோ ரணுவளவுமின்றி யவற்றையெல்லாந் துன்பமென்று துரிசறக்கைவிட்ட பட்டினத்துப்பிள்ளை நாயனார்பத்திரகிரி நாயனார்போன்று துறந்தோரே யெல்லாவற்றையுந் துறந்தோராவரென்பதூஉம் அச்செல்வமுதலியவற்றுளொன்றேனு மின்றாகவுந் துன்பந்தருதற்கிடமாகிய மனைவியாதிகுடும்பத்தை யின்பமெனக்கருதிக் கைவிடற்கஞ்சுவாரே ஆணவத்தான் மறைப்புண்டவராவரென்பதூஉ மறிவித்தவாறுகாண்க.

நீரிங்ஙனங்கூறியவாறே துறந்தோர் பிறப்புநீக்குவரோவெனின் மேற்கூறுகின்றார்.

நாடுநகர்வீடுடையாடாய் தந்தைநட்புமக்கள்
மாடுகுலம்பொன்னுடம்பின் வாதனைகள் - கூடத்
தொடுத்தவலைக்கண்ணித் தொடக்கிதனையிப்போ
விடப்பெறுவாரோன்பிறப்பார் மேல்.

நாடுநகர்வீடுடையாடாய் தந்தைநட்புமக்கள் மாடுகுலம்பொன்னுடம்பின் வாதனைகள் - எ - து - நாடுநகரும் வீடு மனைவியுந் தாயுந்தந்தையும் நட்பு மக்களுமாடுஞ் சாதியுந்திரவியமு மிவைமுதலிய வுடம்பு வாதனைகளும்.

கூடத் - தொடுத்தவலைக்கண்ணித் தொடக்கிதனையிப்போ - விடப் பெறுவாரோன்பிறப்பார்மேல் - எ - து - தாடகப்பட்ட பிணித்தவலை யுங் கண்ணியுமாகிய தொந்தனையென்றறிந் திந்தொந்தனை யிப்போ துவிடப்பெறுவா ரினிமேலே லென்பிறப்பார்-எ-று.

உடம்பின்வாதனைக ளென்றமையா லாடையாபரண மியானைகுதிரை சவிகை சிவிகைசாய்மனை முதலியவுங்கொள்க.

இங்ஙனங்கூறிய வெனதென்னும் போகப்பற்றைநீக்குந் தவஞ் செய்வோர்க் கியானென்னுந் தேகப்பற்றுமற மித்தேகப்பற்றறவே யிவற்றை யானெனதென் று புறந்தரநின்ற போதமறு மிப்போதமற வே உண்ணின்றபோத மகத்துவாசனை யன்றுறு சூக்குமவாசனையன்று மிவ்வாசனையானே ஞானங்கிடைக்கு மிந்ஞானத்தால் விடுவாமாகவி ன் "என்பிறப்பா ர்மே„ லென்றார். (௬)

இத்திருவெண்பாவாற் போகவாதனைகளெல்லாம் பற்றறத்துறந் தோர் தேகவாதனையாதிகளற்று ஞானத்தால் வீடடைவது மெய்ம்மை யாதலி னவர்க்கினியெஞ்ஞான்றும் பிறப்பின்றென்பதறிவித்தவாறுகாண்க.



நீர்கூறிய மனையாதிய பற்றுக்களை யெல்லாந்துறந்து பொன்னை மாத்திரம் பிடித்துக்கொண்டு தவஞ்செய்யலாகாதோவெனின் மேற் கூறுகின்றார்.

தின்னிற்றுயிரில் விடம்பிடித்துத்தீர்ந்துவிடும்
பொன்னைநினைக்கப் பொருந்துகாண்-முன்னை
மருந்தாலுமந்திரத்தினாலுந்தவிராப்
பெரும்பாவம்பெண்ணிற் பெரிது.

இன்னிற்றியிரில் விடம்பிடித்துத்தீர்ந்துவிடும் - பொன்னைநினைக்கப்பொருதுகாண் - பின்னை - மருந்தாலுமந்திரத்தினாலுந்தவிராப்பெரும்பாவம் - எ - து - கோபாதிகளாகிய தீயினால் விடமுண்டாலவ்விடஞ் சிறிதுபோது தாழ்த்துத்தலை மீக்கொண்டு பின்னர்மணிமந்திர வவிடதங்களாற் றீர்ந்துபோம் பொன்னைக் கரந்தனம்பற்றாதுவாக்கானுங்கூறாது மனத்தானினைக்கவே யப்பொன்னாசையாகியவிடமானக் கணமேனுந்தாழா தந்நினைவினும் விரைந்துதலை மீக்கொண்டு பின்னர் மணியானு மருந்தானு மந்திரத்தானுந் தீராதபெரும்பாவமாகலின்.

பெண்ணிற்பெரிது - எ - து - நீவிடுக்கின்றேனென்ற பெண்ணாசைவிடத்தைப்பற்ற விப்பொன்னாசைவிட மிகவும்பெரிதினைமனத்தானும் நினையாதுவிடவேண்டும்-எ-று.

துறந்தோர் பொன்பிடித்தா லதனைப்பாதுகாத்தற் கிடம்பிடிக்கவேண்டு மஃதன்றியப்பொன்னை வளர்த்தற் கவாத்தோன்றி அபக்குவர்க்கு ஞானசாத்திரங்களைக்கூறிப் பொன்கொடுத்தார்மேல் விழைவுங்கொடாதார்மேல் வெகுளியுந்தோன்று மிவைதோன்றவே துறவாய வருந்தவப்பயனுமின்றி முயன்பேன்றேடுங்கூடச் செய்த வில்லறப்பயனுமின்றிக் கேடுவருமாகலிற் 'பெரும்பாவம் பெண்ணிற்பெரி, தென்றார். (ரு)

இத்திருவெண்பாவாற் பொன் மனத்தானினைப்பினு மாறுமயக்கந் தருதலானும் ஈட்டலாதியால் விழைவு வெகுளியாதிகளுடுத்துத் தவப்பயனன்றி யில்லறப்பயனு மழிதலானும் பெண்ணாசையினும் பெரும் ந் தருவதாகலி னதனைப்பற்றலாகாதென்ப தறிவித்தவாகாண்க.



இங்ஙனந் தேகாதிப்பிரபஞ்சமெல்லாம் பொய்யென்றுநீர்சொல்லக்கேட்டதேயன்றி மற்றியாவருஞ் சொல்லக்கேட்டிலேனென்றமாணாக்கனை நோக்கிமேற்கூறுகின்றார்.

செல்வமிளமையுடம்புபேய்த்தேரொன்று
சொல்லுவதென்கானோசுட்டதுபோ-யெல்லை
விடுவோர்பிறப்பிறப்பின் மீளார்கண்மீண்டாற்
றொடுமோசிவனைத்தொடா.

செல்வமிளமை யுடம்புபேய்த்தேரொன்று - சொல்லுவதென்கானோ - எ - து -செல்வமுமிளமையு முடம்புமிவைமுதலிய பிரபஞ்சங்களுங் கானற்சலம்போலப் பொய்யென்றி யாங்கூறவேண்டுவதெ

ன்னை யவைமெய்போற்றோன்றி யழிவனவற்றைத் தாங் காட்சிப்பிரமாணமாகக்காணுர்கொல்லோ ஆயினெல்லோரும்ஞானத்தாற்பிறப்பறுமென்றுகூறநீர் துறவாற்பிறப்பறுமென்று கூறியதென்னையெனின்.

சுட்டறுபோ - யொல்லை - விடுவோர்பிறப்பிறப்பின் மீளார்கண் மீண்டாற் - றொடுமோசிவனைத்தொடா - எ - து - தேகாதிப் பிரபஞ்சங்களை யெனதியானென்றுசுட்டி யதியுமிச்சுட்டுப்போதம்போ யப்பிரபஞ்சத்தைச் சீக்கிரத்தில்விட்டுத் துறப்போர் பிறப்பிறப்பில்மீண்டுவாரார்கண் ஞானக்குறைவினால் மீண்டார்களேனு முற்றுறந்து தவம்பண்ணிய வாசனையா லப்பற்றுக்களைக்கடந்து நிற்பரோயவ்விய வரைப்பற்றுத் தீண்டுமோ தீண்டாதாயினும் பிறப்பின்மீண்டோரைத்தீண்டாதோவெனி னவர்சிவனைப்போலு மொன்றேடும் பற்றற்றுடையராாகலிற் றீண்டாது-எ-று.

அனித்தியவிவேகந்தோன்றிய வக்கணமே தாழ்த்திராதெல்லாவற்றையும் விடவேண்டுமாகலி "னொல்லைவிடுவோ,, ரென்றார்.

முற்பிறப்பி லவாவுடையார்க் கிப்பிறப்பினு மதுதொடர்தல்போல முற்பிறப்பி லவாவறுதியுடையார்க் கிப்பிறப்பினு மவ்வவாவறுதியே தோற்றுமாகலிற் "சிவனைத்தொடா,, வென்றார்.

இத்திருவெண்பாவா லுடம்புமுதலிய பிரபஞ்சந் தோன்றியழிவது பிரத்தியக்கமாக விருத்தலிற் கானற்சலம்போன் றழிவதென்று ஒருவர்கூறக் கேட்கவேண்டுவ தின்றென்பதூஉம் இங்ஙனம் பிரத்தியக்கமாயிருப்பினு மறியா ரஞ்ஞானிகளென்பதூஉம் சுட்டறிவுபோய்ப் பிரபஞ்சத்தை யநித்தியமென்றறிந்து விரைந்துவிட்டுத் துறப்பதே ஞானமென்பது மித்துறவுடையோ ரீண்டுமீண்டும் பிறவாரென்பதூஉந் தவக்குறைவான் மீண்டாராயினு மொன்றினும் பற்றுதலற்றிருப்பரென்பது மறிவித்தவாறுகாண்க. (௬)

---

இந்தவவாவறுதியினால் வரப்பட்டவின்ப மென்னையென்ற மாணாக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

ஆசையினாலற்பசுக மாயழிந்தாற்பேரின்ப
மாசையில்போக்கென்றறிய லாகாதோ - வாசை
நளினைக்கழுக்குவந்த நாசமெனநாடித்
தெளியப்போமற்றிவை யைந்தும்.

ஆசையினாலற்பசுக மாயழிந்தாற்பேரின்ப - மாசையில்போக்கென்றறிய லாகாதோ - எ - து - ஆசையினாலே போதஞ் சகமுகமாய்ச்சென்று விடயங்களிலழுந்தத் தமக்கவற்று ளற்பமாய சுகந்தோ

ன்றி யழியுமாறு விவ்வாசை நாசமே சிவத்திற்றோன்றும் பேரின்பம் பெறுதற்கேதுவென் றறியலாகாதோவாயி னவ்வாசைபோமா றெங்ஙனமெனின்.

ஆசை- நளிகைக்கழுக்குவந்த நாசமெனநாடித் - தெளியப்போமற்றிவ்வையந்தும் - எ - து - அவ்வாசை போதத்தின்கண் ணேறுவது நெய்யாதிவார்த்தடைக்கு மூங்கிற்குழாய்க் கழுக்குவந்த நாசம்போலத்தமக்குநாசமாமென விசாரித்தறியு மவ்வாசையின் போதமாய விடயங்களிற்பிரிந்துசெல்லு மிவ்வைந்தவாவுநீங்கும்-எ-று.

ஆன்மாவாசையினால் விடயத்திலழுந்திச் சிற்றின்பம்பெறுதல்போ லவ்வாசைநாசத்தாற் சிவத்திலழுந்திப் பேரின்பம்பெறுமாகலின் "பேரின்பமாசையின் போக்கென் றறியலாகாதோ,, வென்றார்.

தேனெய்யெண்ணெயாதிவார்க்கு மூங்கிற்குழாய்ச் சிறுதுவாரத்தின்கண் மரவட்டைமுதலியன நுழைந்தா லதிற்சுழல்வதேயன்றி யழுக்கினுள் மீளமாட்டாதாகலின் முற்போற்றே னதிவார்த் தங்கிகரியாததனைப்புறம்பாய் விடப்படு மதுபோ லாசைப்போதத்தி னேறியிருந்தபோ தெவ்விதத்தாலுமீளா ததனாலப்போதத்தில் வீட்டின்பத்திற்கேதுவாய துறவு மெய்யுணர்வுமுதலிய நற்குணங்களேறா திக்குணங்களேறாமையின் முன்போற் பிறவித்துன்பத்தையே பெறுமாகலி னங்ஙனமுவமைகூறினார்.

நளிகையின் மரவட்டையாதி நுழையும்போ தின்பம்போலவெளிதினுழைந்துமீளமாட்டாததுபோற் போதத்தின்கணாசையேறும்போதின்பம்போற்றோன்றி யெளிதிலேறி மீளாமைக்குங்கொள்க. நளிகையென்பது மூங்கிற்குழாயது திசைச்சொல். (எ)

இத்திருவெண்பாவா லவாவினா லற்பவின்பம் பெறுதல்போ லவாவறுதியாற் பேரின்பம்வருமென்பதும் அவாவினாற் றமக்குநேரிடுமநர்த்தத்தை யுண்மையாய்விசாரித்தறியி னவ்வவாவறுதி வருமென்பது மறிவித்தவாறுகாண்க.



இனித்துறவினதுமுடிவுந்துறந்துசெய்யுந்தவத்தினதுமுடிவு மடியேற்கருளிச்செய்ய வேண்டுமென்ற மாணக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

உதயந்தொழப்போவார்க் குள்ளும்புறம்பும்
புதையவொளிவீசுமா போலே-பதிமோகி
தீக்காட்டிலேகொடுக்கச் சென்றவாகண்டக்கால்
றூக்காததன்றோதவம்.

உதயந்தொழப்போவார்க் குள்ளும்புறம்பும் - புதையவொளி வீசுமாபோலே-எ-து - சூரியவுதயந்தொழச்செல்வோர்க் குள்ளும் புறம்பு மிருளின்மறையவொளி வீசுமாறுபோலே மனை சுதர்முதலிய பற்றுக்க ளெல்லாவற்றையும்விட் டொற்றின்மே லுளத்தெழு மவாவி னையுமறுத்துக் கண்டவிடயங்கண் மேற்சென்றுபற்று மிந்திரியங்களையு மடக்கி யுள்ளும்புறம்பு மாசையாகிய விருளற நிராசையாகிய வொ ளிவீச நிற்றலே துறவினதுமுடிவு.

பதிமோகி - திக்காட்டிலேகொடுக்கச் சென்றவாகண்டக்காற் - று க்காதநன் றேதவம் - எ - து - தனதுபுருடன்மே லதிமோகியாயிரு ந்துளா ளவன்மரித்தகாலை யவனுக்குத் தன்னைக்கொடுக்கச் சுடுகாட்டி ற்சென்றவாறு கண்டவளைப்போலும் நற்போதத்தைச் சிவனுக்கூறு க்கொடுத்துந் தாமொன்றேடுந் தாக்கற்றிருத்தலன்றே தவத்தினது முடிவு-எ-று.

உதயந்தொழுவார்க்குக் கண்விழித்தபோது மிமைத்தபோது மொளிவீசுதல்போலுந் துறந்தோர்க்கும் பொறிகளால் விடயங்களை க்கண்டபோதுங் காணதிருந்தபோது "முள்ளும்புறம்பு நிராசையோ டிருக்கவேண்டுமாகையினிங்ஙனமுவமைகூறினர்,, "தவமென்றமையா ற்றுறவுவருவிக்கப்பட்டது,,

இத்திருவெண்பாவா லுள்ளும்புறம்பு நிராசையோடிருப்பது துறவினது முடிவென்பதும் போதமொழிந்தொன்றேடுந்தாக்கற்றி ருப்பது தவமுடிவென்பது மறிவித்தவாறுகாண்க. (அ)



இங்ஙன நிராசையோடிருந்தோர்க்குந் தற்போதமறுமோவெ ன்ற மாணாக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

ஊமைமணியாட்டுகினு மோசையழிந்தாற்போல
வாமதுபோனிற்க வரிதுகா - ணமாய்
வளர்ந்தவசத்தையெலா மாளமரக்காலா
லளந்தெறிந்துபோட்டதுபோ லாம்.

ஊமைமணியாட்டுகினு மோசையழிந்தாற்போல - வாம்-எ-து- நாவிழந்தமணியைப் பிடித்தசைப்பினு மோசையொழிந்து நின்றாற் போலப் பஞ்சவிடயங்களும் வலியவந்தடுப்பினு மதிதீவிரபக்குவர் க்குப் போதங்கலங்காது நிராசையேயுண்டாம்.

அதுபோனிற்கவரிதுகா - ணமாய் - வளர்ந்தவசத்தையெலாமா ளமரக்காலா - லளந்தெறிந்துபோட்டதுபோலாம் - எ - து - அவரங் ஙனநிற்கு மதுபோனிற்க மற்றையபக்குவர்க்கு மிகவுமரிதுகா ணுநா

வுபாயத்தானு மங்ஙனநிற்கவருமாயி னுசையான் முன்னர்ப்போத மேலிட்டு மேன்மேல்வளர்ந்த வதனதுசேட்டையெல்லா மிறந்து போம்படி யறிவாகிய மரக்காலா லிவ்வளவென்றளந்து புறம்பாயெறிந்து போட்டதுபோலாம்-எ-று.

நிராசையோ டிருப்போனாக் கருவிகள் சேட்டியாதுநீங்கு ம க்கருவிகணீங்கவே திருவருடோன்று மத்திருவருளாற் போதத்தையி தென்றளவிட்டறிந் தொழிக்கலாமாகலி னிங்ஙன மும்மைகூறினார்.

இத்திருவெண்பாவா னிராசையுடையோனை வலிந்துவிடயங்க ளடுக்கினும் போதமசையாதாகலி னிராசைவரிற் போதவொழிவு தானேவருமென்பது மிங்ஙன மிருத்தல் பக்குவர்க்கரிதென்பது மங்ஙனமாயினு மவர்க்கு முபாயத்தா னவாவறுநிவருமாயி னப்போதச் சேட்டை யளவிட்டெறியுப்படு மென்பது மறிவித்தவாறுகாண்க.



தநுகரண புவனபோகங்களிற் சிறிதேனும் பற்றின்றி நிற்றற் குபாய மெங்ஙனமென்ற மாணாக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

தநுவாதிநான்கினுக்குஞ் சார்வழிந்துசற்று
நினையாதினைப்பாறி நின்றான் - மனையாமோ
காந்தக்கடத்தூசி காற்றற்றதீபமென
வாந்தத்துவங்க ளயலாம்.

தநுவாதிநான்கினுக்குஞ் சார்வழிந்துசற்று - நினையாதிளைப்பாறி நின்றான் - மனையாமோ - எ - து - போகமுநானல்ல புவனமுநானல்ல தநுவுநானல்ல கரணமுநானல்லவென் றுள்ளபடியறிந்து நியதிகளாந் தத்தநுவாதி நான்கினிடத்து மியானெனதென்று சார்ந்துநின்ற போதச்சார்வுகெட் டவற்றைமீட்டுச் சற்றும்பற்றுதருளி லிளைப்பாறி யசைவறநின்றான் மனையாகிய புவனத்தினிடத்து மம்மனையைப்பற்றி யிருந்த வனிதாதிபோகத்திடத்து முன்போற் பற்றுண்டாமோ ஆயிற் புவனபோகங்களிற் பற்றின்றிநிற்பினுந் தநுகரணங்களிற்பற்றின்றி நிற்ப தெங்ஙனமெனின்,

காந்தக்கடத்தூசி காற்றற்றதீபமென - வாந்தத்துவங்களயலாம் - எ - து-காந்தக்கடத்திற் கெதிர்முகமாயபோது பற்றியுமதனுட்கிடந் தபோது பற்றாதுமிருந்த காந்தக்கடத்தூசிபோலுங் காற்றிலிருந்த போதசைந்துங் காற்றின்றியபோ தசையாதுமிருந்த காற்றற்றதீபம் போலு மத்தநுகரணங்களைத் தனக்கன்னியமாய்க்கண்டு நீங்கிநிற்பி லவற்றோடுந் தாக்கற்றுநிற்பதுண்டா மவற்றோடுந் தாக்கற்றுநிற்கவே மற்றையதத்துவங்களு மயலாய்நீங்கும்-எ-று.

தறுவாதிகளிற் கறங்குபோற் கழன்றதன்மை திருவருட்கணின்ற போ தின்மையா "விளைப்பாறி,, யென்றார்.

காந்தக்கடத்திற் கெதிர்முகமாயபோது பற்றியவூசி யதனுட்கி டந்தபோது பற்றுதிருந்ததுபோற் சகமுகமாய்நின்று தேகத்தையா னென்றுபற்றிய போதமசுமுகமாய்நின்று திருவருளை யடைந்தபோ தத்தேகத்தை யானென்றுபற்றுதாகலிற் "காந்தக்கடத்தூசி,, யென்று மப்புவனபோகத் தறுகரணங்களைப் போதம்பற்றுது நின்றபோது கரணந் தற்சேட்டையற்றடங்கு மப்போது போதந்திருவருளோடுங் கூடிக்காற்றற்றதீபம்போலாகி மீட்டுங்கரணத்தோடுங் கூடாதாகலிற் "காற்றற்றதீப,, மென்றுங்கரணங்களறவே யக்கரணங்களினது சேட் டைக்கேதுவாய கலாதிகளு மக்கலாதிகளைப் பிரேரகம்பண்ணுஞ் சுத் ததத்துவங்களு நீங்குமாகலிற்"தத்துவங்களயலா,, மென்றுங்கூறினார்

இத்திரு வெண்பாவாற் புவனபோகங்களைத் தானல்லவென்றுள்ள படியறிந்துகளைந்து அவற்றின்கட் சார்ந்துநின்ற போதச்சார்புகெட் டருட்சார்பினின்றுற் புவனபோகப் பற்றறுமென்பதுந் தறுகரணங் களைத் தனக்கன்னியமென் றறிந்தவற்றோடுந் தாக்கற்றுத் தனக்கனன் னியமான வருளாய்நிற்பினத்தறுகரணப் பற்றறுமென்பதும்இங்ஙன மறவே மற்றைதத்துவங்கடாமேயறுமென்பது மறிவித்தவாறுகாண்க.

---

உத்தமராயினோர் கற்புடையமனைவியைத் துறப்பாரோவென்ற மாணுக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

நாயலகைநெய்விரும்பி நக்குவதுநஞ்சிட்ட
பாயசமுமெய்ப்பரிசம் பாவைமிகச் - சாயாநீர்
வேட்கையசுணமிபம் விட்டின்மீன்வண்டிவையின்
சாட்சியைக்கண்டார் துறவாதார்.

நாயலகைநெய்விரும்பி நக்குவதுநஞ்சிட்ட - பாயசமுமெய்ப் பரிசம் பாவைமிகச்சாயாநீர் - வேட்கை - எ - து - நாயானதுவாள்வா யிற்றடவியநெய்விரும்பி யவ்வாள்வாயை நக்குவதுபோலும் விடங் கலந்தபாயசத்தை யொருவன்சுவையென விரும்புவதுபோலு மாகு ம்பாவையாது மெய்ப்பரிசத்தை யின்பமாய் விரும்புதலாகலினும் பொய்யாகிய வப்பாவையாது மெய்ப்பரிசத்தை மெய்யாகக்கண்ட னுபவிக்கவிழைதன் மிகவும்பொய்யாகிய கானனீரைமெய்யாகக்கண் டுதாகத்திற்குண்ண விரும்புதல்போலா மாகலினும்.

அசுணமிபம்விட்டின் மீன்வண்டிவையின் - சாட்சியைக்கண்டா ர்துறவாதார்-எ - து - அசுணப்புட்சத்தத்தானு மியானைபரிசத்தானு

ம்விட்டிற் பூச்சியுருவத்தானு மீனிரதத்தானும் வண்டுகந்தத்தானுங் கெடுமென விவைகளைச் சாட்சியாக் கண்டுறலானு மிவ்வைந்துவிடய ங்களு முளவாகியவப்பாவையரைத் துறவாதாரியாவர்-எ-று.

வாள்வாயினெய்யை நக்கினநாய்க்கு நஞ்சிட்டபாயசமுண்டோ னுக்கு முன்னாணுவளவின்பம்போற் றோன்றிப் பின்னரதனான்மலைய ளவுதுன்பம் வருவதுபோ லநுபவிக்கும்போது சிறிதின்பம்போற் றோன்றிப் பின்னைத்துன்பம்வருமென்பதும் பொய்யாய்த் தோன்று ங்கானனீரை மெய்யாய்க்கருதி யுண்ணத்தொடங்கி னோனைப்போற் பொய்யாத்தோன்றும் பாவையரை மெய்யாய்க்கருதி யநுபவிக்கத் தொடங்குவ தென்பதுமோ ரோர்விடயத்தைவிழைந் தொவ்வொன் றுகெடுமெனிலைந்துவிடயங்களுமுளவாகிய பாவையரைவிழைந்தா லவரால்வருங் கேட்டிற்களவின்றென்பது மிதனாற்காண்க.

இத்திருவென்பார்வாழ் பெண்களின்ப மிகச்சிறிதென்பது மதனா ல்வருந்துன்ப மிகப்பெரிதென்பது மவர்கூட்டரவு. மாயையென்ப து மவர்கட்செய்யு மைம்புலநுகர்ச்சி பெருங்கேட்டைத் தருமென்ப து மிங்ஙனமறிந்தோர் தம்மனைவி யருந்ததிக் கற்பினளாயினுந் துற ப்பரென்பது மறிவித்தவாறுகாண்க. (௰௪)



எல்லோரு மனைவியாதிய குடும்பத்தோடிருந் தின்பங்களை யநு பவித்துக்கொண்டு பூரிப்போடிருக்க வக்குடும்பத்தை நீர் துன்ப மென்றீ ரிதென்னையெனின் மேற்கூறுகின்றார்.

இடும்பைக்கேகொள் கலமாயேழ்நரகுக்கீடாங்
குடும்பத்தைக்குற்ற மறைக்கி - னடுங்காரோ
வைவர்க்கொருவ னறுதொழிலைச்செய்தலான்
மெய்யைப்பொய்யாக்கிவிடும்.

இடும்பைக்கேகொள்கலமா யேழ்நரகுக்கிடாங் - குடும்பத்தைக் குற்றமறைக்கி - னடுங்காரோ - எ - து - அஞ்ஞானிகள் இம்மைக்கண் ணே துன்பங்களையெல்லாந் தாமநுபவித்தற் கேற்றுக்கொள்ளுபாய கப்பலாய் மறுமைக்கண்ணே யெழுவகைப் பிறவியாகிய வெழுவகை நரகத்தையுமுண்டாக்குங் கனதையினையுடையமனைசுதர்முதலிய குடு ம்பத்தை இங்ஙன மிகபரங்களினுந் துக்கத்தைத்தருவதென்றறியார் இங்ஙனமறியவொட்டா தாணவமாகிய குற்றமவரைமறைத்தலா லிவ் வாணவக் குற்றம்நீங்கினோர் குடும்பக் குழாத்தைக்கண்டாலு முளம் வெருவி நடுக்கமுறார்கொலோ. ஆயினீர் மெய்யென்றுகூறிய சிலமொ ருவர்க்குந் தோன்றுதிருப்பானே னென்னில்:

ஐவர்க்கொருவ னறுதொழிலைச்செய்தலான் - மெய்யைப்பொய்யாக்கிவிடும் - எ - து - ஐந்திந்திரியங்கட்கு மோர் முதல்வனாகியவான்மா வவ்விந்திரியங்களா லறிந்தநுபவிக்கும் விடயசுகத்தின் பொருட்டுழவுமுதலிய வறுவகைத்தொழிலின் முயற்சிப்படலா னிம்முயற்சியசிவத்தைத் தெரியவொட்டாது பொய்யாக்கிவிடு மிதனைநீயறிதியென்றவாறு.

.குடும்பத்தா லிம்மைக்கட் டேகதுக்க மனோதுக்கங்க ளிடையறாதுவருதலி னிடும்மைக்கே கொள்கலமாயென்று மிக்குடும்பவாசனையான் மறுமைக்கட் பிறவிக டொன்றுதொட்டுவருமாகலி "னேழ்நரகுக்கீடா,, மென்றுங்கூறினார்.

அறுதொழிலைச்செய்தலான் மெய்யைப்பொய்யாக்கிவிடுமெனவே குடும்பத்தின்பொருட்டுச்செய்யு மறுவகைத்தொழில்களின் முயற்சியைவிட்டுச் சிவயோகமுயற்சியிற்றொடங்கின் மெய்ப்பொருடோற்று'மென்பதாயிற்று.

'அறுவகைத்தொழில்களாவன, உழவு - தொழில் - வாணிகம் - எழுத்து - சிற்பம் - பரதம் - இவை யாறுமெனக்கொள்க. (௰உ.)



உத்தமபக்குவராயினோர் குடும்பத்தோடுங்கூடியிராரென் றின்னுங்கூறுகின்றார்.

குரங்கிற்றனிச்சீ குடும்பக்குழாமும்
பெருங்குப்பையிற்காடிப் பெண்டும் - பொருந்துவரோ
காலனுந்தீயுங் கடனுமிருங்கல்லுமாய்
மேலுநரகாய் விடும்.

குரங்கிற்றனிச்சீ குடும்பக்குழாமும் - பெருங்குப்பையிற்காடிப்பெண்டும் - பொருந்துவரோ - எ - து - ஓர்குரங்கைப் பலகுரங்குவந்து சேட்டித்தல்போலத் தாய்தந்தை சுதர் சுற்றமுதலியோர் தம்மைவந்து வாதிக்குங் குடும்பக்கூட்டத்தையு மக்குடும்பக்கூட்டமாகிய பெரியமலக்குப்பைக்கட் காடிபோலும் பற்றப்பட்ட பெண்டீராகு கூட்டரவினையும் பொருந்தியிருப்பாரோ உத்தமராயினா ரொல்லோரு மவரோடுங்கூடி யிருக்கவில்லையோ விவரென்னை யங்ஙனமிராது போவதெனின்.

காலனுந்தீயுங் கடனுமிருங்கல்லுமாய் - மேலுநரகாய்விடும் - எ - து - அக்குடும்பக்கூட்டங் காலனைப்போலுந் தீயைப்போலுங் கடலைப்போலும் பெரியமலையைப்போலு மிம்மைக்கண்ணே துன்பத்தருவதாய் மறுமைக்கண்ணு மதனோடுங்கூடியிருந்த வாசனையாற்

பிறப்பாகிய நரகத்தையுந் தருவதாய் விடுமெனவறிந் ததனோடுங்கூடி யிரார்-எ-று.

சோறுகூறை முதலியன கொடுக்கும்போதுங் கொடாதபோதும் விரும்பிணைக்கானு மவற்றிற்கேதுவாகிய திரவியந்தேடுதலானு மதனைப்பாதுகாத்தலானு மவர்க்கு வியாதியாதிதுன்ப மபிமானபங்கம் வந்தகாலையினு மனையர்கலகம் அற்பகாலம் வந்தகாலையினு மவ ரிறந்தகாலையினு மிவைமுதலியவற்றா லக்குடும்பத்தாற் றேகதுக்க மனோதுக்கங்களிடையறாதுவருதலிற் "குரங்கிற்றனிச்சிறுகுடிப்பக்குழா" மென்றார்.

இத்துன்பக்குழுவிற் காடிபோலுங் குணத்தாலுஞ் செய்கையாலு மிழிவாகிய பெண்டீனாக்கூடுவரோவென்பதனைப் பெருங்குப்பையிற் காடிப்பெண்டும் பொருந்துவரோவென்று குறிப்பாற்கூறினார்.

காலனுயிர்களைப் பாசத்தாற்பிணித்துக்கொடுசென்று நிரையத்துள்வீழ்த்தி வருத்துதல்போற் றுறந்துசெல்கின்றேனென் றிரண்டடிச்சென்றேனை மனைசுதர்முதலியோர் கரசரணங்களைப்பற்றிக்கொண்டோலிட் டழுதவனுள மிளகிப்பன்னி மீட்டுக்கொடுவந்து குடும்பமாகிய துன்பத்துள்கப்படுத்தி வருத்துதலிற் காலனுமென்று மொருவனைத் தீச்சூழ்ந்துகொண்டதுபோற் சூழ்ந்துகோடலிற் றீயென்று நடுக்கடலில் வீழ்ந்தோனுக்குக் கரைகண்டேறக் கூடாததுபோ லக்குடும்பசாகரத்தில் வீழ்ந்தோனுக் கிக்கரைகண்டேறக் கூடாதாகலிற் கடலென்று மலையிருத்திக்கொண்டதுபோற் குடும்பபாரந் தந்தலைச்சுமையாயிருத்தலி விருங்கல்லென்று மிறக்கும்போ துயிர்க்கெந்தவாசனை யிருந்த தந்தவாசனையோடுஞ் சென்றுபிறத்தலின் மேலுநரகமென்றுங்கூறினார். (௰௫)

இவையிரண்டுதிருவெண்பாவானு மனைவியாதிய குடும்பத் துன்பங்கட்கும் பிறவிவாதனைகட்கு முறைவிடமென்பதும் இதனை யிங்ஙனமென் றுணவமறைப்பானஞ்ஞானிக ளறிந்திலரென்பதும் ஞானிகளிதனைக்காணினுங் கேட்கினு நடுங்குவரென்பது மிக்குடும்பமுயற்சிசிவத்தையறியவொட்டாது மறைக்குமென்பதும் உத்தமபக்குவர் விடாதுசூழ்ந்துவாதிக்கு மிக்குடும்ப வாதனையான்வரு நட்டங்களைமுற்றுமறிந் ததனை யக்கணத்தே விடுவரென்பது மறிவித்தவாறு காண்க.



இங்ஙனந் துன்பமென்றறிந்து துறந்துசெல்வோர் தம்மைநம்பியிருந்த குடும்பத்தைப் பாதுகாத்தற்குச் சகோதரர்முதலாயினரு

ளொருவரைத் துணையாகவைத்துப் பின்றுறந்து சேறலாகாதோவெ னின் மேற்கூறுகின்றார்.

கன்னனைப்போற்றன்னை யறிவனோகாக்கையுடன்
மன்னுகுயில்போன வாறுபோ-லன்னியமாய்ப்
பேசாதுபோன துறவிபிறப்பறுப்பார்க்
காசானுமென்றேயறி.

கன்னனைப்போற்றன்னை யறிவனோகாக்கையுடன் - மன்னுகுயில் போன வாறுபோ - லன்னியமாய்ப்-பேசாதுபோன் துறவி - எ - து- இயானின்னசாதி யின்னார்குலந் தாய்தந்தை யின்னொன்று தனதுகு லக்குடும்பங்களை யறியாதகன்னனைப்போலு முத்தமபக்குவ னியா னின்னசாதி யின்னார்குல யின்னார் தாய்தந்தையென்று தனது குலக் குடும்பங்களைப் பகுத்தறிவனோ யிங்ஙன மொன்றையும் பகுத்தறியா து காக்கையுடன் பருவம்வருமளவுந் தனதினம்போற் கூடிச்சென்று பருவம் வந்தகாலை யதற்கன்னியமாய் பேசாது சென்ற நிலைபெற்ற குயில்போலு மனித்தியவிவேகம் வருமளவு மவரினம்போற் கூடியி ருந் தந்தவிவேகம்வந்தகாலை யவர்க்கன்னியமாய்ப் பிறிந்தவரோடுஞ் சொல்லாது சென்றதுறவியே மெய்த்துறவி.

பிறப்பறுப்பார்க் - காசானுமென்றேயறி - எ - து - அத்துறவி பிறப்பறுக்கும்பொருட்டுத்-துறந்தார்க்காசாரியனு மாவன்-எ-று.

தருமன் முதலிய துணைவரையுங் குந்தியாகிய தாயையுங் கண்டி ருந்துங் கன்னனறியாததுபோ லிவன்குடும்பத்தாரைக் கண்டிருந்து மனித்திய விவேகத்தாற் பொய்யாக்கண்டானாகலிற் கன்னனைப்போ ற்றன்னையறிவனோ வென்றுங் - குயில்காக்கையோடு கூடியிருந்தபோ துந் தன்குரலைக்காட்டினுற் கொத்துமென் றடங்கியிருந்து செல்லும் போதுங் கூவாது சென்றதுபோற் குடும்பத்தோடு கூடியிருந்தபோ துந் தான்றுறந்துசேறலை யவரோடுஞ்சொன்னாற் பற்றுமென்பதறி ந்து சொல்லாதடங்கியிருந்து செல்லும்போதுஞ் சொல்லாதுசென் றமையாற் குயில்போன்வாறுபோற் பேசாதுபோனதுறவியென்று ங்கூறினார்.

அறிவுந்துறவுமுள்ள ஞானி சிறப்புளனாகலி னிவனை யாசானு மென்றார். (௰௪)

இத்திருவெண்பாவால் குலமுதலியவற்றி னபிமானமின்றிய நித் தியவிவேகம்வருமளவு மவற்றோடின் னோக்குதலற்றுக் கூடிநின்றந் தவிவேகம்வரி னொருவரோடும் விடைபெறாது சென்றவனே துறவி களுட் சிறந்தவனென் றறிவித்தவாறுகாண்க.

—————

இங்ஙனந் துறந்துசெல்வாரை மாதாபிதாக்கள்வந்து தடுத்தா லெங்ஙனஞ் செல்வாரெனின் மேற்கூறுகின்றார்.

நித்திரைசெய்வீட்டி னெருப்பும்படையு
மூற்றிப்புறப்பட்டார் முற்றத்தே - பித்தனைப்போ
னிலலென்றுசொன்னானு நிற்பரோவப்படிகா
ணில்லறத்தைநீத்தா ரியல்பு.

நித்திரைசெய்வீட்டி னெருப்பும்பெரும்படையு - மூற்றிப்புற ப்பட்டார் முற்றத்தே - பித்தனைப்போ - னில்லென்றுசொன்னானு நிற்பரோ - எ - து - தாநித்திரைபண்ணுநின்ற வீட்டினுள்ளே நெரு ப்பும்பெரும்படையுஞ் செறிந்துவரவிழித் தவற்றைக்கண்டுவெருண் டவ்வீட்டின் வாயில்கடந்து முன்றிலிற்புறப்பட்டார் தமக்கனுகூல ராயினு மவற்றினடுநிற்பரோ னறியாதுகூறினும் பித்தனைப்போனு மவர்மொழியை யுட்கொண்டிருக் கணப்போதாயினு நிற்பரோ.

அப்படிகா-ணில்லறத்தைநீத்தாரியல்பு - எ - து - அவரொப்படி நில்லாதோடிச் செல்வரோ வப்படிகாண் மாதாபிதாக்கள்வந்து தடு ப்பினு நில்லா தில்வாழ்க்கையைத் துக்கமாகக்கண்டு துறந்துசெல்வா ரது முறைமையும்-எ-று.

குடும்பந் துக்கமென் றறியாதபோ தத்தோடுங்கூடி யிருப்பா ரொன்பதுந் துக்கமென்றறிந்தபோ ததனைத்துறந்து செல்வரொன்ப துந் துறந்துசெல்லும்போ தியாவர்தடுப்பினு நில்லாரொன்பது மிவ் வுவமைக்குறிப்புகளாற் காண்க. (௰௫)



இங்ஙனந் துறந்துசெல்வா ரியல்பின்னுங் கூறுகின்றார்.

கட்டுநெகிழ்ந்துவிட்ட கள்ளனைப்போர்க்கங்குலிற்பேய்
வெட்டுகளத்தின் வெருவினர்போன் -முட்டத்
தொடர்ந்தபடைபிழைத்துத் தோன்றப்போவார்போ
லடங்கத்துறந் தேகுவார்.

கட்டுநெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போர்க்கங்குலிற்பேய் - வெட் டுகளத்தின் வெருவினர்போன் - முட்டத் - தொடர்ந்தபடைபிழைத் துத் தோன்றப்போவார்போல் - எ - து - பொருள்திருடியகள்வனைச் சிலர்வந்து பற்றிப்பிணித்துவருத்த வவருள்ளருளுள்ளத் தொருவன்வந் தப்பிணியை யவிழ்த்துவிட்டகாலை விரைந்துசெல்லு மக்கள்வனைப் போலு மரையிரவிற் பெரும்பேயைக்கண்டு வெருவினர் விரைந்து சேறல்போலும் யுத்தகளத்தின் வெருவினர் விரைந்துசேறல்போ

லுந் தம்மைப்பிடிக்கப் பின்றொடர்ந்த படைக்குத்தப்பி மிகவுங்கை கடந்து செல்வார்போலும்.

அடங்கத்துறந்தேகுவார் - எ - து - தாய்தந்தை மனைசுற்றமுதலிய குடும்பக்கூட்டங்களையெல்லா மொருங்கேதுறந்து செல்வாரன்றி யவர்க்கோர்தடையுமின்று - எ - று.

மலபரிபாகம்வாராமுன் றுஞ்செய்த விருவினைக்கீடாய்க் குடும்பபாசத்தாற் பிணிப்புண்டுவருந்துவரொன்பது மப்பரிபாகம்வந்தகாலத் தோன்றிநின்ற வருட்சத்தி யக்குடும்பபாசந் துக்கமென்றறிவிக்க வறிந்துதுறந்து செல்வாரொன்பது மப்போ திரவிற்றோன்றும்பேய்போலும் யுத்தகளம்போலுங் குடும்ப மவர்க்குத்தோற்றுமென்பது மக்குடும்பக்குழாங்கள் பின்றொடர்வரொன்றறிந்து தூரதேசத்திற் செல்வாரொன்பது மிவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

இவை யிரண்டுதிருவெண்பாவாற் குடும்பபாரம் பொறுத்தற்காற்றாது வருந்தி யிழித்துவிட்டு விரைந்துசெல்வோர் தாய்தந்தையராதியர் தடுத்தற்குச் சிறிதும்முட்படாரொன் றறிவித்தவாறுகாண்க. (௰௬)



தாந்துறந்துபோதற்குக் குடும்பத்தார் சம்மதித்தா லப்பதியிலிருந்து தவம்பண்ணலாகாதோவெனின் மேற்கூறுகின்றார்.

உடுக்கைமறந்தவருக் கூர்காடென் றுண்டோ
வடுத்தயலாருண்டோ பேயானாற் - சுடப்போட்
டெதிரிட்டதெல்லா மிழந்தார்க்கிருந்த
பதியைக்கொண்டுண்டோ பயன்.

உடுக்கைமறந்தவருக் கூர்காடென் றுண்டோ - வடுத்தயலாருண்டோ பேயானால் - எ - து - குடும்பக்கூட்டங்களையெல்லாந் துரிசறத்துறந்து தேகத்தையுஞ் சத்துருவாக்கண் டத்தேகத்தினுன் குமுழஞ்சுற்று முடுக்கையு மறந்துதிரிவோர்க் கீதூரொன்று மிதுகாடென்றும் பகுத்துக்காணு நினைப்பு முண்டுகொல்லோ வஃதன்றிப் பூரணப்பேய் வயமாகையினு லவர்க்கடுத்தாரு மயலாரு முண்டுகொல்லோ விங்ஙன முடுக்கை மறந்தடுத்தா ரயலாரொன்பதுந் தோன்றுதிருப்பதுமன்றி.

சுடப்போட் - டெதிரிட்டதெல்லா மிழந்தார்க்கிருந்த-பதியைக் கொண்டுண்டோபயன் - எ - து - காத்திலெடுத்தபொருண் மிகவுஞ் சுட விரைந்துபோட்டு நின்றோற்போற் றமதறிவிற்கெதிரிட்ட கருவிகளையெல்லாந் துன்பமாகக்கண்டு ஞானக்கினியினு லெரித்திவற்றையு

மிழந்தார்க்குத் தாமுன்னிருந்தபதியி லிப்போதிருந்ததுகொண்டெ யனென்னையுண்டுகொல்-எ-று. (௱௭)

இத்திருவெண்பாவால் தேகாபிமானம்விடுத் ததனைப்பகையாகவு மெதிரிட் டவைகளைத் துன்பமாகவுங்கண் டனைத்தையுமிழந்து பூரண மருள்கொண்டோ ரிதுநா டிதுகாடென்று மிவரடுத்தா ரிவரயலாரெ ன்றும் பகுத்தறித லின்றாகலின் முன்னிருந்தபதியி லிப்போதிருப்ப தனா லவர்க்குவரும் பயனொன்றுமின்றென் றறிவித்தவாறுகாண்க.



முன்னிருந்த பதியைவிட்டு மற்றோர் சிவதலத்தி லோரிடம் ப ற்றியிருந் தொருவர்முன்னிலையா யுதராக்கினிக் கன்னமாத்திரம் வாங் கியுண்டு தவத்தைப்பண்ண லாகாதோவெனின் மேற்கூறுகின்றார்.

துக்கஞ்சுகமான சுட்டறிவுகெட்டவர்க்குத்
திக்குண்டோவெங்குஞ் சிவாலயமா - மக்கினிக்குப்
பிச்சைபொதுநிழனீர் பேரிதுவேபேசார்தம்
மிச்சையிருப்பே காந்தத்தே.

துக்கஞ்சுகமான சுட்டறிவுகெட்டவர்க்குத் - திக்குண்டோவெங் குஞ் சிவாலயமாம்-எ-து- முன்கண்ட பிரபஞ்சதுக்கமெல்லா மிப் போ தாநந்தமாகக்கண் டச்சுட்டுப்போதங் கெட்டோர்க்கின்ன திசை யென்று மின்னவிடமென்றும் பகுப்புண்டாமோ வவர்க்கெத்திசையு மெவ்விடமுஞ் சிவாலயமேயாகு மஃதன்றி.

அக்கினிக்குப் - பிச்சைபொதுநிழனீர் பேரிதுவேபேசார்தம் மிச்சையிருப்பேகாந்தத்தே - எ - து - உதராக்கினி யவித்தற்கூரின் கட் பிச்சையு மிருத்தற்கிடம் பொதுச்சாவடி மாநிழலுந் தாகந்தணி த்தற் கேரியாதிநீர்களு முளவாகலி னன்னமிட நீரொன்று மிவற்றினது பெயரையே சொல்லாராயி னவர்க்கிச்சைதானே தெனி னொருவரோ டுங் கூடியிராதுபேசா தேகாந்தத்திருப்பதே யிச்சையாம்-எ-று.

சிவத்தையுணர்ந் தோர்க் கெங்கும் பரிபூரணமாய்த்தோற்றுமா கலின் "எங்குஞ்சிவாலயமாகு" மென்றார். (௱௮)

இத்திருவெண்பாவால் பிரபஞ்சங்களையெல்லா மாநந்தமயமாக க்கண்ட துறவினர்க்குத் திசையாதி யெவ்விடத்துஞ் சிவாலயமாகு மென்பதும் பிச்சையாதியுளவாகலி னன்னபானாதி யோரிடத்திற்குறி யாதென்பதும் ஒருவரோடுங்கூடா தேகாந்தமௌனத் திருப்பதேய வர்க்கிச்சையென்பது மறிவித்தவாறுகாண்க.



ஒருவரோடேகூடி யிருந்துபேசுதலு மாகாதோவெனின் மேற் கூறுகின்றார்.

அங்கக்காரன்றுதிப்பு நாவிசுவையானதுவுஞ்
சிங்கிகுளிர்ந்ததுவும்போற் செகத்தோர் - சங்கத்தைத்
தீண்டுமனமேபகையாய்ச் சேராதுடலோடே
மாண்டுதிரிவார் துறவாவார்.

அங்கக்காரன்றுதிப்பு நாவிசுவையானதுவுஞ் - சிங்கிகுளிர்ந்தது வும்போற் செகத்தோர் - எ - து - நானாவேடங்கொண்டுநடிக்கும் வே டதாரி யவ்வேடங்கட் கேற்றபாடை பேசுதல்போலவுங் கொல்லாநி ன்ற வற்சநாபி யொருவர்க்குச் சுவையானதுபோலவுந் தன்காலிற்பூ ண்டவிலங் கொருவர்க்கிதமானதுபோலவுந் தத்தஞ்சாதிகட்குந்தொ ழில்கட்குமேற்றசொற்களைச்சொல்லியுந் துன்பமாயுள்ளவிடயங்களை யின்பமாகக்கருதிக்கொண்டு மனைவிமுதலிய பாசவிலங்கை யிதமா கக்கைக்கொண்டு மயங்கிச்சுழலாநிற்ப ரிச்செகத்தோர்.

சங்கத்தைத் - தீண்டுமனமேபகையாய்ச் சேராதுடலோடேமா ண்டுதிரிவார் துறவாவார் - எ - து - இங்ஙனஞ் சுழலாநின்றார் கூட்ட த்தைக் கூடவேண்டுமென்றுகருது மனநினைவே தம்பகையாகி யந்நி னைவோடுங்கூடா துடலோடுங்கூடியிருந்துங்கூடா தவ்வுடல்வாதனை மாண்டு திரிவாரே துறவினையுடையா ராவரென்றறிதி-எ-று.

உடலோடேமாண்டு திரிவாரெனவே போகவாதனைதேகவாதனை போதவாதனையாகிய விம்மூன்றுவாதனையுந் தீர்ந்தாரென்பதாயிற்று.

இத்திருவெண்பாவால் பிரபஞ்சிகள் ஒருவரோடொருவர் கூட லும் நாநாவிதமாய் வார்த்தையாடலுமே யின்பமாய்க்கருதி மயங்கு வரென்பதுந் துறவோர் அங்ஙனஞ்செய்வது துன்பமென்று விரும்ப பதுமன்றித் தம்முடலோடுங்கூடியுங் கூடாதிருப்பரென்பது மறிவித் தவாறுகாண்க. (௰௬)

---

பொன்மலைமேலாகாயம் போவார்க்குப்பூமியுள்ளோ
ரென்னவேறாதாற்ற மெய்ஞ்ஞானை - யென்னருகே
வாவென்றுபாற்கடலில் வாழரியைமண்டூகங்
கூவுந்தகைமைய தொக்கும்.

பொன்மலைமேலாகாயம் போவார்க்குப்பூமியுள்ளோ - ரென்ன வே - எ - து-பொன்மலை முடிமே லாகாசகமனம் பண்ணுவோர்க்கி ந்நிலத்தின்கண்ணுள்ளார்மிகவுந்தாழ்ச்சியானதுபோன்ஞானிகட்கும் பிரபஞ்சிகட்கு முயர்ச்சி தாழ்ச்சியிருப்பவும்,

நாதாந்தமெய்தினரை - யென்னருகே-வாவென்றுபாற்கடலில் வாழரியைமண்மேகங் - கூவுந்தகைமையதொக்கும் - எ - று - நாததத் துவத்தின் முடிவாயிருந்த திருவருளையடைந்த ஞானிகளைப் பஞ்சபூ தகாரியந் தானாகிய தேகந்தானாகியிந்தியவழி நானடைந்து செல்லும் பிரபஞ்சி யொருவ னென்மனைக்கு நீர்வருகவென்றழைத்தால் பாற்க டலுப் பணரவணையிற்பள்ளிகொள்ளாநின்ற பெருமாளைப்பார்த்தோ ர்தவளைநீரு மிக்கடன்மிசை மிதந்து துயில்கின்றிரியானு மிக்கடன்மி சை மிதந்து துயில்கின்றேனு மக்குமரியென்று பெயராகவி னெனரு ருகே நீர்வருகவென் றழைக்குமுறைமைய தொக்கும்-எ-று.

பொன்மலைமுடியை நாதாந்தத்திற்கு மம்மலைமுடிமேற் றோன் றுமாகாயத்தை யிந்நாதாந்தத்திற் றோன்றுந்திருவருளுக்கு மவ்வாகா யத்திற் கமனம்பண்ணுவோனை யித்திருவருளையங் கடந்துசெல்லும் ஞானிகளறிவிற்கு முவமித்துக் கூறியவாறுகாண்க.

ஞானிகடத்துவங்கட்கெல்லா முடிவாய்நின்ற பரிபூரணத்தைய டைந்தவர் பிரபஞ்சிகடத்துவங்கட்கெல்லா மடியாயுள்ள பஞ்சபூத காரியந் தானாயுள்ள தேகத்தையடைந்தவராகலின், பொன்மலைமே லாகாயம்போவார்க்குப் பூமியுள்ளோர,, சொன்னவேயென் றங்ஙன மு வமைகூறினார்.

ஞானிகளது மகிமையையறியாததா லவ்வரு முலகத்தின்கண்ணி ருக்கின்று ரியானு முலகத்தின்கண் ணிருக்கின்றேனவருமனிதரியா னுமனிதனென்று கருதி யழைத்தானாகலிற் "பாற்கடலின் வாழரியை மண்மேகங் கூவுந்தகைமையதொக்கு மென்றிங்ஙன முவமைகூறினார்.

இத்திருவெண்பாவான் ஞானிகட்கு மஞ்ஞானிகட்குந் தாரதம் மியமுமவரை யிவரொண்ணுமை லழைப்பது மிங்ஙனமென் றறிவித்த வாறுகாண்க. (௨௰)



ஆயிற்பத்தியோடு மனமொழி மெய்களா லவரைவணங்கி யென் மனைக்குத் தேவரீரெழுந்தருளுக்வென் றொருவனழைத்தாற் செல்வ ரோவெனின் மேற்கூறுகின்றார்.

கும்பிட்டுங்கீர்த்தித்துங் கோடியுபசாரம்
வம்பிட்டபத்திவலைவழியை - நம்புவரோ
ஆறுதிவாதனைக ளொன்றுதவப்பெருமை
வீறுமணவிளைக்கு மெண்ணி.

கும்பிட்டுங்கீர்த்தித்துங் கோடியுபசாரம் - வம்பிட்டபத்திவலைவ ழியை-நம்புவரோ -எ - று- ஒருவன்வந்துஅஷ்டாங்கபஞ்சாங்கத்தோ டுவணங்கியு மனேகதோத்திரங்களைப் பண்ணியுஞ் சுவாமிக ளடியே

ன்மனைக் கெழுந்தருளுகவென்று கோடிபேதங்களா யுபசாரங்களைச் செய்து மிங்ஙனமழைக்கும் புதுமைபொருந்திய பத்தியராகியவல்லெ நிலை ஞானிகளாயினுமோர்பொருளாகக் கருதிச்செல்வரோ தூயி னன் போடுவணங்கி யன்னங்கொடுக்கிறே னென்றழைத்தா லவ்வன்னமாத் திரஞ் சென்று வாங்கிக்கொள்ளலாகாதோ வெனின்.

ஊணுதிவர்த்தனைக ளொன்றுதவப்பெருமை- விணைவிளக்குமெ னின் - எ - து - ஊணுடுக்கைமுதலிய வாதனைகளையும் விரும்பாதவர்த்த வவா வறுதியாகியபெருமையவரிருக்குமிடத்தவர்வேண்டாவென்றுத ள்ளவும்வீணு யவ்வூணுதிகளைக் கொடுப்பிக்குமாயின்-எ-று.

உபசாரமிகுதியைக் கோடியென்று மொருவருமங்ஙனஞ்செய் யக்கண்டதின்மையால் "வம்பிட்ட,, வென்றுங்கூறினார்.

"ஊணுதிவாதனை,, ளெனவேநோய்குளிர்கட்குமருந்துமுறை யுளும் வேண்டாவென்பதாயிற்று. (உக)



தாமூணுதிகளைவிரும்பி யொருவரைப் பின்சேறலாகாதன்றியொ ருவரன்போடும்வணங்கி யூணுதிகொடுத்தற்குத் தம்மனைக்கழைத்தாலு ஞ்செல்லாதிருப்ப தேதுகாரணமெனின் மேற்கூறுகின்றார்.

கருமந்திரிவிதத்திற் கட்டவிழுங்கால
மரவுந்தவளையும்போலாகி - யிருதலையிற்
கொள்ளியெறும்பாயுடம்பே கூற்றுகித்தோற்றுமெனி
னுள்ளினருமூருமென் ணுகும்.

கருமந்திரிவிதத்திற் கட்டவிழுங்கால - மரவுந்தவளையும்போலா கி - யிருதலையிற் - கொள்ளியெறும் பாயுடம்பே, கூற்றுகித்தோற்று மெனின் - எ - து - ஞானசாரியர் கிருபாநோக்கத்தாலுங் காசர்ன பரிசத்தாலுந் திருவாக்காலு மவராணைவழியாயை கருமங்களாகியகட் டுவிடுதலை யாகாநின்ற காலமாகவிற் றம்முடம்பே பாம்புந்தாமோர் தவளையும்போலாகி யவ்வுடம்பே யிருதலையு மெரிசூழ்ந்த கொள்ளி யாகித் தாமக்கொள்ளிக் குழலுட்சுழலு மெறும்பாகி யவ்வுடம்பேத ம்மைப்பறித்துச் செல்லுங்கூற்றுகித் தோற்றுமெனின்.

உள்ளினருமூரு மென்னுகும் - எ - து - இங்ஙனம் பகையாய்த் தோற்றுமுடம்பிற் குபசாரஞ்செய்யக் கருதினேரு மவரழைத்துச் செல்லுமூரு மென்னபயனைத்தரு மவர்க்கு-எ-று.

பாம்பு தவளையைப்பற்றி நிற்றல்போலுடம்பவரைப் பற்றிநிற் றலானு நெருப்பவியு மளவுங் குழற்கண்வருத்திச் சுழலுமெறும்பு போ லூழ்வினையறுமளவு முடம்புள் வருந்தியிருத்தலானுங் கூற்றுயி

லைப் பிணித்துச்சேறல்போ லவனைப்பற்றிநின்று பிச்சையாதிக்குச் செல்லப்பண்ணுதலானு மங்ஙன முவமைகூறினார்.

'ஒருவன் றனக்குப்பகையானார்மேல் வெறுப்புண்டாவது மன்றி யப்பகைவர்க் கிதஞ்செய்வார்மேலும் வெறுப்புண்டாவதுபோ லவர்க்குப்பகையாகிய வுடம்பின்மேல் வெறுப்புண்டாவதுமன்றி யவ்வுடம்பிற் கிதஞ்செய்வார்மேலும் வெறுப்புண்டாமாகலி "னுன்னினரு முருமென்றாகு,,மென்றார்.

திரிவிதத்திற் கட்டவிழுமென்றமையா லிரண்டுமேலமும் வருவிக்கப்பட்டது. (உஉ)



ஞானசாரியனை யடைந்தோரு மோரூரின்கண் ணொருவன்செய்யுமுபசாரத்தை யங்கீகரிக்கவில்லையோ 'விவரொன்னை யங்ஙனமங்கீகரியா திருப்பதெனின் மேற்கூறுகின்றார்.

பிறவாதயோனி பிறந்துபிறந்தெல்லா
மறிவானொன் றறியா - வறிவை
யறிந்துமீனண்டவழி பருந்திற்குஞ்சாய்ப்
பிறந்தவர்களேன்பார்ப்பார்பின்.

பிறவாதயோனி பிறந்துபிறந்தெல்லா- மறிவானொன்றறியா- வறிவை- யறிந்து -எ - து - தேவமானிடப்பிறப்பின்றி மற்றப்பிறவாதயோனிபேதங்க ளெல்லாவற்றுள்ளுமளவில் காலஞ்சென்றுசென்று பிறந்தெய்த்துப் பின்னர்த் தெய்வகதியாய்ப் பிறவிகட்கெல்லாந்தப் பித் தன்னையறிதற்கேதுவாய விம்மானிடப்பிறவியிற் பிறந்து மித்தேகத்துளிருந் தெல்லாவற்றையு மறிவானாகிய யான்யானொன் றறிதற்கரிதாய வறிவை யிம்மானிடதேக மனேகத்தாற்செய்த சிவபுண்ணியமேலீட்டா லிப்போதறிந்து.

மீனண்டவழி பருந்திற்குஞ்சாய்ப் பிறந்தவர்க ளேன்பார்ப்பார்பின் - எ - து - நீரினுழைந்துசெல்லு மீன்முட்டை வழித்தோன்றுங்குஞ்சாகாயத்திற்செல்லும் பருந்தின்முட்டை வழித்தோன்றுங் குஞ்சாய்ப்பிறந்ததுபோற் பிறப்புக்கேதுவாய்ப்பிறந்த பிறப்புக்கணீங்கி வீட்டிற்கேதுவாய்ப் பிறந்தோர்கண் மற்றையரைப்போலுமூரு றவென்றேன் பார்ப்பாரிப்போது-எ-று.

முட்டைவழித்தோன்ற லிரண்டிற்குமொத்ததாயினு முன்னிருட்சென்றதும் பின்னாகாயத்திற்செல்வது மொவ்வாததுபோன் முன்னருழிப்போதும் பிறந்தமானிடப் பிறப்பொத்ததாயினு முன்பிறப்பிற்சென்றது மிப்போது வீட்டிற்செல்வது மொவ்வாதாகலி னிங்ஙன முவமைகூறினார்.

முற்பிறப்பிற் சிவபுண்ணிய மேலீட்டாலிப்பிறப்பி லெளிதிற்ற ன்னையறிந் தமையா லறிந்து பிறந்தவர்களென்றார்.

தன்னையறிந்தாற் றலைவனையு மறியலாமாகலி "னொன்றறியா வறிவையறிந்,, தென்றார். (௨௩)

இங்ஙன மூன்றுமாதி யொன்றும்வேண்டார்க்குப் பெருமைதானி யாதெனின் மேற்கூறுகின்றார்.

அரசர்க்குடைமை யளவற்றபேறே
பெருமையானாற்போலப்பெற்ற - வரிபிரமர்க்
கப்பாலாம்வாழ்வு மனுவாகியாதுமற
விப்போபெருமையிவர்க்கு.

அரசர்க்குடைமையளவற்றபேறே-பெருமையானாற்போல-எ-து அளவற்றதிரவிய மானை பூடணாதிகளைப் பெறும்பேறே யரசர்க்குப் பெருமையானாற்போல

பெற்ற - வரிபிரமர்க் - கப்பாலாம்வாழ்வு மனுவாகியாதுமற-விப்போபெருமையிவர்க்கு - எ - று - அவ்வரசர்முதலியோர் வாழ்விற்குமேலாய வாழ்வினைப்பெற்ற வரிபிரமர்வாழ்விற்கு மப்பாலாகிய பதமுத்திவாழ்வுகளு மணுமாத்திர மின்பமாயழியுமெனக் கண்டிருந் தவிகபரவாழ்வுகளி லியாதொன்றினும்பற்றற்றவிப்பற்றறுதியேயிவர்க்கிப்போது பெருமையாம்-எ-று.

"அரசர்க்குடைமை,, யென்றுபொதுப்படக்கூறினமையா னால்வகைச்சேனை நால்வகையரணாதேசங்கண் முதலியவுங்கொள்க.

அவர்க்கப்பேறு மேன்மேற்பெறுவது பெருமையானாற்போலிவர்க்கப்பேறு மேன்மேல்விடுவது பெருமையென்பது மவர்க்கப்பேறின்மை சிறுமையாவதுபோ லிவர்க்கப்பேறுபெறுவது சிறுமையென்பதும் பேற்றின்மேற் பற்றுப்பிறவிக்கேதுஅப்பேற்றின்மேற்பற்றறுதி வீட்டிற்கேதுவென்பதும் பிறப்பையடைதல் சிறுமைவீட்டையடைதல் பெருமையென்பது மிதனாற்காண்க. (௨௪)

இங்ஙனமிருந்தஞானிகள் வீட்டிற்கேதுவாகிய சரியாதிகளைத்தான்செய்யார்களோவெனி னவர்செய்யுஞ் சரியாதிக ளிவையென்றுமேற்கூறுகின்றார்.

சரியையுடல்வெறுத்த றன்னையறிதல்
கிரியோகங்கூடாமைகேளாத் - திருஞானம்
வேறின்மைபேரின்பம் விட்டுதியாமேலீடு
பேறின்மைதானே பெறல்.

சரிதையுடல்வெறுத்த றன்னையறிதல் - கிரியோக்கூடாமை - எ - து - அவர்க்குச் சரிதையாவது மலச்சமை துக்கம்விளைக்குங் குரம்பை யனித்தியவிருதெனக்கண் டுண்டிசுருக்குதல் முதலியவற்றானுடலத்தைவெறுத்தல் கிரியையாவது தத்துவமுப்பத்தாறையு நியதிகளாந் தவற்றின் முடிவினின்ற தம்மை யுள்ளபடியறிதல் யோகமாவதங்ஙனந் தம்மையறிந்தவிடத்துத் தமக்குயிர்க்குயிராயிருந்த திருவருளைக்கண் டவ்வருளேவடிவாகியிருந்து முன்னீக்கிநின்ற கருவிகளோடுங்கூடாமை.

கேளாத் - திருஞானம் - வேறின்மைபேரின்பம் விட்டுதியாமேலீடு - பேறின்மைதானேபெறல் - எ - து - அம்மூவகையானு மூண்டாங் கேட்டறியலாகாத வழகியஞானமாவ தவ்வருளேவடிவாயிருந்து தாஞ்சிறிதுந்தோன்றாது பரையேயாகிய வேறின்மையினையு மதன்மேற் பேரின்பம்விட்டுத் தோன்றாத மேலீட்டினையு மிவ்வின்பத்தைப் பெற்றேமென்னும் பேறின்மையும் பெறுதலேயாம்-எ-று.

ஞானாசாரியர் மவுனமொழியாலறிவிக்க வறிதலாற் "கேளாத்திருஞான,, மென்று மின்பமேலிடாமுன் விட்டுத்தோன்றலான் "விட்டுதியாமேலீ,, டென்றுங்கூறினர் பேறின்மையின்பரிதீதம்.

கும்பிட்டென்னுந் திருவெண்பாமுதலிவை யைந்துதிருவெண்பாவானு ஞானிகளின தியற்கை நெறிகளினது முறைமையறிவித்தவாறுகாண்க. (௨௫)

ஏழாவது - துறவு - முற்றிற்று.

ஆ. திருவெண்பா - ௱௮௯.

உ

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது.

# அருளவத்தைத்தன்மை.

இங்ஙனஞ் சரிதாதிகளைநீத் தூட்டுறவுபுறத்துற வுடையராய்ப்
பிருதிவிமுதனாதத்துவ மீறாகச்சொல்லப்பட்ட
தத்துவமுப்பத்தாறையுங்கடந் தாணவவிருளையுங்கடந்
தான்மதரிசனமுதலிய சுத்தாவத்தையினிற்போர துதன்மை
கூறினமையாலிவ்வதிகாரத்திற் கருளவத்தைத்தன்மை
யென்றுபெயராயிற்று.

உண்டொழித்துத்தேடு முடம்பராயொன்றுமுத
லண்டர்பதத்தப்பாலு மைம்புலத்து - மூண்டு
மழுங்கினர்க்குப்போகம் வருத்தமாய்த்தோன்ற
வெழுந்தவருள்கெட்டே னிதென்.

உண்டொழித்துத்தேடு முடம்பராயொன்றுமுத - லண்டர்பதத்தப்பாலுமைம்புலத்து - மூண்டு - மழுங்கினர்க்கு - எ - து - ஒருடம்பிற் பிராரத்துவத்தை யுண்டொழித் தவ்வுடம்பி லவ்வினையை யுண்டொழித்தற்கிடையே யிதாகிதங்களாகிய தொடர்பாற்றேடு மாகாமியத்தாற் றொன்றுதொட்டு வருமுடம்புகளையுடையரா யிப்பூலோகமாகிய வொன்றுமுதற் றேவர்பதவிக்கப்பாலு மாண்டாண்டுச்சென்றிருந் தைம்பொறிகளானு மவ்வவ்வுடம்புக்கேற்ற விடயபோகங்களை யின்பமாகக்கண்டுண்டளவில் காலந்தழும்பேறினார்க்கு.

போகம்வருத்தமாய்த்தோன்ற - வெழுந்தவருள்கெட்டேனிதென். - எ - து - அப்போ தின்பமாய்த்தோன்றியபோக மிப்போது துன்பமாய்த்தோன்றவுதயமாகிய திருவருள்கெட்டேனிதென்கொல்-எ-று.

ஓர்பிரகாரமின்றிச் செய்தவினையின் பேதப்படியே தநுகரணபுவனபோகங்களும் பேதித்துத்தோன்றலாற் "றேடுமுடம்பராயண்டர்பதத்தப்பாலு மைம்புலத்தூமூண்டு மழுங்கினர்க்" கென்றார்.

தநுவாதிகள் பேதிப்பதாவன - நல்லதேசத்து நல்லோர்களங்கிகரித்த போகத்தைப்புசித்தலானு நல்லநினைவோடு நல்லசொல்லோடு நற்றொழிலைச்செய்தலானும் பொல்லாததேசத்துப் புவனபோகங்களைப்புசித்தலானும் பொல்லாதநினைவோடும் பொல்லாதசொல்லோடும் புன்றொழிலைச்செய்தலானு மிவற்றுளொன்று நன்றுமொன்றுதீதுமாய் மாறிமாறிவருதலானு மிதைமுதலாயவற்றாற் பேதிப்பதெனக்கொள்க. (௧)

இத்திருவெண்பாவாற் சுத்தாவத்தையினின் றருளைத்தரிசித்தோர்க்கு விடயந்துன்பமாய்த்தோற்றுமென் றறிவித்தவாறுகாண்க.



வாசகத்துங்கோவையினு மாணிக்கமாகவழங்
காசைத்துறையநந்த மாமதிலே - யாசை
யிருதலைப்பாலேக மெனவிரண்டாமித்தி
லொருதலைக்காமந் துறவன்றே.

வாசகத்துங்கோவையினு மாணிக்கமாகவழங் - காசைத்துறையநந்தமாம் - எ - து - மாணிக்கமணிபோலாகப் புலவரானெடுத்துவழங்காநின்ற சங்கத்தார்முதலியோர் கூறியவாசிரியப்பாக்களினு மாணி

க்கவாசகசுவாமிக ளருளிச்செய்த திருச்சிற்றம்பலக் கோவையார்முத லிய கோவைகளினுங் காமத்தின விலக்கணமாகக் கூறப்பட்ட கிளவித் துறைக ளநந்தமாகும்.

அதிலே - யாசை-யிருதலைப்பாலேக மெனவிரண்டாமிந்தி-லொ ருதலைக்காமந் துறவன்றோ - எ - து - அக்கிளவித்துறைகளுட் காமந் தலைவனுந் தலைவியுமாகிய விருவர்பாலுஞ் சமனொத்துக்கூடுவ தாகிய விருதலைக்காமமெனவு மொருவர்பான் மிகுந்து மொருவர் பாற்கு றைந்துங் காமமொவ்வாது கூடுவதாகிய வொருதலைக்காமமெனவு மி ரண்டுளடங்குவதா மிவற்றுட்டலைவன் விழையாதிருப்பத் தலைவிவி ழைந்து பற்றுமொருதலைக்காமம்போல விடயாநந்தத்தைத் துறந்து சொரூபாநந்தத்தைப் பெறும்பொருட்டுச் சுத்தாவத்தையினிற்போ ர்க்கிச்சொரூபாநந்தங் கிடைத்திலதாயினு மிவ்வாநந்தத்தையேபெற விரும்பித்தொடர்ந்து நிற்பதன்றோதுறவாவது-எ-று.

தலைவன்கூடி யின்பங்கொடா திருப்பினுந் தலைவி தனதுகற்பா ற்பிறனைவிழையா தத்தலைவனையே விழைந்துநிற்றல்போற் சொரூ பாநந்தந் தனக்குக்கிடைத்திலதாயினுந் தனதுதவக்கற்பால் விடயா நந்தத்தை விழையாது சொரூபாநந்தத்தையே விழைந்து நிற்கவே ண்டுமென்பதுந் தலைவி கற்பினைக்கண்டு தலைவன் காருண்ணியத்தால வட்கின்பங்கொடுத்தல்போ லிவ ன்றவக்கற்பினைக்கண்டு சிவங் காருண் ணியத்தாற் றனதாநந்தத்தை யிவனுக்குக்கொடுக்குமென்பது மிவ்வு வமைக்குறிப்புகளாற் காண்க. "வாசகம்போலிருத்தலி னாசிரியப்பா வைவாசக" மென்றார். (உ)

இத்திருவெண்பாவாற் சொரூபாநந்தத்தை விரும்பிச் சுத்தாவத் தையினிற்போர்க் கிச்சொரூபாநந்தங் கிடைத்திலதாயினு மிவ்வாநந் தத்தையே விரும்புவதன்றி யசுத்தாவத்தையிற்றிரும்பி யவ்விடயாந ந்தத்தை விரும்பலாகாதென்று கூறியவாறுகாண்க.



சாத்துவிதமெட்டாய்த் தசவவத்தையாய்த்தன்னை
நீத்தவனுய்த்தானுய்ப்பின் னேயமாய்க் - கூர்த்ததெல்லாஞ்
சுத்தவவத்தைத் துவட்சித்துகள்ற்ற
வத்துவிதர்க்கேது முரியா.

சாத்துவிதமெட்டாத் தசவவத்தையாய்த்தன்னை - நீத்தவனுய்த் தானுய்ப்பின் னேயமாய்க் - கூர்த்ததெல்லாஞ் - சுத்தவவத்தைத்துவ ட்சி - எ - து - ராசததாமதகாரியங்களை யெல்லாநீக்கிச் சாத்துவிதகா ரியமாகிய நிராசைமுதலிய வெண்குணங்களையு முடையவனுகி அரு

க்கியநோக்கமுதலிய பத்தவத்தைகளையுமுடையருகி இந்தநற்குணங் களாற் றத்துவமுப்பத்தாறையுங் கடந்து தன்னையறிந் தருளைத்தரிசித் துத் தற்போதமடங்கினவருகிப் பின்னர்பரையேதாருகிப் பின்னர் நேயத்தழுந்தினேருகி யிங்ஙன மொருவனுண்ணிதா யறிந்துசென்ற தெல்லாஞ் சுத்தாவத்தை யநுபவங்களாகும்.

துகளற்ற -அத்துவிதர்க்கேதுமுதியா -எ-து- இந்தசுத்தாவத்தை களை யறிந்துசென்ற போதமற்றுச் சிவத்தோடு பிரண்டறக்கலந்த அ த்துவிதத்தையுடையோர்க்குமுற்கூறிய வநுபவங்களுள்யாதொன்றே னுந் தோன்றுதிவர் மவுனநந்தமாயிருப்பர்-எ-று.

"சாத்துவிதமெட்டாவன,, நிராசை - தவம் - பொறுமை - கிரு பை - சந்தோடம் - வாய்மை - அறிவுடைமை - அடக்கமுடைமை- இவையெண்வகையுமெனக்கொள்க. 'தசவவத்தையாவன, பிரபஞ்சத் தை மாயாவுருவமாய்க்காணு தருள்வடிவாய்க்காணு மருக்கியநோக்க மும்-கருவிகளை நியதிகளையுஞ்சிந்தனையு முற்பிறவியிற்பட்ட துன்பங் களைநினைத்து நெட்டுயிர்ப்பெறிதலுந் திருவருள்மேலிட்டா லுடம் பிலிளஞ்சூடெழுதலும் ஊணுதிகளைத்துறத்தலும் ஒருவரோடேயா டற்கு மானமுறுதலு மவுனமாயிருத்தலும் பித்தேறினுற்போலப் பி ரபஞ்சப்பகுப்புத் தோன்றுதிருத்தலும் - பிராணவாயுவிறந்து மூர்ச் சித்திருத்தலும் - போதமிறந்து நிற்றலுமாகிய விவைபத்துமெனக் கொள்க.

சுத்தாவத்தைகளோடுங்கூடி யவற்றிற்றேன்று மநுபவங்களைப் போதஞ் சுருங்கிநின்றறிதலானுமப்போதந் தேய்தல்வளர்தற்குத்தக் கதா யோர்காலுயர்ந்த வநுபவமாயு மோர்காற்றாழ்ந்த வநுபவமாயு மாறித் தோன்றலானுந் "துவட்சி,, யென்றார்.

கேவலாவத்தையோ டாணவநீங்கிற்றாயினு மதனதுகாரணம்போ தமிறக்குமளவு மிருத்தலித் 'போதத்தைத், துகளென்றார். (ரு)

இத்திருவெண்பாவான் ஞானசாதகரிலக்கணமுஞ் சாத்தியரதில க்கணமுங் கூறியவாறுகாண்க.



அவ்வநுபவங்களை யறிந்துசொல்வது வாக்காகலி னிவ்வாக்கினை மவுனமாக்குவது முத்தியன்றேவெனின் மேற்கூறுகின்றார்.

உரையொடுங்கிற்போத முதிக்குமொழிவே
யருளாமதன்போக்கசையாப் - பரையோகம்
போனாற்சுகாதீதம் புண்ணியர்க்குப்பொய்யுதியா
தேனோர்க்குப்பல்வித மாகும்.

உரையொடுங்கிற்போத முதிக்குமொழிவே - யருளாமதன்போக்கசையாப் - பரையோகம் - போனாற்சுகாதீதம் - எ - து - வாக்கினை மவுனமாக்கி னுள்ளே போதந்தோன்றுமாகலி னவ்வாக்குமவுனமுத்தியன்று. ஆயிற்போதமடங்கின் முத்தியோவெனிற் போதமடங்கின ருட்டரிசனமாகலி னப்போதமடங்கன் முத்தியன்று ஆயினருட்டரிசனநீங்குதன் முத்தியோவெனி னவ்வருட்டரிசனநீங்கிற் போதஞ்சிறிதுமசையாத பரையோகமாகலி னவ்வருட்டரிசன நீங்குதன்முத்தியன்று. ஆயிற்பரையோக நீங்குதன் முத்தியோவெனிற் பரையோகநீங்கிற் சுகப்பேறுமாகலி னப்பரையோகநீங்குதன் முத்தியன்று. ஆயினச்சுகப்பேறு நீங்குதன்முத்தியோவெனி னச்சுகப்பேறு நீங்குதலே சுகாதீத மிச்சுகாதீதமேமுத்திநிலை.

புண்ணியர்க்குப்பொய்புதியா - தேனோர்க்குப் பல்விதமாகும். எ - து - இச்சுகாதீத முத்தியையடைந்த புண்ணியர்க்குமேற் கூறிய சுத்தாவத்தையிற்றோன்றும் பொய்களியாவுந்தோன்றா திம்முத்தியைப்பெறா தச்சுத்தாவத்தையினிற்போர்க்கநுபவம் பலவிதமாய்த்தோற்றும்-எ-று.

பரையோகங்கூறி யதற்கப்பாற் சுகாதீதங்கூறினமையா லிவற்றிற்கிடையிற்றோன்றுஞ் சுகப்பேறுவருவிக்கப்பட்டது.

பரிபூரணசிவத்திற்குத் தம்மைக்கொடுத்தலான் மெய்ஞ்ஞானிகளைப் "புண்ணிய,, ரென்றார்.

சுகாதீதத்திற்குச் சுத்தாவத்தைக்காட்சிப் பொய்யாகலிற் "பொய்புதியா,, தென்றார். (௪)

இத்திருவெண்பாவான் முத்திநிலையீதென் றறிவித்தவாறுகாண்க.



அச்சுகாதீதமுத்தியை யடைதற்கேதுவாகிய சுத்தாவத்தையினிற்போரது குணங்களியாவையென்னின் மேற்கூறுகின்றார்.

கருவிகழலவரைநோக்காஞ்சிந்தை
பெருமூச்சாம்போதம்பிறியி - லருளாய்
வெதும்பியுடல்வெறுக்கு மின்பாய்விகள
முதிர்ந்துறையுநாணு மொடுங்கும்.

கருவிகழல வரைநோக்காஞ்சிந்தை- பெருமூச்சாம்போதம்பிறியில் - எ - து - கருவிகணீங்கவே மலைமேனின்று நோக்குவோர்க்குநிலத்தின்கண்ணுள்ளபொருள்களருகித்தோன்றுமாப்போலப்பிரபஞ்சமெல்லாம் பொய்யாய்த்தோற்றுவதா மக்கருவிகளுளதோமுகமாய் நின்ற போதமவற்றைப்பிறியி லூர்த்தமுகமாய்நின்று தன்னையறியும

க்ஙனந் தன்னையறிந்தபோ திங்ஙனமிருக்கின்றயா னெறும்புகளா லு ங்கூழரிப்புண்டதுபோ லளவில்காலமக்கருவிகளா லரிப்புண்டேனே யென்னுஞ் சிந்தனையா னெட்டுயிர்ப்புளவாம்.

அருளாய் - வெதும்பியுடல்வெறுக்கு மின்பாய்விகள - முதிர்ந் துறையு நாணுமொடுங்கும் - எ - து - தன்னையறிந்தபின்ன ரருட்டரி சனமுண்டாய்ப் பின்ன ரவ்வருளே தனக்குவடிவாகி யிம்மாயாவுட லம்வெதும்பி யிதனைவெறுப்பன் பின்ன ராநந்தமுண்டா யிவ்வாநந் தமேலீடாகிய வுன்மத்தந் தலைமீக்கொண்டு மவுனமாயிருப்ப னஃத ன்றிப் பிரபஞ்சத்தார்க்கு நாணுவதாய நாணமுநீங்கும்-எ-று.

"பேதம்பிறியி,, லென்றதனாற் றன்னையறிந்தென்பது வருவிக்க ப்பட்டது,, "அருளா,, யென்றதனா லருட்டரிசனம் வருவிக்கப்பட் டது நாணமொடுங்லாவது நீராடல் பூசனையாதிசெய்திலனென் றுல கத்தார்பழிப்பது குறித்துவரு நாணமெனக்கொள்க. (ரு)

இத்திருவெண்பாவாற் கருவிகணீங்கியவிடத்து வருங்குணமுந் தன்னையறிந்தவிடத்து வருங்குணமுந் திருவருடோன்றியவிடத்து வ ருங்குணமு மாநந்தந்தோன்றியவிடத்து வருங்குணமுங் கூறியவாறு காண்க.



வேர்க்கும்விழிததும்பும் பொய்யறியின்மெய்வெதும்பி
யார்க்கும்விறைக்கு மருளுதிப்பின் - வாக்குமன
நின்றுபரிபூரணமா நேயத்தேகார்க்கதமாய்க்
கன்றிப்புளகிதமாங் காண்.

வேர்க்கும்விழிததும்பும் பொய்யறியின்மெய்வெதும்பி - யார்க் கும்விறைக்கும் - எ - து - பொய்யாகியகருவிகளை யுள்ளபடி பொய் யாயறியின் மெய்யில் வெய்ர்வையரும்பும் விழியினீர்ததும்பு மெல் லாம்பொய்யென் றறிந்துகொண்டேனென் றுடலத்திளஞ்குடேழவா ர்வாரிப்பன் பின்னர்த் தன்னையுள்ளபடிகண் டொன்றினையு நாடாது டல மசைவறவிருப்பன்.

அருளுதிப்பின் - வாக்குமன - நின்றுபரிபூரணமா நேயத்தேகா ர்க்கதமாய்க் - கன்றிப்புளகிதமாங்காண் - எ - து - பின்ன ருருடோன் றுமிடத்து வாக்கு மனங்களினின் றவ்வருட் பரிபூரணமாய்த்தோன்ற விதற்குமுதலாய நேயத்தை யென்றைக்கண்டேவனென் றந்நேயத் தைநாடி மேகக்குமுறுவதுபோலர் யுள்ளேகுமுறி யுளம்வெதும்பியு டலிமுரோர்மாஞ்சலியா

வாக்குமனங்களினின் றருட்பூரணமாய்த்தோன்றுவதாவது மனத்தானினைந்தநினைவு நினைந்ததில்லையாயும் வாக்காற்சொன்னசொற்கள் சொன்ன தில்லையாயுந் தனக்கநுபவமாய்த் தோற்றுவதா மெனக் கொள்க. (௬)

இத்திருவெண்பாவாற் கருவிகளைப் பொய்யென்றறிந்தவிடத்து வருங்குணமுந் திருவருளுதித்தவிடத்து வருங்குணமு மறிவித்தவாறு காண்க.



பேயைப்பெண்ணென்றிருந்தும் பித்தலைக்குப்பொன்றேற்று
மாயத்தூணுண்டுமன மாண்டுமயல் - போயத்
திடுக்கமேபித்தாய்த் தெளிமயலானுற்போ
னடக்குமருண்மேவிட்ட நாள்.

பேயைப்பெண்ணென்றிருந்தும் பித்தலைக்குப்பொன்றேற்று மாயத்தூணுண்டுமன மாண்டுமயல் - போய் - எ - து - பெண்களைப் பேய்களைப்போலும் பிடித்துவாதிப்பவென்று கண்டிருப்பதாயும் பித்தலைக்குப் பொன்றேற்றுப்போவதாய்க் காண்பதாயு முதாவெரி வாய்த்தோன்று மாயத்திற்குக் காடிகூழ்முதலிய வூண்களியாதுகிடைப்பினும் வாங்கியுண் டவைகண்மேல்வைத்த மயலும்போ யவற்றை மெய்ப்பொருளாகக்காணு மனமுமிறந்து.

அத் - திடுக்கமேபித்தாய்த் தெளிமயலானுற்போ - னடக்குமருண்மேவிட்டநாள் - எ - து - அப்பொருந்த லருந்தல்களையு மவற்றிற் கேதுவாய பொன்னையும்விழைந்து நெடுநாட் பிறவித்துன்பத்தால்வருந்தினேமேயென்னு மந்தத்திடுக்கந்தானே விடாப்பிராந்தியா யறிவு ப்பித்தியங்கொண்டோனைப் போலவும்விளங்குந் திருவருண்மேவிட்டகாலத்து-எ-று.

'பேய்பிடியுண்டு விடுபட்டோனுக் கோர்காலத் ததனைக்கண்ட போது பயந்தோற்றல்போன் முன்பெண்களால் வருந்தியவருத்தத் தைநோக்கி யவரைக்கண்டபோது பயந்தோற்றலானிங்ஙனமுவமை கூறினார்.

“பித்தலைக்குப்பொன்றேற்று” மென் றதனினு மிழிவாய்க்கூறி னமையா லோட்டுச்சின்னங்களையுஞ் சிறுகற்களையும்போற் காண்பா ரென்பதாயிற்று.

எங்கும்பரிபூரணமரிய வருள்வடிவாயிருத்தலானும் பொன்பெண் மண்ணூ னுடலென்னு மைவகையும்வெறுத் துலகத்தாரோமேற் றுபட்டிருத்தலானுந் “தெளிமயலானுற்போ” னென்றார். (எ)

இத்திருவெண்பாவா லருள்மேலிட்டநா ணடக்குங்குணங்கூறிய வாறுகாண்க.

மலட்டுமகனீங்கி வரக்கண்டதாய்தா
லலத்திமகிழு மதுபோ - லுலப்பிலாக்
காலங்கழிந்ததையுங் காணுத்தைக்கண்டகளிப்
பாலுமழுது சிரிப்பார்.

மலட்டுமகனீங்கி வரக்கண்டதாய்தா - லலத்திமகிழுமதுபோல் - எ - று - நெடுநாண் மலடிருந்து பின்ன ரரிதாய்ப்பெற்ற புதல்வன் றன்மனைவிட்டுநீங்கி யயன்மனையிற்சென்று மீண்டுவர வெதிர்கண்ட தாய் சென்றெடுத்து மார்போடணைத்து முன்னரவனைப்பெறாத கால த்தையு மிப்போ தவ்னைப்பெற்றுக் கண்டகாட்சியையு நினைந்துதாலா ட்டுதலோ டழு தவ்வழுகையோடுஞ் சிரிக்குமதுபோல்.

உலப்பிலாக் - காலங்கழிந்ததையுங் காணுத்தைக்கண்டகளிப் பா லுமழுதுசிரிப்பார் - எ - று - திருவருளைப்பெறு தளவிறந்தகாலம்பி றவியில் வீணாய்க்கழிந்ததைக்கருதியவதனு லக்காலங்களுளோர் காலமாயினுங் காணுத வத்திருவருளை யிப்போதுகண்ட களிப்பாலு மவ்வருளைத் தோத்திரம்பண்ணலோடழு தவ்வழுகையோடுஞ்சிரிப் பார் திருவருண்மேலீட்டைப்பெற்றோர் -எ-று.

"தாலலத்தியென்,, றுவமைகூறினமையா லருளைத்தோத்திரம் பண்ணுதல் வருவிக்கப்பட்டது அருட்டம்பிடத்துத்தோற்றலானதனை மகவாவுவமித்துக்கூறினார் தால் - தாலாட்டுதல் அலத்தல்-அழுதல்.(அ)

இத்திருவெண்பாவாற் கழிந்தநாட்கிரங்குதல் கூறியவாறுகாண்க.

---

சுகாதீதமுத்தியைப்பெறு மிங்ஙனந் திருவருண்மே லீட்டைப் பெற்றோர்க்குப் பிறப்புண்டாகாதோவெனின் மேற்கூறுகின்றார்.

நடைதளர்ந்துமெய்ம்மறந்து நாணமழிந்து
வுடறளர்ந்துகீழ்க்குரலிட் டேண்போய் - மடலெட்டேய்பாய்ச்
சத்தாதிகெட்டுமனந் தாக்கற்றுச்சந்தழிந்த
பித்தர்க்குமாகாப்பிணி.

நடைதளர்ந்துமெய்ம்மறந்து நாணமழிந்து - வுடறளர்ந்துகீழ் க்குரலிட்டேண்போய் - எ - று - கருவிச்சேட்டைகளடங்குதலினடை தளர்ந் தருளேவடிவாயிருத்தலி னுடம்புமறந் துடம்புமறத்தலிற் பி ரபஞ்சிகள் பழிப்பாரென்பது குறித்துவருநாணமழிந் துண்டிமேல்

விருப்பின்மையா னுடறளர்ந்து மனமுமவுனியாயிருத்தலிற் கீழ்க்குரற் பேச்சா யருளமுதம் புசித்தலிற் சிற்றூணுண்பதாய்.

மடலெடுப்பாய்ச் - சத்தாதிகெட்டுமனந்தாக்கற்றுச்சந்தழிந்த சித்தர்க்குமாகாப்பிணி - எ - து - அருளையேயன்றி மற்றொன்றையு நாடாமையின் மடலெடுப்பான்போலா யைந்தவாவு மற்றமையாற் சத்தாதிவிடயங்களுமிறந் திச்சத்தாதிவிடயங்க ளிறந்தமையான் மன மொன்றோடுந் தாக்கற்று மன மொன்றோடுந்தாக்கற்றமையா லரு ளொன்றுந் தானென்றுமின்றி யிரண்டற்றவிவ்வரு டலைமீக்கொண்டசி த்தர்க்குஞ் சுகாதீதமுத்தியை யடைந்தோரைப்போற் பிறவிநோயுண் டாகாது-எ-று. (௯)

அருண்மேலீட்டையும் பிரபஞ்சப்பற் றொழிவையுமுடையோ ர் தேகாந்தியத்தறிவோடுஞ்சென்று சுகாதீதமுத்தியை யடைவராகலி ற் "சித்தர்க்குமாகாப்பிணி" யென்றார்.

இத்திருவெண்பாவா லருண்மேலீட்டை யுடையோர்க்கும் பிற ப்பின்றென் றறிவித்தவாறுகாண்க.



குறும்பாட்டும்புன்சிரிப்புங் கூர்த்திமையாநோக்கும்
வெறும்போகஞ்சாய்ந்து விழினு - மறந்த
திகைப்பும்விதிர்ப்புந் திமிர்ப்பும்விறைப்பு
முகைப்புந்தெளிந் தறிதலும்.

குறும்பாட்டும்புன்சிரிப்புங் கூர்த்திமையாநோக்கும் - எ - து - தாமறிந்தபாட்டுகளுட் சிலபாட்டானருளைத்தோத்திரம் பண்ணுவதா யகுறும்பாட்டு மாநந்தமகிழ்ச்சியாற்றோன்றும்புன்சிரிப்பு முட்புற னுமவ்வாநந்தபூரணத்தை நுண்ணிதாய்ப்பார்த்துக்கொண் டிருப்ப தாய விமையாநாட்டமும்.

வெறும்போகஞ்சாய்ந்துவிழினு - மறந்த - திகைப்பும்விதிர்ப்பு ந் திமிர்ப்பும்விறைப்பு - முகைப்புந்தெளிந்தறிதலும் - எ - து - தா மொன்றையும் விழையாதிருப்பினுந் தமதுசந்நிதியிற் பொய்ப்போ கங்கண் மிகவுஞ் சாய்ந்துவந்து கிடப்பினு மித்துன்பங்க ளீண்டேன் வந்தவென் றவற்றைச்சிறிது நினையாததிகைப்பு மவற்றைக்கண்டபோ துடனடுக்குறுதலும் பஞ்சேந்திரியங்கட்குரிய விடயங்கணேர்படி ன வ்விடயச்சுவை தோன்றாத்திமிர்ப்பும் பூதம் பேய் புலி கரடிமுதலிய வந்தகாலத்துக் கற்றூண்போலத் தேகமசைவறவிருக்கும் விறைப்பு மாநந்தமிகவும்வந்து தாக்குதலாலெழுந்து குதித்தாடு முகைப்புமிங் ஙனமாடிய வாநந்தமேலீட்டாற் றோன்றுமவ்வாநந்தமேலீடு சிறிது

நீங்கிப்போ திப்போ தியாமென்செய்தோமென்று தெளிந்தழிந்து கோடலுமாகிய விக்குணங்களெல்லாம் பலாயோகநீங்கி யாநந்தம் பெற்றோர்க்குத் தோன்றுவனவாம்-எ-று.

இங்ஙனமறிவுந் துறவுமுடைய ஞானிகளைப் பத்தராயுள்ளாரெல்லாரு மன்னபானங் காய்பழ மாடைமுதலிய கொடுவந்துவைத்துவணங்குவராகலின் "வெறும்போகஞ்சாய்ந்துவிழினு" மென்றார்.

வெறும்போகம் பொய்ப்போகம் - சாய்ந்தென்பது மிகுதிமேலேறிற்று. (௰)

இத்திருவெண்பாவா லாநந்தம்பெற்றோர் குணமறிவித்தவாறு காண்க.



இங்ஙனம் பூரணாநந்தம்பெற்றோர்க் காடலும்பாடலு முண்டாவதென்னையெனின் மேற்கூறுகின்றார்.

காலவந்தவர்க்காட்டங் கைவந்தவர்க்காட்ட
மால்முந்திவந்தவர் வாய்ப்பாட்டு - மேல்கொண்ட
வாநந்தவுல்லாசத் தாச்சரியமாரறிவா
ரூனம்போற்காணு முலகு.

கால்வந்தவர்க்காட்டங் கைவந்தவர்க்காட்ட - மால்முந்திவந்தவர் வாய்ப்பாட்டும் - எ - து - பிறவி முடவராயிருந் திடையிற் றெய்வகதியாற் கால்நடக்கவந்தவர்க் காட்டமுண்டாவதுபோலுங் கைவராதிருந்திடையி லங்ஙனங்கைவந்தோர்க் காட்டமுண்டாவதுபோலுந் தாங்கூடி யநுபவித்தபெண்மே லாசைதலைமீகமுகொண்டுவந்தவர் வாய்ப்பாட்டுப்போலும்.

மேல்கொண்ட - வாநந்தவுல்லாசத் தாச்சரியமாரறிவா - ரூனம்போற்காணுமுலகு - எ - து - தம்மைமறைத்து மேற்கொண்டெழுந்தவாநந்தவுல்லாச வதிசயத்தா லவர்க்காடலும் பாடலுமுண்டா மவ்வாநந்தாதிசயத்தை யதனைப்பெற்றஞானிகளறிவதன்றி மற்றையாரறிவாரவர்க்காடல்பாடல்களைப் பயித்தியமிகுதியாலுண்டாவனபோற்காண்பாருலகத்தார்-எ-று.

நெடுநாட் காலுங்கையும் வாராதிருந் திடையி லவைவந்தோர்க் காட்டமுண்டாவதுபோலளவிறந்தகாலமு மலச்சிறையிற்கிடந்தோர்க்கிப்போ தச்சிறைவிடுதலையாய்ப் பரிபூரணவடிவவும் பெற்றமையானிவர்க்காடலுந் தாமநுபவித்த பெண்ணின்பவாசனை யுளத்திருத்தலா லவர்க்குப் பாடலுண்டாவதுபோற் றன்பபோகத்தையே யள

வில் காலம்பொசித்தோர்க் கிப்போது நிரதிசயாநந்தங் கிடைத்தமை யாற் பாடலுமுண்டென்ப திவ்வுவமைகளாற்காண்க.

"ஊனம்போ,, லென்றமையா லூனமன்றென்பதாயிற்று உல கென்பதற்கும்பெயர் "கைவந்தவர்க்காட்ட,, மென்பதற்கருத்த மோர் வித்தையாதி முன்கைவாராதிருந்து பின்கைவந்தபோ தாட்டமுண்டா வதுபோலு மென்கிறுமாம் "ஆநந்த,, மவுனமதனையடைந்த ஞானி கள் போதமிழந்தோராகலின்.

இத்திருவெண்பாவால் ஞானிகட்குப் பூரணவடிவம் பெற்றமை யா லாடலும் ஆநந்தம்பெற்றமையாற் பாடலுமுண்டாமென் றறிவி த்தவாறுகாண்க.



இங்ஙன நிர்விகாரியாயிருந்தோர்க் கந்தவிகாரிகள்போலு மாட ல்பாட லெங்ஙனமுண்டாமெனின் மேற்கூறுகின்றார்.

அறிவுபறிகொடுத்திவ் வாக்கையறமாறிப்
பெறுதியிழப்புதியாப்பித்தி - னறிசென்
றலையற்றநீத்தமோ ராளற்றகப்ப
லுலைவுற்றதோ நிற்பதோ.

அறிவுபறிகொடுத்திவ் வாக்கையறமாறிப் பெறுதியிழப்புதியாப் பித்து - னறிசென்று - எ - து - முன்னர் விடயாநந்தத்திற்குத் தமத றிவைப் பறிகொடுத்தருபோ லிப்போதுமாறிச் சொரூபாநந்தத்திற் கவ்வறிவைப்பறிகொடுத்து முன்னர்க்கூடியிருந்த விம்மாயாவடிவம றத்துபோக விப்போ தருள்வடிவாய்மாறப்பெற் றவ்வருளேவடிவா கலி னோர்பொருளைப் பெற்றோமென்னும் பெறுதியு மோர்பொரு ளையிழந்தோமென்னு மிழப்பு மிவற்றான்வரு மிதாகிதங்களுந்தோன் றுத வாநந்தப்பயத்திய மீக்கொண்டோரிடத்தாச் சிறிதேனும் விகார முண்டாகா தென்னையறிவிற்சென்று பார்த்தறிதி இஃதன்றி.

அலையற்றநீத்தமோ ராளற்றகப்ப - லுலைவுற்றதோ நிற்பதோ- எ - து - அலையின்றியசாகரத்தினின்று மோராளுமின்றிய கப்பலசைவு றுகின்றதோ வசைவற்று நிற்கின்றதோ வஃதெங்ஙன மசைவற்றுநிற் கின்றததுபோலு மவுனாநந்தசாகரத்தின் முப்பத்தாறுதத்துவங்களுந் தற்போதமுமிறந்து நின்றஞானிகளு மசைகிலரென் றித்திட்டாந்தத் தானுங் கண்டுகொள்க-எ-று.

"அலையற்றநீத்தத்தை,, மவுனாநந்தத்திற்குமாளற் றிருத்தலைக்கரு விகளிறந்து நிற்றற்கு மசைவற்றகப்பலைப் போதமிறந்தஞானிகள தீ றிவிற்குமுவமித்தார். கூ௨)

"அறிவுபறிகொடுத்த,, லானந்தமயமாயழுந்தல்



இன்னுங் கூறுகின்றார்.

செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச் சீபேயென்றோட்டி
லகம்புறங்காட்டேச்சுக் குற்றற்றுத் - திகம்பரியாய்த்
தானந்தம்பாடிவிண் ணிற் றட்டத்துணங்கையடித்
தானந்தக்கூத்துநடிப்பார்.

செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச் சீபேயென்றோட்டி - லகம்புறங் காட்டேச்சுக்குற்றற்றுத்-திகம்பரியாய் -எ - து-உலகநடைதெரியாத பேயரொன்று சகத்தோர் தம்மைப்பார்த்துச்சிரிப்ப ஞானநெறிதெரியாத மலப்பேயரொன்றுதாமு மவரைப்பார்த்துச் சிரித்துப் புறந் திண்ணைப் பொதுச்சாவடிகளிற் றாமிருந்தவிடத் தவர்வந்து சீபேய ரேபோமென்றோட்டினு லியாதொன்றுங்கூறு தவ்விடம்விட்டுநீங்கிப் புறங்காட்டை நன்மனைபோற்கண் டசுத்தமென்னு மருவருப்புச் சிறிதுமற்றுத் திகம்பரிகளா யவ்விடத்திருந்து.

தானந்தம்பாடிவிண்ணிற் றட்டத்துணங்கையடித் - தானந்தக்கூத்துநடிப்பார் - எ - து - தமதுபோத நாசமானவிடத்துப்பாடிச் சிதாகாசவெளியிற் பொருந்திநின்று துணங்கைக்கூத்திற்குரித்தாம் படி கையடித்தானந்தநடனம்பண்ணுவாரவ்வானந்தபூரணராயினோர்-எ-று.

உலகர்க்கு ஞானிகண் மாறுபாடா யிருத்தலானும் ஞானிகட் குலகர்மாறுபாடாயிருத்தலானுஞ்"செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்,, தென்றார்.

உலகத்திற்கு ஞானம்பேய் ஞானத்திற் குலகம்பேயென்னு மூலவழக்கமுமதுபிரபஞ்சமெல்லா மானந்தபூரணமாய்த்தோற்றலிற்சுடுகாட்ட சுத்தமவர்க்குத் தோற்றாதென்பதறிக.

"தானந்தம்பாடி,, யென்றதனாற் போதமிறந்து நின்றுபாடினு ரென்பதும் "விண்ணிற்றட்ட, நடிப்பவென்றதனாற் பரிபூரணனந்தமாறாதுநடிப்பாரென்பதுங் காண்க. (௰௩)

இவையிரண்டு திருவெண்பாவானும் ஞானிகள் நிருவிகாரிகளாயிருந்தே யாவேர்பாவேவொன் றறிவித்தவாறுகாண்க.



நீர்கூறியவாறே யெல்லாவற்றையுந்துறந்து சிவவேடம்பூண்டு கொண்டு தவங்களைச்செய்து சிவாலயங்கடோறு மாடிப்பாடியழுது சிரிக்கின்றோர்நிருவிகாரிகளலரோவெனின்மேற்கூறுகின்றார்.

விபரீதப்பூணு முடையும்விளியா
லபிமானமுமவரா லாட்டுந் - தபசுபோற்

செய்யுஞ்சடங்குந் திகைப்புஞ்சிதம்பரத்தி
லையன்றனக்கறிய லாம்.

விபரீதப்பூணு முடையும்விளியா - லபிமானமும்வரா லாட்டுந் தவசுபோற் - செய்யுஞ்சடங்கும் - எ - து - பார்த்தபேருக்குவிபரீதமாய்த்தோன்றும்படி சிரஞ்செவி களங்கர மார்புகளின் மிகவும்பூண்டுகொள்ளு முருத்திராக்கப்பூண்களு முத்தூளனமு மொட்டுவேட்டியுடையும் வார்த்தையினுலியாஞ்சிவமதமென்று பிடித்துப்பேசு மபிமானமு மவரிடத்துண்டா மாடல்பாடல்களுந் தவசுபோற்செய்யுஞானுசாரங்களும்.

திகைப்புஞ்சிதம்பரத்தி - லையன்றனக்கறியலாம் - எ - து - அவ்வேடத்திற்கு நடைக்குமுரிய பரிபூரணஞான மகத்தின்றித் திகைத்திருத்தலுமாகிய விவையுடையாரது கருத்தினைச் சிதாகாசத்திற் றிகைத்திருத்தலுமாகிய விவையுடையாரது கருத்தினைச் சிதாகாசத்திற்பஞ்சகிருத்திய நடனம்பண்ணுநின்ற பரமசிவனது திருவுளத்திற்கே யறியலாமல்றி மற்றையர்க்கறியலாகாது-எ-று.

ஆபரணம்போற் பூண்டுகோடலின்"னுருத்திராக்கத்தைப், பூணென்றார். உருத்திராக்கஞ்கூறினமையா னுத்தூளனம்வருவிக்கப்பட்டது அகத்துஞானமின்றிப் புறத்திங்ஙனங்காட்டுவனவெல்லாந் தற்போதத்தா லுண்டாவதர்கலி னிவர் திருவிகாரிகளல லொல்பதுங்காண்க. இவர்களும் ஞானிகள்போற் பிறர்க்குத்தோற்றலிற் "சிதம்பரத்திலையன்றனக்கறியலா,, மென்றார். (௰௪)

இத்திருவெண்பாவான் ஞானிகள்போல் நடிக்கின்றோரைப் பொய்ஞ்ஞானிகளென் றறிவித்தவாறுகாண்க.



மெய்ஞ்ஞானிகணடை யின்னுங்கூறுகின்றார்
மாலயனுமிந்திரனும் வாழுவதாய்மாளுவதாஞ்
சாலமயல்பார்த்துத் தலையசைப்பர் - ஞாலமயங்
குன்மத்தக்கோரணிபார்த் தோகோவெனச்சிரிப்பர்
தன்னைப்பார்த்தாரவர் தாந்தாம்.

மாலயனுமிந்திரனும் வாழுவதாய்மாளுவதாஞ் • சாலமயல்பார்த்துத்தலையசைப்பர் - ஞாலமயங் - குன்மத்தக்கோரணிபார்த் தோகோவெனச்சிரிப்பர் - எ - து - தேவர்கட்கெல்லா மேலாயமாலென்னும் பெயரையுடையனுகிய மயனென்னும் பெயரையுடையனுகியு மிந்திரனென்னும் பெயரையுடையனுகியுஞ் சிறந்துள்ளார் தத்தமீபதவிகளி லழிவின்றி வாழ்வதாய்க் கருதிக்கொண்டிருந்து பின்னுளின்

மாண்டுபோவதாகு மவரது மிருந்தவாணவ மயக்கத்தைப்பார்த் திவ் வாணவமவர்களையும் பொய்யாகிய தேகாதிகளையு மெய்யாக்கருதப் பண்ணி மயக்கிற்றாக் கண்டீர்கொலோவென் றுள்ளத்துநாடிச் சிரக் கம்பங்கொள்வ ரவ்வாணவத்தா லிவ்வுலகத்தார் மயங்காநின்று பயித் தியக் கோரணிக்கூத்தைப்பார்த் தோகோவெனப் பிறர்க்குக்கேட்கச் சிரிப்பர்.

தன்னைப்பார்த்தாடுவர்தாந்தாம் - எ - று - அஃதன்றி தம்மை ப்பார்த்துத் தம்மைச் சிவபூரணம் விழுங்கிக்கோடலாற் காணாது தா மச்சிவபூரணந் தாமென நடநம்புரிவார்-எ-று.

மாலய னிந்திரன்முதலியோ ரிறந்துபோவதாகமப்பிரமாண த்தா லறிவதாகலி னவரது "மயல்பார்த்துத்தலையசைப்ப,, ரென்றார் பித்தமேறினோன் றன்னுடம்பதெரியா துலகர்நகைக்கு மாறுபாடா ய்த்திரிவதுபோ லாணவமேலீட்டாற் றம்மைத்தெரியாது ஞானிக ணகைக்கு மாறுபாடாய்த் தேகபோகங்களை விழைந்து கொண்டாறு வகைத்தொழில்களி லனுபேதமாய் முயற்சிப்படலா "னுன்மத்தக் கோரணி,, யென்றார் அவர்மருளான்மயங்கி நடிக்கின்றா ரிவாருளாற் றெளிந்து நடிக்கின்றாரென்பதுங்காண்க.

தாந்தாமென்ப தந்நடத்திற்கோர்தாளமுமா மெனக்கொள்க.()



ஆசைமுதலான வனைத்தும்போய்நானதுவாம்
வாசனையுமாண்டு மறந்தறியா - நேசத்
துறும்போகவுல்லாச வூமைக்கூத்தாடிக்
குறும்போக்குவந்து நடப்பார்.

ஆசைமுதலான வனைத்தும்போய்நானதுவாம் - வாசனையுமா ண்டு மறந்தறியா - நேசத் - துறும்போகவுல்லாச வூமைக்கூத்தாடி - எ - து - ஐந்தவாமுதலிய கருவிகளனைத்துமிறந்து நானச்சிவத்தோ டத்துவிதமானே னென்பதாகிய வாசனையுமிறந்து தற்றரிசனந் திரு வருட்டரிசனங்களினின்றோ ரோர்காலை யவற்றைமறந்து மீண்டுமறி வதுபோன் மறந்தறியாத நேயத்துத்தோன்றும் பரிபூரணாநந்தபோ கவுல்லாசத்தொடு மவுனக்கூத்தாடி.

குறும்போக்குவந்துநடப்பார்-எ-து-பின்னர்ச் சிறிதிடஞ்சென் று மீண்டுவந்துமுலாவுவா ரவ்வத்துவிதாநந்தம் பெற்றோர்-எ-று.

விடயங்களிற்செல்லு மைந்தவாவுநீக்கவே யவ்விடயங்களையறி ந்துபற்றி யவற்றுளழுந்துவதாய விருவகையிந்தியங்களு மந்தக்கா ணங்களு நீங்கு மிவைகணீங்கவே யொழிந்தகருவிகளு நீங்குமாதலி னு

சைமுதலான வினைத்தும்போ யென்றுசையை முன்வைத்துக்கூறினார் நேயத்தழுந்தியபோது பேர்தமிறத்தலின் "மறந்தறியாநேச,, மென்றார் சிறுபிள்ளைகள்போலுலாவி விளையாடுவராகலிற் "குறும்போக்குவந்திநடப்பா,, ரென்றார். (௰௬)

இவை யிரண்டுதிருவெண்பாவானு மெய்ஞ்ஞானிக ளஞ்ஞானிகளது பொய்யுலகா சாரத்தைகண்டு இரக்கப்படுநிகளுந் தம்முண்மையு மாநந்தாநுபவமுங்கண்டு நடனுதிகளுஞ்செய்வரொன் றறிவித்தவாறுகாண்க.



கருவிகளும் போதமுமிறந்து நேயத்தழுந்தினோ ரக்கருவிகளும் போதமுமுடையோரது மயக்கமுந் தமதுதெளிவு மெங்ஙனமறிவாரெனின் மேற்கூறுகின்றார்.

கேடுஞ்சுகமுமுத லெல்லாங்கீழ்ப்படுத்திக்
கூடுஞ்சுகம்போலக் கொள்ளாதே - நாடுநகும்
பூனைக்கண்ணேரி பொருப்பேறிபோலுச்சிப்
பானுப்போனீயவரைப் பார்.

கேடுஞ்சுகமுமுத லெல்லாங்கீழ்ப்படுத்திக் - கூடுஞ்சுகம்போலக் கொள்ளாதே - எ - து - துக்கமுஞ்சுகமு மிவற்றிற்குமுதலாயுள்ள தேகாதிப்பிரபஞ்சமெல்லாமுங் கீழ்ப்படுத்திநீக்கி நேயத்தைக்கூடும் பரமுத்தர்குணம்போலச் சீவன்முத்தர்குணத்தை நீ கருதிக்கொள்ளாதே அஃதெங்ஙனமெனின்.

நாடுநகும் - பூனைக்கண்ணேரி பொருப்பேறிபோலுச்சிப் - பானுப்போனீயவரைப்பார் - எ - து - நாட்டின்கண் ணுள்ளார்பார்த்து நகையாநின்ற விருட்டைச் சிறிதேனுமின்றி யிரவினுமறியும் பூனையினது கண்ணைப்போலும்எரிக்கனாமேலேறினோனைப்போலு மஃதாமேலேறினோனைப்போலு மத்தியானத்துச்சூரியனைப்போலு நீயச்சீவன்முத்தரறிவையும்பார்த்தறிதி-எ-று.

பூனைக்கண்ணிற் கிரவினும் பகலினும் பொருள்க டோன்றுவபோலு மேரிக்கனாமேலேறிக்கிருபாலுந்தோற்றுவபோலும் பொருப்பேறிக்கு நிலத்திற்பொருளும் பொருப்பிற்பொருளுந் தோற்றுமாபோலு முச்சிப் பானுவிற்குதயமாகுந் தானமு மத்தமிக்குந்தானமுந் தோற்றுமாபோலவும் பிறப்பிற்றுன்பமும் வீட்டினின்பமுமவர்க்குத்தோற்றுமாகலி னிங்ஙனமுவமைகூறினார்.

இருளானறியுங் கண்ணிற் கொளியிற் பொருடோற்றாதுபோற் பெத்தர்களென்பது மொளியானறியுங் கண்ணிற்கிருளிற் பொருடோ

ற்றுததுபோற் பாமுத்தரொன்பது மிருளினு மொளியினு மறியுங்க ண்ணைப்போற்சீவன்முத்தரொன்பதும் "பூனைக்கண்" ணென்னு முவமைக்குறிப்பாற் காண்க.

பரமுத்தர் தநுவாதிகளைநீக்கி நேயத்தழுந்தினோர் சீவன்முத்தர் தநுவாதிகளோடுகூடியுங் கூடாமனின்று நேயத்தழுந்தினோராகலிலிச்சீவன்முத்தராவா ரிவரொன் றிதனுட்பகுத்தறிவித்தார் 'ஏரியென்பதனைக்" கனாமேலேறி யென்பதனோடுங்கூட்டுக "நாடுநகு" மென்பது பூனைக்கண்ணிற்கண்டு.

இத்திருவெண்பாவாற் சீவன்முத்தராய மெய்ஞ்ஞானிகள் ஜகமுகமும் அகமுகமுந்தோன்றப் பற்றுதபார்த்தறிவாரொன் றறிவித்தவாறுகாண்க. (டுஎ)



ஞானிகளாயினோர் மவுனமாயிருப்பதன்றி யிவராடலாதிகளைச்செய்வ தென்னையென்று சரிதாதியினிற்போர் சொல்லார்களோவெனின் மேற்கூறுகின்றார்.

குலையும்பேயும்பிடித் தழல்வார்சும்மாநம்
போலறிவீரொன்றுரைத்த புத்திபோன் - மூல
விருளால்மறந்தறியா ரீதென்றுனென்பா
ரருளாலறிந்தறிவா ரை.

குலையும்பேயும்பிடித் தழல்வார்சும்மாநம் - போலறிவீரொன்றுரைத்தபுத்திபோல் - எ - து - பொதுமாதர்கூட்டரவான் வருஞ்குலைநோயு நற்குணத்தை மாறுபடுத்தும் பேயும்பிடித்தவற்றான் வருந்திச்சுழல்வா ரிச்குலையும் பேயுங்கொண்டு சும்மா வெமதறிவைப்போலீருமறிவீரொன்று நற்குணத்தோர்க்குச் சொன்னபுத்திபோல்.

மூல - விருளால்மறந்தறிவா ரீதென்றுனென்பா - ரருளாலறிந்தறிவாரை-எ-து-மூலமலவிருளாற்றம்மைமறந்து மாயாகாரியமாகிய தநுவாதிகளை யானெனதென் றறிவாரருளா லத்தநுவாதிகளைப் பொய்யென்றறிந்துநீங்கித் தம்மையுந் தமக்குரிய பேரின்பத்தையு மறிந்துளாரைப்பார்த்துப் பித்தரைப்போ னீர்செய்யு மாடல்பாடல்களிதென்னையென்றுசொல்வரதுகொண்டிவர்க்கோரிகழ்ச்சியுமின்று-எ-று

குலையும் பேயும்பிடித்து ளோர்புத்தியை யவைபிடியாத நற்குணத்தோர் கேளாததுபோற் சகலகேவலத்தினிற்போர்சொற்களையவை நீங்கிச் சுத்தத்திருப்போர் கேளாரொன்ப திவ்வுவமையானறிக.

குலையும்பேயுமென்றது ஏகதாரவிரதியாயிலிங்க விரதியாயிருப்போர்க்குப் பொதுமாதர் கூட்டரவு மைவாரசர்முதலிய மருளேற்றிக்கொள்வது நன்றென்று பிறர்கூறுவனபோ லென்பதுமாம்.

இத்திருவெண்பாவான் மெய்ஞ்ஞானிகளது ஆடலாதிகளைக்கண்டு கருமிகள்பழிப்பினு மதுபழிப்பின்பாற்பட்ட தன்றென்றறிவித்த வாறுகாண்க. (௰௮)

ஞானிகள் மகிமையை யுலகத்தாருஞ் சரிதாதியினிற்போரு மறியாதிருந்த லேனெனின் மேற்கூறுகின்றார்.



மருண்மூகர்வாக்கறிய வல்லரோமாயா
விருளேயொளியாயிருப்ப - வருளுருத்த
பேயனைப்பேயென்றோ பித்தநாப்பாலிருட்கண்
பார்வைக்குப்பானுப் பகை.

மருண்மூகர்வாக்கறிய வல்லரோமாயா - விருளேயொளியாயிருப்பர் - எ - து - பித்தமேறியவூமர்க ணல்லறிவாளர்கூறு மறநெறிவாக்கினையுட்கொண் டறியவல்லரோ வதுபோ லுலகத்தார் ஞானிகள்கூறுந் திருவாக்காணுயினு மவர்களை ஞானிகளென் றறியவல்லரோ வஃ. தன்றித் தாங்கற்ற நூலறிவுஞ் சரிதாதிகளுமாகிய மாயாவிருளைத் தானே ஞானப்பிரகாசமாக் கருதிக்கொண்டிருப்போர்.

அருளுருத்த - பேயனைப்பேயென்றோ பித்தநாப்பாலிருட்கண் - பார்வைக்குப்பானுப்பகை - எ - து - மும்மலங்களையுந் தற்போதத்தையுங் கோபித்தவருளாகிய பூரணப்பேய் பிடித்தபேயனைப் பேயென்றுசொல்லார்களோ வங்ஙனமிருந்தோ ரிங்ஙனமிருந்தோனைப் பேயனென் றிகழ்வானேனெனின் மதுரமாகியபால் பித்தமேறிய நாவிற்குப் பகையானதுபோலும் பேரொளிப்பிரகாசமாயிருந்த பானுவிருளை யொளியாகக்காணு மிருட்கண் பார்வைக்குப்பகையானதுபோலு மாநந்தமூர் திருவருளு மலமேலீட்டா லவர்க்குப்பகையாமாகலி னிவற்றைப்பெற்ற ஞானிகளும் பகையாத்தோற்றுவரிஃதே யவரிகழ்தற்குக் காரணமென்றறிதி - எ - று.

“மருண்மூகர்வாக்கறியவல்லரோ,, வென்றதுலகத்தார்க்குவமை நூலுணர்ச்சியோடுஞ் சரிதாதிகளினிற்போ ரிகழ்வாரென்றது பாஞானமின்மையா லெனக்கொள்க.

“பானுப்பகை,, யென்பதனைப் பாற்பகையென்றதனோடுங் கூட்டுக. கைப்பாயுமிருளாயு மாறுபடத்தோற்றலிற் “பகை,, யென்றார்.

இத்திருவெண்பாவான் ஞானிகளதுமகிமையை யுலகத்தாருஞ் சரிதாதிகளினிற்போரு மெய்யுணர்ச்சியின்மையா னறியார்களென்றறிவித்தவாறுகாண்க. (௰௯)



ஞானிகண்மகிமையை மானிடரறியாராயின் அறிவாராரெனின் மேற்கூறுகின்றார்.

அடைப்புள்ளாயா ளடர்ந்தவாமையாய்த்திக்கே
யுடுப்பதாயோர்ந்துழல்வார்க் கூறார் - நடைப்பிணமே
யூமைப்பேயாரெனினு மோலமிடுந்தேவர்குழாஞ்
சேமக்கோலா ளிந்திரர்.

அடைப்புள்ளாயாளடர்ந்த வாமையாய்த்திக்கே-யுடுப்பதாயோர்ந்துழல்வார்க்கூறார் - எ - து - நேயநிட்டைமாறுதிருத்தலின் முட்டைகளைவைத் தவையங்காக்கு மடைப்புட்போலாய்த் தாமிருந்தவிடந்தேடிச் சிலரன்றுதிகளைக்கொடுவந்து நேரோவைத்துவணங்கி யுபசாரங்களைக்கூறினு மிந்திரியங்களைந்தையு மவற்றிற்செல்லவொட்டா துள்ளடக்கிக்கொண்டிருத்தலினு ளடர்ந்தவாமைபோலா யிவ்வுடையைத் துறந்து திக்கெல்லாம் பரிபூரணமாயுள்ள வுடையைத் தம்மைத்தெரியாது சூழவுடுத்திக்கொண்டிருத்தலிற் றிக்கையுடுப்பதா யிங்ஙனந்தேர்ந்துலாவுவார்க் கூறின்க்ணுள்ளார் நன்றுகூறினுந் தீதுகூறினு முறவரோ பகைவரோ விவர்யாவர்.

நடைப்பிணமே - யூமைப்பேயாரெனினு மோலமிடுந்தேவர்குழாஞ் - சேமக்கோலாளிந்திரர் - எ - து - அஃதன்றி நடையாடியபிணம்போற் றிரிந்தாரெனினு மூமைப்பேய்களைப்போ லிருந்தாரெனினு மவரதுமான்மியத்தைத் தேவர்கூட்டங்களெல்லாமறிந்து சூழ்ந்துகொண்டு தோத்திரம்பண்ணுநிற்ப ரிந்திரர்களவர்க் கேவற்பணிவிடைசெய்யுஞ் சேமக்கோலாள்களாய்த்திரிவர்-எ-று.

அடைப்புண்முட்டையைச் செட்டையாலடக்கிக்கோடல்போலண்டங்களையெல்லாந் தமதுபூரணத்தான் மறைத்துக்கொண்டிருப்பரென்பதுமாம்.

ஆளடர்ந்தபோதாமை யைந்துறுப்பையு மடக்கிக்கோடல்போல விடயங்கணேர்படி னவைாந்தையுமடக்கலி னிங்ஙனமுவமை கூறினார்.

ஊரொன்பதுாரின்கண் ணுள்ளார்மேலேறிற்று தேர்ந்துழல்வார்க்கூறினுள்ளா ரியாவரெனக்கூட்டுக. கருவிச்சேட்டைக ளிறந்துநிற்றலி "னடைப்பிண,, மென்று மவுனநந்தமாயிருத்தலி னூமைப்பேயரென்று மொன்றினு மவாவற்றமெய்ஞ்ஞானி தேவருலகத்து மின்மையா "லோலமிடுந்தேவர்குழா,, மென்றுஞ் "சேமக்கோலாளிந்திர,, ரென்றுங்கூறினார்.

அந்தஞானிகட் கேவல்செய்வது மிகவுஞ்சிறப்பாகலி னவர்பிடிக்குங்கோலைச் "சேமக்கோ" லென்றார்.

உபேந்திரருளராகலினிந்திர னொன்றுபன்மையாகக்கூறினார்.

இத்திருவெண்பாவான் ஞானிகண்மகிமையை மானிடர்களறியா ரெனினுந்தேவர்களறிந்தேவல்புரிவாரென்றறிவித்தவாறுகாண்க. (உ௰)



இங்ஙன மகிமையுடையஞானிக ளெத்தேசத்திற்செல்வு ரெவ்விடத்திருப்பரெனின் மேற்கூறுகின்றார்.

செத்தவரைப்போலத் திரும்பாமற்போகலுமா
மெத்திசையுமொன்றென் றிருக்கலுமா - முத்தர்தமக்
கண்டமனுச்சிற்றிலா டரங்கந்தேகமலாற்
கண்டிடுகைக்கேதுமிலை காண்.

செத்தவரைப்போலத் திரும்பாமற்போகலுமா - மெத்திசையு மொன்றென்றிருக்கலுமா - முத்தர்தமக்கு - எ - து - முத்தர்தமக்குச் செத்தவரைப்போலத் தாமிருந்துநீங்கிய பதியின்மீட்டுந் திரும்பாமற்சேறலுமாகு மஃதன்றியெல்லாம் பரிபூரணமாய்த்தோற்றலினெமக்கெல்லாத்திக்கு மொன்றுதானேயென் றோரிடத்திருத்தலுமாகும்.

அண்டமனுச்சிற்றி லாடரங்கந்தேகமலாற் - கண்டிடுகைக்கேது மிலைகாண் - எ - து - அஃதன்றித் தேகங்க ளான்மாக்கட்குச் சிற்றிலிழைத்தற் கிடமெனவு மண்ட மவ்வான்மாக்கட்குமாயா கோரணிக்கூத்தாடற்கோராடரங் கெனவுங்காண்பதல்லாம லம்முத்தர்தமக்கு வேறுகாண்கைக் கியாதொருபொருளு மில்லை-எ-று.

உடற்கண்ணிருந்து நீங்கிய வுயிர்மீட்டும்வந் ததனுட்புகாதது போற் றாமிருந்துநீங்கிய பதியின்மீட்டும்வந்துபுகாமையிற் "செத்தவரைப்போலத் திரும்பாமற்போகலுமா" மென்றார்.

"அனுவென்பதான்மா" தேகஞ் சிற்றிலெனவு மண்ட மாடரங் கெனவு மாறிக்கூட்டுக. பிரபஞ்சமெல்லாமண்டபிண்டங்களுளடங்குமாகலிற் "கண்டிடுகைக்கேதுமிலைகா" ணென்றார்.

முத்தர்தமக்கென்பது நடுநின் றிருபாலுங்கொண்டு முடிதலிற் றுப்பிசைப் பொருள்கொள்ளு நடுநிலைத்தீபமுமாங்காண்க (உக)

இத்திருவெண்பாவான் ஞானிகள்செல்வதற்கு மிருப்பதற்குந் தேசமுமிடமுங்குறியீ டின்றென்றறிவித்தவாறுகாண்க.



அந்தஞானிகள் போகாதவூர் ஒன்றுமின்றேவெனின் மேற்கூறுகின்றார்.

உடற்போகம்போக வுயிர்ப்பகைபோய்ப்பேறுங்
கெடத்தானுந்தன்னறிவுங் கெட்டோர் - நடக்கும்போ
தாகாயஞ்சாணிடல்போ லாவதல்லாற்பூரணர்க்குப்
போகாவூருண்டோ புகல்.

உடற்போகம்போக வுயிர்ப்பகைபோய்ப்பேறுங் - கெடத்தானுந்தன்னறிவுங்கெட்டோர் - எ - து - உடம்பானனுபவிக்கும் விடயபோகம்போக - வப்போகமாகியதுன்பத்தை யின்பம்போன் மாறுபாடாய்த்தோற்றுவிக்கு முயிர்ப்பகையாகிய வாணவம்போய்ப் பேரின்பத்தைப் பெற்றேமென்னும்பேறும் போகத்தன்னையுந் தனக்கறிவிப்பதாய வருளையுமிழந்துளோர்.

நடக்கும்போ - தாகாயஞ்சாணிடல்போ லாவதல்லாற்பூரணர்க்குப் - போகாவூருண்டோபுகல் - எ - து ஓர்திசையிற்செல்லும்போதாகாயத்தைச் சாணிட்டளப்பதுபோ லப்பரிபூரணர்க்குத் தமதுபூரணத்திற் றுஞ்செல்வதுபோற் றோற்றுமாலல்லாம விதுநீதென்று பகுத்துப்பார்த்துப் போகாதுதவிரு மூருமுண்டுகொ லினிபுகலுதி-எ-று.

ஆணவத்தா லின்பமாய்த்தோன்றிய போகந் துன்பமாய்த்தோன்றியபோ தவ்வாணவங்கெடு மவ்வாணவங்கெடவே தற்றரிசனமுந்திருவருட்டரிசனமும் பரையோகமு மாநந்தப்பேறுமுண்டா மாநந்தப்பேறிருந்தவிடத்துத் தானுந் தனக்கறிவித்தவருளு மின்றுமாகலினுண்டா மவைக்குமின்று மிவைக்குங்காரண மிவையென்றுடற்போகவிழுப்பையுமுயிர்ப்போக விழப்பையுமெடுத்தறிவித்தார்.

ஆகாயத்தைச் சாணிட்டளக்கும்போ தளப்பதுபோற்றோன்றிவிடுத்தபோதளந்தது மின்றாய்விடுத்தது மின்றாயிருத்தல்போற் பூரணர்க்குநடக்கும்போது மப்பூரணமாறுததனு னடப்பதுபோற்றோன்றி யோர்தானத்திருந்தவிடத்து முன்னடந்தோமென்பதுமிப்போதிருந்தோமென்பதுந் தோன்றாதாகலி "னாகாயஞ் சாணிடல்போ,, லென்றுவமைகூறினார். (உஉ)

இத்திருவெண்பாவால் ஞானிகட்கு நிற்குநிலையு நடக்கும்போதுள்ளகுணமு மோரூர்நிற்கை யோரூர்தவிர்கையுமாகிய நியதியின்றென்பது மறிவித்தவாறுகாண்க.



ஆயினவர்க்கு நற்றானமுந் தீதாய்தானமுஞ் சரியோவெனின் மேற்கூறுகின்றார்.

தருவனமென்றண்டு ளுடைசாய்மனையாய்வாழு
நரவனமென்மேல் கீழ்நடுவென் - பரமசிவன்
றாக்கற்றதுபோ லருள்சிவனைச்சாராபோ
றாக்கற்றார்க்கெங்குஞ்சமன்.

தருவனமென்றண்டுகுடை சாய்மனையாய்வாழு - நரவனமென்
மேல்கீழ்நடுவென் - எ - து - தருக்கணெருங்கியசோலையாயி னென்னை
முட்செறிந்த வனமாயினென்னை சிவிகை கவிகை சாய்மனைமுதலிய
னவுடையராய்வாழு நரராகிய வடவியாயினென்னை யுத்தம் மத்திம
வதமமாயுள்ள தலங்களாயினென்னை.

பரமசிவன் - றாக்கற்றதுபோ லருள்சிவனைச்சாராபோற்-றாக்கற்
றார்க்கெங்குஞ்சமன் - எ - து - பரமசிவ னெல்லாவற்றோடுங் கூடியி
ருந்து மவற்றுட் டாக்கற்றிருந்ததுபோலுந் திருவருளானது இருத்தி
யங்களைந்துந் தன்னுடைக்கவுஞ் சிவத்தைவிட்டுநீங்காதிருப்பதேயன்
றி யிக்கிருத்தியங்களைந்தையுமொழித் தச்சிவத்தைச் சார்வோமென்று
சாராதவாறுபோலு மொன்றோடுந் தாக்கற்றஞானிகட்கு முற்கூறிய
விடமெல்லாஞ்சரியாம்-எ-று.

கருவிகளெல்லாவற்றோடுங் கூடியிருந்து மவற்றுட்டாக்கற்றுநி
ற்றலாற் "பரமசிவன்" றாக்கற்றதுபோலென்றுந் தேகவிந்திரியத்தக்
கரணங்க டம்மாற்றொழிற்படினுந் தாஞ்சிவத்தைவிட்டு நீங்காதிருப்
பதேயன்றி யித்தேகவிந்திரியாதிகளினது தொழில்களையொழித் தச்சிவ
த்தையடைவோமென்பதின்றிப் பரிபூரணமாயிருத்தலி "னருள்சிவ
னைச்சாராபோ" லென்றுங்கூறினார்.

இத்திருவெண்பாவான் ஞானிகட்கு எவ்விடமுஞ் சமனென்றறி
வித்தவாறுகாண்க. (௨௫)



ஆயினவர்கட்கு இடந்தான்யாதெனின் மேற்கூறுகின்றார்.

தன்னையருளாலறிந்து தானறிந்ததெல்லாம்போ
யிம்மைப்பெருவாழ்வை யெய்தினர்க்கு - முன்னே
நடந்தறிந்தபோத நசிப்பேயிருக்கு
மிடம்புறங்கா டென்பதிலை.

தன்னையருளாலறிந்து தானறிந்ததெல்லாம்போ- யிம்மைப்பெ
ருவாழ்வையெய்தினர்க்கு - எ - து - கருவிகண்முப்பத் தாறையுங்கட
ந்து தம்மையருளாலறிந் தங்ஙனந் தம்மையறிந்தபின்னர்த் தம்மை
யறிவித்த வருட்டரிசனமுதலாய்த் தாமறிந்தவையெல்லா நீங்கி யிம்
மைக்கண்ணே சுகாதீதமாகிய பெருவாழ்வையடைந்தோர்க்கு.

முன்னே - நடந்தயிந்தபோத நசிப்பேயிருக்கு - மிடம்புறங் காடென்பதில் - எ - து - கருவிகளேயுந் தற்றரிசனமுதலியவற்றையு மிதுமிதுவென்றறிந் தவற்றைநீங்கிச்சென்று சிவத்தையறிந் ததனுள்ளிறந்த போதமீண்டெழா ததனைக்கெடுப்பதே யிருக்குமிடமன்றியி துசுத்தமாகியவிடமென்பது மிது புறங்காடென்பதுமின்று-எ-று.

தற்றரிசன முதலியவற்று ளுறுதியாய்நின்றோர் மறுமைக்கண்ணடையுஞ் சுகாதீதமுத்திநிலை யிவரிம்மைக்கண்ணே யடைந்தாராகலி னிம்மைப்பெருவாழ்வை யெய்தினரொன்றார்.

எல்லாவற்றையு நீங்கிச் சென்றமையா“னடந்„தென்றார்.

இத்திருவெண்பாவான் ஞானிகட்குப்போத மிறந்திருக்குமிடமே கருத்தன்றி மற்றொன்றுமின்றென் றறிவித்தவாறுகாண்க. * (உச)



இங்ஙனமிருந்த ஞானிகட்குச்சாதிநடை சமயநடையின்றோ வெனின் மேற்கூறுகின்றார்.

காமாதிவிட்டுக் கரமேகலமாகிப்
பூமீதேகைகாலைப் போர்த்துறங்கி - நாமகுணஞ்
சாதிகருமமெனும் வாதனையிற்றாக்கற்றார்க்
கேதுசமயமெனலாம்.

காமாதிவிட்டுக் கரமேகலமாகிப் - பூமீதேகைகாலைப் போர்த்துறங்கி - எ - து - காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்களை யெல்லாம் விட்டுநீங்கிக் கரமே யுண்கலனாகி மனைதோறும் பிச்சையேற்றுண்டு பொதுச்சாவடி புறந்திண்ணை பாழுங்கோவின் முதலியவற்றுட் பூமியாகிய மலரணைமீது கரங்களையுந் தாள்களையும் போர்வையாகப் போர்த்துக்கொண் டாநந்தநித்திரைபண்ணி.

நாமகுணஞ் - சாதிகருமமெனும் வாதனையிற்றாக்கற்றார்க்-கேது சமயமெனலாம் - எ - து - பெயர்குணஞ் சாதிகிரியையென்னு மிவற்றின்வாசனையோடுந் தாக்கற்றமெய்ஞ்ஞானிகட்குச் சாதியாதென்று கூறலாஞ் சமயமியாதென்று கூறலாமாகலி னிவற்றினடைகளு மவர்க்கின்று-எ-று.

காமாதிவிட்டென்றமையான் மாயாகுணமொன்று மிலரென்பதாயிற்று.

நாமாதிகளிற் றாக்கற்றாரென்று தவற்றின்வாசனையிற் றாக்கற்றாரென்றமையா னவற்றைமறந்து போயினரென்பதாயிற்று.

“சாதிகரும„ மென்றமையாற் சாதியேதென்லா மென்பதுவ (உரு)
ருவிக்கப்பட்டது.

இத்திருவெண்பாவான் ஞானிகணடை சாதிசமயங்களோடொவ் வாதென் றறிவித்தவாறுகாண்க.

---

ஞானிநடை சாதிநடை சமயநடைகளோ டொவ்வா திங்ஙனமி ருப்ப தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

ஞானிக்குலகநடை யென்றுநாம்பார்க்கிற்
சீனக்கண்ணாடியொடு தீபமுமா - மேனோர்க்கும்
விப்பிரட்டமேபோல வேறும்விகாரியோ
வப்பராக்கன்றி யறியான்.

ஞானிக்குலகநடை யென்றுநாம்பார்க்கிற் - சீனக்கண்ணாடியொ டுதீபமுமாம் - எ-து - ஞானியினதுநடையை யுலகரதுசாதிநடை போலென் றியாம்பார்ப்போமெனி னவனதுநடை யிருளிற்றீபத்தைக்கொண்டு பொருள்காண்பதுபோலுமா மிவரதுநடை யவ்விருளிற் சீனக்கண்ணாடிகொண்டு பொருள்காண்பதுபோலு மாமாகலி னிவரதுநடையோ டவனதுநடை யொவ்வாதாகும் சமயிகணடையோ டொவ்வாதிருப்ப தெங்ஙனமெனின்.

ஏனோர்க்கும் -விப்பிரட்டமேபோலவேறும்விகாரியோ- வப்பராக்கன்றியறியான் - எ - து - சமயிகட்குத் தங்கடவுளரைத் தமக்குரிய நூல் கூறியவாறே வழிபடுவா ரவனக்கடவுளரை யெல்லாங் கடந்து நின்ற பரிபூரணசிவத்தை யடைந்தவனாகலி னச்சமயிகணடைக்கு மவனடை சுத்தப்பிரட்டமேபோல வொவ்வாது வேறு மிங்ஙனஞ்சாதி நடை சமயநடை யொவ்வாதாயி னிவ்விருவகை நடையுமில்லாதபா மரர்போலு மவன் விகாரியோவெனி னவன் சிவமேபோலு நிருவி காரியவ னிருவிகாரியேயானால் விகாரமுற்றிருக்க வேண்டுமேயன்றிக் கரபிச்சைவாங்கி யுண்டன்முதலியநடை நிகழ்வானேனெனினங்ங னங் காயத்தினிகழ்ந்ததாயினு மவ னிருவிகாரமாகிய பராக்கேயன்றி யிவ்விகாரமாகிய பராக்கினுளொன்றினையு மறியான் எ-று.

உலகநடையென்றதனான் ஞானிநடைவருவிக்கப்பட்டது ஞானி நடைதீபம்போலெனவு முலகநடை சீனக்கண்ணாடிபோலெனவு மா றிப்பொருள்கொள்க.

இருளிற்றீபத்தாற் பொய்ப்பொரு டோன்றுவபோல் ஞானதீ பநடையான் மெய்ப்பொரு டோற்றுமென்பது மவ்விருளிற் சீனக் கண்ணாடியாற் பொய்ப்பொருள் சிறிதுந் தோற்றாததுபோன் மாயா ந்தகாரத்தோடுஞ் செய்யுஞ் சாதிநடையான் மெய்ப்பொருட் சிறிது ந்தோற்றாதென்பது மிவ்வுவமைகளாற்காண்க.

"விகாரியோ,, வென்றமையானு "மப்பராக்கன்றியறியா,, னென்றமையானு மவற்றிற்கிடையில் வேண்டுவன வருவிக்கப்பட்டது.

இத்திருவெண்பாவான் ஞானி மாயாதீதமான சிவஞானமுடையனாகலிற், சாதிசமயநடையாகிய மாயைக்குட்படாநின் றறிவித்தவாறு காண்க.

---

ஞானியினது நடைமுதலியவற்றை யறியக்கூடாதோ வெனின் மேற்கூறுகின்றார்.

மூர்க்கனநுசாரி மூடனெனப்பண்டிதனு
மேற்குலமாமாசார வித்தனெனப் - பார்க்கி
லளவைக்களவாகி யப்பாலாஞானி
தெளிவைத்தெளியாத தென்

மூர்க்கனநுசாரி மூடனெனப்பண்டிதனு - மேற்குலமாமாசார வித்தனென - எ - று - உலகநடை சமயநடைகளினிற்போர் ஞானிநடையைப்பார்த்துத் தமதுநடையோ டொவ்வாமையா னிவன்பிரட்டநடையையுடைய மூர்க்கனெனவு மாசாரவீனனெனவு மொன்றுமறியாத மூடனெனவுங்கூற விவேகிகளாயினு ரவனடையைப்பார்த் தெல்லாவற்றையுந்தெரிந்த பண்டிதனுமெனவுமேலாயஞானகுலமாமெனவு மாசாரத்திற்கெல்லா மோர்வித்தாமெனவுங்கூற.

பார்க்கி - லளவைக்களவாகி யப்பாலாஞானி - தெளிவைத்தெளியாதென் - எ - று - அவனடையை விசாரிக்குமிடந் திவராலிவ்வளவென் றளவிடுதற் களவிடுவதா யிவ்வளவையுங்கடந் தப்பாலுமாகிய வந்தஞானியினது நடையினையுந் தெளிவினையு மவ்வளவென் றொருவராலு மறியக்கூடாதிருந்த தென்கொலோ-எ-று.

உலகநூல் சமயநூல்களை யுணர்ந்தோர்க ளந்நூல்களினடையின் மையா னிகழ்ந்துகூறினார்.

ஞானநூலுணர்ந்தோர் ஞானநடையென்றறிந்து புகழ்ந்துகூறினாராகலி "னளவைக்களவாகி,, யென்று மிங்ஙனஞ் செய்வோமென் றுசெய்யாதவனிடத்தின் ஞானநடையியல்பாய்நிகழ்தலின் ஞானநூலுணர்ச்சியாற் புகழ்ந்துகூறினு ரளவையுங்கடந்து நின்றுனாகலி னிம்மூவளவைக்கும் பொருப்பட "வப்பாலாஞானி தெளிவைத்தெளியாத,, தென்னென்றுங்கூறினார். (உ௭)

இத்திருவெண்பாவான் ஞானியினது நடையுந் தெளிவும் யாவராலுமறிந் தளவிடக்கூடாதென் றறிவித்தவாறுகாண்க.

---

சுகாதீதத்தினிற்போர்க் கற்றடைகளிலவாயினு மருட்டரிசனமு தலியவற்றினிற்போர்க் கற்றடைகளிலவாயினது பிரட்டின்றேயெனி ன்மேற் கூறுகின்றார்.

அஞ்சனக்கண் ணுளர்க் கருநிதியந்தோன் றுவபோ
னஞ்சலகைமாற்றியதி னுனுவர்போல் - வெஞ்சாப
விடுபோற்றேன் றுமருண் மேலிட்டால்விப்பிரட்டா
மோடையின்மண்டூக மொப்போர்க்கு.

அஞ்சனக்கண்ணுளர்க் கருநிதியந்தோன்றுவபோ - னஞ்சலகை மாற்றியதி னுனுவர்போல் - வெஞ்சாப - விடுபோற்றேன் றுமருண் மேலிட்டால் - எ - து - பாதாளவஞ்சனம்போட்டுப் பார்க்குங்கண் ணினையுடையார்க் கரிய சேமநிதிதோன்றுவபோலுந் தம்மேலேறியி ருந்தவிடத்தையும் பேயையுமாற்றி னதனுற்றெளிவுபிறந்து முன்ன ரொன்செய்து கொண்டோமென் றவற்றன்மயங்கிச் செய்தசெயல்க ளைநாடி நாணுவாரைப்போலுங் கொடியசாபத்தினுல் வருந்தினேர்க் கச்சாபம்விடுதலை யானற்போலுந் தோன்றுந் திருவருண்மேலிட்ட காலத்து.

விப்பிரட்டா-மோடையின்மண்டூக மொப்போர்க்கு - எ - து - அத்திருவருண் மேலீட்டைப்பெற்ற ஞானிநடை யோடையின் மூழ் கிக்கிடக்குந் தவளைபோன் மாயாசமுத்திரத்தின் மூழ்கிக்கிடப்போர் க்குப் பிரட்டுநடைபோற்றேன்றும்-எ-று.

மண்மறைப்பாற் றெரியாதிருந்தநிதி யஞ்சனம்போட்டுப் பார் த்த கண்ணுளர்க் கம்மண் ணூடுருவி யந்நிதிதோன்றுவபோன் மலம றைப்பாற் றெரியாதிருந்தவரு ளவ்வருட்கண்ணுற் பார்த்தபோ தம்ம லமலறப்புநீங்கி யவ்வருளெங்குந் தானுய்த்தோற்றுமாகலி "னஞ்சன க்கண்ணுளர்க் கருநிதியந்தோன்றுவபோ,, லென்றும் விடமும்பேயும் நீங்கியவிடத்துத் தெளிவுவந்து முன்னரவற்றன் மயங்கிச்செய்த செ யல்களைநாடி நாணுவாரைப்போலச் சகலகேவலங்களைநீக்கி யருளை க்கண்டவிடத்து முன்னரவற்றன் மயங்கிச்செய்த செயல்களை நாடி நாணம்வருமாகலி "னஞ்சலகைமாற்றி யதினுனுவர்போ,, லென்று ந் தேவனுயிருந்துள்ளான் சாபத்தால் விலங்காதிகளாயிருந்து பின்னர ச்சாபம் விடுதலையானபோது தேவத்துவத்தை யடைந்தாற்போலவ ளவிறந்தகால மலதேகந் தானுயிருந்தவ னிப்போ தத்தேகநீக்கித் தன் னையறிவென்றுள்ளபடி யறிந்தமையால் "வெஞ்சாபவிடுபோ,, லெ ன்றுங்கூறினர்.

"ஓடையின்மண்டூகமொப்போர்க்,, கென்றது கிணற்றுக்குட்ட வளை நாட்டுவளப்பமறியுமோவென்னு முலகவழக்கக்குறிப்பான் மா

யையின் மூழ்கிக்கிடப்போர்க்கு ஞானிநடை தெரியுமோவென் றறி வித்தது. (உஅ)

இத்திருவெண்பாவால் திருவருண்மேலிட்டவிடத்து வருமநுபவமு மதனையுடையோரும் ஞானிகளென்பது மவாது நடையை மாயையுடையோ ரறியாரென்பது மறிவித்தவாறுகாண்க.



நீரீண்டுகூறியவாறே துறவு ஞானநடையு முடையோரை ஞானிகளென்பதன்றி யிவையில்லாரையு ஞானிகளென்ப தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

அவரவரைப்போலிருப்பர் தாமவராகார்போ
லிவரவர்க்கொப்பில்லை யெனினு - முவமைசொலின்
வேசிபணம்வெய்யோன் வீணைவெளிவிசிறி
யர்சியர்போலென்கினு மாவர்.

அவரவரைப்போலிருப்பர் தாமவராகார்போ - லிவரவர்க்கொப்பில்லை யெனினு - முவமைசொலின் - எ - து - குடும்பத்தோடுகூடியிருந்தும் ஞானிகளாயிருப்போ றறிவினு லக்குடும்பநிவிர்த்தியாயிருந்த ஞானிகளைப்போலே யிருப்ப ரிக்குடும்பத்தோடி யிருந்தஞானிகடாம் நடையினுல்க்குடும்ப நிவிர்த்தியாயிருந்த ஞானிகளைப்போலாகா ரதுபோல விந்தக்குடும்பிக ளந்தக்குடும்பத்தோடி யிருந்தஞானிகளுக்கு நடையினுலொப்ப ரறிவினு லிந்தக்குடும்பிக ளந்தக்குடும்பத்தோடியிருந்த ஞானிகட்கொப்பிலரெனினு மின்னுமந்தஞானிகட்குவமைகூறுமிடத்து.

வேசிபணம்வெய்யோன் வீணைவெளிவிசிறி - யாசியர்போலென்கினுமாவர் - எ - து - வேசிபோலென்றுகூறினும் பணம்போலென்றுகூறினும் வெய்யோன்போலென்றுகூறினும் வீணைபோலென்றுகூறினும் வெளிபோலென்றுகூறினும் விசிறிபோலென்றுகூறினுமாசியர்போலென்றுகூறினுஞ் சரியாவார்-எ-று.

வேசி தன்மேனசைகொண்டு வந்தார்மேற்றுனுமவர்மே னசைகொண்டாள்போலும் வாக்குக்காயங்களிற்காட்டி மனத்தினவர்மேனசையின்றிப் பொருண்மே னசைகொண்டிருப்பதுபோன் மனைவிமுதலிய குடும்பத்தார் தம்மேனசையுற்றிருப்பத் தாமுமவர்மே னசையுற்றார்போலும் வாக்குக்காயங்களிற்காட்டி மனத்தினவர்மேனசையின்றி மெய்ப்பொருண்மே னசையுற்றிருத்தலின் வேசியென்றும் பணமெவ்வொவ ரொமதெமதென் றபிமானிப்பினுந் தனக்கவர்மே லபிமானமற்றிருத்தல்போல் சுற்றத்தார் நட்புமுதலியோ ரெம்மவரெம்

மவரென் றபிமானிப்பினுந் தாமவர்மே லபிமானமற்று.

நிர்விகாரிகளாயிருத்தலிற் பணமென்னும் வெய்யோனுலகத்தார் தொழிற்படினு மிவர்செய்யு நன்றுதீது அவனுக்கின்றுயதுபோற் றமது வாக்குக்காயங்களி லியாது நிகழினு மிவற்றான்வரு மிராகிதங்களிற் றாஞ்சாராதிருத்தலின் வெய்யோனென்றும் வீணைவாசியாதிருந்தபோதும் வாசித்துவிடுத்தபோதுஞ் சும்மாவிருந்து வாசிக்கும்போ தவன்பாடும் பாட்டின்படி தான்சொல்வதேயன்றி மற்றொன்றுஞ்சொல்லாதொழிதல்போ லொருவ ரோர்காரியம்வந்து பேசாமுன்னரும்பேசி யொழிந்தபின்னருந் தாமோர்காரிய விசாரணைபண்ணாது சும்மாயிருந்து காரியக்காரர்வந்து பேசும்போ தவர்பேசுங் காரியப்பேச்சுமாத்திரம்பேசி மற்றொன்றுஞ் சொல்லாதொழிதலின் வீணையென்றும் வெளியெல்லாவற்றிற்கு மிடங்கொடுத்திருந்து மவற்றுட்டாக்கற்று நிற்றல்போற் குடும்பத்திற்கெல்லாந் தாம்பிரதானமாயிருந்து மவற்றோடுந் தாக்கற்றிருத்தலின் வெளியென்றும் விசிறிதன்னையெடுத்து விசிறிக்கொள்வார்க்குப் பயன்கொடுப்பதன்றி யவராற் றனக்குப்பயன் வேண்டாதிருத்தல்போற் றம்மைக்கொண்டு பிறர்பயன்படுவதன்றி யவராற் றனக்குப்பயன் வேண்டாதிருத்தலின் விசிறியென்று மாசியர் குற்றமுடையனையுங் குணமுடையனையுங் குணமாகப்புகழ்தல்போ லிவர் குற்றமுடையாரையுங் குணமுடையாரையுஞ் சமனுகக்கண்டு நன்மொழிகூறலி னாசியனென்றுங்கூறினார் போலென்கினு மென்பதனை யெல்லாவற்றோடுங் கூட்டுக. (உக)

இத்திருவெண்பாவிற் றுறந்துள ஞானிகளது வாக்குக் காயங்களினிகழு ஞானிநடைக்கவ ரதீதமாயிருந்ததுபோ லிங்ஙனங் குடும்பசகிதராயிருந்த ஞானிகளது வாக்குக்காயங்களி னிகழுமுலகநடைக்குமிவரதீதமா யிருப்பரென் றறிவித்தவாறுகாண்க.



இங்ஙனங் குடும்பத்தோடு கூடியிருந்தும் பற்றற்றிருப்போனா ஞானிகளென்பது சுபாவஞ் சிவிகைகவிகை முதலியவற்றோடு மரசர்போல் வாழ்கின்றோனையுமிங்ஙன ஞானியென்று சொல்வதெனின் மேற்கூறுகின்றார்.

தண்டுகுடையாளரர்ய்ச் சாதுரங்கப்போரரசாய்த்
தொண்டர்குழாம்போற்றச் சுகித்தாலு - மண்டுசெத்தர்
போகத்தாரோசுடர்போற் பொய்ப்போகமெய்ப்பெருக்காய்ச்
சார்ப்போவார்கடன் தீர்த்தல்.

தன்பேருடையாளராய்ச் சாதுரங்கப்பேராரசாய்த் - தொண்டர் குழாம்போற்றச் சுகித்தாலு - மூன்றேசுத்தர் - போகத்தாரோ - எ - து - நால்வகைச்சேனையுஞ் சிவிகைகவிகைமுதலியவு முடையராய் வாழு ம்பேரரசனைப்போலச் சிவிகை கவிகைமுதலிய வுடையரா யடிமைக் கூட்டங்கள் சூழ்ந்துநின்று பசரிப்ப மகாபோகங்களை யநுபவித்தா ரெனினு மவற்றோடே தாக்கற்றுநின்று சுத்தநிலைபெற்றாரு மண்டவ ரிப்பிரபஞ்சிகள்போலும் போகமயமாயழுந்துவரோ வழுந்தா ரஃ தெங்ஙனமெனின்.

சுடர்போற்பொய்ப்போக மெய்ப்பெருக்காய்ச் - சாகப்போ வார்கடன்றீர்த்தல் - எ - து - எண்ணெய்வார்க்குந் தோறுந் தன்னிட த்தில் வாங்கிக்கொண்டு தான் மிகவும்பிரகாசிக்குந் தீபம்போற் பொ ய்ப்போகம் வருந்தோறு மதனைத் தற்போதத்தாற்பற்றி யநுபவியா தருட்கண்ணாற்பார்த்துத் தாமற் றநுபவித்தலினது மெய்ப்பொருட் காய்ப் பொய்ப்போகத்தான் மெய்ப்பொருண் மிகவும் பிரகாசமா ய்த்தோன்றுமாகலி னிங்ஙனமென் றறிதியாயின் மெய்ப்பொருளையு ணர்ந்தோர்பொய்ப்போகத்தோடுங்கூடியிருந்தநுவிப்பதென்னையெ னி னக்கினியில்வீழ்ந்திறக்கப்போவார் தமக்குரியராயுள்ளார் கொடு க்கும்போகமாகிய கடனைவாங்கி யதனுள் விருப்பற்றுண்டு தீர்த்துக் கோடல்போ லவரு மித்தேகத்தை யெப்போ தொழிவோமென்னுங் கருத்தரா யிதற்கமைத்த பிராரத்தக்கடனை விருப்பற்றநுபவித்துத் தீ ர்த்துக்கொள்வாராகலி னவரதனோடுங்கூடியிருத்த லிம்முறைமையெ ன்றறிதி-எ-று.

போகம்வருந்தோறுந் தமக்கென்று தற்போதத்தாற்பற்றி யநு பவியா தப்போதமற் றருள்வடிவாயிருந் தப்போகத்தைத் தாமநுப விப்பதுபோற் சிவத்திற்காக்குவது மெய்ப்பத்தி யிப்பத்தியினு லச் சிவமாவது போதஞ்சிறிதெழினு மதனைவிழுங்கிக்கொண்டு நின்று பி ரகாசிக்குமாகலிற் "பொய்ப்போகமெய்ப்பெருக்கா" யென்றார் சா கப்போவார் போகத்தைவிரும்பாதிருக்கவுஞ் சுற்றத்தாராயுள்ளா ரவ னைவேண்டிக் கொடுவந்துபுசிப்பித்தல்போல் ஞானிகள்போகத்தை விரும்பாதிருக்கவும் பிராரத்தம் வலியக்கொடுவந்து புசிப்பித்தலி னி ங்ஙனமுவமைகூறினர். (௩௰)

இத்திருவெண்பாவாற் பிராரத்தத்தால்வந்த பெருவாழ்வின்கட் பற்றின்றி யவ்வாழ்வநுபவிப்பைப் போதத்தாற்றாமநுபவியாது சிவ த்துக்கு அர்ப்பிதஞ்செய்கின்றோருஞ்ஞானிகளேயென்றறிவித்தவாறு காண்க.



ஞானிகளனுபவிப்பதும் பிராரத்த மற்றையரநுபவிப்பதும்பி ராரத்தமாயினவர்க்கு மிவர்க்கும் பேதமெல்லையெனின் மேற்கூறு கின்றார்.

பெருநோவுக்கேயென்னப் பெற்றவுடற்போக
நரகேழூட்டுமிது நாஞ்செத் - துருவத்துத்
தாமல்லாற்போகிப்ப தல்லவதுவன்பர்பதந்
காவலாட்கைத்தளைபோற் காண்.

பெருநோவுக்கேயென்னப் பெற்றவுடற்போக- நரகேழூட் டுமிதுநாஞ்செத் - துருவத்துத் - தாமல்லாற்போகிப்பதல்ல - எ-று- உடலாகிய பெருநோவுக்கென்ன கருதிப்போகத்தை யநுபவிப்பது தானே பிறவியாகிய நரகமேழினுங் கொடுசென்றவற்றி லுண்டாகிய துன்பங்களைப் பொசிப்பிக்கு மிஃதெங்ஙனமெனி னிவரநுபவிக்குமி ப்பிராரத்தந் தற்போதமாண்டித்தேகத்துத் தாமிருப்பதில்லாமலரு ள்வடிவாயிருந் தநுபவிப்பதல்லவாகலின்.

அதுவன்பர்பதம் - காவலாட்கைத்தளைபோற்காண்-எ-று- திருவ டியைப்பிரியாதுநின்றவம்மெய்யன்பர் தம்பிராரத்தந் தற்போதமா ண்டு தேகந்தாமல்லாது திருவருடாமாயிருந்தநுபவிப்பதாகலினப்பி ராரத்தந் தேகமிருக்குமளவுங் காவலாட்போலுங் கைத்தளைபோலுமி ருந்து தேகநீங்கும்போதத்தேகேடுந் தானுநீங்குமாகலி னவர்க்கு மறு பிறவி யுளவாகாவென்றறி-எ-று.

தேகந்தானுயும் போகந்தனதாயும் கருதிக்கொண்டு தற்போதத் தா லப்போகத்தைப்பற்றி யநுபவித்தலினிதாகிதங்களு மிவ்விதாகி தங்களா லிருவினைகளு மிவ்விருவினைகளான் மறுபிறவியு மிங்ஙனந் தொன்றுதொட்டுவருமாகலி "னரகேழூட்டு,, மென்றார்.

போதமிறந்திருத்தலானும் பூரணவடிவாயிருத்தலானும் வினை சார்தற்கிடமின்மையா னவர்க்குமறுபிறவி யின்றென்பதுகாண்க.

உடம்புமூப்புப்பிணிக்கிடமாகலி னதனைப்பெருநோவென்றார் "நாஞ்செத்துருவத்துத் தாமல்லாற்போகிப்பதல்ல,, வென்றவர்க்கு ண்மையாய குணங்களே யிவர்க்கின்மையென் றெடுத்துக்கூறினமை யா லவர்க்கவை வருவிக்கப்பட்டது.

இதுவென்ப திவர்பிராரத்தமெனின்றது, 'அதுவென்பதவர்பிரா ரத்தமெனின்றது, பதந்திருவடி-பதத்தினையுடைய வன்பரெனப்பொ ருள்கொள்க.

போகமாய்வந்து சூழ்ந்துகோடலானும் பரமுத்தனுக வொட் டாது தேகத்தி லவனைத்தடுத்துநிற்றலானும் பிராரத்தத்தைக் காவ

லாளென்றும் கைத்தளேயென்றுங் கூறினர். (௯௧)

இத்திருவெண்பாவான் ஞானிகள் தேகபோகங்களிற் பற்றிலராக வி னவர் பிராரத்தமத்தேகத்தோடு கழியுமென்று மஞ்ஞானிகள் பற் றுளராகவி,னவர் பிராரத்த மிதாகிதங்கள் வருவித்துப் பிறப்புக்கேது வாருமென்று மறிவித்தவாறுகாண்க.



ஒருவர்செய்தவினை மற்றொருவரைச் சாராமையா னவர்செய்த வினை யவரைச்சாராதிருப்ப தெங்ஙனமெனில் மேற்கூறுகின்றார்..

சுகிக்கில்லை துக்கஞ் சுகோடுசொர்க்க
மகத்துக்குஞ்சொர்க்க நரகாய்ந்தார் - சுகிப்பதுவு
மத்துவிதாநந்தர்க் காகாரமற்றது
பத்திசெய்வார்க் கேற்கும்பயன்.

சுகிக்கில்லை துக்கஞ் சுகோடுசொர்க்க - மகத்துக்குஞ்சொர்க்கநர காய்ந்தார்- சுகிப்பதுவு - மத்துவிதாநந்தர்க் காகாரமற்றது - எ - து- பரமசுகமே வடிவாயிருப்போர்க்குத் துக்கமென்பதில்லை துக்கமின் மையாற் சுகமுமின்றிச்சுத்தமாகிய விடமென்றுங்கருத்துச் சிறிதெ ழினு மதுவேநரகமாய்த்தோற்றலி னசுத்தமாயுள்ள சுகோடேயவர் க்குச் சுவர்க்கம௱ந்தன்றித் தாமாநந்த வடிவாயிருத்தலே சுவர்க்கமெ னவுந் தேகந்தாமென்று சிறிதெழுங்கருத்தே நரகமெனவும் புறத்திற் குச் சொர்க்கநரகாய்ந்தாற்போ லகத்திற்குஞ் சொர்க்கநரகாய்ந்தா ர௱ந்தன்றி யவரநுபவிப்பது மத்துவிநாநந்தமேயா மிங்ஙனமிருந்த வத்துவிதாநந்தர்க் கவ்வாகாமியவினை புசிப்பற்றுநின்ற திங்ஙன மவர் க்குப்புசிப்பற்றுநின்ற லவ்வினைதா னெவ்விடத்துச் செல்லுமெனின்

பத்திசெய்வார்க்கேற்கும்பயன் - எ - து - அவர்மே லன்பாயித ஞ்செய்வோர்க்கும் வெறுப்பாய கிதஞ்செய்வோர்க்கு மவ்விருவினை ப்பயன்களுஞ் சாருமென்றறிக-எ-று.

ஆநந்தமே வடிவாயிருத்தலிற் றனுவில்லை யவ்வடிவிற் றற்போ தமின்மையாற் கரணமில்லை சுகோடே சுவர்க்கமாய்க்காண்டலாற் பு வனமில்லை யவ்வாநந்தத்தையே யநுபவித்தலாற் போகமில்லை யிங்ங னந் தநுகரணபுவனபோகங்களேயெல்லாங் கடந்துநின்றோரை யவ்வி னை சாரமாட்டாமையி "னாகாரமற்றது,, வென்றார். தேகத்தையுடை யவனைத் தேகியென்றாற்போலச் சுகவடிவாயிருந்தோரைச் 'சுகி, யெ ன்றார். (௯௨)

இத்திருவெண்பாவான் ஞானிகள் சிவாநந்தாநுபவராகவி னவ ரைவினைகள் சாராவென்றும் அவர்க்கு இதாகிதங்களைச் செய்வோரிட

த்தே யவைசாருமென்று மறிவித்தவாறுகாண்க.



இங்ஙனமிருந்த ஞானியடைந்த பேரின்பத்திற் குவமையாதெனின் மேற்கூறுகின்றார்.

அரிபிரமரிந்திரர்க ளாதிகளார்தானச்
சரிவிரத்தனின்பத்தைச் சாற்றிற் - பரமசிவன்
றானேசரிமீட்டுச் சாற்றுகிற்றான்றான்சரிவே
றானாவேத மறியா.

அரிபிரமரிந்திரர்க ளாதிகளார்தானச் - சரிவிரத்தனின்பத்தைச் சாற்றில் - எ - து - அரிபிரம ரிந்திரர்முதலிய தேவர்களதின்பமெல்லா மொன்றாகக்கூட்டி யவ்விரத்த னின்பத்திற்குவமை சொல்லுமிடத்துச்சரி.

பரமசிவன் - றானேசரிமீட்டுச் சாற்றுகிற்றான்றான்சரிவே - றானாவேதமறியா - எ - து - அஃதன்றிப்பரமசிவனது பரிபூரணானந்தந் தானேசரி யின்னுஞ் சொல்லுமிடத்துத் தன்னின்பத்திற்குத் தன்னின்பமேசரி யிங்ஙன மெய்ப்பொருள்கட்கும் வேறாய்நின்றடைந்தாரின்பத்தை வேதங்களு மிவ்வாறென் றளவிட்டறியமாட்டாது-எ-று.

பரமசிவனது பரிபூரணானந்தமெல்லாந் தாமாகிநின் றநுபவித்தலிற் பரமசிவன்றானே சரியென்றுந் தன்னின்பம்போன் மற்றியாவர்க்கு மின்மையாற்றான்றான்சரியென்று மவ்வின்பமுந் தாமாகாததனையநுபவிப்போராயிருத்தலின் "வேறானா,, வென்றுங்கூறினார்.

இன்பத்திற்குவமை கூறினமையான் அவர்சரியென்றதை யவரின்பஞ் சரியென்றுகூறப்பட்ட தஃதாகுபெயர்.

இத்திருவெண்பாவான் ஞானிகளதின்பப்பெருமை கூறியவாறு காண்க.



சாலோகமாதிதருஞ் சைவசித்தாந்தி
பாலேகம்பார்க்கப் பணியுமவன் - மேலே
யுருகித்திருவுளத்துக் குற்றபணிசெய்வார்,
பெருமைக்கேதுண்டோ பிற.

சாலோகமாதிதருஞ் சைவசித்தாந்தி - பாலேகம்பார்க்கப் பணியுமவன் - மேலே - எ - து - தன்னைவந்தடைந்தோரது பத்திபணிவிடைக்கேற்ப வவர்க்குச் சாலோக சாமீப சாரூபமாகிய பதமுத்திகளையுங்கொடுக்குஞ் சித்தாந்தஞானிபா லேகமாயிருந்த மெய்ப்பொ

ருளை யறியும்பொருட்டுவந்து மனமொழி மெய்களான்வணங்கு மதி பக்குவன்மேல்.

உருகித்திருவுளத்துக் குற்றபணிசெய்வார் - பெருமைக்கேதுண் டோபிற - எ - து - பேரன்புவைத் துள்ளுருகி யவனதுதிருவுளத்திற் கேற்றபணிவிடைகளைச் செய்வோரதுபெருமைக்கு மேலாயபெரு மையிறிதியாதுண்டு-எ-று.

வந்தடைந்தோர் பக்குவாபக்குவங்களையறிந்து சரிதாதிகளைவ ருவித்துச் சாலோகமாதி பதமுத்திகளைக்கொடுப்பது மதிதீவிரபக்கு வனுய்வந்தோனுக்குத் தற்போதத்தைக்கெடுத்து நிரதிசயவின்பத்தை க்கொடுப்பது மற்றச்சமயங்களிலின்மையாற் "சாலோகமாதிதருங் சைவசித்தாந்தி பாலேகம்பார்க்கப்படியுமவ,, னென்றார்.

இங்ஙனமிருந்த சித்தாந்தியைப்பணியு மவனைப்பணிவோர்க்கு மம்முத்தியின்பமுண்டாமாகலி "னுற்றப்பணிசெய்வோர் பெருமைக் கேதுண்டோபிற,, வென்றார். (கூஅ)



காலமுடன்றே சந்திக்குக்கருமமுடற்
கோலஞ்சமயங் குறிப்பறிதல் - சீலந்
தலையோடுபோனவுயிர் தான்போலத்தன்றே
டிலையாஞ்சிவனே யிவன்.

காலமுடன்றே சந்திக்குக்கருமமுடற் -கோலஞ்சமயங்குறிப்ப றிதல் -சீலம் - எ - து - இன்னகாலத்திலின்னவிரதஞ் செய்வதென்னுங் காலமுங் காசிமுதலியன நன்று மற்றையன தீதென்னுந்தேசமு மி ன்னதிக்குநன்று இன்னதிக்குத் தீதென் னுந்திக்கு மின்னகருமஞ்செய் வதின்னகருமந் தவிர்வதென்னுங்கருமமு முடலிற்சமைந்த வேடங் களு மவ்வேடங்கட்குரிய சமயங்களு மச்சமயங்கட்குரியகடவுளரை யிங்ஙன மிருப்பரெனக் குறிப்போடுதியானிப்பதாய குறிப்பறிதலு மின்னசாதிக் கின்னதாசாரமென்று செய்யுஞ்சீலமுமாகிய விவையெ ல்லாம்.

தலையோடுபோனவுயிர் தான்போலத்தன்றே - டிலையாஞ்சிவ னே யிவன் - எ - து - தலைபோனவிடத் ததனேடும்போன வுயிர்போ லத் தற்போதமிறந்தவிடத்ததனோடு நீங்குமாகலின் மவுனநந்தமாயி ருந்த சிவனே யிவனும்-எ-று.

கைகான்முதலிய வுறுப்புக்கள்போனவிடத்து மிருந்தவுயிர்தலை யோடும்போனதுபோ லப்போதஞ் சிறிதிறந்தவிடத்து மிருந்தகிரி யைத்தொழில்களது முற்றுமிறந்தவிடத் ததனோடுநீங்குமாகலி னங்ங

னாருவலமைகூறினா ரவற்றைச்செய்தவ விறந்தமையா லிவனாற்செய்யப்படுமவையு மிலவென்பதூஉங்காண்க.

மவுனாநந்தமாயுள்ள சிவனையடைந்தவன் மவுனாநந்தியாகலிற் "சிவனேயிவ" னென்றார். (௫௮)



இங்ஙன மவர்க்கு விதிவிருத்தங்க ளில்லையென்று நீர்கூறிய தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

சாவேபெருநோன்பாய்ச் சந்தற்றசத்தியர்க்குத்
தேவாரங்காலந் தியானமறம் - பாவம்
விதிவிருத்தம்பேசுகைக்கு வேதாகமங்க
ளதிசயிக்குமேலுரைப்பாரார்.

சாவேபெருநோன்பாய்ச் சந்தற்றசத்தியர்க்குத் - தேவாரங்காலந் தியானமறம் - பாவம் - விதிவிருத்தம்பேசுகைக்கு - எ-து - தற்போதமிறப்பதே பெருந்தெய்வமாய்க்கொண் டதனைக்கெடுத்துச் சிவத்தோடிரண்டறக்கலந்த சத்தியஞானிகட்குத் தேவாரமுதலிய தோத்திரங்களையோதலுங் காலாகாலங்களறிந்து சிவாலயங்களிற்சென்றுபணிதலு மோரோர்பாவனையைக்கருதித் தியானித்தலுஞ் சிவபூசையாதிபுண்ணியங்களைச் செய்தலு மிவையன்றிப் பாவங்களைச்செய்தலுமாகிய விவ்விதிவிருத்தங்களுளவென்று சொல்வதற்கு.

வேதாகமங்க - ளதிசயிக்கு மேலுரைப்பாரார் - எ - து - வேதங்களு மாகமங்களு மதிசயிக்குமெனி னவற்றிற்குமேன் மற்றியாவர் சொல்வார்-எ-று.

போதஞ்சிறிதெழினு மதனைக்கெடுத்துச் சிவத்தோடுங்கலந்திருப்பதே யவர்க்குச்சகலநோன்புகளுமாகலிற் "சாவேபெருநோன்பாய்ச் சந்தற்றசத்திய" ரென்றார்.

அங்ஙனஞ்செய்வதே நோன்பாய்க்கொண்டோர்க் கதற்குமேன் மற்றநோன்பொன்று மின்மையா னவர்க்குவிதிவிருத்த மிலவாயின "வேதாகமங்க ளதிசயிக்கு" மென்றதனா னவற்றான்விதிவிருத்த மறிவோர்க்கு வேறுசொல்வதற் கிடமின்மையான் "மேலுரைப்பாரா" ரென்றார்.

விதியாவது - வேதாகமங்கள், சிவபூசாதிகளைச் செய்கவென்றுகூறுவது-விருத்தமாவது-மதுபானாதிகளை விடுக்கவென்றுகூறுவது.

இவையிரண்டு திருவெண்பாவானும் ஞானிகட்கு விதிவிருத்தங்களிலவென் றறிவித்தவாறுகாண்க. (௫௯)



மோனிகளைப்பார்த்திமையா மோகமும்வெண்டிங்கள்
மேனியழகெழுதா மேற்பத்தி - யான
பதுமாதனன்கண்ணும் பானுவும்போற்றுறு
யெதிராகுஞ்சொற் பனத்திலும்.

மோனிகளைப்பார்த்திமையா மோகமும்வெண்டிங்கள் - மேனி யழகெழுதா - எ - து - அந்தஞானிக டம்மைப்போற் சுகாதீதமுத்தி யைப்பெறும்பொருட்டுப் புறத்துநின்ற போதத்தையுள்ளடக்கி யிதனைக்கெடுப்பதே விரதமாய்க்கொண்ட மவுனிகளை யிமையாநாட்டத் தோடும்பார்த் திவர்மேல்வைத்தமோகமு முத்தூளனத்தால் வெண்டிங்கள்போலும் விளங்காநின்ற வழகெழுதக்கூடாத வவரதுதிருமேனியும்.

மேற்பத்தி - யான - பதுமாதனன்கண்ணும் பானுவும்போற்று று - யெதிராகுஞ்சொற்பனத்திலும் - எ - து - பிரமனதுநான்முகங்களினு மேன்மைபெறு பந்திபோலவிளங்குவதான வெண்கண்களு மக்கண்கட் கெதிர்தோன்றும் பானுவும்போ லியால்கருதாதிருப்பினு மவைநாமாய்வந் தெனதுளக்கண்ணிற்கு முகக்கண்ணிக்கு மெதிரேவிளங்குவதாஞ் சொற்பனத்திலுஞ் சாக்கிரத்திலும் - எ - று.

சுகாதீதமுத்தியை யடைந்தஞானிகட்கு ஞானசாதகனாக்கண்டாற் பாசங்களையெல்லாங்கடந் திவ்வளவுவந்தானெனு றவர்மேற் சந்தோடமும் பிறக்குமாகலின் "மோனிகளைப்பார்த் திமையாமோகமும்" மென்றார்.

யான்பெற்றபேறுபெறுக வைவையகமென்பதுமது - பதுமாதன னிமையாநாட்டத்தையு மதற்கெதிர்தோன்றும் பானுவையுமுவமைகூறினமையா னவர்மேல்வைத்த மோகத்தையு மவரதுதிருமேனியையுந் தமதுளமறவா தென்பதாயிற்று.

எனதெறும்பெய ரொஞ்சிநின்றது - சொற்பனத்திலுமென்றவும்மையாற் சாக்கிரத்துமென்று வருவிக்கப்பட்டது. (௬௭)

இத்திருவெண்பாவா லெமக்கு மிக்வனமிருக்குமென்று ஞானிக ளருமை யறிவித்தவாறுகாண்க.



உருகுபரமசுக வுல்லாசநோக்குந்
திருமுகமும்புன்முறுவற் றேசுந் - திருநீறுந்
தற்பாவமாண்ட சரீரத்திலோர்சாத்து
முற்றேவெறும னழகாம்.

உருகுபரமசுக வுல்லாசநோக்குந் - திருமுகமும்புன்முறுவற்றேசுந் - திருநீறும் - எ - து - உள்ளமுருகப் பண்ணுநின்ற பரமசுகவுல்

லாசத்தோடுங்கூடிய திருநோக்கமு மவ்வின்பக்கவிப்பாற் றெய்வத் தாமரை மலர்ந்ததுபோல விளங்காநின்ற திருமுகமு மவ்வின்பம்பொ ங்கி மேன்மேலெழ லாற்றோன்று மந்தகாசப்பிரகாசமுந் திருமேனி முழுதும் பூசுவதாகிய திருவெண்ணீற்றழகும்.

தற்பாவமாண்ட சரீரத்திலோர்சாத்து- மற்றேவெறுமனழகாம் எ - து - பஞ்சபூதகுணங்களாகிய தற்பாவமிறந்துநின்ற திருமேனியி ற்கூடியுங் கூடாதிருந்த ஞானிகளதுதிருமேனியிற் றோற்றுமவை யன னைத்தோற்றுவனவன்றி யவற்றுனவர்க்கியாது சிறப்புமின் றலைவா ளாத்தோற்று மழகுகளாம்-எ-று.

ஆநந்தந்தோன்றும் போதுள்ள நெக்குருகத் தோன்றுமாகலி ன் "ஞுருருபரமசுக" மென்றுஞ் சடசித்துக்களாயுள்ள பொருள்களெல் லா மவர்க்குச் சுகசொரூபமாய்த் தோற்றுமாகலி னவர்நோக்கைப் "பரமசுகவுல்லாசநோக்" கென்றுங்கூறினார்.

வினையேன் மனத்துத்தேனையும் பாலையுங்கன்னலையு மமுதத் தையுமொத் தூனையுமெலும்பினையு முருக்காநின்ற வொண்மையனே யென்பதுமது.

பூதாளுந் தலைசுமப்பவென்றதும்போற் றோன்றுமென்பதைச்சா த்துமென் றருமைதோன்றக்கூறினார்.

உல்லாசநோக்குமுதலியன வவர்கருத்தாய்த்தோற்று மியல்பா யத்தோற்றலி "னற்றேவெறுமனழகா" மென்றார். (வெறுமை) யென் பது பாரப்பார்சொல.

இத்திருவெண்பாவானே ஞானிகளைப்புகழ்ந்து கூறியவாறுகாண்க



வாடன்மணம்போல் வருந்தாவயிராக்யத்
தோடுமெலிந்த வுடம்புடனே - கூடார்
திருவிடயாநந்தசுக நீங்காதநோக்குந்
திருமுகமுமென்னை விடாது.

வாடன்மணம்போல்வருந்தாவயிராக்யத் - தோடுமெலிந்தவுடம் புடனே - கூடார் - எ - து - வாடற்பூவின்மணஞ் சிறிதுதோன்றுதல் போற்சிறிதுதோன்றும் பிராரத்தவாசனையோடும் போதத்தான் வரு ந்திச்செய்யாத பாசவயிராக்கியத்தோடுந் தளராநின்ற திருமேனியுட னேகூடியிருந்துங் கூடாராகியஞானிகளது.

திருவிடயாநந்தசுக நீங்காதநோக்குந் - திருமுகமுமென்னை வி டாது-எ-து-திருவிடயமாய்த்தோற்று மாநந்தமாகிய சுகமுட்போ

நிபுறத்துநீங்காத வவ்வாநந்தத் திருநோக்குந்திருமுகமு மெனதுள்ளத்தை யெப்போதும் விட்டுநீங்காது-எ-று.

“வாடன்மணம்போ„ லென்றவுவமையாற் சிறிதுபிராரத்தவாசனையோடுமென்பது வருவிக்கப்பட்டது.

வருந்திச்செய்யும்போதமுடையாரது வயிராக்கியம்போலன்றி யிவர்க்கியல்பாய்த் தோற்றலின்வருந்தா “வயிராக்கிய„ மென்றார்.

விடயாநந்தம்போ லெதிரீடாய்த்தோற்றுதெதிரீடற்றவிடத்திற் றோற்றலி “னிருவிடயாநந்த„ மென்றார். (௨௬)

இத்திருவெண்பாவா னவரதருமை கூறியவாறுகாண்க.



ஆயினித்த ஞானிகட்குப்பெய ரியாதெனின் மேற்கூறுகின்றார்.

தத்துவத்தின்போர்வை சரிந்ததிகம்பரிப்பே
ரத்துவிதியேகாந்தி யானந்தி - சுத்தன்
றுரியனவதூதன் றுறவிசிவயோகி
நிருவாணியென் விரத்தனென்.

தத்துவத்தின்போர்வை சரிந்ததிகம்பரிப்பேர் - எ - து - முப்பத்தாறுதத்துவங்களாகிய போர்வைசரிந்தவதனாற் றிகம்பரியாயிருந்த ஞானியினது பெயர்சொல்லுமிடத்து.

அத்துவிதியேகாந்தியானந்தி - சுத்தன் - றுரியனவதூதன்றுறவி சிவயோகி - நிருவாணியென் விரத்தனென் - எ - து - சிவத்தோடத்து விதமாயிருத்தலி னத்துவிதியென்று மங்ஙன மத்துவிதமாயிருப்பினுந் தானச்சிவமாகாமையா னேகாந்தியென்றும் பூரணாநந்தமெல்லாந் தானுய்நின் றநுபவித்தலினாநந்தியென்று மலத்திரயங்களை நீங்கிநிற்றலாற் சுத்தனென்று மேலாயபொருளை யடைந்தோனாகலிற் றுரியனென்றும் வர்ணாச்சிரமங்களைக் கடந்துநிற்றலா னவதூதனென்றுந் தேகாதிப்பிரபஞ்சங்களெல்லாந் துறந்துநிற்றலாற் றுறவியென்று மற்றொன்றோடுங் கூட்டரவின்றிச் சிவத்தோடுங் கூட்டரவாயிருத்தலிற் சிவயோகியென்று மத்துவாவாறையுங் கடந்துநிற்றலானிருவாணியென்று மச்சிவத்தோடத்துவிதமாக விருக்கின்றேனென்னும் வாசனையு மிறந்துபோயிருத்தலின் விரத்தனென்றும் நீசொல்லுதி-எ-று.

உடம்பைப்போர்த்துநின்று நீங்கியபோர்வைபோ லுயிரைப் போர்த்துநின்று நீங்கினமையாற் “றத்துவத்தின் போர்வைசரிந்த„ வென்றார்.

அஃதன்றிப்பூதகஞ்சுகம் - பிரகிருதிகஞ்சுகம் - கலாதிகஞ்சுகம் - வயிந்துவகஞ்சுகம் - சத்திகஞ்சுகம் - என்னு மிப்பஞ்சகஞ்சுக்கங்களையு நீக்கிநின்றானெனினுமாம்.

அத்துவிதியென்றதாதி யிச்குணங்களெல்லா முடையனாகலி னிப்பெயர்களெல்லா மவற்குரித்தாயின. (௬௰)



இங்ஙன மகத்துளாசையற்றுத் துறந்தோரையு மகத்துளாசையிருக்கத்துறந்தோரையுமெங்ஙனமறியலாமெனின்மேற்கூறுகின்றார்.

அடங்கத்துறந்தார்க்கு மாசையறப்பாவித்
தொடும்பக்குவந்தெரியா தோகோ - மடந்தேடிப்
பிச்சையாய்மூலையிற் பெண்பேச்சாய்வரினடைக்கைக்
கிச்சையாய்க்கைகெதிர் நீட்டும்.

அடங்கத்துறந்தார்க்கு மாசையறப்பாவித் - தொடும்பக்குவந்தெரியா தோகோ - எ - து - அகத்தாசையிருக்கப் புறத்தாசையறப்பாவித் தடங்கத்துறந்தாரையு மியல்பா யகத்தாசையற்றடங்கத்துறந்தாரையு மவரோடுநிகழும் பக்குவாபக்குவங்களினாலே யோகோதெரியாதோ வஃதெங்ஙனமெனின்.

மடந்தேடிப் - பிச்சையாய்மூலையிற் பெண்பேச்சாய்வரினடைக்கைக் - கிச்சையாய்க்கைக்கெதிர்நீட்டும்- எ - து - அவர்நற்பிச்சையிடு மடந்தேடிச்சென்று பிச்சையேற்பதாய்ப் புதியமருகப்பெண்மூலைக்கண்ணிருந்து மெல்லெனப்பேசும் பேச்சுப்போற் றமக்கெனவோ ரொடுக்கம்பற்றி யதனுளிருந்து மாரிசத்தோடு மெல்லெனப்பேசுவதா யிவர்பெரியரெனக்கருதிப் பிறரன்னவஸ்திரமுதலிய நடைக்கைகொடுவரி னந்நடைக்கைக்கிச்சையா யவர்கொடுக்குங்கைக்குத் தமதுகையை யெதிர்நீட்டிவாங்குவ ரிவர்க்கெல்லா மனைதோறுஞ்செல்வதேயன்றி யோர்மடந்தேடிச்செல்வது மோரொடுக்கம்பற்றியிருந்து மாரிசமாய்ப்பேசுவதுந் தாமிருக்குமிடத்துப் பிற ரன்னாதிகளைக் கொடுவரி னவற்றையிச்சித்து வாங்குவதுமில்லையாகலி னவரதுபக்குவமு மிவரதுபக்குவமுந் தாமேதெரியு நீ யறிதி-எ-று.

"ஆசையறப்பாவித் தடங்கத்துறந்தார்க்கு,, மென்றமையா னங்ஙனம்பாவியா தியல்பாய்த்துறந்தாரை வருவிக்கப்பட்டது.

அடங்கத்துறத்தன் மனைவிமுதலிய பற்றுக்களையெல்லா மொருங்கேவிடுத்தல் அடங்கத்துறந்தார்க்குமென்னு நான்காம்வேற்றுமையை யிரண்டாம்வேற்றுமையாகக்கொள்க.

“தெரியாதோ,, வென்பது - தெரியாதென் றோகாரந்தொக்கிநின்றது மடந்தேடிப்பிச்சையாய்க் கைக்கெதிர்நீட்டுமென்றவாறு நடைகூறினமையா லதற்கெதிர்மறையாயிவரது நடை வருவிக்கப்பட்டது.

ஒருவருக்குச்செல்வம்வரி னதனை நடைக்கையென்பதுபோற்றிரிவந் தன்றுதிகளைக்கொம்ப்பதனை நடைக்கையென்றார். (௬௪)



ஆயினகப்பற்றற்றோர் துறட்டமேயன்றி யகப்பற்றுடையார் துறக்கலாதோவெனின் மேற்கூறுகின்றார்.

களையடுக்கவந்தாற் றிரையலைக்குங்கப்பல்
பொருளடுத்தாற்றோன்றும் பொய்ப்போதம் - விருதினவன்
வெற்றிக்குதிரைத்தோன்போல் வேண்டும்விட்டதுபின்
பற்றுமதிற்சிகமெனநிற்பாய்.

களையடுக்கவந்தாற் றிரையலைக்குங்கப்பல் - பொருளடுத்தாற்றோன்றும் பொய்ப்போதம் - எ - று - அலையலைக்குங்கரைகடந்துசென்று கடனடுநிற்றகப்பன்மீட்டுமக்கரையடுக்கவந்தா லக்கப்பலையலையலைக்குமாறுபோல விடயங்களைக்கடந்துசென்று துறவின்கண்ணின்ற நீ மீட்டு மவ்விடயங்களையடுத்தாற் பொய்யாகிய வவ்விடயபோதந்தோன்றி யறிவையலைக்குமாகலின்.

விருதினவன் - வெற்றிக்குதி குதித்தோன்போல் வேண்டும்விட்டதுபின் - பற்றுமதிற்சிக்கெனநிற்பாய் - எ - து - தன்பகைவனைச் சயங்கொண்டாலன்றி விடேனென்னும் விருதினோன்போலு மொருவரோடுவாதுகூறி வெற்றிக்குத்துரவு தாவினோன்போலு நீயும் பிடித்த துறவை முற்றுஞ்சாதிக்கவேண்டு மதனைவிடாது சாதிக்கவேண்டின் விடயங்களையடாமே யடுத்தாலும் முன்னர் நீவிட்ட பற்றுக்களெல்லாமிப்போதும்வந்துபற்று மிவைமுன்னேபற்றுதலும்படி யத்துறவின்கண் ணுறுதிப்படநிற்றி-எ-று.

களையடாது கடலினடு நின்றகப்பலை யலையலையாததுபோலவிடயங்களையடாது துறவின்கண்ணின்றோரை விடயபோதமலையாதென்ப திவ்வுவமைக் குறிப்பாற்காண்க.

விருதினோனுக் கெவ்விதத்தானுந் தன்பகைவனைச் சயங்கொள்வதே விருதுகூடாதாயினு மவனோடும் பொருதிறத்தலே விருதுபோற் றுறவினோனுக்குத் தன்பகையென்னு மாயைப்படைகளாகிய முப்பத்தாறையுங்கடந்து வீடடைதலே துறவங்கனங்கடக்கக்கூடாதாயினு மதனைக்கடத்தற்கேதுவாய சத்தவாசனையோடு நின்றிறத்தலே துறவா

கலின் "விருநினவன்,, போலென்றும் வெற்றிக்குருபதழித்துரவு தா வத்தொடங்கினோ னருபத்தோராமடி தாவினுனெனின் னனுவெற்றி யற்றவறின் வெற்றியுமிழந்தக் குரவினும்வீழ்வ னதுபோல விடயங்களைத் துறக்கத்தொடங்கினோ னவ்விடயங்களையுந் துறந்து நற்போதத்தையுந் துறப்பதே துற வங்ஙனஞ்செய்யா தவ்விடயங்களைச்சாரினத்துறவினுன்வரும் பெருமையுமிழந்து பிறப்பினும்வீழ்வனாகலின் "வெற்றிக்குறிகுதித்தோன்போ,, லென்றுங்கூறினர்.

தத்துவத்தின் போரிவையென்றுந் திருவெண்பாமுதல் விவையமூன்றுந்திருவெண்பாவானு ஞானிகளதுபெயருந் தரமுந்துறந்தவைச்சாதியாதுமிட்டுஞ் சாரலாகாதென்பது மறிவித்தவாறுகாண்க. (௬௨)

அருளவத்தைத்தன்மை.

முற்றிற்று.

ஆகத் திருவெண்பா - ௨௬௧.

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

## வாதனைமாண்டார் தன்மை.

குடும்பத்தோடு கூடியிருந்து ஞானம்பெற்றக்குடும்பவாதனைமாண்டு நின்றார்தன்மைகூறினமையா லிவ்வதிகாரத்திற்கு வாதனைமாண்டார்தன்மையென்றுபெயராயிற்று துறவிகளாயிருந்து ஞானம் பெற்றோருமன்றிக் குடும்பிகளாயிருந்துஞானம்பெற்றோருமுளராகலினவ்வதிகாரத்தின் பின்னிவ்வதிகாரம்வைக்கப்பட்டது.

ஞானமில்லாவிடினும் வைராக்கியத்தால் வீட்டுநெறியடைய லாகாதோவெனின் மேற்கூறுகின்றார்.

ஞானமில்லாத வைராக்கிநன்றல்ல
ஈனவர்க்குநோயினர்க்குங் கள்ளர்க்கு - மானதுவெ

னெந்நிலைக்கேநின்றாலெ னெவ்விடயத்தேய்ந்தாலென்
றன்னிழப்பேயின்பாந் தலம்.

ஞானமில்லாதவைராக்கியநன்றல்ல - கானவர்க்குநோயினர்க்குங் கள்ளர்க்கு - மானதுவென்-எ-து-அக, துப்பரிபூரணஞானமில்லாதார் புறத்துச்செய்யும் வயிராக்கியநன்றல்லவாகு மஃதெங்ஙனமெனின் மலைக்கானிற்சஞ்சரிக்கும் வேடர்களுக்கும் விடாநோயினர்க்கும்பொருடிருடுங்கள்வர்க்கும் வயிராக்கியமுண்டாவதெல்லையாகலி னிவரதுவைராக்கியத்தோ டவரதுவைராக்கியமொக்கும்.

எந்நிலைக்கேநின்றாலெ னெவ்விடயத்தேய்ந்தாலென் - றன்னிழப்பேயின்பாந்தலம் - எ - து - அகத்துப்பரிபூரண ஞானமுடையாரா சுரிமைமுதலியன வுலகவியாபாரங்களி லியாது நிலையினிற்பினு மென்னை வனிதாதிவிடயங்களி லியாது விடயங்களோடுங்கூடியிருந்தாலு மெல்லை யந்நிலையு மவ்விடயங்களு மிவர்க்கிடமுமன் றின்பமுமன்று தற்போதவிழப்பே யிடமு மிப்போதவிழப்பிற் றோன்றுமின்பமே யின்பமுமாம்-எ-று.

தழையுடுத்தன் மூலபலங்களைப்புசித்த லிராப்பகற் கானிற்சரித்தல் - பனி மழை வெய்யில் காற்றுகளைப் பொறுத்தன்முதலியனகானவர் வைராக்கியம் வனிதாதிவிடய போகங்களைத் துறந்திருத்தல் விடாநோயினர் வைராக்கியம் பகைவர்க்கச்சமின்றித் தம்முடலுயிழந் திருளிற்சேறன்முதலியன கள்வர்வைராக்கியம் இவரது வைராக்கியங்களாற் போதவிழப்புமின்பமுமின்றாயினபோ லவரதுவைராக்கியத்தானும் போதவிழப்புமின்பமுமின்றாகலி னவரதுவைராக்கியத்தை யிவரதுவைராக்கியத்திற் குவமைகூறினார்.

அகத்துப்பரிபூரண ஞானமுடையார்க்கியாது நிலையினிற்பினு மியாது விடயங்களைப்புசிப்பினு மவற்றை யந்தப்பரிபூரணஞானத்தாற் பார்த்தழிக்கலி னவற்றாலுந் தாக்கற்று நிற்பது மிங்ஙனந் தாக்கற்று நிற்றலாற் போதவிழப்பு மிப்போதவிழப்பாற் பேரின்பமுமுண்டாமாகலி "னெந்நிலைக்கேநின்றாலெ னெவ்விடயத்தேய்ந்தாலென்றன்னிழப்பேயின்பாந்தல" மென்றார்.

அஃதன்றி விடயவின்பத்திற்கேதுவாய வுலகவியாபாரங்களைச் செய்வார்போ லிவரியாது நிலையினின்றொனினு மதனுட்டாக்கற்று நின்ற சொரூபவின்பத்திற்கேதுவாய தற்போதவிழப்பைச் செய்வா ரென்பது மவ்விடயவின்பங்களைத் தாமற்றநுபவித்தா லவற்றையநுபவிக்குந்தோறுந் தாமற்றவிடத்துண்டாம் பேரின்பமேலிடு மேய

ன்றி யவ்வின்ப மோர்பொருளா யவர்க்குத்தோற்று தென்பதூஉங் காண்க.

“தன்னிழப்பேயின்பா நந்தல்” மென்றமையா னந்நிலையு மவ்வி டயமு மிடமுமின்ப முமன்றென்பது வருவிக்கப்பட்டது.

‘வைராக்கியமென்பது, வைராக்கியென்று கடைகுறைந்துநின்றது(க)



ஞானம்பெறுவோர்க் கில்வாழ்க்கையைத் துறக்கவேண்டாவோ வெனின் மேற்கூறுகின்றார்.

எல்லாச்சமயங்களுந் துதிக்குமில்லறத்தி
னில்லாமனீத்தாரொன் னீத்தாலென் - புல்லறிவைத்
தீரத்தெளிந்துசிவத் தோடும்பற்றற்று
ராகிற்பிறப்பறுக்க லாம்.

எல்லாச்சமயங்களுந் துதிக்குமில்லறத்தி - னில்லாமனீத்தாரொன் னீத்தாலென் - எ - து - சமயங்களெல்லா மிது நன்று நன்றென்றுபுகழ்ந்துகூறுநின்றவில்வாழ்க்கையினில்லாம லிதனைத்துறந்தாரித்துறவிற்குத்தகுமென மற்றியாது துறந்தாலுமென்னை யித்துறவினாற் பிறப்பறுக்கக்கூடுமோ.

புல்லறிவைத் - தீரத்தெளிந்து சிவத்தோடும்பற்றற்று - ராகிற்பிறப்பறுக்கலாம் - எ - து - தற்போதங் கருவிப்போதங்களாய புல்லறிவை ஞானகுருவா னன்றாய்விசாரித்தறிந் ததனைக்கெடுத்துச் சிவத்தோடிரண்டறக்கலந்து அச்சிவத்தோடுங் கலந்திருக்கின்றோமென்னும்வாசனைப்பற்று மற்றொனி னவர்க்கே பிறப்பறுக்கலா மற்றையர்க்குக்கூடாது-எ-று.

சமயநூல்களெல்லா மில்லறத்தையே மேம்பாடாகக் கூறுதலி “னெல்லாச்சமயங்களுந் துதிக்குமில்லறத்தை” யென்றார். அறனெனப்பட்டதேயில்வாழ்க்கை யஃதும் பிறன்பழிப்ப தில்லாயினன்று. என்பதுமது - “நீத்தாரொன்னீத்தாலென்” னென்றதவ்வில்வாழ்க்கையைத் துறந்தபின்னரு முடலொடுத்த வூண்வெறுத்த லுடைதுறத்த லூரொடுக்கந் துறத்தன்முதலியன துறந்து நிற்றலெனக்கொள்க.

“புல்லறிவைத் தீரத்தெளிந்து சிவத்தோடும் பற்றற்றாராகிற்பிறப்பறுக்கலா” மென்றமையா லிங்ஙனந்தெளிந்து பற்றறுதியுடையா ரில்லறந் துறவறங்களினின்றாலும் ‘பிறப்பறுப்பா’ ரென்பது மிவை யில்லாரியாது துறந்தாராயினும் பிறப்பறாரென்பதூஉங்காண்க.

தற்போதங் கருவிப்போதமிரண்டும்புல்லறிவாகலிற் பொதுப்படப்புல்லறிவென்றார். தீரத்தெளிதலவற்றையுள்ளபடியறிந்துகெடுத்தல்



மனையிழக்கிலோமனது மாறாதுமாய்த்த
தனையிழக்கிலோசிவனைச் சார்ந்தங் - கநுபவிக்கைப்
போகாதுபோகிற் பூரணமாம்பூரணந்தா
னாகாதிருப்பதெவர்க்காம்.

மனையிழக்கிலோமனது மாறாதுமாய்த்த - தனையிழக்கிலோசிவனைச் சார்ந்தங் - கநுபவிக்கைப் போகாததுபோகிற் பூரணமாம்- எ - து. நீரிங்ஙனங்கூறியவாற்றா னில்வாழ்க்கையைத் துறப்பது துறவன்றோவெனி னவ்வில்வாழ்க்கையைத் துறக்கி னதன்கண்ணின் றநுபவித்த விடயவாதனை மனத்தின்கண் மாறாதெழுமாகலி னது துறவன்றாயின் மனத்தைமாய்ப்பது துறவோவெனின் மனத்தைமாய்த்த தற்போதமெழுமாகலி னது துறவன்றாயிற் றற்போதமிழப்பதோ துறவெனி னத்தற்போதமிழக்கிற் சிவத்தையடைந்தாண்டுச் சுகத்தையநுபவிக்கை போகாதாகலி னது துறவன்றாயிற் சுகப்பேறிழப்பது துறவோவெனி ன்சுகப்பேறுபோகிற் சிவபூரணந்தானு மப்போதிங்ஙனஞ் சிவபூரணந்தானேனென்னும் வாதனைதோன்றுமாகலி னது துறவன்றாயி னினித்துறவுதா னியாதெனின்.

பூரணந்தா - னாகாதிருப்பதெவர்க்காம் . எ - து. அச்சிவபூரணந்தானேனென்னும்வாதனையுமறந்துநிற்பது துறவுஇங்ஙனஞ்சிவபூரணந் தானாகாதிருப்பதாய துறவியாவர்க்குண்டாம்-எ-று.

மாய்த்தலென்பதற்குந் தனையிழத்தலென்பதற்குமிடையிற் றற்போத மெழுமென்பது வருவிக்கப்பட்டது.

இவைமூன்று திருவெண்பாவானு மெய்த்துறவாவ திதுவென்றறிவித்தவாறுகாண்க. (௩)



இல்வாழ்க்கையோடு கூடியிருந்து மித்துறவெய்தினோரைத் துறவிகளென்று சொல்லப்படுமோவெனின் மேற்கூறுகின்றார்.

மாயாபோகத்தரசாய் வாழ்ந்தாலுமாமணிபோற்
றோயாதவரே துறந்தோர்க - டோய்வாரேற்
சேறும்விதைபோலத் தீர்ந்தவிடத்தேதிரும்பும்
வேறொன்றதுவே வினை.

மாயாபோகத்தரசாய் வாழ்ந்தாலுமாமணிபோற் - றோயாதவரேதுறந்தோர்கள் - எ - து - மாயாபோகத்துக்கெல்லா மரசாகியப் போகங்களை யநுபவித்து வாழ்ந்தாராயினு மகத்தாகிய மாணிக்கமணியொன்றோடுந் தோயாதுநின்றதுபோ லவற்றோடுந் தோயாதுநின்றவரே துறந்தோரென்று சொல்லப்படுவார்.

தோய்வர்ரோற் - சேரும்விதைபோலத்தீர்ந்தவிடத்தேதிரும்பும் வேறொன்றதுவேவினை - எ-று - படிகமணிபோ லியாதொன்றோடாயினுந் தோய்வாரொனி னிலத்துச்சேரும் வித்துப்போல வுடலிறந்த காலைநின்று நீங்கிய பற்றின்கண்மீட்டுந் திரும்புமோர்மூலம் பற்றுடைமையே வினையென்பது மப்பற்றுடைமையேயாம்-எ-று.

மாமணி தன்னையடுத்த வன்னங்களைக்கவராது தனதுபிரகாசத்தையவற்றின்மேல் வீசிநின்றாற்போல யாதுவிடயங்கள் வந்தடுப்பினு மதிற்றோயாது தனது ஞானப்பிரகாசத்தை யவற்றின்மேல்வீசி நிற்றலான் “மாமணிபோற் றோயாதவ,, ரென்று முடம்பிற்குப்புறம்பாய பற்றுக்களையொழித்து அவ்வுடம்பாய்நின்றோரைத் துறந்தோர்க ளென்றுசொல்வதுபோல வுயிர்க்குப்புறம்பாய கருவிகண்மூப்பத்தாறையுமொழித்தறிவாய் ‘நின்றோரைத்துறந்தோர்க, ளென்றார்.

நிலத்திற்சேரும் வித்துப்போ லுடலிறந்தகாலை நின்றபற்றின்கண்மீட்டுமுயிர் வந்தடைந்துற்பத்தியாகலிற் “சேரும்விதைபோ,, லென்றுமுடனிங்குங் காலையுயிர்க்கெந்தவாதனையிருந்த தந்த்வாதனையோடும் பிறப்பின்கண்மீள்கலாற் “தீர்ந்தவிடத்தேதிரும்பும்வே,, றொன்றும்பற்றுள்ளவிடத்துவினையுமுளவாகலினதுவேவினையென்றுங்கூறினார்

அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாஅப்பிறப்பீனும்வித்து - எ - று - மதி·அதுவே யென்பதனைப் பற்றுடைமை யெனக்கொள்க. (௪)

இத்திருவெண்பாவா லெந்நிலையினின்றாலு மதனுட்பற்றறுதியுடையோர்க்கே வீடென் றறிவித்தவாறுகாண்க.



விடயங்களை யநுபவிப்பினு மவற்றுட்கூடாதொன்றி ரிதென்னையெனின் மேற்கூறுகின்றார்.

ஒருகுடைக்கீழ்வா முலகத்தோர்க்குறும்பூருண்டோ
வருணிழற்கீழ்வாழ் வாரறிவு - கருவிகளிற்
போனாலென்சேற்றுத்தாள் போலேபருந்துநிழற்
போனாற்போற்றோயாமற் போம்.

ஒருகுடைக்கீழ்வா முலகத்தோர்க்குறும்பூருண்டோ - வருணிழற்கீழ்வாழ்வாரறிவு - கருவிகளிற் -போனாலென்சேற்றுத் தாள்போலே எ - து - பூமியெல்லா மொருகுடைக்கீழாள்வோ னுலகத்துவாழ்வோர்க்குக் குறும்பூராற் றுன்பமுண்டாமோ அதுபோலெங்கும்பரிபூரணமாய்நின்ற திருவடிநிழற்கீ ழாநந்தச்செல்வத்தோடும் வாழ்வா ரறிவுவிடயங்களிற்சென்றாலுமென்னை அவ்வறிவிற் கவ்விடயங்களான்வரு

மயக்கமியாதுமின்று மாயைக்கீழ்வாழ்வா ரறிவுபோலவரறிவு சேற்றுக்குட்டேட்பேர் லழுந்துமோ.

பருந்துநிழற்-போனுற்போற்றேயாமற்போம் - எ - து - பருந்தினிழலொன்றிற் றேய்ந்துந்தோயாது போனுற்போ லவரறிவு அவ்விடயங்களிற்றேய்ந்துந் தோயாதுநீங்குமென்றறிதி-எ-று.

ஒருகுடைக்கீழ்வாழ்வார் மற்றியாதோருருக்குச்செல்லினு மவ்வரையனேதாணையாற் குறும்புசெய்வாரு மிவரான்வருந்துன்பமு மவர்க்கின்றுயதுபோற் றிருவடிக்கீழ்வாழ்வாரறிவு விடயங்களிற்சென்றாலு மத்திருவடிப் பரிபூரணமாய்நிற்றலி னிவ்விடயங்கண் மயக்குவதுந் தான்மயங்குவது மிவ்வறிவிற்கின்றுமாகலி னங்ஙனமுவமைகூறினார்.

பருந்தினிழற் றேய்ந்தவாறே நில்லாது விரைவினீங்குதல்போலவ்வறிவுவிடயங்களிற் றேய்ந்தவாறேமயங்காது விரைவினீங்கித் திருவடிக்கீழ்நிற்றலா னிங்ஙனமுவமைகூறினார்.

பருந்தினையவர்க்கு மதனிழலை யவரதறிவிற்கு முவமையாகக்கூறியவாறுகாண்க.

இத்திருவெண்பாவால் விடயங்களவரறிவை மயக்காதென்பதுமவ்விடயங்களி லவரறிவுதோயாதென்பது மறிவித்தவாறுகாண்க. (ரு)



நெய்யுண்டநாயென்ன நீரினிழலென்ன
மையுண்டகண்போன் மனைவாழ்வார் - துய்ய
விருளால்விலையேறு மாணிக்கமெல்லாப்
பொருள்போலவல்லாப் பொருள்.

நெய்யுண்டநாயென்ன நீரினிழலென்ன - மையுண்டகண்போன் மனைவாழ்வார் - எ - து - நெய்யையுண்டுமீட்டுங் கக்காநின்றநாய்போலுந் தடாகத்தீரத்தினிற்குமர மேன்முகமாய்நிற்கவு மத்தடாகநீரிற் கீழ்முகமாய்த்தோன்று மம்மரநிழல்போலும் பிறர்க்கழகாய்த்தனக்குக்கரிப்பாயிருக்கு மையுண்டகண்போலு மந்தஞானிகளில்வாழ்க்கையோடுங் கூடியுங்கூடாதிருந்து வாழ்வா ரிங்ஙனம்வாழ்வாராயின் ஞானிகரு மஞ்ஞானிக்கும் பேதமென்னையெனின்.

துய்ய-விருளால்விலையேறு மாணிக்கமெல்லாப்-பொருள்போலவல்லாப்பொருள்-எ-து-இருளைத்துறந்து பிரகாசித்தலானிருளான்விலையேறு நிருமலமாயுள்ள மாணிக்கமணி யவ்விருளான்மறையுமற்றெல்லாப்பொருள்களைப்போலு மல்லாதபொருள்துபோ லில்வாழ்க்கையிருளாற் றமறைந்திருப்பாரைப்போலு மன்றியவ்வில்வாழ்க்கையிருளைத் தமதுஞானப்பிரகாசத்தா னீக்கிநின்றுவிளங்குவரொன்றறிதி-எ-று

நெய்யையுண்டபின் வயிற்றி லெட்டுணையேனுந் தங்காது மீட்டு ங்கக்கலா னதி நெய்யினது சார மதனுடலிற்சாராததுபோல விடயங் களைத் தாமற்றநுபவித்துச் சிவத்திற்காக்கலா னவ்விடயவாசனை யிவ ரைச்சாராதாகலின் "னெய்யுண்டநாயென்ன" வென்றும்-கனையின்கண் மர மேன்முகமாய்நிற்கவு மதனது நிழனீரின்கட் கீழ்முகமாய்த்தோ ன்றுதல்போற் சகலத்தையுங்கடந்த சிவத்தைத் தாம்பிரியாதிருக்கவும னைக்கண்ணிருத்தல் போற்றோற்றலின் "னீர்னிழலென்ன" வென்றும்- பிறர்க்கட்டிகாய்த்தனக்குக்கரிப்பதாயிருக்குமையுண்டகண்போற்பிறர் க்கு மனைக்கண் வாழ்கின்றதுபோற்றோற்றந் தமக்கிட்பிராரத்தவாச னை யென்னைக்கொழியுமென்று வெறுப்பாய்த்தோற்றலின் "மையுண் டகண்போலு" மென்றுங்கூறினார்.

மாணிக்கம் பகலைப்பற்ற விரவின்மிகவும் பிரகாசிப்பதுபோன் மெய்ஞ்ஞானிகட்குத் துறவைப்பற்ற வில்வாழ்க்கையின் ஞானமிகவு ம் பிரகாசிக்குமாகலி னிருளால்விலையேறு "மாணிக்கமெல்லாப்பொ ருள்போலவல்லாப்பொரு" ளென்றுங்கூறினார்.



ஞானியு மஞ்ஞானியுங் குடும்பத்தோ டிருப்பதனாலவர்க்குப் பிறப்பிறப்பின்றாய தென்னை யிவர்க்குப் பிறப்புண்டாய தென்னையெ னின் மேற்கூறுகின்றார்.

துடைதட்டலொன்றே துயிற்றும்விழிக்கும்
படிகத்திருண்மணிக்கேன் பற்று - மடியார்க்குக்
கூடப்போங்கள்ளனைப்போற் கூடாக்குடும்பக்கூத்
தாடிக்கேன்மேற் பிறப்புண்டாம்.

துடைதட்டலொன்றே துயிற்றும்விழிக்கும்-படிகத்திருண்மணி க்கேன்பற்றும்-எ-று-துயிலும்பருவமுடையோன் றுயிற்றுதற்குத்துடை தட்டலும்-விழிக்கும்பருவ முடையோன் விழித்தற்குத் துடைதட்ட லு மொன்றேயா மதுபோன் ஞானிமனைவிமுதலிய குடும்பத்தார்வ ந்து சருவுந்தோறு மகமுகமாய்த் தம்போதமொழிவின்றி யுறைந்தநித் திரைபண்ணுவான் அஞ்ஞானி தன்மனைவிமுதலிய குடும்பத்தார்வந்து சருவுந்தோறுஞ் சகமுகமாய்நின்று மயக்கத்திலழுந்துவானாகலின் ஞா னிக்கு மஞ்ஞானிக்கும் பேதமிங்ஙனமாயினு மந்தஞானிக்குக் குடும் பத்திலிருக்கின்றேனென்னும் வாசனையாயினுந்தோன்றுமோ வெனி ற் படிகத்திற்பற்றும் பஞ்சவன்னமாகிய விருண்மாணிக்கமணிக்கேன் பற்று மதுபோலக் குடும்பந்தானாய்நின்ற வஞ்ஞானிக்கேனும்வாசனை குடும்பத்திற்பற்றின்றிநிற்கும் ஞானிக்கேனென்று மிங்ஙனங் குடும்ப வாசனையு மேறுதிருத்தலான்.

அடியார்த்துக் - கூடப்போங்கள்ளனைப்போற் கூடாக்குடும்பக் கூத்-தாடிக்கேன்மேற் பிறப்புண்டாம்-எ-து-பொருள்களைக் களவுகொடுத்தோர்க ளவனடியார்த்துச் செல்வப்பொருள் களவுகொண்டோ ரு யவரோடுங்கலந்துகொண் டவ்வடியார்த்துக் கூடச்செல்லு மக்கள்வனைப்போற் குடும்பத்தார்க்குச் சுகதுக்கம்வந்தகாலை யவரைப்போற் றானு மவர்க்குக் காயத்தாற் பூரிப்பும் வாட்டமுமுடையனைப்போற்காட்டி யவரோடுங்கூடிநின்று மனத்தானவரோடுங்கூடாத குடும்பக் கூத்தாடியாகிய வந்தஞானிக்கு மறுபிறப் பேனுண்டாம்-எ-று.

துடைதட்டலாற் றுயில்வதும் விழிப்பது மவர்க்கியல்பாயின போற் குடும்பத்தா லகமுகப்படுவதுஞ் சகமுகப்படுவது மிவர்க்கியல் பாயின வென்பதுங்கொள்க.

பார்ப்பான் - தோட்டிவேடம்போட்டு நடிப்பினுந் தன்னைவேறுகண்டு நின்றாற்போ லிவன்குடும்பிபோ லிருப்பினுந் தன்னைவேறு கண்டு நின்றானாகலிற் "குடும்பக்கூத்தாடி" யென்றார்.



நீரிங்ஙனங் கூறியவாற்றான் ஞானிக்கு இல்லறமுந் துறவறமுஞ் சரியோவெனின் மேற்கூறுகின்றார்.

தொடும்போசுழல்காற்றுத் தூளாம்போற்றொட்டு
விடும்போதுமங்ஙனே விட்டு - நடந்தானு
மாகாயநீங்காம லாடியதுபோலடங்கு
மேகாந்திக்கெங்கிருந்தா லென்.

தொடும்போசுழல்காற்றுத் தூளம்போற்றொட்டு-விடும்போது மங்ஙனேவிட்டு-நடந்தாலும் - எ - து - விடயங்களைப்பற்றும்போதுஞ் சுழல்காற்றுத் தூளத்தைப்பற்றுவபோற்பற்றி யவ்விடயங்களைவிடுக்கும்போது மச்சுழல்காற்றுத் தூளத்தைவிடுப்பதுபோல விடுத்திங்ஙன ஞானியினதறிவு விடயங்களைப்பற்றிவிடுத்துச் சென்றாலும்.

ஆகாயநீங்காம லாடியதுபோலடங்கு - மேகாந்திக்கெங்கிருந்தாலென் - எ - து - தூளத்தைப்பற்றும்போது மாகாயத்தைவிட்டுநீங்காமற்பற்றிச்சுழன்றாடும்போது மவ்வாகாயத்தைவிட்டு நீங்காதாடியத்தூளத்தைவிடுத்து அவ்வாகாயத்துளடங்கு மச்சுழல்காற்றுப்போல விடயங்களைப்பற்றும்போதுந் திருவருளைவிட்டுநீங்காதுபற்றியநுபவிக்கும்போது மவ்வருளைநீங்காதநுபவித்து அவ்விடயங்களைவிடுத்து அவ்வருளிலடங்கு மேகாந்தியாகிய ஞானிக்கிருவகையறங்களி லெவ்வறத்திருந்தாலென்னை யவர்க்கோர்பற்றுமின்று.

"ஆகாயநீங்காமலாடி" யென்றதனாற் றூளத்தைப்பற்றும்போது மாகாயநீங்காமற் பற்றியென்பது வருவிக்கப்பட்டது.

அதுபோலடங்குமென்றமையா லாடியென்றதன்பின்னர் அடங்குமென்பது வருவிக்கப்பட்டது.

இங்ஙனஞ்செய்தாலு மவரிருக்குமிடத் திருவருளாகலி "னேகாந்தி," யென்றார். (அ)

இங்ஙனங் குடும்பத்திருந்து மதன்கட் சார்வொழிந்துநின்றாரி யாவரெனின் மேற்கூறுகின்றார்.

சுந்தரனூர்சேரர்கோன் சோழர்குறுமன்னர்
மைந்தருடம்முடலை வாட்டினர்க - ளந்தமிலாப்
பத்தரொடுஞான வயிராக்கியர்பலர்க்கு
மொத்ததுசார்போத வொழிவு.

சுந்தரனூர்-போதவொழிவு - எ - து - சுந்தரநாயனூர் சேரமான் பெருமாணுயனூர் செங்கட்சோழர், புகழ்ச்சோழர்ஆகிய சோழராசாக்கள், மெய்ப்பொருணுயனூர், கழற்சிங்கர்முதலிய, குறுமன்னர் மைந்தருடலைவாட்டிய சிறுத்தொண்டநாயனூர், தம்முடலைவாட்டிய கண்ணப்பநாயனூர், அரிவாட்டாயனூர், முதலியோர், நாசமில்லாத திருநீலகண்டநாயனூர்.

அதிபத்தரோடு மற்றுமுண்டாகியஞானிகள் வைராக்கியராயுள்ளவிம்மெய்யடியார் பலருக்குங் குடும்பத்திற்கூடியிருந்து மதன்கட் சார்போதமொழிந்து நிற்றலொன்று யொத்திருத்தலாகலிற் சார்போதமொழிவோ ரெவ்வறத்திருப்பினு மொழியாரென்றறிதி - எ-று.

நெய்யுண்டநாயென்னுந் திருவெண்பாமுத லிவைநான்குதிருவெண்பாவானும் பற்றற்றஞானிகட்கு இல்வாழ்க்கையில் ஞானவொளிவிளங்கலி னிரவுவிளக்குப்போன் றந்தஞானம் பயன்பட்டதிகமாமென்பதும் அவர் அக்குடும்பத்திற் பற்றிலராகலிற் பிறப்புண்டாகாதென்பதும் அவர் எவ்விடத்திருப்பினும் நிலையயாரொன்பதுமிவ்வாறுகுடும்பத்திலிருந்தும் ஞானிகளாயிருந்தோ ரிவரிவரென்பதுமறிவித்தவாறுகாண்க. (௯)

ஒன்பதாவது

வாதனைமாண்டார்தன்மை-முற்றிற்று.

ஆக திருவெண்பா - உ௪0.

திருச்சிற்றம்பலம்.





உ

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது

# நிலையியல்பு



இதனுட் கூறியவுண்மை நிலைதவறாது மீட்டு
மதனைச்சென்றடைதற் குபாயங்கூறினமையா லிவ்வதிகாரத்திற்கு
நிலையியல்பென்று பெயராயிற்று.

அறியார்வழிகேட் டறிந்துநடக்க
வறிவாரறிவென் றறியார் - மறையாக்
குடையிருக்கத் தாமே குறித்துங்கடந்து
மடர்மழைக்கேவா றவர்போல்வார்.

அறியார்வழிகேட்டறிந்துநடக்க-வறிவாரறிவென்றறியார்- எ-து- தாங்கருதியவூருக்குச் செல்லும்வழியறியா ரவ்வழியறிந்தோரைக் கேட்டறிந்துநடக்கவுந் தம்மாலறிந்துநடப்பதாய்க் கருதுவாரன்றி யவ்வழியறிவா ரறிவித்தவறிவுதா மவ்வழியறிந்த வறிவென்றறியா ரதுபோலத் தாமுன்னறியாத கருவிகண் முடிப்பத்தானையு மிப்போதருளறிவிக்க வவற்றையறிந்துகடந்து செல்லவுந் தம்மாலவற்றையறிந்து கடந்துசென்றதாய்க் கருதுவரன்றி யவ்வருளறிவிக்க வறிந்தவறிவுதாமக்கருவிகளையறிந்த வறிவென்றறியார்.

மறையாக் - குடையிருக்கத்தாமே குறித்துங்கடந்து - மடர்மழைக்கேவா றவர்போல்வார் - எ - து - அடர்மழைக் கல்லூரார்க்குச் செல்லத்தொடங்கினோர் மழைதம்மேற்றாக்காதபடி தமக்குமறைப்பாகக் குடைகைக்கணிருக்கவு மக்குடையைத் தம்மேற்கொண்டுசெல்லாது மழைத்திவலைகட்கிடையே தாமேகுறித்துங்கடந்து மவ்வடர்மழைக்கண்ணனைந்து செல்கின்முறைப்போ லவர்கருவிகளைக்கடந்துவீடடையக்கருதினோ ரக்கருவிக டம்முட்டாக்காதபடி யருடம்மைவிட்டுநீங்காதிருக்கவு மிவ்வருளை முன்னிட்டுக்கொண்டு செல்லாதக்கருவிகளைத் தற்போதத்தாலறிந்துங்கடந்துஞ்செல்வதாகக்கருதியவற்றுணைவாரிதென்னை-எ-று.

முன்னறியாதிருந்த கருவிகளை யிப்போதறியவந்தது திருவருளாலறியவந்ததென்றறியாது தம்மாலறிந்ததாகக்கருதினமையா லின்ன முவமைகூறினார்.

கருவிகளைநீக்கத் தொடங்குவோர் திருவருளை முன்னிட்டுக்கொண்டு நீக்காது தற்போதத்தை முன்னிட்டு நீக்கத்தொடங்கி னக்கருவிகணீங்காது பலவடைப்படி மூடமாகலி னிங்ஙனமுவமைகூறினர். (க)

இத்திருவெண்பாவாற் கருவிகளையறிந்து நீங்கிநின்றவறிவருளறிவிக்க வறிந்தவறிவென் றறியவேண்டுமென்பதூஉங் கருவிகளைநீக்கிச்செல்லும்போது தற்போதத்தைப்பின்னிட் டருட்போதத்தை முன்னிட்டுநீக்கிச் செலவேண்டுமென்பதூஉ மறியப்படுமாறுகாண்க.



கருவிகளை யிங்ஙனநீக்கித் திருவருளோடுகூடி நிட்டைகூடாதாயினும் கேவலசகலங்கடாங்கா துருளை யெனைக்குந் தாரகமென்றறிந்து நிற்றற்குபாய மியாதெனின் மேற்கூறுகின்றார்.

செத்துப்பிறவாமற் றேடித்திரிகையிலே
செத்துப்பிறந்து திரிவீரோ - சுத்த
விருட்கேவலசகலம் போகவெதிரிட்ட
வருட்போதராய்த் திரியாமல்.

செத்துப்பிறவாமற் றேடித்திரிகையிலே - செத்துப்பிறந்து திரிவீரோ-எ-து-இனிமேலிறந்துபிறவாமலிப்போது பிறப்பிறப்பைக்கடந்துநின்ற வீட்டைத்தேடிப் பாவனைமுதலிய செய்துள்ளே சுழலுமிடத்துத் தானே கேவலாவத்தையிலிறந்துஞ் சகலாவத்தையிற்பிறந்துஞ் சுழல்வீர்.

எதிரிட்ட - வருட்கேவலசகலம்போக - சுத்த - வருட்போதராய்த்திரியாமல் - எ - து - உயிரறிவுக்கெதிரிட்ட மயக்கவடிவாகிய கேவலாவத்தையும் விகற்பவடிவாகிய சகலாவத்தையும்போக வினைகடாக்காத சுத்தாவத்தையினின்று திருவருளை யெனைக்குந் தாரகமென்றறிந்துநாடி யவ்வருட்போதராய்ச் சஞ்சரியாமலிருத்தலை-எ-று.

மயக்கமாய்வந்தெப்பொழுது கேவலம் விகற்பமாய்வந்தெப்பொழுது சகலமயக்கம் வந்திருந்தபோது மயக்கவடிவாய்நின்றும் விகற்பம்வந்தபோது விகற்பவடிவாய்நின்றும் மயக்கநீங்கியபோ தம்மயக்கத்தை மயக்கமென்றறிந்தும் விகற்பத்திற்சென்று மீண்டபோது அவ்விகற்பத்தை விகற்பமென்றறிந்து மிங்ஙன மவற்றின்மறைந்துஞ் சுழன்று மவற்றை யிவையென்றறிந்து நின்றவறிவு தானென்றறிந் தவற்றையுந் தன்னையுந் தனக்கறிவித்ததருளென வறிந்து அவ்வருடன்னை யெப்போதும்விட்டு நீங்காதென்றறிந் தவ்வருளைநாடி நிற்கவே யம்மயக்கம்விகற்பமாகிய கேவலசகலங்களினீங்கி யருட்பூரணமாய்ப் பிரகாசிக்குமாகலி "னிருட்கேவலசகலம் போகவெதிரிட்ட 'வருட்போதராய்த்திரியாம,, லென்றார். (உ)

இத்திருவெண்பாவால் ஆன்மபோதஞ்சீவியா தருட்போதத்தை நாடிநின்று லவ்வருளறியப்படுமென் றறிவித்தவாறுகாண்க.



இங்ஙனஞ் சகலகேவலங்க டம்முலறியப்படுதலி னவற்றைத் தன் ஞனிக்கக்கூடாதோவெனின் மேற்கூறுகின்றார்.

சகலமுங்கேவலமுந் தாக்கறுப்பான்றுன்று
பகல்விளக்கோடுச்சிப் படிகந் - தகவைத்தா
லூட்டியுறக்குவது நாமெநம்மூட்கலப்பு
நாட்டமொழியென் றருளினான்.

சகலமுங்கேவலமுந் தாக்கறுப்பான்றுன்று - பகல்விளக்கோடுச் சிப்படிகந் - தகவைத்தா - லூட்டியுறக்குவது நாமே - எ - து - நமதருளை முன்னிட்டுக்கொண்டு சகலகேவலங்களைத் தன்னுட்டாக்காதுஅறுப்பதேயன்றித் தானே சகலத்தையும் கேவலத்தையுந் தன்னுட்டாக் காதறுப்பா னுதித்தன்சந்நிதியிற் றற்சேட்டையற்றிருந்த விளக்குப் போலு முச்சிகாலத்துப் பஞ்சவன்னங்களையுங் கவராதிருந்தபடிகம் போலு மெமதுசந்நிதியி லுனதுதற்போதஞ் சீவியாதிருக்கவு மெமதுசந்நிதியை நீயங்ஙனநீங்காதிருத்தலிற் கருவிகளுன்னைத் தாக்காதிருக்கவுந் தகைமைபெறவைத்துனை தாழ்வினைப்படி யுனக்கூட்டியுறக்குவிப்பது நமதருளே யிங்ஙனம் வீட்டிலும்பங்கொடுப்பது நமதருளே யென்றறிந்து இவ்விருவகையிடத்து முன்போதஞ்சிறிதனுஞ்சீவியாதுநிற்பினம்மிருவர்களுந் தாமே யிரண்டற்றவைகயெங்கூடுமிஃதன்றி.

நம்மூட்கலப்பு - நாட்டமொழியென்றருளினான் - எ - து - யாமுன்னைவந்துகூடுதலு நீநம்மைவந்தடைதலுமாகியகருத் துன்பாலெழுனைக்கியங் கூடாதாகலின் நாமிருவருமவந்து நம்மூட்கலப்பதாகிய நாட்டத்தைநீயொழிதியென்று(திருஞானசம்பந்தப்பிள்ளையாராகிய சுவாமிக) ளெனக்கருளிச்செய்தா ரிவ்வாறேநீயுமறிதியெனி னவரது திருவடிக்கணைக்கிய முனக்குங்கிடைக்கும்-எ-று.

எதிரிட்டுத்தடித்தபோத மெதிரிடாதசைவறநின்றுதேட்ந்தபோதான்மாவிற்குஞ் சிவத்திற்குமைக்கியந் தாமேகூடுமாகலி "னம்மூட் கலப்புநாட்டமொழி" யென்று அருளினானென்றார் தமதாசாரியர் தமக்கருளிச்செய்த முறைமை யிதென்று மாணுககளுக்கறிவித்த வாறு காண்க. (௯)

இத்திருவெண்பாவாற் சகலகேவலங்களை யருட்போதத்தாலன்றி யான்மபோதத்தால் நீக்கப்படாதென் றறிவித்தவாறுகாண்க.



இங்ஙனங்கருதிநின்ற திருவருளைக்கூடுதலரிதாயினு மின்னுமோருபாய மேற்கூறுகின்றார்.

சாக்கிரத்திற்போதச் சலனையெல்லாஞ்சொற்பனம்போ
லாக்குமருட்போத ராகுவோர் - நீக்கும்
பரயோகர்சுத்தர் பரமசுகாநந்தர்
துரியகதியின்பு கடந்தோர்.

சாக்கிரத்திற்போதச் சலனையெல்லாஞ்சொற்பனம்போ-லாக்கு மருட்போதராகுவோர் - எ - று - சாக்கிராவத்தையிற்றோன்றும்போதச்சேட்டையு மற்றுமுண்டாகிய தேகாதிப்பிரபஞ்சங்க ளெல்லாமு மிவையாவையென்ன வெதிரிட்டுப்பார்த் தப்போதச்சேட்டை விடயங்களைச்சார்ந்தவிடத்துத் தோன்றியவிடயபோதமென்றுந் தேகாதிப்பிரபஞ்சங்களெல்லாவற்றையு மாயையினின்றுந்தோன்றி யழிவதென்று மிவற்றிற்கெல்லாந் தாரகமா யுட்புறம்பாய்ப் பரிபூரணமாய்நிற்ப தருளென்றுங்கண்டு பின்ன ரப்பரிபூரணமாகியவருளே மெய்யென் றதனைநாடிநின் றிவ்விடயபோதத்தையு மிப்பிரபஞ்சங்களையுஞ் சொற்பனம்போலப் பொய்யாக்குமவ ரிவற்றை யுள்ளபடிநீங்கி யவ்வருட்போதரேயாகுவார் அஃதன்றி அவரே.

நீக்கும் - பரயோகர்சுத்தர் பரமசுகாநந்தர் - துரியகதியின்பு கடந்தோர் - எ - று - அவ்வருளையுங் கடந்துசெல்லும் பரயோகருந் தற்சுதந்தரமற்ற பரிசுத்தரு மப்பரமசுகமாகிய வாநந்தத்தையுடையருநிர்மல துரியத்திற்றோன்றும் பரமசுகாநந்தா தீதருமாவர்-எ-று.

இங்ஙனம் விடயபோதத்தையுந் தேகாதிப்பிர பஞ்சங்களையும் பொய்யென்றுந் தமக்கன்னியமென்றுங்கண் டிவற்றிற்குள்ளும்புறம்புமாய்ப் பரிபூரணமாகிய திருவருளையேநாடிநிற்போ ரிப்பொய்களைநீங்கி யம்மெய்யாகிய திருவருளே வடிவாவராகலிற் சொற்பனம்போலாக்கு மருட்போதராகுவோரென்று மங்ஙனமருள்வடிவாயகாலத் தவ்வருளையுங்கடந்து பரயோகமுதலியன அவர்க்கெளிதிலுண்டாமாகலி னவரையே பரயோகமுதலியன வுடையரென்றுங்கூறினார்.

'அவரொன்றுஞ், சுட்டுப்பெயரெஞ்சிநின்றது. (௪)

இத்திருவெண்பாவால் கருவிகளையுள்ளபடி கண்டறியில் திருவருணிலைகாண வருமென்றும் அங்ஙனம்வரின் பரயோகமுதலிய பேறுளவாமென்று மறிவித்தவாறுகாண்க.

---

இங்ஙனம்விடயபோகத்தையுந் தேகாதிப்பிரபஞ்சங்களையுநீங்கி யருளைப்பெறுவதே யமையாதோ வதற்குமேனீர் பரயோகமுதலியன கூறியதென்னையெனின் மேற்கூறுகின்றார்.

தத்துவம்போய்க்கேவலம்போய்த் தாம்போயருள்கழன்று
சுத்தபரையாய்த்தன் சுதந்தரம்போய்ச் - சத்தி
யொழிவிலேபோதம்போ யொன்றாகாவொன்றி
னழிவிலேயின்ப வதீதம்.

தத்துவம்போய்க்கேவலம்போய்த்தாம்போயருள்கழன்று - சுத்தபரையாய்த்தன் சுதந்தரம்போய்ச் - சத்தி - யொழிவிலேபோதம்போய் - எ - து - நினைப்பாய்நின்ற தத்துவரூபமென்னுந் திரையைநீக்கி யதனின்மேன் மறைப்பாய்நின்ற கேவலாவத்தையு நீங்கி யத்தத்துவங்களையுங் கேவலாவத்தையையு மிவையென்றறிந்து நீக்கிநின்றவறிவுதானென்னத் தன்னையறிந் தவைகளையறிந்துநீங்கவுந் தன்னையறியவும் வந்தது திருவருளறிவிக்க வறியவந்ததென்றறிந்து தானறிந்தேனென்பதை நீங்கித் தனக்கறிவித்த வவ்வருளைத்தரிசித் தவ்வருளையும் பூரணமாயுள்ள பரையேநானாகி யப்பரையையறிந்தவிடத்தி லவ்வாறுவென்று தான்காண்பானுங் காட்சியுமாயறிந்தவர்க்கச் சுதந்தரவறிவு நீங்கி யப்பராசத்திநீக்கத்திற் றம்போதமொழிந்து தானந்தானுபவம் பெற்றதற் பின்னர்.

ஒன்றாகாவொன்றி - னழிவிலேயின்பவதீதம் - எ - து - இங்ஙனங்கூறியவற்று ளொன்றுந் தானாகாத வொன்றாயிருந்த சிவத்திற்றிரண்டறக்கலந்து போதவாசனையு மிறந்தவிடத்திற்சுகாதீத மிச்சுகாதீதமே யுண்மைநிலையென்றறிக - எ - று.

பரையோகத்தி லான்மாவினது சுதந்தரவறிவு கெடுமாகலிற் "சுதந்தரம்போ" யென்றும் அப்பராசத்தி நீக்கத்திற்போதமிறந்தானந் தானுபவமுண்டாமாகலிற் "சத்தியொழிவிலே போதம்போ" யென்றும் - ஆன்மாசிவத்தோடிரண்டறக் கலந்தவிடத்துப் போதவாசனை யொழிதலானு மவ்விடஞ் சுகாதீதமாதலானு "மொன்றாகாவொன்றி னழிவிலேயின்பவதீத" மென்றுங்கூறினார்.

இன்பாதீதமென்றமையா லின்பப்பேறுவருவிக்கப்பட்டது.

தத்துவமுதலியன போக்கப்போவனவாதலிற் போயென்பதனை நீக்கியென்று கூறப்பட்டது. (௭)

இத்திருவெண்பாவா லுண்மைநிலையிதென்றறிவித்தவாறுகாண்க.



இவ்வாநந்தப்பேறுபெறுமா றெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

பேர்தப்புரவி புருடனிலைதந்து
வீதிப்பவனி விதிசாரும் - போதப்

தால் விடயங்க ளெவ்விதத்தா லுண்டாமென்றுள்ளும் புறம்புமாய் விசாரித்துத் தேடியு மவ்விடயங்கள் கிடத்தலாலே யவற்றை ஞானேந்திரியங்களானதீந்த் கன்மேந்திரியங்களாற்பற்றி யந்தக்கரணங்களா லவற்றாளுந்திரியவிடயங்களைக் கேவலத்திற்மறந்தவனுயுஞ்சகலத்தி லவ்விடயங்களை தானும்மயங்கியும் விடயங்க டன்னைப்பிரியாதுநின்றவிடத் தவற்றிற்சுகரூபியாய்ச்சென்றுபற்றிப் பதறியும் அவைதன்னைப் பிரிந்து நீங்கியவிடத்துத் துக்கியாநின்றுபதறியும்.

சுட்டுத்தொழில்போய்ப் - பகைகெட்டது துறவப்பா - எ - து- இங்ஙனமயங்கிநின்ற சுட்டுப்போதமுங்கெட்டு அவ்விடயங்களாகியவுயிர்ப்பகையுங்கெட்டதுவே துறவெவ்றறிநீ மாணாக்கனே-எ-று.

“அறிந்தருந்தியென்றதனால்„ பற்றியென்பது இடையேவருவிக்கப்பட்டது.

துறவுகூறினமையால் விடயம்ஏதிர்ாக வருவிக்கப்பட்டது-பிரதியாவருவிக்கப்பட்டதென்று சிலவுரைபாடங்களி லிருக்கின்றது.

அகத்துத்தேடியென்றது - அவ்விடயங்கிடைத்தற் குபாயநாடுதல் சுகங்கூறினமையால் விடயம்பிரியாதுநின்றவிடத் தென்பதுவருவிக்கப்பட்டது - விடயம்பிரியாதபோ ததன்மேல் விரைந்துசேறலானும் பிரிந்தபோ தூளப்பதைத்தலானு மிருமைக்கும் பொதுவாய்ப் பதறியென்றார்.

‘மயங்கிச்சுழல்வதனாற்’ போதத்தைத்தொழிலென்றார்.

இம்மைமறுமைகளினு முயிர்க்குத்துன்பந்தருவதாகலி னவ்விடயங்களைப் பகையென்றார். (எ)



அந்வுந்துறவு மிவையென்றறிவித்தி ரினிச்சிவயோகமாவ தியாதெனின் மேற்கூறுகின்றார்.

நடந்ததெல்லாநீயே நடப்பழியநின்ற
விடஞ்சிவநீயென்றிருக்க வெணணி - லடங்கின்
மயக்கிமலமழுத்து மாயையிதுவாரா
வயிர்ப்பருளாலாஞ் சிவயோகம்.

நடந்ததெல்லாநீயே நடப்பழியநின்ற - விடஞ்சிவநீயென்றிருக்கவெண்ணணி - லடங்கின் - மயக்கிமலமழுத்தும் - எ - து - கருவிகளையிதுவிதுவென்றறிந்து சென்றதெல்லா மூன்றற்போதமேயாமாகலினிதுசிவயோகமன் றக்கருவிகளையறிந்துசென்ற தொழியநின்றவிடத்தை நீசிவயோகமென் றிருக்கக்கருதினையெனி னக்கருவிகளடங்கின்உ

ன்னை யாணவமலமயக்கித் தன்வயப்படுத்துமாகலினக்கருவிகளொழி யநின்றவிடஞ் சிவயோகமன்றாயிற் சிவயோக மியாதின்றுண்டாமெனின்.

மாயையிருவாரா-வயிர்ப்பருளாலாஞ்சிவயோகம் - எ - து-உண ருலறியப்படுங் கருவிகளெல்லா மாயை அக்கருவிகளொழிய நின்றவிடத்து மறப்பாய்நின்ற தாணவமலமாகலி னம்மாயையு மிவ்வாணவ மும்வந்தடாத சுத்தத்தின்கட்டோன்றுந் திருவருளாலுண்டாஞ் சிவ யோகமேன்றறிதி-எ-று.

'இதுவென்றதை, யிருவாணவமெனக்கொள்க.

சகலகேவலங்களிற்செல்வ ருயிர்க்குப்பழக்கமாகலி னிவற்றைம றந்துநின்ற சுத்தத்தை யயர்ப்பெனறார். (அ)



இச்சகலகேவலங்க ளற்றபோது தற்போதமறுமோ விவற்றின் மேலும் போதமுளதென்று நீர்கூறிய தெங்ஙனமெனின் மேற்கூறு கின்றார்.

அருளும்பரையு மருக்கன்மதிபோன்ற
விரவுபகலற்ற விடத்தே - பரமநிலை
சத்திக்கழற்றியிலே சச்சிதாநந்தமய
சுத்தநிலைநீ யற்றது.

அருக்கன்மதிபோன்ற வருளும்பரையும்-பகலிரவற்றவிடத்தே- பரமநிலை - எ - து - அருக்கனு மதியும்போன்ற வருளும்பரையுமாகி ய பகலுமிரவுமற்றவிடத்தே பரமாநந்தாநுபவநிலையாம்.

சத்திக்கழற்றியிலே- சச்சிதானந்தமய-சுத்தநிலைநீயற்றது-எ-று- அப்பரமாநந்தாநுபவமாகிய வநுபவசத்தி நீக்கத்திற் சச்சிதாநந்தவ டிவாயிருந்த சிவமாகிய சுத்தநிலை-யிச்சுத்தநிலையே யுன்தற்போதஞ்சி றிதுந்தோன்றுதற்ற நிலையென்றறிதி-எ-று.

அருளான்மாவிற்குப் புலப்படத்தோற்றலானு மப்பரையினு ந் தடிப்பாகலானு மவ்வருளை யருக்கனென்று மவ்வருளைக்கடந்தது பரையாகலானு மிப்பரை யான்மாவிற்குத்தோற்றமற் றேற்றலானு மிப்பரையை மதியென்றும்.பகலிரவு கண்ணிற்குத் தோற்றுதல்போ லருளும்பரையு மான்மாவிற்கநுபவமாய்த் தோற்றலாற் "பகலிரவெ ன்று,, கூறினர்.

பிரகாசமுட்டணஞ் சோபையென்னு மிம்மூன்றுகுணத்தையுமு டைய சூரியனைப்போ லருள்பஞ்சாயாநந்தமென்னு மிம்மூன்றிலக்கண த்தையு முடையது சிவமாகலிற் சச்சிதாநந்தமய சுத்தநிலையென்றார்.

ண்டாயதென் றவ்வருளுக்காக்கி நிற்கவேண்டுமோகலிற் றூமருளாலு ண்டென்றார்.

சகலகேவலங்களைநீக்கிச் சுத்தாவத்தையினின்று தம்மைச்சிவத்திற் கூளுக்கிநிற்றலாய் முன்னரிதமாய்த்தோன்றிய விடயபோகமு மகிதமாய்த் தோன்றுமாகலி னதனை ருசிப்பித்துநின்ற திரோதைசத்தி நீங்குமத்திரோதைசத்திநீங்கவே யிருவினைப்பயன்களுஞ்சமமாய்த்தோன்று மிவை சமமாய்த்தோன்றவே யிவ்விருவினைப் பயன்கட்கீடாய்ச் சிவஞ் சுத்தமாயையினின்று செய்யும் பஞ்சகிருத்தியங்களும் அச்சுத்தமாயையுநீங்கும்.

அவன் அவளதுவென்னு முன்னிலைச்சுட்டொழிந்து அவ்விருவினைப்பயன்களைத்தருவ தருளென்றறிந்து அவ்வருளின்மறைந்துநின்ற வ்விருவினைப்பயன்களையு மவ்வருளாற் றூமுண்டலாற் கன்மமலநீங்கு மிங்ஙனநீங்கவே பரையோகமுண்டா மிப்பரையோகத்தா லிவ்வுடம்புந் தாமன்றென்று நீங்கவரு மிவ்வுடம்புநீங்கவே மாயைநீங்குமாதந்தாநுபவத்திற் றற்போதங்கெடு மித்தற்போதங்கெடவே யிப்போதத்திற்குத் தானல்லாதவுடம்பைத் தானென்றுந் தனதல்லாதபோகத்தைத் தனதென்று மாறுபாடாய்க்கருதப்பண்ணிநின்ற வாணவங்கெடுமாகலிற் 'றூமழியப்பஞ்சமலக்கொத்தறு, மென்றார்.

இங்ஙனங்கூறியவாறு நிட்டைகளாற் பஞ்சமலங்களையு நீக்கக்கூடாதவர் நகாரமாகிய திரோதையும் மகாரமாகிய மலத்தையும் பின்னிட்டுச் சிகாரமாகிய சிவத்தையும் வகாரமாகிய வருளையும் முன்னிட்டு யகாரமாகிய தான் நகார மகாரமாகிய பாசத்திற்குஞ் சிகார வகாரமாகிய பதிக்குநடுநின்று வகாரமாகிய வருளைக்கூடிச் சிகாரமாகிய சிவாநுபவத்தில் வகாரமாகிய வருளுங்கழலாது யகாரமாகிய தற்போதங்கழல.

இங்ஙனமவ்வருளே நாவாகச் செபியாமற் செபித்துச் சிகாரமாகியசிவத்தி லதீதப்படுத்துவது பஞ்சாக்கரதரிசன மிங்ஙனம் பஞ்சாக்கரதரிசனமும்பண்ணி மெய்யடியார்க்குப் பணிவிடைசெய்யின்முற்கூறியநிட்டைகளுங் கைகூடிப் பஞ்சமலங்களுமறுமாகலி "னஞ்செழுத்தாலர்ச்சித் தடியார்க்கடிமைசெய்யிற் பஞ்சமலக்கொத்தறு,,மென்றார்.

இங்ஙனம் பஞ்சாக்கரதரிசனம்பண்ணுதல் சிவனுக்கருச்சனையாகலி "னஞ்செழுத்தாலர்ச்சித்,, தென்றார். (ம)

தேவரீரருளிச்செய்த சுத்தத்தை யடியேன்பெறுவ தெந்தநா ளென்றிரங்கிய மாணுக்கனைநோக்கி மேலருளிச்செய்கின்றார்.

கருவியுதிப்பிற்சகல கேவலத்தைக்காட்டி
யருளுதிப்புமங்கதுபோ லாக்கி - யிரவுபகற்
றாக்காதசுத்தத்தலத்து நாம்வைக்கநீ
யாக்காதெமக்குப்பரம்.

கருவியுதிப்பிற்சகல கேவலத்தைக்காட்டி - யருளுதிப்புமங்கது போலாக்கி - எ - து - கருவிகண்முப்பத்தாறுங்கூடிநின்ற சாக்கிரத்தி லுனதறிவின் விகற்பமாய்வந்தடுப்பது சகலமென்று மயக்கமாய்வந் தடுப்பது கேவலமென்று முனக்கறிவித்த சகலகேவலங்களை நீங்கப்ப ண்ணி யுன்னையுள்ளபடி யறிவித்து இங்ஙன முன்னையறிவித்தபின்னர்த் தோன்றுந் திருவருடரிசனத்திலு மிவ்விருளைச் சகலமென்று மிரு ளழன்றுதோன்றும் பரயோகத்தைக் கேவலமென்று முற்கூறிய சகல கேவலங்களைப்போ லுனக்கநுபவமாய்த் தரிசித்துப்பின்னர்.

பகலிரவு - றாக்காதசுத்தத் தலத்துனை நாம்வைக்க வெமக்குப்ப ரம் நீயாக்காது - எ - து - அச்சகலகேவலங்களு மிச்சகலகேவலங்களு மாகிய பகலிரவுகளுந் தாக்காறுநின்ற சுகாதீதமாகிய சுத்தநிலையிடத் துனை நாங்கொடு சென்றுவைக்க வெமக்குப்பர மீண்டுகூறிய விருவ கைச் சகலகேவலங்களினு முன்றற்போதத்தை முன்னிட்டுண்டாக்கா தெம்மைமுன் னிட்டுக்கொண்டுசெல்வ துனக்குப்பர மிங்ஙனஞ்செ ன்றியே லுனக்கச்சுத்தநிலை வருமென்றறிதி-எ-று;

ஆன்மபோத வெதிரீட்டினு மெதிரீடற்றவிடத்துந் தோன்றுஞ் சகலகேவலங்களைப்போ லிவைநீங்கித் தன்னையறிந்தவிடத்திற் றோன் றுந் திருவருளையும் பரையையு மெதிரீடாயு மெதிரீடற்றுந் தரிசித்தலி "னங்கதுபோலாக்கி" யென்றார்.

எமக்குப்பரமென்றமையா லுனக்குப்பரமென்றது வருவிக்கப் பட்டது.

ஞானசாரியர்மாணுக்கனுக் குபதேசிக்குங்காற் றம்மைச்சிவமா கக் கூறவேண்டுமாகலி "னெமக்குப்பர" மென்றார். (யக)



கருப்பநிலத்தைக் கறண்டுதிரிவார்க்குச்
சருக்கரையேவாயிற் சனித்தாங் - கிருத்திவிடு
மெந்தநிலைமையென்பீரா லீனர்வாக்கென்னவே
தந்தநிலைமைமாண்டதலம்.

கருப்பநிலத்தைக் கறண்டுதிரிவார்க்குச் - சருக்கரையேவாயிற் சனித்தாங்கு - கிருத்திவிடும் - எ - று - சுவையைவிரும்பிக் கரும்பறுத் தொழித்தவக்கருப்பநிலத்தைத் தமதுபற்கொடு கறண்டுகொண்டுதிரி வோர்க்குத் தெய்வகதியாய்ச்சருக்கரை தானேவந்தவாறு வாயிற்றோ ன்றிய முறைபோல வீட்டின்பத்தை விரும்பித் தற்போதத்தைக்கொ ண்டு சரிதாதிகளைச்செய்வோ ரிந்நூலிற்கூறியமுறையே சரிதாதிகளை விட்டுநீங்கித் தற்போதத்தைப்பின்னிட் டருட்போதத்தைமுன்னிட்டு ச்சென்றாரெனி னிவ்வருட்போதமே யவரை யவ்வீட்டின்பத்தினிக ணழுத்திவிடுமாகலின்.

எந்தலைமையென்பீரா லினர்வாக்கென்னவே - தந்தலைமைமாண் டதலம் - எ - று - ஓர்காரியஞ் செய்யுமிடத்து எமதுவலியினாற் செ ய்வோமென்றுகூறு மறிவினர் வாக்குப்போ லவ்வீட்டின்பத்தை யெ மதுபோதவலியாற்சென் றடைவோமென்றுகருதிச் செல்வீரானாலங் ஙன நீர்கருதிச்செல்வதே யுமதுஞானமேம்பா டற்றவிடமென்று, அ ழிந்து நீரு மிந்நூனெறி முறையேசெய்வீர்-எ-று.

சரிதாதிகளைவிட் டிந்நூனெறிச்சென்றாற் போதமொழியு மிப் போதமொழியி லாநந்தந்தானே தோன்றுமாகலிற் கருப்பநிலத்தை க் கறண்டுதிரிவார்க்குச் சருக்கரையே வாயிற்சனித்தாங்கென் றுவமை கூறினார்.

உந்தலைமையென்பது தந்தலைமையென்று முன்னிலைத்தன்மை தழீஇவந்தது.

பன்னூல்களையும்விட்டிந்நூனெறிச்சென்றார்க்கேயின்பங்கிடை க்கு மென்பதுமாம்.

போதப்புரவியென்னுந் திருவெண்பாமுத லிவை யேழு திரு வெண்பாவானு மாநந்தவறிவுநிலையுந் தூலவுநிலையுஞ் சிவயோகநிலையு ஞ் சுத்தநிலையும் பஞ்சமலமறுக்கும் பஞ்சாக்கரநிலையு முத்திநிலையு மிந்நூனெறிச்சென்றார்க்கே வீட்டின்பங்கிடைக்குமென்னு முடிபு நிலையு மறிவித்தவாறுகாண்க.

கண்டமணியினூடாய நீழல்கலந்தாற்போல்
உண்மையைநீயுண்டென் றெனையுணர்த்தித் - தண்ணெனவே
பார்த்திருந்தசித்திரம்போற் பார்த்தானைநாம்பாவித்
தோத்திரஞ்செய்யாப் பிறவாச்சொல்.

பத்தாவது - நிலையியல்பு முற்றிற்று.

ஆக திருவெண்பா.- ௨௫.

ஒழிவிலொடுக்கம் - மூலமும் உரையும்

முற்றிற்று.

சமாபுரியாறுமுகன் ருனேயென் னுள்ளத்
தமரவிருத்திந் நூற் கருத்தந் - திமிரமறக்
காட்டினுன்பொல்லாக் கடையேனைச்சீர்விட்டி
ருட்டினுன்பேரருளினுல்.

கையினுறைபாலின்பங் காட்டுவிரலேகசிவ
மெய்யருளாம்பாதமிடு மென்பதுகை - துய்ய
விருட்கேவலசகல மெந்தைசம்பந்தன்
றிருக்கோலங்கொண்ட சிறப்பு.

அரவுவிடந்தீர்க்கு மமணருடன்மாய்க்குந்
திரகதியிலெண்ணில்லைச் சேர்க்கும் - புரடயிலே
யென்பைப்பெண்ணுக்கிவிடு மேழையேனேழ்பிறவித்
துன்பத்தைநீக்குவான் சொல்.



# அதிகாரங்களின்பெயருமுறையுஞ்
செய்யுட்டொகையுங்கூறியது.



சீராகுமாகமத்திற்செப்புமியற்சித்தாந்த
நீராகுமுப்பொருளினேர்தெளிவிஞேர்த்துய்தற்
கொத்தபொதுவினுபதேசமேமொன்பான்
சத்திநிபாதத்துத்தமமொழிவுநாலேழ்
அருமையோகக்கழற்றியாய்நீதிடுமையாறுங்
கிரியைக்கழற்றிகிளத்துமீரொட்டாறு
சரிதைக்கழற்றியதிற்சாற்றுமீரேழாம்
விரத்திவிளக்கத்தின்மேவும்பதின்மூன்
றுவப்புறுநற்றுறவினுற்றவையைந்தாகு
மவத்தைத்தன்மைக்குளரியவாறேழாம்
வாதனைமூாண்டார்தன்மைவாய்த்தமும் மூன்றுகும்
கோதினிலையியல்பிற்கூறல்பதின்மூன்று
மொருபத்ததிகாரத்தோங்குதிருவெண்பா
விருநூற்றைம்பான்மூன்றிவைகளிசையத்
தழுவியுரைத்திட்டான்றகைமையுறுவள்ள
லொழிவிலொடுக்கத்தினுன்

# அமைத்துக்கொள்ள்.



காப்பின்கண் ஈண்டு இத்தோத்திரச் செய்யுட்களெல்றவையுள்ஆனமுக ஞறுமுகனென்னுஞ் செய்யுளையொழித்து வேறுகொள்க. உஎ - ம் - பக்கம் - இக்கதையை யிப்பொருளுக்கெல்றதை அக்கதை யிப்பொருளுக்கெனக்கொள்க. இங்ஙன மின்னுஞ்சிலவிடங்களி லுள அவற்றையுமங்ஙனங்கொள்க. ஷ. பக்கம் மாறுபாடாய்க்கருதி என்ப தில் செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சமாய ஆய்என்பதை செயவென்னும்பாய்ப்பாட்டு வினையெச்சமாய ஆகவெனக்கொள்க இங்ஙன மின்னுஞ் சிலவிடங்களிலுள்ள அவற்றையு மங்ஙனங் கொள்க வடசொற்களுள் - ஞாநம் - ஞானம் - ஆநந்தம்-ஆனந்தம்-எனத்தமிழிற்குப்பொதுவுஞ் சிறப்புமாய நகர னகரங்கள் சிற்சிலவிடங்களில் விரவிநின்றன, அவற்றைத் தமிழ்ச்சிறப்பு வழக்குநோக்கி யமைத்துக்கொள்க. ௱உ - ம் - பக்கம் - எட்டாவதுபாட்டுரை ௪௧௬ - வது - வரியில் இருப்பதுமன்றி அங்ஙனநின்று கேட்குமொழி பிரமோபதேசமொழியாகலி னென்பதும் - சிலவுரைபாடங்களிலுண்டு - அ௫-ம்-பக்கம் ஆறுவதுபாட்டுரை - ஞானத்தின்மை நசிப்பித்து நானதுவாமூனத்தையாமொழிவிப்பாரென்பதற்கு - சுவாநுபவத்தால்ஞாநாநந்தத்தைப்பெறாது அதனைவிடயச்சேற்றாற்கெடுப்பித்து விடயச்சேற்றிலழுந்திநின்றுஅவ்வாநந்தத்தையடைதற்கேதுவாய்க்கூறும்ஞாநசாத்திரங்களைக் கேட்டறிந்தமாத்திரத்தினு னவ்வாநந்தமயனுனென்றுகூறும் என்பது சிலவுரைபாடங்களிலுண்டு இது உரை வேறுபாடு.





செய்யுளகராதி

முற்றிற்று.



உ

முருககடவுடுணை.

சென்னைமாநகர்க்கந்தசுவாமிபேரிற்

# பிள்ளைக்கவி

## திருப்புகழ்-வகுப்பு

## பதிற்றுப்பத்தந்தாதி

வெண்பாக்கள் - பதிகம்.

---

திருவல்லிக்கேணிப்பதிகம்

திருவான்மியூர்ப்பதிகம்

திருப்போரூர்ப்பதிகம்

திருவொற்றியூர் வெண்பாக்கள்.

---

இவை,

**முருகதாசசுவாமிகளென்றும்**

**திருப்புகழ்ச்சுவாமிகளென்றும்**

விளங்குகின்ற

## தண்டபாணிசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளியன.

---

ம-ா-ா-ஸ்ரீ அமரம்பேடு,

**சுப்பராயசெட்டியாரவர்களால்**

ஊ - புஷ்பரதசெட்டியாரவர்களது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டன

---

ரிஜிஸ்த்தர்—ஈஸ்வர௵ மாசி௴.

உ

முருகக்கடவுடுணை.

# சாத்துகவி.

புரசை ம-ா-ா-ஸ்ரீ,

அஷ்டாவதானம் - சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றியது.

ஆசிரியவிருத்தம்.

மண்டலத்தோர்களும்பரவும் வடிவேறகைக்கடவுளருள்
வரத்திறற்சொல்
வண்டமிழ்ச்சீர்வினவியெம துள்ளமெலாங்களிசிறப்ப
வாய்ந்தமேன்மை
கொண்டதிருப்புகழக்கார னெனமுருகதாசனெனக்
குலவுஞ்சீர்த்தித்
தண்டபாணியன்றனக்கிங் கென்னகைம்மாறியாமுணர்ந்து
தருதற்பாற்றே.

சிவபூஜா துரந்தரரென்று பேர்பெற்று விளங்கிய

ம-ா-ா-ஸ்ரீ ஐயமபேட்டை,

நெல்லையப்பமுதலியாரவர்கள் குமார

சிவகுருநாதமூர்த்திகள்

இயற்றியது.

தாழிசை.

திருமின்மருவுஞ்சென்னைநகர்ச் சேந்தன்றனக்காங்கவிமாலை
திரடோணிரையிற்புனைதலுன்னித் தேடித்திருநெல்லையினிடத்துப்
பெருகன்பமையுங்கவுமாரர் பேணுமுருகதாசனெனும்
பேரார்தண்டபாணியனைப் பிறங்குங்கருணைவழியழைத்தீண்
டொருவண்பெயர்ச்சீர்த்திருப்புகழு முரைத்தற்கரிதாம்வகுப்பினமு
முயர்வார்பிள்ளைக்கவியுலா மோங்குமிரண்டந்தாதிகளு
மருடீர்புலமைக்கலம்பகமும் வண்மைப்பதிகங்களும்பிறவும்
வனைவித்தணிந்தாங்கவற்கிருதாண் மலர்சூட்டியதால்வழுத்துதுமே.

உ

# சாத்துகவி.

ஓம். ப. க. பூ. ஆ. வே. வை. இ. ப. கோ. ம. பு. அ. ச.
ஆதொண்டமண்டலநாட்டார் அ. வை. லக்ஷுமிடாலேய்ம,
ஸ்ரீ. கா. ம. க. நீ. ஆ. தி. க. ஞா. அ. வை. புருஷோத்ததீக்ஷாசாலை,
இந்தியா கங்காகுல தீக்ஷாநவபீடாதீனபுருஷர்,
ஆ கி ய
சுப்பராஜஅமிர்தசங்கவைசியபுருஷோர்த்தகுருகவிஸ்ரீமான்
இ ய ற் றி ய வை.

## இரட்டை ஆசிரியவிருத்தம்.

திருமகள்புணர்ந்தநெடு மால்புகழும்வேல்கொண்டு
தேவர்சேனாதிபதியாய்த்
திகழ்சமரபுரியிருந் தடியவர்க்கருள்செயச்
சென்னைமாநகரில்வந்தோன்
பெருகுகலிபுருடன்வலி தீர்வதுகுறித்துப்
பிறங்கும்விளையாடல்செய்வோன்
பேர்முருகதாசன் திருப்புகழ்க்காரன்
பெருந்தண்டபாணியென்ன
மருவுமொருசித்தனைத் திருநெல்லையூர்நின்று
வருமாறுவரவழைத்து
வண்மைத்திருப்புகழ் வகுப்புக்கலம்பகம்
வயங்குபிள்ளைகவிதையோ
டிருவிதத்தந்தாதி யாதியவைகூறச்செய்
தினிதணிந்தருள்புரிந்தா
னிங்குமங்கும்புலவ ரானந்தமெய்தலா
லியமிகமுழக்கினாரோ.

## வெ ண் பா.

உமாபதிபோல் வெண்ணீ றுடன்முற் றணிந்தோன்
குமார சமையநிலை கொண்டோ - னிமாசலத்தாள்
போற்று மருமைப் புதல்வன் திருப்புகழைச்
சாற்றுந் தமிழே தமிழ்.

உ

முருகக்கடவுடுணை.

சென்னை மாநகர்க்

# கந்தசுவாமி பேரிற்

## பிள்ளைக்கவி.

நூற்காப்பு.

### விநாயகர் துதி.

பைந்தமிழ்ச் சீர்மன்னு சென்னை பட்டினத்தார் வாழ்வந்த
கந்தசுவாமிகளிகூருஞ் - சுந்தரஞ்சேர்
பிள்ளைக்கவிதருவான் பேழைவயிற் றானைமுகக்
கொள்ளைக்கவின்மருவுங் கோன்.

### சரசுவதி துதி.

வல்லாண்மைதுன்று சென்னை மாநகரில்வாழ்குகன்மே
லெல்லாருமெச்ச வியம்புவாய் - பொல்லா
விடம்பருகுமீசனொடு மேருளுதித்தாய
கடம்பனையபிள்ளைக் கவி.

## காப்புப்பருவம்.

### திருமால்.

மணிநிலவுமரகதப் பிடிமருவுபாகத்து
வள்ளலார் தவமுதிர்ந்து
வன்னிவிழிவழியாறு பொறியொனவுருக்கொண்டு
வருமுருக வேளைமகுடத்
துணிநிலவுதலையாறு மங்கதமிலங்குபுய
மாறிரண் டுமபொருந்து
மையனைச சென்னைமா நகரினுறைகந்தனை
யளித்தருள வேண்டுமென்றே

பணிநிலவுபாற்கடற் பள்ளிகொண்டானையெழு
பாருமுண் டுமிழுமாலைப்
பசுநிரைவருந்தாத வண்ணமங்நாளுயர்
பருப்பதக் குடைபரிக்குந்
திணிநிலவுதோளானை யாழியொடுசங்கமுந்
திகழச் சிறந்துளானைச்
செல்வியுறுமார்பனைப் பல்விதத்தினுமிகச்
சிந்திக்கு மெமதுள்ளமே (க)

## பரமசிவன்.

### குழிப்பு.

தன்னதானனதான தன்னதானனதான
தன்னதானனதான தந்தனத்தாத்தனு.

அன்னமாமெனவேதன் விண்ணிலேகிடவேன
மன்னமேல்கொடுமாயன் மண்புகப்பார்த்துளா
ரண்ணமாமுடிமீது வெண்மைசேர்மதிசூடு
மண்ணலாடகமாகு மம்பலக்கூத்தனு
ரன்னையாயுலகேழு முன்னமீனியபாவை
யங்ஙனோர்புறம்வாழ வுங்கொள்பொற்பேற்றதே
வம்மைவாதனைதீரு முண்மைமாதவமீயு
மம்மநீறணிவார்கள் சிந்தைபிற்றேக்குவார்
கன்னல்வார்சிலைமார னென்னுமோர்படுபாவி
கன்னிமார்பலர்சூழ வந்தெதிர்த்தார்த்தநாள
கண்ணிறாரழல்வீசு தன்மையார்மழுமானெர்
கம்பிரேடவிர்சூல மொன்றுகைத்தீர்த்தனார்
கன்மைநீர்தமிழ்நால்வர் தம்மைநாடியசீலர்
கன்மமாதியவாம லங்கெடத்தாக்குவார்
கைம்மதாசலமாய வுன்னினார்பலவாய
கண்ணியாரவர்தாளை யஞ்சலித்தேத்துவாம்
மன்னமாயிரகோடி துன்னுசீர்பெறுதோகை
மஞ்ஞைவாகனமேறு மைந்தனைப்பூட்கையால்
வண்மைதோய்தரநீடு பெண்ணிருயிர்போலு
மன்னைமால்வரைசார்ப சுந்தினைக்காட்டில்வாழ்
வன்மைவேடுவர்பேதை கிண்ணமாமுலைமோக
மன்னுசாமியைஞான பண்டிதப்பேர்ச்சொல்வார்
மம்மர்நோய்மருவாது மெய்ம்மைவீடதுசேரும்
வண்ணமோர்குருவாகு நண்பனைக்கூர்த்தவேல்
சின்னதேயெனநாளு மெண்ணியேசிடுமீனர்
தென்னனூர்புகமோதும் வன்பனைப்பாக்கொடோர்

தென்னனுருயிர்சோரும் வெம்மைபோய்மிகுகூனல்
செம்மையாகமிர்சீர்செய் தன்பில்பொய்த்தீர்க்கமே
செம்முசாரணராதி யெண்ணிலார்கெடுபோர்கொள்
செம்மலாமுருகோனை யம்புயப்பூக்கணீர்
செஙநெலார்வயலூடு மென்மையோதிமமோவில்
சென்னைமாநகர்மேவு கந்தனைக்காக்கவே. (உ)

## பராசக்தி.

தனனதனதன தனதனதனதன தனனதனதன தனதனதனதன
தன்னத்தனத்தனன தன்னத்தனத்தனன தானுனு.

அமலபரசிவ பசுபதியெனுமொரு கணவர்தனதிள முலைமயலகொடுதின
முன்னிட்டமெப்படிய வண்ணத்திருப்பனெனு
மொழியொடநுதினமடிதொழவுளமகிழ் சிவையையிமவரைதருமகவெனவரு
சின்னக்குயிறபெடையென் வண்மைத்தனிககொடியை
யகிலமுழுமையு முதவியசிறுவயி றுடையகவுரியை மதன்விழிபடவொரு
கன்னற்சிலைத்திறமை தன்னைக்கொடுத்தவளை-வாடாதே
யளவில்சுகமுற வுதவிடுமிறைவியை மரணமொடுபவு மெனுமிருளிரிதலை
நண்ணிககழற்கமல முன்னித்தனக்குரிய
பொறிகளுவன்முழு மவுனிகளதுசுழி முனையினடமிடு மூதலவியைமுருகவிழ்
வன்னத்தகட்டிதழகூடுன்னுற்றபுட்பவகை
யணியுமழகிய குழலியையனகர் நடையினெயின்மலி வனிதையையொருகவி
பின்னுற்றுவப்படிசி லுணணசசமைத்தவளை-வாளேநேர்
சமரபிரபல பலமருவியவிழி யிலகுதிரிபுர தகனியையடியவர்
கண்முற்றிகழ்ச்சிதரு கனனிகிளிபபிளையை
வெளிறுமலர்மிசை மதியெனநிலவிய சரசுபதிதிரு மகளெனுமிருவர்க
ளென்னச்சொலிப்பரவு தன்மைகளுமொத்தபிடி
தனையெனிகலவ ரடியொடுகெடவரு முனிவின்மிகைகமழ் திருவுளமிசைவுறு
பொன்னைப்பணத்தின்மகிழ் புன்மைக்குணத்தினரை-நாடாதாள்
சகுணமுதன்மைகொள் பகவதிபயிரவி விமலையதிரய விகசிதமொழிபல
பன்னித்தொடுத்துவரு பெண்ணைப்பில்கற்பினவ
ளறியிலறிவரு செயலினளெனவுணர் பெரியர்தமையிகழ கொடியவர்குடரணி
மின்னக்குதிப்பவளை நன்மைக்குவித்தனைய
தருமமயிலினை யிமகரனெனவொரு பணியைவிடுகரு ணையின்முதியவடனை
யுண்மைக்கவிப்புலவ ருண்ணிற்குமுத்தமியை-நானோவேன்
முமலமுதவிய திரிகுணவழிசெலு மனதையிருபத மலர்களிலொருவித
மன்னத்திருத்தியருண் மெய்ம்மைக்குருக்களரன்
மதலையெனலையு மவாபணிகொளுமுயர் குரவனெனலையு நிசமெனுநிலையினர்
விண்ணைக்குறிக்குழுவ ரின்னற்றவிர்த்தகுகர்

முகுளசததள பரிமளமதுகர சலசமலர்திகழ் கரமுறுகுறமக
ளெண்ணத்திருப்பதையு முன்னிட்டியற்றுமதி-மாலோவார்
மொளுமொளெனுமொலியொமேதவருவிகள் வழியவிடுமெழில்குலவுறுமவை
வெண்மைக்களிற்றின்மகள் பொன்மைக்குருக்கமிகு [யவ
சிறுவர்சரவண பவர்கதிரயில்வலி யதுகொடவுணர்கள் குலமறமுனிபவர்
மொய்ம்மொய்த்திசைக்கவலர் செம்மைக்கடப்பமலர்
முருகுசொரிதரு குரவமென்மலர்செழு மலரிபுனலிம லிகைதுளவறுகிவை
சென்னிக்குமிட்டொசெ யெண்ணிக்கையற்றமலே-மேல்வாழ்வாா
கமலமிசைவளர் திசைமுகனுதலை யுடைதலிலதுபல் வயினுயர்தரவுள
கைம்மற்செலுத்துமவர் முன்னைத்தொழிற்செய்தவர்
திருடனெனவொரு தரமருணையிலொரு புலவனுவல்கையி லமைவரும்விழை
மென்னைச்சொலச்சொலிய கண்மைத்தலைக்கடவுள் [வொடு
கடலிறெடுபொரு கையுமுதலியபல புனலிலனலின்முன் முழுகியபனுவல்க
ளிம்மைப்பிறப்பினிலென் முன்னிற்பதைக்கருது-சீர்தோய்வார்
கமடமுதுகினி லொருமலையிணையலை தவளவுததியி னடுநெடுமரிபுகழ்
திண்ணப்புயத்தொருவர் தொன்மைக்குடைச்சரணர்
தனனதனதன தன்தனதனதன தனனதனதன தனதனதனதன
தன்னத்தனத்தனின தன்னத்தனத்தெனல் [வளமுறு
கழறியலைகைகள் குதிகொளவமர்பொரும் வயவர்தமிழ்நய மொழிபொருள்வ
சென்னைப்பதிக்குமரர் தம்மைப்புரக்கவென-வேதானே. (க)

## விநாயகர்.

தன்னதனனதந்த தானனத்தாத்தன.

மும்மையுலகோரொன்று மூலவித்தாச்சொலோர்
முன்னவனையீசன்றன் மேனியிற்போர்த்ததோ
லம்மைநினைவூடொன்ற லாலெழிற்பூட்கையே
யன்னமுகமாவந்து ளானைமிக்கேத்துவாம்
வெம்மைமலிசூரொன்ற மாவறத்தாக்கும்வேன்
மின்னுமகன்மார்பங்கொள் வீரனைப்போற்றுவார்
செம்மையுறல்காணுங்கு கேசனைக்கீர்த்திதோய்
சென்னைநகர்வாழ்கந்த சாமியைக்காக்கவே. (உ)

## திருமகள்.

தந்ததனதந்ததன தந்ததனதந்ததன
தன்னதானனதனன தையனத்தாத்தன.

பங்கயமலர்ந்தனைய கண்குலவுகொண்டல்புணர்
பன்னியாகியவிளைய தையலைத்தேக்குபால்
பம்புகடலம்புலியு டன்றரவரும்பெருமை
பன்னுவார்பெறுகருணை வல்லியைப்போக்கொணு

மங்களமனந்தழுறு செந்திருமடந்தையினை
வண்மைதோய்முனியரசு சொல்லுநற்பாக்களாம்
வந்தனைபுனைந்தவளை யிந்திரர்தொழுஞ்சரண
மன்னுவாடனையிணையில் செல்வியைப்போற்றுவாம்
வெங்கணரவஞ்சடை னம்பயில்சிகண்டிமிசை
மின்னும்வேலுடனிலவு செய்யனைச்சேட்டையே
மிஞ்சமணர்துஞ்சமுகிர் செந்தமிழ்பொழிந்தவனை
வென்னிடாதமர்புரியும் வல்லமைத்தோட்கள்சேர்
சிங்கநிகரொன்பதின்மர் தந்துணையையும்பர்புகழ்
சென்னியாறுடையமுதல் வள்ளலைக்கோட்டிலோர்
செண்டுகொடறைந்துமகிழ் துங்கனைவளம்பெருகு
சென்னைமாநகரின்முரு கையனைக்காக்கவே. (௫)

## பிரமன்.

தன்னதன்னதன தனதத்ததத்தன.

மண்ணுமுயிர்களி னுடன்முற்றுமிட்டதாம்
வண்மைதிகழ்கர மலரொட்டும்வித்தைமா
தண்ணமிளிர்சது முகநட்புமுற்றுவா
லன்னமிசைவரு மயனைப்பழிச்சுவாம்
விண்ணுளிமையவ ருறவைத்தசத்திவேல்
வெண்மைநிறமலி தருகுக்குடப்புள்வாழ்
திண்ணமொழிபவர் பலர்மெச்சுபொற்பினோர்
சென்னைநகருறை குகனைப்புரக்கவே. (௬)

## சரசுவதி.

தந்ததனதானதன தத்தத்தனந்தனன
தன்னனுதனதான தத்தாத்தனததன.

என்றனதுநாவினு மிருக்கைக்கிசைந்தவளை
யெண்ணிலாமறையோதி வைத்தாற்றல்பெற்றதா
லெண்டிசையினுவலரு மெச்சச்சிறந்தவளை
யின்னநூல்பலபாடு நட்போர்க்கும்வித்தெனு
நின்றவளைவாலிய நிறப்பொற்பமைந்தவளை
நின்மலாகரஞான முற்காட்டுபெட்பதே
நெஞ்சில்வளர்பேதையை யிடுக்கத்தில்வந்துதவு
நின்னயாதரவாணி யைப்போற்றிநத்துவாம்
வன்றகுவர்வேரற வறுத்துக்கடம்பணியும்
வண்மைசேர்புயவீர னைக்கார்த்திகைப்பெணர்
மஞ்சுதிகழ்மால்வரா யெனத்தக்ககொங்கைநுகர்
வண்ணவாயூறுசேயை விற்கோட்டுமெற்செய்வார்

சென்றமும்வினைதிய ரிலக்கத்தினைன்பதின்மர்
தென்னுலோகனுநா னுறத்தாக்கும்வெற்றிதோய்
திண்பெறமுனிபவனே வித்தைத்திறம்பெருகு
சென்னைமாநகர்வே லனைக்காத்தளிக்கவே. (ஏ)

## கிரகங்கள்.

சூரியன்றிங்களங்காரகன்புந்திகுரு சுக்கிரன்சனியிராகு
தொாந்தமுறுகேதுகுளி கன்சிலையிராசிநாமேகேதுபரிவேடம்
வீரியக்களரிகாவலன்முதற்பெரியோர் விளம்புபலகோட்களுக்கும்
விரதாதியுற்றுந்துதித்துந்தினந்தோறு மேன்மேலுமஞ்சலிப்பா
மாரியமருந்தமிழ்முதற்பரவுகலைமுழுது மறிபுலவனைக்கிரியெலா
மாடரங்காமுருகவேடனைத்தேவர் புகழுயில்வேலனைக்குறத்தி
சீரியமுலைத்துணைக்குருகுமதிமோகனைத்தெய்வானைபுணர்கேள்வனைச்
சென்னைமாநகரில்வரு கந்தசாமியையிகச் சிந்தித்தளிக்கவென்றே.()

## புலதேவர்.

உயிரொன்றுழலவருத்தாமை யொருவர்தருமுன்புசியாமை
யோரஞ்சிறிதுமுரையாமை யுதவுந்தொழிலிற்சலியாமை
பயிலுமுதுநூற்பழியாமை பாழ்த்தமுகத்தோடலையாமை
பழகுமனத்தார்தொழுமளவில் பலதேவரையும்பணிந்தெழுவா
மயிலிற்பவனிவருவானை வடிவேலணிந்தபுயத்தானை
மலையாவினும்போய்நடிப்பானை வணங்குமவருக்கெளியானை
கயிலைக்கிரியார்தருமகவைக் கழனிவளஞ்சேர்சென்னைநகர்க்
கந்தக்கடவுடனைநாளுங் காப்பதுமக்கேகடனெனவே. (சூ)

## ஒருமை.

தனனதன தனனதன தனனதன தனனதன
தன்னதன தனதந்த தனதன தனத்தன.

அருளுததியிடையுலக முழுதுமுதவியபொருளை
யன்னையெனவவைதுன்று முயிர்வகைதமக்கெலா
மமுதுதவிவிழிதுயில விடுமுதலைவடவனலை
யன்னசினமொடுகொன்று மகிழ்வதனைநுட்பமா
மறிவையறிவரியதிரை யிடுகொடுமையுடையதனை
யம்மைவினைதவிர்வென்றி தருகுரவர்பற்பலோ.
ரரசுதெனமிளிர்சுடரா யுளசமையநியதிகளி
லண்ணியகல்பெருவஞ்ச மருவியதைநட்பினை
ருருவமெனினுருவுமரு வெனிலருவுநிகழ்வதனை
யுன்னுமனதினுமொன்று செயலினைதமுத்தர்தா

மொருநொடியிலெளிதினுணர் தரவுதவுமுடிவையமு
துண்ணுமிமையவர்சிந்தை யணுகரியதைத்தொனு
லுனையதனின்மருவிமரு விலதையமர்செயமுடுகு
மொன்னலரையடுசிங்க மனையனைவெறுத்திடா
வுரிமையொடுநிலவியதை யணுவிலணுவெனநிறையு
முண்மைவடிவெனநின்ற வொருமையைவழுத்துவாம்
வருமமிகுதகுவர்குல மழியவிடுமயிலணியு
மன்னவனையரனன்று வழிபடும்விதத்தினன்
மறைபலவுநுவலுமுயர் பிரணவமெனொருபொறியின்
மன்னுபொருளினைவிண்ட வரதனைவிடப்பலால்
வலிமருவுமுரகபதி நெளியநடமிடுமயிலின்
வன்னமளவறவிஞ்சு கலபநிழலிற்பொனேர்
வனிதையர்களிருவரொடு திகழ்குமரகுருபரனை
வண்மையுறுபலகுன்றி லமர்குகனையற்றைநாள்
செருமுமொலியொடுகனலில் வருதகரிலிவரவல
சின்னவனையுயர்தென்றல் வரையினில்வசிக்குமோர்
சிறுமுனிவன்மயல்களையும் விழியினனையருணகிரி
திண்ணமொடுபகர்செஞ்சொல் விழைபவனைமிக்கவேய்
செறிவனமதனிலெனது கனவின்மிசைவுறுதிபகர்
தென்னவனையனம்வந்து வயல்களின்மரப்பிலே
தினமடையும்வளமருவி யமரருலகெனநிலவு
சென்னைநகரினில்வந்த முருகனையளிக்கவே. (ய)

# செங்கீரைப்பருவம்.

திருமகள்விரும்பியவண்மருமகளுடன்பணி தினஞ்செயும்பெருமைபெற்ற
சிவையெடுத்துச்சிமோந தென்னுயிர்த்துணைவனுர் செந்தழல் விழிப்பிழம்பில்
வருமதலையேயெனது மாதவப்பயனே வருந்திடேலென்றுகொஞ்சி
வளையணிகரங்கொண்டு நீராட்டியுயிரெலாம் வாழ்வதுகுறித்துமுன்னு
ளருமறைக்கிழவன்படைத்தபுவியைக் கைவிரலாலுரைத்துத்திலகமிட்
டணிமுலைசுரந்தபாலுதவிடக்களிகூரு மறுமுகக்குமரேசனே
செருமலியுநவவீரர் துணைவந்தமுருகனே செங்கீரையாடியருளே
சென்னைமாநகர்தழைய வருகந்தசாமியே செங்கீரையாடியருளே. (க)

மாதவரும்வானவரும் மற்றையவருந்தினம் வருந்தித்தொழற்கிரங்கி ,
மணிமிடற்றிறைவனுர் புரிதவமுதிர்ந்தவர்தம் வன்னிவிழியிற்பொறிகளா
யேதமறவந்துசரவணவாவியிற் கமலமேறித்தவழ்ந்துமடவா
ரிருமூவர்முலையமுதருந்தியும்பிகொண் டியங்குமிமவான்வளர்த்த

## வேலுமயிலுந்துணை.

## அறுசீர்க்கழிநெடில்விருத்தம்.

திருமருவுகரகமலத் தேந்தியருமறையொலிக்குஞ் செம்பொற்றாளை
அருமையுறக்கண்ணிலொத்தி மகிழ்வுறுமைங்கரற்கிளைய வருங்குரு
ந்தே- இருமைவினைச்சடமொழியாமுன்னமயின்மீதினில்வந் தெனை
யாட்கொள்வாய்- குருமணியேதவப்பேறே தென்பழனியம்பதிவாழ்
குமரவேளே. (க)

ஆலமெனத்தாலுவுஞ்செவ் விநழுமெயி றுங்கறுத்திட் டுடமேலு
ந்தி- பாலமுராங்களமும்பியாத் துச்சியிற்கூடெழுந்தாவி பதைப்புறு
முன்-நீலமயின்மீதினில்வந் தஞ்சலெனக்கடையேற்கோர் நிலைதந்தா
ளாய - கோலமணிமேடைகள்சூழ் தென்பழனியம்பதிவாழ் குமர
வேளே. (உ)

உடலமெலாமல்லியின் றண்டெனச்சில்லிட்டரையனெனவுரைக்கு
நாடி-படபடத்தம்பரத்தாடிச்சுழிந்தொடுங்கியுயிர்விடுமுன்பகாமெய
ஞ்ஞான-அடலயில்வேலேந்திவந்திவ் வடிமைதனையஞ்சேலென்றுத
ரிப்பாய் - குடவளைமுத்தொளிர்வயல்சூழ் தென்பழனியம்பதிவாழ
குமரவேளே. (௩)

முடிசோர்ந்துவண்கமல முகஞ்சோர்ந்துவிழிசோர்ந்துமொழிசோ
ர்ந்தீரங் குடியார்ந்துள்ளனலவிந்திட் டுயிர்விடுமுன் றோகைமிசைக்
குருதிவேலுங்-கடியாரும்பதினொருவர் படைசூழ்ந்தாங்கிக்கடையேன்
காணவந்தாள்- கொடியாடும்பொன்னெயில்சூழ்தென்பழனி யம்பதி
வாழகுமரவேளே. (௪)

அண்டரியநெடுஞ்சுவாசம் வாய்வழிநின்றெழுந்துடலை யலைத்துலை
ப்பத்-துண்டமதுசீதளித்துக் கண்ணிலைக்கண்ணிட்டாவி சோராமு
ன்னம்-அண்டர்தொழும்வள்ளிதெய்வ யானையுடன்மயின்மேல்வந்தா
தரிப்பாய - கொண்டறவழும்பொழில்சூழ் தென்பழனி யம்பதிவாழ்
குமரவேளே. (௫)

மேகநத்து வாரமூரன்வத்துவாரமுமடைந்து விக்கலுண்டாய்த்-
தேகநடுக்குதலோடு மூர்ச்சையுமே லாடியுயிர் சிதையாமுன்னம்-மா
கநக வெற்பதிர நடம்புரியுந் தோகைமிசை வந்தாட்கொள்வாய் - கோ
கநகத் தடம்புடைசூழ தென்பழனியம்பதிவாழ் குமரவேளே. (௬)

தம்பமென விவ்வுடலந் தரையில்விழுந் தறிவுமங்கித் ,தாதுவும்
போய்ச்- செம்பதும முகக்களையு நீங்கியுயி ரேகாமுன் றிகழ்மயூரத்-
தும்பர்தொழும் பதச்சேவை தந்திந்தக் கடையேனை யுய்யக்கொ
ள்வாய் - கும்பமுனிக் கருள்புரியுந் தென்பழனி யம்பதிவாழ் கு
மரவேளே. (௭)

நெஞ்சளவுங்கபநிறைந்து மாாபுயர்ந்துநெறிதளர்ந்து நிமைசோ கண்கள்-பஞ்சடைந்ததம்பொறிகலங்கிப் பதைத்தாவியேகுமுனம்ப ரிவுகூர்ந்தே - செஞ்சதங்கைகொஞ்சுமலர்ச்சேவடியை நாயடியேன் சென்னிவைத்தாள் - குஞ்சரங்க டிரிவரைசூழ்தென்பழனி யம்பதிவாழ்குமாரவேளே. (அ)

காடிமுத லெதுவேனு நினைத்தவை யெலாங்கொடுமின் கையிறசீவ-நாடியறவொழிந்ததெனப் பிடகாகெடுவறைந்துமெல்லநழுகாமுனம்-ஆடியபைந்தோகைமிசை நொடிக்குள்வந்திவ்வேழைதனை யாதரிப்பாய் -கோடிநவசித்தாகள்சூழ் தென்பழனி யமபதிவாழ குமாவேளே. (கூ)

மறைநவிற்றுநோய்க்குழுவு மூழவினையுங் கோளுமற்றெவ்வகைத் தாந்துன்பும்- பிறையெயிறுச்சமன்பயமுந்தெறநாயேற்குனைவாழ்த் தும்பேறுநல்காய்-நறையிருத்தும் பூங்கடப்பமணிமாாபாநின்னும நவில்வாாதங்கள் -குயைகற்றியருள் புரியுந்தென்பழனியம்பதிவாழ குமரவேளே. (ய)

அறுசீர்க்கழிநெடில்விருத்தம்-முற்றியது.

---

ஊ ச் ல்.

மாமணிச்சிஙகாரமண்டபத்திலுமே
மன்னுகதிாமாணிக்கக்கால்களூடிச
சோமவொளிவயிரத்தால்விட்டஞ்சோந்துத
தூயபசுந்தங்கசசங்கிலிகள்பூண்ட
சாமளநற்பலகைமிசைமகிழ்ந்திருந்தே
தனியம்மைமாதரெதிரெதிாநின்றுட
மாமுகவாககினையவரேயாடீரூசல்
வையாபுரித்துரையேயாடீரூசல். (க)

ஆறுானனங்களினுமருளேபொஙக
வாறிருதோளிலுங்கடம்புவலங்கலாடப
பாறுடுவேலொளிரமதாணியாடப்
பைம்பொனுடைமருங்கிலஙகவினூடப்பூணுடப
பேறாத்தருமுபயமலாத்தாள்மீது
பெட்புறுசிலம்பொடுசதங்கையாட
மாறுதகருணையன்பர்பாலில்வைகுந்
வையாபுரித்துரையேயாடீரூசல். (உ)

வெள்ளிமலைத்தந்தையுளமகிழ்ச்சிபூண
வேழமுகனெனுந்தமையன்மனமபூரிக்கத
துள்ளியதக்கன்மகத்தையழித்திட்டோனுந்
துணைவரொன்பதின்மருநின்றேவல்கேட்பத

தெள்ளியர்சொல்லச்சுதனுமாமன்போற்றத்
திசைமுகமைத்துனன்பணிந்துகாங்கள்கூப்ப
வள்ளிதெய்வயானையிருமருங்குமேவ
வையாபுரித்துரையேயாடீரூசல். (௯)

நற்றாயெனும்பரையுங்கங்கையென்னு
நறுஞ்செவிலித்தாயுமாசீர்வதிக்கப்
பொற்றாமரைக்கோயில்மாமியோடு
புலமைமிகுதங்கையுமேபுகழ்ந்துவாழ்த்த
முற்றுதமுகிண்முலையிந்திரையுந்தெய்வ
முனிவராபத்தினிமாருமாலமேந்த
வற்றுதவானந்தக்கடலேயெங்கள்
வையாபுரித்துரையேயாடீரூசல். (௰)

ஞாலமெலாம்படைத்தவரோயாடீரூசல்
நாதாந்தத்துறைபவரோயாடீரூசல்
வேலணியும்விக்ரமரோயாடீரூசல்
விண்ணுலகங்காத்தவரோயாடீரூசல்
நீலமயில்வாகனரேயாடீரூசல்
நித்தியகல்யாணரோயாடீரூசல்
வாலசுப்பிரமண்ணியரேயாடீரூசல்
வையாபுரித்துரையேயாடீரூசல். (௧௧)

ஊசல்-முற்றிற்று.

---

## கட்டியம்.

சந்தவிருத்தம்.

நதிமதியுமறுகுமணியிபமுகவனிளமகிழுநடமிடுமயூரா பராக்
அதிசதிகொணிருதனெடுகுவடுதகிதவிடுபடையிலெறியும்வீரா பராா
துதிபொதியமுனிவனகவெருளொழியவொருமவுனசுகமருளுநாரா
பதியதனிலுயாபழனிநகரிலுறைகுகவமராபணியுமதிகாரா. பரா(௧)

மண்டலமுமெண்டிசையுமண்டபகிரண்டமும்வணங்குபயபாதாபரா
தண்டமிழரும்புலவாபுந்தியுணினைந்தவை தரும்பிரபலதாதா பராக்
பண்டயாசயந்தனுழியஞ்சலெனஅன்புளைபகாந்தபிரபோதா பராக்
விண்டலநெருங்கியடரும்பழனியங்கிரிவிளங்கவருநாதா பராக (௨)

சித்தமலைவுற்றவடிமைக்குறுதிசெப்பவருதிவ்வியகுணாளா பராக்
வித்தகரியற்குரைபுனைந்தவர்தரத்தைமுனம்விள்ளுதமிழாளா பராக்
சுத்தபரதத்துவவெளிக்கொளிதழைத்திலகுதுய்யவருளாளா பராக
சித்தாகணமிக்கடர்திருப்பழனிவெற்பிலுறைதெய்வமணவாளா (௩)

கட்டியம்-முற்றிற்று.

---

வேலுமயிலுந்துணை.

## அடைக்கலப்பத்து.

பொன்னேமணியே சுகக்கடலே பொருளேயருளே பூரணமே
மின்னே மயிலே றியதேவே வானோர்வாழ்வே யுயிர்க்குயிரே
தன்னேரகன்ற முக்கணெம்மான் றனக்குக்குடிலைப்பொருளுரைத்த
அன்னேபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (க)

பண்ணார்மொழிமங்கையர்மோகப் பவ்வத்தழுந்தி மயங்கியுன்னை
எண்ணாதிருக்குஞ் சிறுநாயேனெனினுந்தடுத்தாட் கொளவேண்டுந்
தண்ணார்கருணைப் பெருங்கடலே தமிழ்மாமுனிவன் குருமணியே
அண்ணாபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே (உ)

ஒப்பாகியநின் னன்பரைப்போலுலகினடித்து நாட்கழித்த
இப்பாவியைநீ யாண்டுகொள்ளா திருக்கினெவ்வா றினியுய்வேன்
துப்பாரிதழம் பிகைபுதல்வா சுருதிமுடிமீ துறைமுதல்வா
அப்பாபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (ஙு)

கணியாவனந்தம் பிழைபுரிந்த கசடனெனினுந் தொண்டாதமைப்
பணியாமூடனெனினுமருள் பாலித்தெனையாட் கொளவேண்டுந்
தணியாசினவை வேலேந்துந் தண்ணங்கருணைப்பெருமுகிலே
அணியாபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (ச)

இமிழ்மூவாசைச் சுழல்விசைகொண்டிழுப்பப்பவவேலையிறசுழன்றே
அமிழ்வேன்றனைநின் னருட்கரைசேரத தாளர்விடினிங் குயவேனோ
கமழ்பூங்கொன்றை வனையுமுக்கட் கருணைக்கடலினுதித்தசெழும்
அமிழ்தேபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (ரு)

இம்மாநிலத்தி லென்பிழைக ளெல்லாம்பொறுத்தே யெனையாண்ட
பெம்மானேயிங் கினிவிடுத்தாற் பேயேனுய்யுந் தாருமுண்டோ
செம்மானளித்த மறச்சிறுமி திருக்கண்மலரு மெழிறபுயனே
அம்மாபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (சு)

பொய்யார்புழுக்கூ டிதைச்சுமந்தைம்பொறிபோநெறியிற் சென்றுலகை
மெய்யாய்நம்பிநாட்கழித்தவினையேன்றனையும்பரிந்தாள்வாய்
மையாரயிற்கட்குஞ்சரிதன் மகிணவடியாக கருள்சுகுண
அய்யாபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (எ)

வித்தாகியசஞ்சிதமொழிந்தால் வினையேதுடலே ததற்குமன
தைத்தானடக்க வேண்டுமெனச் சாற்றுஞ்சுருதி தனைக்கேட்டும்
இத்தாரணிக்கு ளதன்வசத்தா யிடாபட்டுழன்று மயங்குகின்றேன்
அத்தாபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (அ)

சிறியேன்புரிந்த பிழைபொறுத்துன் செய்யமலர்த்தாட்டுணைசேரு
நெறியேதிருப்பி யாளுவையோ நீங்காநிரையத் தழுத்துவையோ

மறியேவனைய விழியுமையாண் மதலாய்நினது மனக்குறிப்பை
அறியேன்பழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (கூ)

இருளேசமைந்த மலர்க்குழலார்க் கேவல்புரிந்தே திரிந்துழலு
மருளேர்நிறைநெஞ்சுடையேனின்மலர்த்தாளிணைக்கென்றுரித்தாவேன்,
பொருளேயடியார் தவப்பேறே பொதியமுனிவற் கருள்புரிதண்
ணருளேபழனி மலைக்கரசே யடியேனுன்ற னடைக்கலமே. (க0)

அடைக்கலப்பத்து-முற்றிற்று.

---

## லாலிப்பாட்டு

இராகம்-பைரவி-தாளம்-ரூபகம்.

தந்திமுகனுக்கிளைய கந்தனுக்கும் லாலி
சதுர்மறையின்மூலனுக்கும் மேலனுக்கும் லாலி லாலி (க)

கந்தமலர்ப்பாதனுக்கும் நீதனுக்கும் லாலி
கதிதருகாங்கேயனுக்கும் தூயனுக்கும் லாலி லாலி (உ)

சீலனுக்குஞ்சிவகாமி பாலனுக்கும் லாலி
தென்பழனியூரனுக்குந் தீரனுக்கும் லாலி லாலி (ங)

வேலனுக்குந்தருவர்குல காலனுக்கும் லாலி
மெய்யாபவநாசனுக்கும் நேசனுக்கும் லாலி லாலி (ச)

ஆறுமுகத்தையனுக்கும் மெய்யனுக்கும் லாலி
அநந்தனுக்குங்கருணைபொழிசித்தனுக்கும் லாலி லாலி (ரு)

ஈறின்மெய்ச்சொரூபனுக்கும் நீபனுக்கும் லாலி
எழில்வள்ளிமோகனுக்கும் வாகனுக்கும் லாலி லாலி (சு)

குன்றெறிவிசாகனுக்கும் ஏகனுக்கும் லாலி
குஞ்சரிசமேதனுக்கும் போதனுக்கும் லாலி லாலி (எ)

வன்றிறல்கொளயிலனுக்கும் மயிலனுக்கும் லாலி
வானிறைஞ்சுமழகனுக்குங் குழகனுக்கும் லாலி லாலி (அ)

கண்ணன்மகிழ்மருகனுக்கும் முருகனுக்கும் லாலி
கங்கையருள்புதல்வனுக்கும் முதல்வனுக்கும் லாலி லாலி (கூ)

புண்ணியனுக்கும் வாலசுப்பிரமண்ணியனுக்கும் லாலி
புலவனுக்கும் முத்தொழில்செய் வலவனுக்கும் லாலி லாலி (க0)

லாலிப்பாட்டு-முற்றிற்று.

## எச்சரிக்கை.

இராகம்-சகானு. தாளம்-ரூபகம்.

துதியைங்கான்றுணையாய்வரு தூயா கார்த்திகேயா
கதிதந்தருள்பழனுபுரிக் கந்தா-எச்சரிக்கை. (க)

பண்ணார்மொழிநயகுஞ்சரிபாகா வள்ளிமோகா
தண்ணார்பொழிற்பழனுபுரித் தலைவா-எச்சரிக்கை (உ)

பரமர்க்குண்மையோதுங்குருபரனே கிருபாகரனே
அருமைத்திருப்பழனுபுரிக் கரசே-எச்சரிக்கை (ங)

கல்லாமனத்தவுணர்க்கொரு காலா வடிவேலா
நல்லாருறைபழனுபுரி நாதா-எச்சரிக்கை (ச)

குறுமாமுனிக்கருள்செய்புமெண் குணனே சரவணனே
துறவோர்புகழ்பழனுபுரி தூயா-எச்சரிக்கை (ரு)

வாங்காதவெம்பவநோய்தெறு மருந்தே சிறுகுருந்தே
நீங்காவெழிற்பழனுபுரி நிமலா-எச்சரிக்கை (சு)

பனிமாமலைப்பிடிதந்தருள் பாலா தண்டைக்காலா
முனிவோர்துதிபழனுபுரி முருகா-எச்சரிக்கை (எ)

பசுமாமயில்மிசையாடிய பாதா குருநாதா
சுசியோருறைபழனுபுரித் துரையே-எச்சரிக்கை (அ)

தறைமீதன்பர்க்கருளுநதேவ தருவே சிவகுருவே
மறைமீதொளிர்பழனுபுரி வரதா-எச்சரிக்கை (கூ)

ஆலஞ்செறிமிடற்றுனருளையா வயிற்கையா
சோலஞ்செறிபழனுபுரிக் குகனே-எச்சரிக்கை (ய)

வானோர்பெரு வாழ்வேயென்கண் மணியே சுப்பிரமணியே
தேனார்பொழிற்பழனுபுரித் தேவே-எச்சரிக்கை (கக)

எச்சரிக்கை-முற்றியது.

## மங்களம்.

இராகம்-அசாவேரி-தாளம்-சாபு.

மங்களம் கருணைமதவேழமுகவன்றுணைவ
மங்களம் பனிமலைமடந்தை பாலா

மங்களம் சர்வபரிபூரணசுகானந்த
மங்களம் பழனிமலைவாழும் வேலா (ஜெயமங்களம்)

மஙகளம் சரவணோற்பவசிவகுமாரகுக
மஙகளம் வனமாலிமகிழு மருகா

மஙகளம தேவகுஞ்சரிவள்ளிமணவாள
மஙகளம் பழனிமலைவாழு முருகா (ஜெயமங்களம)

மஙகளம் தயிததியாதங்குலகாலவடிவேல
மஙகளம தேவாகள்வணஙகு பாதா

மங்களம் ஸனகாதியாக்கருளுமுபதேச
மஙகளம் திருப்பழனிவாழு நாதா (ஜெயமங்களம்)

மங்களம சகலாகிலாண்டகோடிககதிப
மஙகளம சுருதிகளவழுததது நிபுண

மங்களம் சிவசுப்பிரமண்ணியகருணாலயா
மஙகளம் சிவகிரியில்வாழ சரவண (ஜெயமங்களம்)

---

## கீர்த்தனம்.

இராகம்-அசாவேரி-தாளம்-ஆதி.

பல்லவி.

தென்பழனிக்கந்தனுககுச செயமங்களம் எஙகள்
தேவியுமைமைநதனுககுச சுபமஙகளம

அநுபல்லவி.

அன்பாதுதிநேசனுக்கு அருளபிரகாசனுக்கு
இன்பவிலாசனுககு எழிறகுமரேசனுககுத தென்

சரணஙகள்.

எஙகும்பிரக்கியாதனுக்குப் போதனுக்கு மஙகளம
இசைகொளசஙகீதனுககு நீதனுககு மஙகளம்

இஙகிதவிநோதனுக்கு எவாககுமபேதனுககுச
செஙகமலபாதனுககுத் திகழசுவாமிநாதனுக்குத தென் (க)

சீரவளாகெமபீரனுக் குதாரனுக்கு மஙகளம
சேவறகொடிததீரனுக் கொய்யாரனுக்கு மஙகளம்

ஆரும்வெறறிததாரனுககு அரனாகுமாரனுக்குச
சூரசஙகாரனுககுத தோகைமயில்வீரனுககுத தென் (உ)

மாறில்வெட்சித்தோளனுக் கன்பாளனுக்கு மங்களம்
வள்ளியணவாளனுக்கு வேளினுக்கு மங்களம்
கூறருங்குணாளனுக்கு குஞ்சரிகண்ணாளனுக்கு
ஈறில்கிருபையாளனுக்கு ஏழைபங்காளனுக்குத் தென் (௩)

மங்களம் - முற்றியது.



உ

வேலுமயிலுந்துணை.

# ஆனந்தக்களிப்பு.



இராகம் - நாதநாமக்கிரியை - தாளம் - ஆதி.

பல்லவி.

சரணஞ்சண் முகதேவா சரணம் சரணம்
சரணஞ்சண் முகதேவா சரணம்

அநுபல்லவி

சரணஞ்சண் முகதேவா சரணம் இந்தத்
தருணந் தனிலெனையா தரித்தாள்வாய் சரணம். சரணஞ்

சரணங்கள்.

உம்பர்சகாயனே சரணம் தந்தைக்
கொருமொழி யுரைத்தசெவ் வாயனே சரணம் *
அன்பர்த நேயனே சரணம். இன்னும்
ஆறுணர் திகார்த்தி கேயனேசரணம் சரணஞ் (க)

அம்பிகை பாலனே சரணம் தெய்வ
யானைவள்ளிமகிழ லோலனே சரணம் *
கும்பன்சொன் மூலனே சரணம் ஒன்னார்
குடர்மாலைசூடும்வை வேலனே சரணம் சரணஞ் (உ)

அருந்தேநகைப் பரியோனே சரணம் நாளும்
அதிவளஞ் சேர்வையா புரியோனே சரணம் *
பெரும்புகழ்க் குரியோனே சரணம் நாயேன்
பிழையெல்லாம் பொறுத்தாள்வாய் பெரியோனே சரணம் சரணஞ் (௩)

ஆனந்தக்களிப்பு - முற்றிற்று.



# போற்றித்திருவிருத்தம்.

ஐங்கரற்கிளவலாய வருணிறைகுருந்தே போற்றி
துங்கமாமறைக்குமெட்டாத் தூவெளிக்கொளியே போற்றி
சங்கதமூறுமெய்யன்பர்தம்பெருவாழ்வே போற்றி
பங்கயச்செல்விமன்னும் பழனியெம்பரனே போற்றி. (க)

முதனடுவீறுமில்லா மூலகாரணனே போற்றி
கதழொளிச்சுடர்வேலேந்துங் கனைகழல்வீரா போற்றி
மதசமயங்கடோறும் வரமருள்பவனே போற்றி
பதகனைத்தடுத்தாட்கொண்ட பழனியெம்பரனே போற்றி. (உ)

ஆலியந்தடங்கள்சூழும் ஆவினன்குடியோய் போற்றி
நல்லியற்கீரற்காகமுழை யிடித்தோய் போற்றி
மெல்லியலொருத்திவேண்ட மென்கரமளித்தோய் போற்றி
பல்லியங்கிள்ளைபாடும் பழனியெம்பரனே போற்றி. (௩)

சுத்ததத்துவந்தனந்த துரியமெய்யழகா போற்றி
முத்தர்சூழ்திருச்செங்கோட்டு முருகவிழ்கடம்பா போற்றி
சத்தசாகரஞ்சூர்வெற்புந் தகர்த்தவேலிறைவா போற்றி
பத்தர்நெஞ்சகமாக்கொண்ட பழனியெம்பரனே போற்றி. (ச)

அணிபழமுதிர்சோலைக்கு ளானந்தக்கனியே போற்றி
மணிநதிக்கதிர்காமத்துண மன்னுநிற்சுகமே போற்றி
தணிகையென்றுரைப்பார்வன்னோய்தணிக்கும்பண்டிதனே போற்றி
பணிலமூர்திருவேரகநம் பழனியெம்பரனே போற்றி. (ரு)

விசுவநீடண்டமெல்லா மேனியாக்கொண்டோய் போற்றி
சசிதவழ்குன்றுதோறுந் தனிதனிநின்றோய் போற்றி
கசிவிலென்கனனெஞ்சதனுங் கழலிணைவைத்தோய் போற்றி
பசுமயின்மிசைநடிக்கும் பழனியெம்பரனே போற்றி. (சு)

ஐந்தொழிற்கிறைவாபோற்றி யாண்டலைத்தவசா போற்றி
செந்தில்வாழ்கந்தாபோற்றி திரிபுரைமைந்தா போற்றி
கொந்துறுவாகாபோற்றி குஞ்சரிபாகா போற்றி
பைந்தமிழ்ப்புலவாபோற்றி பழனியெம்பரனே போற்றி. (எ)

விண்ணவர்விருந்தேபோற்றி வினைதெறுமருந்தே போற்றி
கண்ணினுண்மணியேபோற்றி கதிர்மணிக்குன்றே போற்றி
தண்ணருள்விளக்கேபோற்றி சரவணோற்பவனே போற்றி
பண்ணருஞ்சுவையேபோற்றி பழனியெம்பரனே போற்றி. (அ)

தேவர்கடேவாபோற்றி திருப்பரங்கிரியாய போற்றி
மூவர்கண்முதல்வாபோற்றி முத்திவித்தானாய் போற்றி

மாவளர்தோளாபோற்றி வள்ளிமணாளா போற்றி
பாவலர்தலைவாபோற்றி பழனியெம்பரனே போற்றி. (க)
ஏரகத்தரனேபோற்றி யிசைசடாட்சரனே போற்றி
கூர்யிற்கரனேபோற்றி கூதாளவுரனே போற்றி
போரிலுக்கிரனேபோற்றி புகழ்தயாபரனே போற்றி
பாரருள்வரனேபோற்றி பழனியெம்பரனே போற்றி.(க0)
சென்னிமாமலையோயபோற்றி சிவகிரியப்பா போற்றி
என்னுயிரானாபோற்றி யேழைபங்காளா போற்றி
சொன்னவானணியேபோற்றி சுப்பிரமணியே போற்றி
பன்னிருகரனேபோற்றி பழனியெம்பரனே போற்றி.(கக)

---

கருணைபங்கடலேபோற்றி கண்ணுதன்மதலாய் போற்றி
தருணசஞ்சிவியேபோற்றி சண்முகத்தையா போற்றி
பிரணவவொளியேபோற்றி பிழைபொறுத்தருள்வாய் போற்றி
சரணநின்சரணம்போற்றி சயசயபோற்றி போற்றி.

போற்றித்திருவிருத்தம் முற்றிற்று.

கொற்றமிகுமின் னயிலைமயிலைசெங் குக்குடத்தைட
பெற்றவுயர்புகழைத்துதியாதறபர்பேரினிதம்
நற்றமிழ்க்குள்ளரி தாகியபாவை நவின்றவென்றன்
குற்றமெல்லாம்பொறுத் தாள்வாய்பழனிக் குருபரனே.

தோத்திரமாலை - முற்றிற்று. ஆகு செய்யுள் - ௩௭௩.

---

# கீர்த்தனை.

இராகம் புன்னாகவராளி - தாளம் ஆதி.

பல்லவி.

வேலிருக்கவினையுமுண்டோ - அஞ்சாதேநெஞ்சே
வேலிருக்கவினையுமுண்டோ.

அநுபல்லவி.

சேலிருக்குஞ் செங்கமல வாவிசூழ்பழனிமலைச்
சேவலன்புகலருமகிலபுவன-காவலன்கரமலர் மிசையொளிர்வடி.

சரணம்.

வாலசுப்பிரமண்ணியதேவனே யுனக் கபயமபயமென
ஓலமிடும்பருய்யவே கணப்பொழுதினிலெழுதினை
வேலையைக்கிரவுஞ்சனை தாரகனைச்சிங்கமுக
வீரனைக்கதிரொதிபொருசூதனொடு சூரனைப்பொடிபடவமமெரிசுடர். (வேலி)

கீர்த்தனை முற்றியது.

வேலுமயிலுந்துணை.

## கட்டளைக்கலித்துறை.

அத்திமுகவற்கிளையகுமரனமரருக்காச்
சத்தியெனும்படைதாங்கியவீரன்றமிழ்முனிக்கு
முத்திநிலையருள்வையாபுரிச்சண்முகன்சரணப்
பத்திசெய்தொண்டர்முன்பேரனறநீடமிப்பற்றலரே. (க)

ஆதியிற்றென்னவனிந்நூலைத்திருத்தியச்சிட்டளித்த
போதுமறிவையிப்போதுமறிவையிப்பொய்யர்மொழி
யாதலின்றபழனிக்குமராவிவ்வளையர்மரு
நீதிவழாதெளியேற்கின்பளிததிடநீயருளே. (உ)

சோதித்தச்சிட்டகுணபாடதனுள்வழுச்சொற்புகட்டி
பேதிகதற்குரையென்றொருபேரிட்டிப் பேயரொல்லாம்
வாதித்தாயர்முன்றேயென்றனைநிற்கவைத்தனன்றே
ஆதித்தனிமுதலேபழனுபுரிக்காதிபனே. (௩)

சினக்குமொருன்னார்களைதிர்ப்பினுமென்னவித்தீமையர்தம்
இனக்குழுச்சூழவிருப்பினுமென்னைவிவர்கட்கஞ்சேன்
வனக்குறவள்ளிமணாளன்பழனிமலைக்குமரன்
எனக்குத்துணைவடிவேலையனுப்புவனேழையென்றே. (௪)

அன்பர்நினைத்தவையாவுமுடித்தன்னவர்க்கரிய
இன்பமளிப்பதறகோர்சித்தனுண்டவனெங்குளனேற்
றென்பழனிக்குன்றில்வாழ்வோனெல்லாம்வல்லசித்தனுக்கு
முனபருளையனவனாருபுதியெண்ணமுற்றுறவே. (௫)

இப்புத்தகத்திற்கதிகாரந்தந்தெளியேனியற்றும்
எப்புத்தகத்தையுங்காப்பாய்தரங்கமெறியுமுத
திப்புததமிர்தமொழிவள்ளிபங்கவெத்தேவருனக்
கொப்புத்தமதன்பரன்பிலுதிக்குமயூரத்தனே. (௬)

இன்றென் னிறைநீரா னின்றுன் னடிமையென்ப
தின்றெவருங் காண வியற்றியவிர - நன்றினுக்கி
யாதுகைம் மாறேழை புரிவேன் பழனிமலை
மீதுறையு மன்பர்வாழ் வே. (எ)

வெப்பனனஞ்சொததவொன்றுரொடுங்கவும்விஞ்சைகற்றோர்
ஒப்பனைவர்க்குமிந்நூலெனக்கூறியுவப்புறவுஞ்
செப்பனவான்கொங்கைவள்ளிமணாளன்றிருப்பழனி
யப்பனருள்புரிந்தான்மகிழ்ச்சிக்கடலாழ்ந்தனமே. (அ)

கட்டளைக்கலித்துறை-முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.



உ

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியுங் கச்சியு மிடங்கொண்ட
படம்பக்கந் திருவேகாம்பர முடையார்.

# மகிழ்மாக்கலிம்பகம்.

இஃது
பிரஸிடென்ஸிகாலேஜ் மாதெமெடிக் புரொபேஸர்
ம-ள-ள-ஸ்ரீ
இராயபஹதூர்:
பூண்டி. அரங்கநாதமுதலியாரவர்கள்
ஆசுகவியாகச் சொல்லக் கேட்டுக்கொண்டபடி
ஷை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்புலவரும்
சமரசவேதசன்மார்க்க சங்கவித்துவான்களில்
ஒருவருமாகிய
தொழுவூர் - வேலாயுதமுதலியாரால்
செய்யப்பட்டு
அம்முதலியாரவர்கள்போஷணையால்

சென்னை:
மிமோரியல்அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது:

சர்வஜித்து௵ தனுரவி௴
Madras December 1887.

உ

சிவமயம்.

இந்நூல்செய்தவரோடு

ஒருங்குகற்ற ஒருசாலைமாணாக்கராகிய

ம-ா-ா-ஸ்ரீ

காயாறு

# ஞானசுந்தரவையரவர்கள்

சொல்லிய

## சிறப்புப்பாயிரம்.

—:o:—

ஆசிரியவிருத்தம்.

பேசுமறைப்பொருளன்பர்க்கின்பூட்ட
மாமகிழ்க்கீழ்ப்பிரியாவாக்கம்
ஆசுகவிபொருந்தவருந்தமிழ்மாலை
யணிகென்னவறிவாற்சான்ற
வீசுபுகழ்ப்பூண்டிமகிழரங்கநாதன்
சொல்விளம்பினால்
மாசிலருட்குரவன்வழியொழுகு
வேலாயுதனாம்வாய்மையோனே.

சுபமஸ்து.

———

சிவமயம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியுங் கச்சியு மிடங்கொண்ட
படம்பக்கந் திருவேகாம்பர முடையார்.

# மகிழ்மாக்கலம்பகம்.

## காப்பு.

வஞ்சித்துறை.

திருவாரொற்றி
யொருவேகம்பம்
மருமாத்தமிழைத்
தருமேரம்பனே.

கட்டளைக்கலித்துறை.

கச்சிமலர்ந்ததொருகாமக் கோட்டத்துக்கம்பரசி
நச்சியகம்பச்செழுந்தேனை நாளுநயந்துளத்தே
வைச்சுவந்தொற்றியிருந்தேற்கு வான்சுவைதான்விளைத்த
துச்சியிருந்தடிகாறுங் கலம்பகத்தோர்வேழமே. (௧)

ஒற்றியமர்ந்துயர்மாவடி வீழுமொருகனிக்கே
பற்றினிருந்தேன்பரிசு பரிந்துகலம்பகமாக்
கொற்றமயிலொடுசேவலும் பெற்றோர்குறத்திபின்போம்
வெற்றிவைவேலவ்விடலைதந்தான் சுவைமெய்யுறவே. (௨)

---

ஒருபோகுமயங்கிசைக் கொசசகக்கலிப்பா. ஆறடித்தரவு இரண்டு.

பொன்மகள்சொன்மகளேத்தும் பொலம்புரிசெஞ்சீறடியாள்
வின்மலைவேந்தொருபுதல்வி வியலிருக்கும்புகழ்முதல்வி
தன்மலர்ச்செங்கைபற்றித் தீவேட்டபின்றனித்து
முன்மருவுநக்கத்துப்பலிகொள்ளு முயல்வொழித்து
நன்மூணைச்சீரறமோம்பு நயப்பெய்தியிருநாழி
நென்மலையாவித்தாக நிறைகற்பினுட்களித்தோய். (௧)

பரிதிநெடுமண்டிலத்துப் பகல்விளக்கியின்றுழையும்
விரிகதிரினனுப்புரைபல் விலகண்டமத்தனையும்
இருவிமிசைப்பசுக்கணத்தின் முற்றூட்டாவினிதமைத்துத்
தருவளனும்வான்யாறும் வளம்படுத்தித்தரணிமிசை
யுருவளர்பூந்திருக்கச்சி யொருகம்பமுருவரையா

இடையிடையே தனிச்சொற் பெற்றுவந்த நான்கடித்தாழிசைகள் ஐந்து.

வெண்பகடுபசும்புரவிக் கருங்கடாமுதலவெலாம்
எண்பகலில்பாலகர்க ளினிதுலவவிட்டருளி
நண்பகலாதொருகுண்டை வைத்ததநூஉநம்புலின்றி
மண்பகலெலாமேயந்தால் வாய்க்குமோவுழவையா. (க)

அதுநிற்க.

அலைத்தெழுந்தபவவினையிற் கடலேழும்புயலேழும்
நிலைத்தெழுந்தவருட்கழனித் திருவூறணிலமுணங்கா
சிலைத்தெழுந்ததகாரான் மைந்தர்திருவூர்தியென்றால்
வலைத்தநிரைசாலாதே வாய்க்குமோவெருவையா. (உ)

ஈங்கிருக்க.

பரந்ததிருப்பாற்கடலைப் புலிப்பறழ்க்குப்பரிந்தளித்துச்
சுரந்தசுரநதிசகரர் சோபமறத்துணிந்தளித்து [ல்
வரந்தரமண்ணெடுத்தடைத்துக கொண்டதும்பாண்டியன்சார்பே
நிரந்தசடைப்பற்றுநீர்ப் பாய்ச்சலுக்கோநேருமையா. (ங)

அற்றுக.

ஒருமகனார்பெருமயிற்ற ரொருமானரிருமனையர்
மருமகளுருருவிலியர் மைத்துனர்வாங்காவுறக்கர்
பெருமகமாமடிகளவர் மறித்தலையரடிபெயரார்
வருமகமைபார்ப்பவரோ பண்ணையாள்வளமையா. (ச)

எனினுஙன.

மறம்வளர்த்தபுலப்பட்டி மலககள்வர்மயங்காமே
திறம்வளர்த்தபாரிடங்கள் சேவலெனத்தெரிந்தவையும்
புறம்வளர்த்தபலிக்கோடும் புகலவொன்றேவெண்ணான்கா
மறம்வளர்த்திட்டெம்மன்னை யருட்போகமூட்டுவதே. (ரு)

அராகங்கள் ஆறு.

உழல்வரு திரிபுர மதுபொடி படவொரு
தழல்விழி யழல்கொடு கணலது புரிபுமுன்
விழலினி லிருவரொ டொருவரை யுறுகடை
கழலற வுயர்குட முழவுற நிறுவினை. (க)

திருவுடைவிடைதரு முகனுடையறவடி
வொருவனையுறைமலை முழுவதுநிலைதரு
பரமொடுவிரியுல குயவருநெறிதரு
குருவெனவிருவினை தலைபெறவருளினை. (உ)

தகைபெறுமலகில கலையுணர்வுலகுணர்
வகையொடுமுழுவல பிரமதகணரவர்
தொகையளவிலையவை யடையுவுமிகைதரு

மனுவடிவுடையவர் மலிதவநிதியினர்
தனிகாவடிவினர் தமையுணருணர்வினர்
முனைவர்கண்மறைவல முனிவரிருடிகள்
அனைவருமவரவ ரொருதொழிலுறுவர்கள். (௪)

இருதுவுமதியென வினைதொகைபெறுகணர்
ஒருபயனுகர்வல ரலதொருதொழிலிலர்
தருகளனவையுறி னுறுபுகழ்சிலசொல்வா
கருதருதலைவன வரவவைகருதலர். (௫)

இவரனைவருமொரு புடையுறவிரிதிரை
அவனியின்மனைமக வருநிதியுடனுயிர்
தவநினவெனவெணி தகுபணிபுரிநரை
உவமனில்வகைபல வுளநிலைதுருவுறி. (௬)

பெயர்த்து மாறடித்தர விரண்டு.

கால்பெற்றும்பெருதும்வரு மூக்கோரைநாத்திகஞ்செய்
சால்பற்றசிறுபுற்கண் மாயாவாதப்பூண்டாங்
கிளைத்தகளைமூடாது கிறிசெய்துறைப்படிகெடா
தளைத்தமயலலவன்மட் மாம்விட்டிலழியா
நெடுநீராதியகிள்ளைக்களிறெலிவன்சாரா
கொடுநீர்மையவைபுரியா தளிக்குநர்யார்கூறுதியால். (௧)

கடுங்காமவெள்ளம்பாய்ந் தாகாமேநீர்ச்சாவி
கொடுங்கோபவெயிலுறைப்பக் கதிர்ச்சாவிகூராமே
கொலைகளவுமுதற்பிணிக டவிர்த்தன்பினீர்பாய்ச்சி
தலையளியாங்காப்புமிகத் தனிப்போகம்விளைவெய்த
பதமுணர்ந்துபாலுய்ப்பா ரியாவரேபழமறைசொ
லிதமுணர்த்தவருட்கொண்ட வெந்தையெந்தாயியம்புதியால். (௨)

பெயர்த்தும் வந்த வீரடித்தாழிசை பன்னிரண்டு.

உரையுணரும்பனவர்மட மாதரிடுபலிதேர்ந்துண்
டுறையுமம்புமாதலினா னருமேயுழவுனக்கே. (௧)

ஒருங்காயவுலகெவற்று முயர்ந்தாருமொப்பாரு
மிருந்தாலுமுதவிசெய்வா ரியாரையுநீபடைத்திலையே. (௨)

கருமானையுரித்தனைநாற் கம்மாளர்தலைகொய்தாய்
பெருமானிங்குழவுவினைக் கலப்பையெங்குப்பெற்றனையே. (௩)

வளங்களமைவுறப்புரிய நானூருமயானமென்றால்
[illegible] (௪)

பல்வேலிப்பயிர்தழைப்ப வைப்பரூர்தொறுநின்போல்
நெல்வேலிவைத்தாரை நீணிலத்திற்காணேமால். (௫)

ஒற்றியூர்வைத்ததம்பி னுறைவரகவாரூரும்
உற்றமச்சோற்றுத்துறையொன் றுறுதிபெறவைத்ததென்னே.()

நெய்வேள்விப்பிறர்செய்யப் பொருதழித்தோரளவளவா
வைவேள்விசெயத்துணிந்த தழகறமீவார்க்கறமுரைத்தே. (௭)

ஆளின்றிக்குற்றேவற் காவணஞ்செய்தடாவழக்கா
லாள்கொண்டங்கவற்கேவ லாளாகித்திரிந்தனையே. (௮)

விளைவித்தவினைப்பாடு மெய்யுணர்ந்துமுணரார்போன்
முளைவித்துவறுத்தூட்ட முழுவிருந்துமாயினையே. (௯)

வைப்பார்போலோடுகோவ ணம்வைத்துக்கரவிற்கொண்
டிப்பாரில்வல்வழக்கிட்டது வொப்பதுண்டேயோ. (௧௦)

உடையானென்றொருபேரிங் கெவ்வாறேவுற்றததற்
கடையாளமறிந்துறைப்பார் யாரென்பாரவர்சிலரே. (௧௧)

படம்பக்கமிடங்கொண்ட பழம்புகழ்த்தியாகேசனென
உடங்கியையாரணமொழிகேட்டுவந்தடைந்தார்புலவரன்றே. ()

நாற்சீரடி யம்போதரங்கம் இரண்டு.

உரைக்குமவ்வுரையெலாமுலகனைத்தையும்
வரைப்பினின்வான்புகழ்மாந்திநின்றதே
வள்ளனின்கருணைமாமடைதிறந்தன்றே
கள்ளவக்கூற்றுரங்கடந்துசென்றதே.

நாற்சீரோரடி யம்போதரங்கம் நான்கு.

கையதுவில்லெனக்கனகமால்வரை
மெய்யதுவில்லெனவெள்ளிவீழ்வரை
யாவருமறிவர்காண்மன்றம்பொன்னது
மூவர்தந்திருவெலாமுடிவினின்னது.

முச்சீரோரடி யம்போதரங்கம் எட்டு.

தனதனையிருளாநகைசத்தனை
சதமகனடிமையிசைத்தனை
மனுவழியுலகையசைத்தனை
மலையரசுறவுபசைத்தனை.
முனிவலனுடலினிறீஇயினை
வரிவளைபகர்செய்குறீஇயினை
கனியிறைகுருவினுறீஇயினை
கடமுயிர்பொருள்களெற்றீஇயினை.

இருசீரோரடி யம்போதரங்கம் பதினாறு.

சித்தியெத்தனை
யுற்றதத்தனை
தெளிநர்கைத்துணை
பெறவும்வைத்தனை.
முத்தியாயினை
பத்திமேயினை
முதல்வனாயினை
முழுதுமேயினை.
தலைமைசான்றனை
புலமையான்றனை
தவமுமார்ந்தனை
நவமுமோர்ந்தனை.
அலகிலாணையை
அளவில்கோணையை
ஆக்கவல்லையே
யார்க்குநல்லையே.

எனவாங்கு: இது தனிச்சொல்.

ஆசிரியச்சுரிதகம்.

முறைவெளிப்படுத்த மறைமொழிவழிதெரீஇப்
பழிச்சினர்பரசிப் படர்குறிம்பரிசில்
நல்குதல்வேண்டு மல்லதையிவறுபு
காசிலைச்சிறிதுமெனக்கைவிரித்துத்
தேசுடைமன்றத்துச்செந்தீயேந்தி
மெய்வெளிகாட்டிவேண்டுநர்வேண்டியாங்
கையமின்மையாடினுமகலார்
காலைத்தூக்கிக்கொண்டதுசானு
மாயினும்விடார்நேயமிக்குநர்
ஆதலினடிகேளாய்தலைக்கமைதது
மாதுகாதலியும்வள்ளனீரும்
காதலினளித்தகம்பனுசோறமையும
குடிமுழுதுரிமையுமக்கேவழிவழி
யெமையாட்கொளினுமக்கெய்துமில்வாழ்க்கையே. (க)

நேரிசைவெண்பா.

இல்வாழ்க்கையாகா தினிதாகவில்வாழ்க்கை
செல்வாயறுதொழிலைச்செய்தருள்க—மெல்ல
வறுதொழின்மேற்கொள்ளற்க யார்க்குமதிமேலேர
...மனெயொற்றியூர்க்கே யுவந்து. (உ)

கட்டளைக்கலித்துறை.

உவந்தாயொருகம்பமாயினு மென்னையுழைப்பொன்றின்றிச்
சுவந்தாங்கிக்கச்சிமயானத்தி லுடுதறக்கமொலாம்
நவந்தாங்குறஞ்செயிமவான் மகருளநாணிப்பிலந்
தவந்தாங்க நாங்கள்பவந்தாங்கவிட்டையதாரணிக்கே. (௩)

நேரிசைவெண்பா.

தாரணிக்கேதாரணித்தேர் தாரணியாநின்றக்காற்
பேரணிககேபேரணியாப் பேசுவதென்—னாரணிக்கே
வனணிப்பெருஞ்சூழல்வைத் தொற்றிவந்தீரேல்
என்னிணிப்போர்ச் சேவகமேற்றீர். (௪)

கட்டளைக்கலித்துறை.

ஏற்றீர்நகையிகல்பெற்றும் புரஞ்சுடவேறுமண்டேர்
காற்றீரவைப்பதன்முன் னச்சுமிற்றதுணைக்கணைக்குந்
தோற்றீரவலவன்றறிதலை யாவன்றுணையுமிலீர்
சாற்றீரக்கச்சிசேர்புரவடிக் கீழ்க்குடிச்சார்பிதென்னே (௫)

கொச்சகக்கலிப்பா.

என்றொற்றிக்கொண்டாலும் யாதொற்றிப்போவதிலை
முன்றொற்றிக்குறிவைத்தாண் முளரிக்கைவண்டாலே
மின்றொற்றிவிளங்கிடைச்சி விழைதருபாறயிர்பெய்து
பின்றொற்றித்தரணிக்கேன் பெருமவுனைக்காணுதற்கே. (௬)

கட்டளைக்கலிப்பா.

காணுதற்கரிதாகுங் கள்ளக்கம்பன்
காதல்செய்பவர்காசெலாங் கொள்ளைகொண்
டுணுறக்கமிலாதலமந்தவ
ருள்ளவான்பொருள் யாவுங்கவர்ந்தரோ
பூணுகோவணம்வைத் தொளித்தங்கவர்
பொதியெலாம்வஞ்சித்தோடு மோர்நாள்களரி
நாணுமாதர்கலை வளைவவ்வித்தா
னல்லகம்பனெனப் பெயர்பூண்டதே. (௭)

கலிநிலைத்துறை.

பூண்டாராமைபொங்கரவென்புபொருகேழ
லீண்டார்கோடுபுன்றலைமாலைநிறைசெல்வ
மான்டார்மொற்றியார்பரமேசனவரென்பார்
வேண்டார்போலும்பேர்க்கமைவேட்ம்விபப்பம்மா. (௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வியந்தவரைவியப்பழிக்குமுரண்மறலி யுரநகிழிந்துவிறலும் வீயப், பயந்தடைந்தபாலனுயிர்பரிந்தளித்துப் பயங்கரப்பேர்ப டைத்துவீர, வயந்திகழுங்கழற்பாததர் மணிமேகாம்பரமுடையா ர்மன்றவாணர், நயந்திருந்தாரொருகன்னிகாப்பினென நவிலும் வையநகையாமன்றே. (கூ)

பிச்சியார். இதுவுமது.

அன்றிருக்குமுதல்வர்சா ருபத்தாலே யணிசூலங்கையேந்தி யாடுகின்றீர், நன்றிருக்குமொற்றிநெடுந்தெருவிற்பிச்சி நகைமலர் சூடியபிச்சியாரோயன்பை, நின்றிருக்குநுதலேர்க்கானேர்ந்தவேலை நீர்விளித்தீராணுவினிவிங்கேதுந், துன்றிருக்குக்கரும்புகையேமி க்குச்சாலத் துயர்செயுந்தீர்வகையினுதாளுங்குழீரோ. (க0)

அம்மானை-கலித்தாழிசை.

ஆதரவாரேகாம்ப்ரமுடையாரோரொட்டு
மாதர்தோளாசைமருவினர்காணம்மானை
மாதர்தோளாசைமருவினரேயாமாகிற்
காதல்வைப்பளேகாமக்கண்ணிகாணம்மானை
காணரும்போரியர்க்கியாரேகாதல்செயாரம்மானை. (கக)

கலிவிருத்தம்.

மானேநோக்கிமகிழ்வலப்பாதியின்
ஞானநோக்கினர்பாதிநயந்ததை
யேனைப்பாதியிற்பாதிசெய்தேற்றிப்பின்
கானமாக்கினரொற்றிககண்டோல்கற்றே. (கஉ)

புஃறொடைவெண்பா.

தோலுந்துகிலுங்குழையுஞ்சுருடோடும்
பால்வெள்ளைநீறுமபசுஞ்சாந்தும்பைங்கிளியுஞ்
சூலமுந்தொக்கவளையுமுடைத்தொன்மைக்
கோலமேநோக்கிக்குறித்ததிருநாமம்
போலுமேயம்மையப்பனென்னுப்பொய்யாகாமைச்
சாலவியலுமொருவனெனப்பாலமைத்த
சீலத்தமிழிற்றெரிந்திசினோர்சீரறிஞர்
மாற்றசிந்தையிற்கச்சிவுளம்பாடிசீர்
ஏலப்பெறுகவெமக்கு. (கங)

செவிலிகூறல். கட்டளைக்கலித்துறை.

குடக்குட்டுவன்புனையொண்வண்ணத்தார்மகிழ்வார்மீகிழார்
இடக்குட்டுவன்றனையென்மகளேயினியாரினியார்
கடக்குட்டுவெந்துவங்காட்டுநூர்காதலுங்காதல்கொலாம்
[illegible] ளையென்றுள்ளம்பரித்தனையே. (கச)

புயவகுப்பு. வண்ணவிருத்தம்.

தனன தனதனன, தனன தனதனன, தனனதனதனன,
தத்தத்தனந்தன.

பரவுமுழையுழுவர், பரசுபதயுகள, பதுமமலர்முருகு,
வைப்புற்றணங்கின
பறவைநிகர்நகர, மெரியமலைகுழைய, மகிழ்வின்மகளுதவ,
வெற்பற்கிணங்கின
பகல்செயிருசுடர்க, ளுறுபுணகலவகழ், நயநவிறவுளர்கை,
கைப்பற்றிநின்றன
பசியவளைநகிலி, னணைபுசுவடுபுரி, பருமமணியிடைகொ,
டிச்சிக்கிசைந்தன (வ)

விரவுகிளிமொழிசெய், பனவர்மனைமயில்கள், விழைவினகமருவ,
துப்பிம்பசைந்தன.
விரகினுளியல, மணியவணிபுலிகொள், விபுதசடைமவுலி,
யந்திக்கியன்றன
விரைசெய்நறுமதலை, வழியுமதுசகுன, வளியர்சிறுகுடியில்,
விற்பெற்றுயர்ந்தன
விமலமுறுபுகலி, முனிவர்தமிழ்மறையி, னமுதவருவியொடு,
பொற்பிற்பொலிந்தன (௭)

உரவுதொயில்வரையு, மிறைவிகரமலரோ, டகருமிருகமத,
மொய்த்துக்கிடந்தன
உலகமுயமறையி, னடுவுணடுவுணடு, விலகுதிருவைவன,
முற்றிப்பரந்தன
உடலொடுணர்வுரையு,மொருவவொருநல்வழி,யொழுகுமவரமல,
முற்றுற்றதொண்டகம்
உறுவமலதிமிர, மகலவுயர்கயிலை, மலியும்வடநிழலி,
ளெட்டவ்விபஞ்சிய (ஜ)

கரவிலருணடந, நவிலுயிரவுரிய, கவுணிகுறளுரிய,
பட்குக்கிளர்ந்தன
கருவிபொருவகைய, புணர்த்லைமையுரிய, முதலதிணையியைப,
வொத்துக்குறிஞ்சியைக்
களிறுதரளமன, முடையபரவவொளி, ரறிஞருடையதொரு,
கச்சிப்பெரும்பதியர்
'கனகசபையில்வெளி, யுருவுபெறுமமுதர், கருணைமொழியெழுது,
கொற்றப்புயங்களே. (கரு)

கொற்றியார். ஆசிரியவிருத்தம.

கொற்றியாரேயெங்கண்மாமடிகள் குடமாடல்கும்பிட்டாங்கே
பெற்றனீர்போலுமெழிற்குடமாட லவர்போற்சங்காழிபெற்றீர்
ஒற்றியூரிறைவரிடமாலாயுற்ற ரவர்நீரொற்றியூரே
பற்றினேமிடமாலாயுற்றனிரோற் சாருபம்பலித்ததாமே. (கசு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம.

பல்லார்வெண்டலையேந்தித்தோலுடுத்துப்பலிக்குழன்றபஞ்சாக்கச்சி, வல்லாளாவலவிடத்தைக்கடல்வேந்த னினக்களித்தான் மணிபொன்னுடை, எல்லாமுங்கண்டந்தமாலுக்கு மகட்கொடுத்தானில்லார்தாரை, எல்லாருமென்னுவர்செல்வனைச்சிறப்புச் செய்வனொன்றறியன்றவாறே. (கஎ)

நேரிசைவெண்பா.

என்றமதென்கொலொற்றியார் கையிலிரப்போடாக
அன்றுவணங்கா வயன்றலைதான்—நின்றமதென்றால்
கோளில்பொறியிற்குணமிலவே யெண்குணத்தான்
றாளைவணங்காத் தலை. (கஅ)

இதுவும்நேரிசைவெண்பா.

வணங்காத்தலைக்சிவள்ளல்பலியோடா
விணங்காத்தலைசிறந்ததேற்கும்—அணங்கேகேள்
சொல்லப்பயன்படுவர்சான்றோர்கரும்புபோற்
கொல்லப்பயன்படுங்கீழ். (ககூ)

கட்டளைக்கலித்துறை.

கீழிடந்துமமேம்பறந்து மக்கேழலும்புள்ளுமொரு
வாழிடந்துன்னிலமன்னுயிரத்தனைக்கும்புகலாச்
சூழிடமாமகிழ்வாயொற்றிநின்றமது நூற்பெயரா
வீழிடமேவவைத்தார்பொதுவார்க்கென்னவீறிதுவே. (உ0)

மறம - இரட்டையாசிரியவிருத்தம.

வீறுசெருக்கிற்சிறுவிதியால்வேட்டமகககாதலின்வந்த
விண்ணோர்பாடுவிளம்புவதேன்விரிஞ்சன்பறந்தான்குட்டொன்
சீறுமவன்றுதையர்தோள்களிசிதைந்தமனைவிமருங்குமணங் [றால்
தேருநாசிவார்குழலுஞ்செவியும்போயவவண்மருக
னூறுபட்டானினங்குணமுற்றிலன்கண்பல்லுமொருங்கிழந்தா
னுவனோர்தோழனொருவில்லியாலேயுணராய்போலுமது
தேறுமொருமாமகிழ்ப்பொருளையல்லாற்றேறுமறக்குடியோஞ்
சிறுமிமகிக்குயவளோநுமதீர்வேர்துணையைச்சிறுதாதே. (உக)

சித்து - சந்ததத்தாழிசை.

தேவரிற்பெரியமாமகிழ்ப்பரமர்செய்யதாண்மலர்சுமந்திடுஞ்
சித்தரேமுடையவித்தையோபெரிதுசீர்மலைக்கிறைவன்மாமகள்
ஆவலுற்றபடிகந்திருத்தமொடுகூட்டிலிங்கமதைவைப்புலவ்த்
தருமனேசிலையிணக்கிவீரமுறைபூரயானியரிதாரமு
மேவவுப்புமுப்பூமுடிந்தவகையாவர்காணவலர்கண்டபின்
வேறுபோக்கதைவிரும்பிலார்களெனயக்களங்குமுடிவாயிடும்
தாவறும்பழையலோகம்யாவுமுயராடகம்புரியலாமிதிற்
றமனியக்கிரியுமுறவதாகவடைந்தையார்க்குமுனளித்ததே. உஉ

இதுவுமது - பதினாசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அளித்ததவள்கணவருகருமுன்னநாமே
யணியப்பொற்பணியாகச்சிறுகணுகங்
களித்துப்பொற்றலையாட்டிககளங்கமாகக்
காட்டுமிரும்பிறையேதாளகத்திற்கூட்டி
யொளிந்தநில்லையிங்கொன்றுமவாதோழர்ககன்
றாறுசெங்கற்பொன்னுனதுலகநாண்ட
இளித்தவாய்மைத்துனர்க்கும்பொன்னைத்தந்தோ
மினியூரொற்றியதுமகிழ்ந்துமாதோ. (உ௩)

தலைவிருப்புரைத்தல். கட்டளைக்கலித்துறை.

மாதைக்கலம்பகத்துத்தழையாற்றும் வனப்பையெல்லாம்
நீதற்பசந்நுவகந்தனன்பின்னைந் திணையுரைத்தோன்
ஆதித்தன்முன்னேரகத்தியன றககனுமாய்ந்துவப்பார்
வேதப்பொருளகச்சியூர வெவனகொலவிளம்புவதே. (உ௪)

சம்பிரதம். எணசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விளம்பருமாமகிழ்வாய் மெய்ப்பொருளுணரெம்முடையார்
வியவரர்களொருபொருளா யணிமாதியாக
வளம்பெறவண்டங்க ளிந்திரசாலமென்ன
மதித்தார்கவாலைக்கா வதனினீரத்தம்பம்
உளங்கொளருணைபுரியி லக்கினித்தம்பதோ
டுயர்வாயுததம்பங் காளத்தியிலத்துளவிற்
களங்கமில்கோகரணமிக வியர்தார்களந்த
கணபதிக்குங்ககரணங் காட்டுதுமெய்ப்பெறவே. (உ௫)

இதுவுமது.

மெய்யாவாகாயநடை யெவர்க்குமகற்பிப்போம்
வேண்டினெந்தமலைகளையுங் கனகம்தாக்கிடுவோம்
பொய்யாதநூன்முறையே பற்பஞ்சுண்ணங்கள்
பொருந்துசிந்தூரமமெவரும் புனைந்துளாக்கப்புரிவோம்

கையாமேபுலவர்க்குச் சாவாநன்மருந்து
நல்கினர்முன்மாமகிழ்வாய நங்கள்குருநாமும்
ஐயாவஞ்சங் கற்பமெல்லாமுமுடிந்தோ
மாறா யுகமபஞ்சோ றாசையொழிந்திலதே. (உசு)

நேரிசைவெண்பா.

ஆசையடங்கக்கையாரும் வானமண்ணினகம்
ஆசையடங்கக் கைத்தாருமே—மாசறவிரு
சும்மாவிருக்குமுடிச் சோதியடிநீழனடுச்
சும்மாவிருக்குஞ் சுகம். (உஎ)

இளவேனில். கட்டளைக்கலித்துறை.

இரும்பிறைக்கும்பொன்னிதழிக்கு மாமுடியாரொற்றிசூழ்ந்
தரும்பிறைக்கும்பொழின்மாங் குயிலோடணியார்கடக்கும்
கரும்பிறைக்குங்குடை வெண்பிறைக்கும்வடக்காங்கழிக்கா
திரும்பிறைக்கும்வலிக்கும் மிளவேனிற்றுணைசெய்ததே. (உஅ)

நேரிசைவெண்பா.

செய்கைமுற்றுந்தவமே தீவத்தாலொன்றாலும்
உய்கைக்குறுதி யுனகழலே—மெய்யுருவெட்
டாயினையேகச்சியாசே யெவன்வேறு
பேயனையேனெண்ணியது பேசு. (உகூ)

நேரிசைவெண்பா.

பேசும்பொருளுக்கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின்மணியொன்றமாணிக்க - வாசகமாந்
தெள்ளமிழ்தைச்சுவைத்தசீர்ச்செவிக கென்றொற்றியப்பர்
கள்ளமொழியேறுமோகாண் (௩0)

வெறிவிலக்கு - கட்டளைக்கலித்துறை.

காணீரிவ்வேளைக் கரும்புகைமிக்குச் செய்கண்கலக்கம்
வீணீரம்மையை யழிப்பீ ரிதென்வெறி யாட்டனைமீர்
பூணீர்மகிழ்க்கம்பர் பூங்களவேணும்புனையுமலர்
தோணீர்வலம்புரி யேனுங்கொணர்மின்சுகந்தருமே. (௩௧)

மாலைகண்டிரங்கல் - வெளிவிருத்தம்.

தருமேயிதழித்தார் கொடுவந்ததாராவே
அருமேகாம்பர முடையாரவருள்ளாராவே
ஒருமேறென வேதாரிசைசெய்யுமூராவே

காரகண்டுகவலல் - அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொடியார்வளராக் குயிலினத்து மயிலினினங்கள்குளிர்தூங்க
விடியார்வளராக்குயிலின தந்தாலினைந்தநாளபோயினமும்பொற் [ழ்
றொடியார்க்கிடுக்கண்செயத்தோனறித் தோன்றிநின்றமாமகிழ்வா
அடியார்க்கினியரரனபர்பாசறைக்கு மாங்கொலவையம்மா (௫௩)

கலி - எணசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அம்பூதர்கள்விருப்பாலாயப்பாடிக்குடியு
மாகிமதுவாவிகுடித்தப்பெயர்மால்பூண்டான்
கமமாவத்தேவர்சுராராறோரோவப்பா
சுரையுண்ணப்பெறுவசுரர்துட்டராறாறாற்
கம்மாளராதிக்ாரியக்காரரெல்லாங்
களியரேயாகவுயர்மாமகிழுவாய்முக்கட்
பெம்மாறெரஙகள்விருப்பாற்பெண்ணையெ ம் ரும்
பிரியாமலும்றன்ரேற்பேசுமதென்பிறர்க்கே. (௫௪)

இதுவுமது.

பிறப்பிறப்பில்பெருந்தகையார்மாமகிழார்கருணைப்
பெருக்கப்பாடுதலல்லாற்பிறித்தீயாக்களியேம்
திறத்துரைப்பேமறைப் பொருளாஞ்ஞுணர்வாரார்பசுவைத்
தீவேட்டலறத்துளெலாஞ்சிறந்த தென்பர்திணைக்கே
இறைச்சிகருப்பொருளென்னவியல்வல்லோர்வகுத்தா
ரெவ்வுயிர்தானூன்விருப்பமிலாததந்தணராம்
அறத்துருவர்வேடனெச்சி லூனுண்டார்திற்க
வாகரவேறிலெநெறி வீடடைவதற்குமறியே. (௫௫)

இதுவுமது.

அறிவுடையாருன்வெறுக்கா ரகத்தியர்மார்க்கண்ட
ராதிசிவஞானிகள் சாகாநிலையாரானார்
குறிப்புடையூனோம்பியன்றோ வெறுத்தவர்பாதகர்பேர்
குறித்தவர்க்குங்கதியில்லை சத்தியந்தக்கனவேள்விச்
செறிவுடையவவிப்பாகஞ் செருச்செய்தும்பெறுராய்த்
தேவர்தமிலாதி வேதியருந்தலைக்கறியி
னறுசுவையின்மாமகிழவாயுற்மெலுமபோடாமை
யோடேனக்கோடு கழுத்திட்டிருப்பரினமே. (௫௬)

இதுவுமது.

மேவுதேவரிற்பெரிய திருமாலாரின்றும்
விஞ்முகடம்பல்லியமாரூா விண்ணவர்கூட்டத்துள்
யாவராய்யூமுனறுர் பசிட்டூமவிருபபா
லினியமாணவற் சபித்தாலமாறுமையாலே

காவன்மறைமகம்பிதிரர் கருமமருந்தகிதி
கான்வேட்டமைந்திடத்து மூன்வேட்டல்விதித்த
பூவுலகிலிதனுண்மை யாருணர்வாருணர்ந்தாற்
புதுக்கலைஞரெல்லாரு மதுக்களிகொள்வர்களே. (௩௭)

நேரிசைவெண்பா.

அருள்கருதியாரெழுகி யம்மாமகிழ்வாய்ப்
பொருள்கருதி நித்தம்புரிசர்—மருளின்
றவிசொரிந்தாயிரம் வேட்டலினொன்றின்
னுயிர்செகுத்துண்ணாமை நன்று. (௩௮)

கட்டளைக்கலித்துறை.

உண்ணாமைநன்றாலுயிர் பிரித்துத்தனுடல்பெருக்கப்
பண்ணாமைநன்றென்னுஞ சாகாநிலைமைபரிந்தவர்கள்
எண்ணாமைநன்றெலா மாய்மா மகிழ்வாயிருப்பதன்றி
மண்ணாமைநன்றான்மைவஞ்ச நெஞ்சத்தைமறிக்குறினே. (௩௯)

நேரிசைவெண்பா.

நெஞ்சக்குரங்களிப்ப ஸரீபிழைக்கலர்மாட்டி
யெஞ்சலின்மாமகிழ்வா யெந்தையெந்தாய்—விருகலமில்
ஆவிற்குநீரென் றுரைப்பினுமொல்லாதே
நாவிற்கிளிவந்த சொல். (௪0)

கலிவிருத்தம்.

சொல்லுஞ்சொல்லும் பொருளுந்துணைவியு
நல்லலியுமாய் மாமகிழ்நண்ணினை
வல்லவாறெனில் வையமதித்ததென்
அல்லலுற்றதென கொல்லருளப்பனே. (௪௧)

இன்னிசைவெண்பா.

கொல்லாவிரதியா ரெர்நின்றமுக்கட்குருவென்
றெல்லாமுணர்ந்தா ரிசைத்தாரேன்மாமகிழ்வாய்க்
கொல்லான்புலாலை மறுத்தானைக்கைகூப்பி
எல்லாவுயிருநதொழும். (௪௨)

கட்டளைக்கலித்துறை.

தொழுந்தகைத்தெய்வமும் வேந்துந்துணைதொகுசுற்றமுமன்
பெழுந்தகையம்மையு மப்பனுந்தாரமுமின்மகவுஞ்
செழுந்தகைமாமகிழ் வாயமர்செல்வனுஞ்செல்வியுமேற்
கன்னமாணந்கடப்பதற்கே. (௪௩)

குறிகாடல் - ஆசிரியவிருத்தம்.

கடம்படுத்ததோண் முருகுகளிக்கவிழாவயர்வோங்
களப்பச்சைசயிட்டு வெறியாடல் சாண்கிற்போம்
அடம்படர்த்தசடையாள ரருள்பொழிகண்ணுண
ரணியவிடருசெழித்த களர்பொருள்விழுத்ததோளர்
இடம்பழுத்தமறைவாணர் நடம்பழுத்ததாளர்
இசைபழுத்தமாமகிழா ரிசழிபலித்திடுமோ
குடம்படுத்தமுலைமலைப் பூங்குறத்திகுறிகூறாய்
குடிபழுக்கவளம்படைத்துக குறிச்சிபுகுவாயே. (சச)

குறம் - இதுவுமது.

வாய்ந்தகுறங்களெம்மே நூதவிலக்கணத்துன்
வாயிசைந்தகேசாதி பாதமப்பாதத்துக்
கேய்ந்தவிருபுடையு நிலைத்தானங்களவற்று
ளிருதிநிலைத்தானமுழு மங்கலமேயாகும்
ஆய்ந்தவுனதெண்ண நலமெவண்ணமதுபலிகது
மன்புடையாராய்வாமக் கண்ணுடியதாற்போகந்
தோய்ந்தனையாமைய மிலைமாமகிழ்வாயிறைவர்
தூயவருட்கிலக்காகிய சொல்லுதயநன்றே. (சரு)

இதுவுமது. கட்டளைக்கலிப்பா.

நன்றிருந்தகுறம் நிமித்தமம்மே
நச்சினாக்கினியார் சுச்சிகாவலர்
வென்றிவேதப் பரிமேலழகனார்
மெய்யுரைபொய்யா தென்றுமமைத்தவிக்
குன்றினுவருங்கா லெதிர்நீகண்டாய்
குககில்குக்கூவெனப் பேடைகூடிலே
என்றுமின்பம் பெருகுமியல்பினு
விணைசெயமாலைமுலாமாலையினையுமே. (சசா)

தலைவிகிளத்தல். ஆசிரியவிருத்தம்.

மாலழகரொருபாலே மலியழகரிருபாலே வயங்கப்பூண்ட
நூலழகர்மார்பாலே நுதலழகர்விழிப்பாலே நுவலற்கேற்ற
காலழகர்பொதுப்பாலே கருநழ்கரன்பாலே கசசிவாழ்ந்த
மேலழகர்மறைப்பாலே விரும்பழகர்பெண்பாலே விழைதக்காரே.

இதுவுமது. தரவுகொச்சகக்கலிப்பா.

பெண்ணழகரிடம்வலத்துப பேரழகரநெற்றியமர்
கண்ணழகர்தமிழ்சுவைக்குங் காதழகரினித்திருக்கும்
எண்ணழகாதிருவொற்றி யெழுததழகர்பொதுவிருந்த
விண்ணழகாமண்ணழகர் விழைந்தெம்மையுடையவரே (சஎ)

மடக்கு - வெளிவிருத்தம.

உடையாரொமையின் புடையார் புலித்தோலுடையாரே
சடையார்விலவிஞ்சடையா ரருமாகடையாரே
யிடையார்மகிழ்நூலிடையா ருமையாரிடையாரே
படையார்கருததுனபடையார் மழுவாட்படையாரே. (௪௯)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஏவண்ணங்கருத்திருக்கு மில்வண்ணம்பசந்திருக்கு மிவர்செவ்வண்ணம, தூவண்ணமவெளுத்திருக்குஞ் சுடர்வண்ண மிருக்கிருக்குஞ் சொல்வண்ணம்யா, தோவண்ணமாமகிழ்வாயுறுவண்ணமொருவண்ணவண்ணமாகப், பாவண்ணமொன்றலலாம்பகர்வண்ணமிலையெமக்கிப் பாரிற்றானே. (௫0)

இரங்கல். கலித்துறை.

பாராரெல்லாம்பார்த்தார் படும்பாடனைமுற்றும்
சேரார்போலசசேர்ந்தா ரலரொடுதெருவூடே
வாரார்முலையார்வந் தாராய்மாமகிழ்வாணர்
தாரார்கொன்றைத்தந்தான் மாமகிழ்தானுமே. (௫௧)

சந்திரனைப்பழித்தல் - ஆசிரியவிருத்தம.

மாமடிகண்மகத்தன்று தாளிற்றேய்ப்புண்ட
மதியம்பின்றம்முடிமேல் வைத்தாடன்மகிழ்ந்தார்
ஆமடிதோழிஇபித்தரலர் மகிழோர்கடவி
லாலமவெண்மைகருமையெனப் பிறந்ததிரண்டுண்டே
தாமடியருபவொன்று கைதொட்டாரதுபோயத்
தமதுகண்டத்தொடுங்கியது தமக்காசைகொண்ட
நாமடியாவகைகாலாற் றேய்ததொழிப்பாரானோர்
நடுத்தலைமேலேறியதே னுடலென்மற்றதுவே. (௫௨)

இரஙகல - ஆசிரியவிருத்தம.

நாவிருந்தநயநதெரிவார் நயந்தபரிசானோர்
நடுவில்லாரெல்லாரு நச்சநடுவீதிச்
சேவிருந்தவழகர் விழிக்கலங்காரஞ்செய்தார்
சிறியமதப்பயலொருவன் சிறுகால்விட்டோடி
யேவிருந்தபூகாற்றம் வீசப்பித்தேறி
யின்னியபாலுங்குமட்டுந் தோழீஇயின்பஞ்செய்
மாவிருந்தும்பணியாரமணியாரங்கொன்றை
மகிழிருந்தாமரிலரே மதிமேலார்கரணே. (௫௩)

மதங்கியார் மடக்கு - ஆசிரியவிருத்தம்.

மதிமுடியார்மேல்விலங்கா மிடையின்மந்தரமே
மாமகிழ்பாடியவரு நின்னிடையுமந்தரமே
புதியமயல்விளைவிக்கும் புணர்முலைமந்தரமே
புத்தமுதமபொழிமொழியி னிசையுமந்தரமே
சதியிலருநடைக்கு மனமபெடைக்குமந்தரமே.
தனிவிழிக்கவ்விராம சரமினிச்சமந்தரமே
வதியமுரர்திறைமயிடுவார் தினமுமந்தரமே
மதங்கியிரங்கிலையெனிலென் னிலையுமந்தரமே. (௫௪)

நெய்தலிரங்கல்-மடக்கு-இரட்டையாசிரியவிருத்தம்..

நிலையாவாழத்தலையுற்றாய்-நிலையாவாழத்தலையுற்றேன்
நினையாரணையாரென்போன்றாய்-நினையாரணையார்நெடுங்கடலே
தலையாலங்காடுயர்பனையே-தலையாலங்காடுயரிறைபே
தருவார்மாலையளியாரே-தருவார்மாலையளியாரே
மலையாநிலமேயெனமேலே-மலையாநிலமஞ்சுறவிழுமே
மகிழ்மாவிருந்தார்நெருக்காலே-மகிழ்மாசெயுநாளிருக்காவோ
சிலையாத்திரியுங்கொடியேநெஞ்-சிலையாத்திருவர்வரக்கரையே(வே
செழுந்தேனுகுக்குநெய்தால்விஞ்-செழுந்தேயுருக்கும்விடவிர

வாடைகண்டு தோழிக்குரைத்தது. கட்டளைக்கலித்துறை.

விடந்தைக்குங்கண்டர் படந்தைக்கும்பாம்பர் வியந்தைக்குற்ற
கடந்தைக்குமந்த குடந்தைக்குங்கச்சிக்கு மாகப்பல்கால்
நடந்தைக்குநல்லுடந்தைப் பட்டன்றுயென னயமுரைச்சோ
மடந்தைக்குநெஞ்சழல் செய்வடந்தைகமென் மருந்தினியே. ()

தெனறலைப்பழித்தல். சந்தவிருத்தம்.

மருந்தீசனுமென்பர் மகிழீசனார்கச்சி மாவீசனார்
பொருந்தேசினார்போலு மவர்மேனியழலும பொலந்தேசினால்
அருந்தேசினாற்றும் மணங்காறுதலையு ளாராவாவிதென்
திருந்தாசுகந்தெற் கிருந்தாவருநகூற்று செற்றன்றமே. (௫௭)

சிந்தியலொருபொருண்மேன மூன்றடுக்கிய வெள்ளொத்தாழிசை.

கூற்றுங்குறுகுமுனநெஞ்சமே மாமகிழ்வாய்த்
தோற்றமணுயுலகங்காக்குமெஞ் சோதிகழல்
போற்றிச்சரணம்புகல்.
காலன்கடுகுமுனநெஞ்சமே மாமகிழுச்
சீலவரியாயுலகங்காக்குமெஞ் செல்வர்கழல்
ஓலிச்சரணம்புகல்.

சண்டனவன சாருமுன நெஞ்சமேமாமகிழ்க்கீ
ழண்டனரனுயுலகங் காக்குமெம்மாதிகழல்
தொண்டிறசரணம்புகல். (ருஅ)

மடக்குவஞ்சித்துறை.

புகலிகாவலர்
புகலினென்புகல்
மகிழமாவலரா
மகிழவாகுமே. (ருகூ)

பூவைத்தூது. மடக்கு. கட்டளைக்கலிப்பா.

ஆவணததாரறத்தையன்பர்க்கொளும்
ஆவணத்தாரொளித்தவருமறைக்
கோவணத்தார்செந்தீவணத்தார்நெற்றிக
கோவணத்தார்முற்பாவணத்தார்க்கருள்
காவணத்தாரருட்கருவூலத்தார்
காவணத்தார்புகழ்தேவணத்தார்தேன்
பூவணத்தார்மகிழ்மாவலார்கொன்றைப்
பூவணத்தார்தருதியெம்பூவையே. (கூ0)

எணசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூவிருந்தும்புல்லணிவ ரமுதநாகம்
பொருந்தவைத்துநஞ்சுண்பர் புலவோர்மெச்சுங்
காவிருந்தும்புறங்காட்டி லாடல்செய்வர்
கனிவிருந்துங்கனியாரே கச்சிந்தாக
மாவிருந்துமபணியார மஎியாரொற்றி
மன்னியிருந்தெமகொன்று மென்றும்போராம்
பாவிருந்தபுகழாளர் பழிச்சுநாணுர்
பழமறைபேசுவர் தமிழினபரிசாறுரே. (கூக)

ஆய்ச்சியார்-வேற்றொலிவெண்டுறை.

பரிசுடையார்மாமகிழ்வீரய்ப்பாலாட்டுமைந்தர்க்காம்பள்ளித் தாமம், விரிசடையாரொருதிருவாய்ப் பாடிமேவியபொதுவர்விள ங்கிழரிய்கைக்.

கோல்வளை யோலிடக் குறுநகை வாளிடச்
சேல்விழி மேல்விழத் திரண்முலைப் பந்தெழ
நூலிடை நோய்செய் ந்துதல்வியர் வரமொழிப்
பாலுளஞ் சுவைதரப் படுதயிர் கடைதலின்

செவியறிவுறூஉ-மருட்பா.

மாண்புறக்கற்றேங்கற்றேமென் றுமகிழ்ந்திருப்பீர்
வீண்பிறகற்றது மெய்யுறு—சாண்வயி
ற்றேம்புதற்பொருட்டலா லுலகவர்நமையினிச்
சாம்பிணமெனப்பெயர்தரித்தழையாமுன்
றேம்பிழிமாமகிழ்ச்செல்வன்
பூங்கழல்கற்பதுபுலமையோர்கடனே. (௬௩)

கைக்கிளை-மருட்பா.

புலவோர்க்கமுதளித்துப்போரவுணர்ச்சாய்த்து
வலமாழிசங்குவாள்வைத்துச—சிலைபிரியா
தையர்மர்மகிழாதியார்பாம்பணி
கையமர்கணையோவக்கணை
செய்யவுறையுளோதிருந்திழைவிழியே. (௬௪)

'இடையிடைகுறைந்திடைமடக்காய்வந்தவாசிரியத்துறை.

விழுத்தகுமாமகிழாரும்வேதியரமுதர்
எழிற்கண்ணினுக்குக்கண்டிண்ணனாரேபோலும
எழிற்கண்ணினுக்குக்கண்டிண்ணனார்சீர்த்
தொழப்பெற்றுடையதொழும்பர்பதத்தார்போலும். (௬௫)

வெண்டுறை.

போலாதபுன்னெஞ்சம்புகலாகாயாகாவேற்புகன்றவாய்மை
மாலாதோமறைகளெல்லாமாலுமேல்வையகிலைமன்னுமபோலாம்
நோலாதேன்பலப்பலவுநுதல்கிற்பேனுதல்கிற்பேன்
மேலாயமாமகிழ்வாய்வேதியவோவேதியவோ. (௬௬)

ஒருபொருண் மேன்மூனறடுக்கிய ஆசிரியத்தாழிசை.

வேதமுடியின்விழுபொருளாமாமகிழார்
நாதங்கடந்தொளிருநாட்செங்கமலத்தாள்
போதமிலேன்புன்முடிக்குப்பொன்முடியேயாகுமால்
மாமறையின்சென்னி வான்பொருளாமாமகிழார்
சேமத்தனிவாழ்வாரு சீர்ச்செங்கமலத்தாள்
நாமுறுமென்னேய்கட்கு நன்மருந்தேயாகுமால்.
ஆரணத்தின்சிரத்தார் பொருளாமாமகிழார்
பூரணவின்பாய பூஞ்செங்கமலத்தாள்
ஏரணமிலேனெஞ் சிருள்விளக்கேயாகுமால். (௬௭)

ஊசல். கலித்தாழிசை.

மாலாதுசிந்தைமலங்கழுவிநீறணிந்து
கோலாலமாகுமத்தத்துவ்வாக்கூடமறுத்

தாலாலமுண்டானடிசூட்டிமாமகிழ்வாழ்
போலாமானிடம்பாடிப்பொன்னூசலாடாமோ
பொற்றொடியீர்புகழ்பாடிப்பொன்னூசலாடாமோ. (சுஅ)

இதுவுமது. சந்தத்தாழிசை.

ஊசலாட்டிருவினைக்குளாய் மனநினைப்பினாலவருமறப்பினால்
ஓவுறாததுயர்பிறப்பிறப்பினி லலைந்துலைந்துகழிவானநாள்
பேசலாவதலகற்பமெத்தனை பினிட்டநந்தமையளித்தவப்
பெரியமால்பிரமர்தலைசெயமாலை பலபேசியேசிமுடிவுற்றிலு
பூசலிட்டபரிகலமுமேதுவை விளையவிளையணிகலஙகடாம்
பொதுவிருந்துகலகமதகற்றும் வகைபுகலுமாமறைமுதற்கலை
ஈசர்மாமகிழின்வாசர்மார்பிலெனி லேல்மைழயோகிலைமையாவதே
யினியவாரருளை நாடியாயதொடியிராடியுயதுமினிநூசலே.(சுகூ)

வலைசியார். குறளடிவஞ்சிப்பா. வஞ்சியடி.

தொடித்தோள்வளை - வலைசியர்தரு
திருத்திகழ்நுதன் - மடப்பேட்டனம
வடிககூந்தலி - னிணைக்கூந்தலே
விழிக்கிணைகய - லிணைத்துவரிதழ
இணைப்பவளம - தெழிற்றாளம
திசைததிருநகை - மொழிககமுதது
கழுத்திணைவளை - முலைப்புளினம
திடைககடம்படு - கொடிக்கிடம்பட
இயற்சுழியிணை - யறற்சுழியென
திரைக்கடலிணை - யகறசடிதடம்
முழக்காலல - வணிறகணைவரால
புறக்காலுயர் - கமடததிணை
இணைக்காமென - நிலக்கருகிசழ்
பொருட்பாலுளை - செயப்பெற்றனை - எனினும் - கூன்

தோளிணைக். இதுதனிச்சொல்.

காம்படியொன்றுஙகண்டிலமவ்வயிற்
றேம்பிழிகோதாயுரியுமென்வயிற்றே
யென்வயினினககுமஃதாயின்மன்ற
பொன்மலைவில்லியார்புனைமாமகிழ்விரி
கானலந்துறைபெறக்காட்டுது
மேனலம்புயத்துவியன்றிணைமயக்கினே. சுரிதகம். (எ0)

நேரிசைவெண்பா.

இணைமயக்கமாமாற் சிறுவென்னெஞ்சக்கல்
லிணையாமேயாசைக்கடலை - யிணையயிலீர்

மாமகிழுற்றிரொருபான் மாலாளைவைத்திருக்
காமகிழ்விற்காப்பாக்கலார்ந்து. (எக)

நிந்தாஸ்துதி-கட்டளைக்கலிப்பா.

காடுகட்டிக்காத்திரொர்சாண்கோவணங
கண்டதில்லைக்கடைகட்டிக்காத்திங்கோர்
மாடுகட்டிவைத்திரதுபுல்லின்றி
மண்ணைநக்கிற்றுவையத்துமக்கொரு
வீடுகட்டிக்கொண்டதிலையார்க்கேனும்
வேண்டுமென்றொருகாசும்வழங்கிலீர்
ஈடுகட்டியதில்லைநுமவாழ்வொன்று
மிசைவுடையீரம்மாமகிழ்வாயென்னே. (எஉ)

இதுவுமது.

என்னைக்கொண்டனிரென்னபயன்கண்டீர்
ஏழையான்காணிங்கெவ்வெவ்வித்திலும்
பொன்னைக்கொண்டவர்பூகங்கொண்டவர்முதற்
புங்கவரெல்லாம்போற்றிகிடக்கவும்
பின்னைக்கண்டிலிரொப்பாரையொப்பிலாப
பெண்ணைக்கொண்டீர்பேயப்பேச்சுததுணைக்கஙகென்
றன்னைக்கொண்டதென்பேயககூத்துககாணவோ
தகுந்தகும்மாமகிழாளரல்லீரோ. (எங)

நேரிசைவெண்பா.

அல்லாருநெஞ்சை யடக்கமுயன்றலைவீர்
பல்லாயிரவழிகள் பார்த்தாலும் - ஒல்லாதே
மாமகிழ்வாணர் திருமங்கலநிறைவை
நாமதித்தலரலாங்கா ணன்கு. (எச)

ஒருபொருண்மேன மூன்றடுக்கிய வஞ்சித்தாழிசை.

நலமின்றமறைவேண்டா - வலங்கண்டாமகிழ்வாணரா
புலம்வென்றசாதுளளார - குலஞ்சென்றுபுணரீரோ.
ஏதுக்களைவேண்டா - சோதிக்கமகிழ்வாணர்ச
சாதுக்கடிருப்பாதப் - போதைப்போய்ப்புணரீரே.
அளவைபல்பெறவேண்டா - வொளிர்கிற்பர்மகிழ்வாணர்
தளர்வற்றசாதுள்ளார் - களனஞ்பிற்புணரீரே. (எரு)

தவம். சந்தத்தாழிசை.

புணரீரோபுணரீரோ புணர்தவமுடையீரோற்
பொருவின்மாமகிழ்வாணர்ப் புணரான்பர்ப்புணரீரோ
கொணரீரோகொணரீரோ யுமதன்போடெமதன்புங்
கொடுகூட்டித்தமிழாசு கவிபாடக்கொணரீரோ

உணரீரோயுணரீரோ மறைநாலுமுணராத
வுவரின்பநிலைதுன்ப மறநாடியுணரீரோ
இணரீர்பூங்குழலீரோ மலையார்மாமுலையீரோ
யினிவேறுதவமேனோ விதன்மேலேய்யுநாமே. (எகூ)

வண்டுவிடுதூது. சொன்மடக்கு-இதுவுமது.

நாமேதுமிலையெங்கு நாமேதமிலமெங்கு
நகைமுல்லைநகையாரு மலராற்றார்மலர்வுற்றார்
பூமீதிலொருவர்க்கும் பூமீதிலிருவர்க்கும்
புகலொண்ணுப்புகலாஞ்சீர் பொருவில்லார்பொருவில்லார்
மாமேருவரையென்று மாமேருதயமொன்று
மாமகிழ்வாணனூர் மாமகிழ்வாணனூர்
தாமாயுமணமாலை தாமாயும்வணமாலை
தருமின்பவண்டிர்காள் தருமின்கள்சென்றின்றே. (எஎ)

மேகவிடுதூது. அடிமடக்கு - வஞ்சிவிருத்தம்.

சௌனமாமகிழ்ச்செல்வனூர்
கொனறைதீதாரிணைகொணாதியே
கொன்றைத்தாருணைகொண்டுலி
கென்றுமொன்றுமாலெழிலியே. (எஅ)

பனிகண்டிரங்கல - கட்டளைக்கலித்துறை.

ஒன்றலைக்குங்கலைவெண்மதிக்கும் முள்ளுடைந்தொதுங்கித்
தென்றலைகரும்பிட்டுவாடைக் கிதஞ்செய்துசென்றுசென்றுங்
குன்றலைக்குன்றவின் மாமகிழார்க்குங்குறிப்பித்தனன்
இன்றலைகரும்பனிகரும்பனிகருந் நெஞ்சமென்செய்வனே. (எகூ)

காலம் - மடக்கு - ஆசிரியவிருத்தம்.

என்செய்கோமன்றிலையர் மாமகிழார்காலம்
இசையாரோல்வேம மன்றிலையமிசைகாலம
பொன்செய்யுங்கலவ மீாமையிலாலுங்காலம்
புன்கணுடுயாமு மாமையிலாலுங்காலம்
கொன்செயமாமதவேட்குங் கரும்புகையாங்காலம்
கொடியார்களலருக்கங் கருமபுகையாங்காலம்
பின்செய்யச்சிலவெனுமென் பெண்மதிக்குங்காலம்
பேதையர்பின்னிருந்துழ வம்பெண்மதிகருங்காலம். (அ0)

இரங்கல். இரட்டையாசிரியவிருத்தம்.

காதலறியாக்களவலரோ - கண்டாயூர்க்குக்களவலரோ
கானமலர்ந்தபூங்கொன்றாய் - கவல்வேன்கருத்திற்கிங்கொன்றாய்.
நாதர்முடிப்பர்மாலையினே - நாடாயென்றன்மாலையினே
நாரிநாணுமிரங்காரோ - நாரிமாருமிரங்காரோ

சீதமளிக்குஞ்செயலையே - தேருயுள்ளச்செயலையே
செழிததங்கொழுந்தமதியாலே - திகைத்தேன்பெண்மைமதியா
வேதமுடிமேனடத்தாரோ - விழையார்க்கருளோநடத்தாரோ [லே
வினைதீர்த்தருண்மாமகிழாரோ - வினையேனுளமாமகிழாரோ.(அக)

பாண் - இணைக்குறளாசிரியப்பா.

ஆர்கலியுலகத்துப்பேர்கலிக்குடைந்து
பல்வழியுழந்துநல்லறமோம்புபு
நற்பியல்வழாஅரிற்கடைநிலீஇயர்
இங்கிதம்பல்லவியல்விளியொடூஉம்
விளரியாழிசைபுதெருமந்துழன்று
கல்லேறுண்டுஞ்செல்லலோவின்றி
முளரியிற்பொலியாவடுமடைக்
கயிறுபுரிபுரிந்தவயிறுராது
பலபலவெல்லியும்படுதுயிலொழிகென
வாம்பிகாலபொரநோந்தலைமடுத்து
மக்களுமனையுமொக்கலொடுமுணங்கிய
வுளைநெஞ்சழிந்தகொளைவல்பாண்மக
கேண்மதிகேண்மதி,
பாண்மகார்பண்டும்பருவாற்கரையிலர்
அதனுன்
முத்தமிழாரியன்மொழிமரபுணர்ந்த
வாறிருபுலவருமவேறுவேறுதெரிநது
பன்னிருபடலத்தும்பகாந்திசினோரே
தாவினல்லிசையெனூஉந்தமிழ்கிளத்தும்மே
அதான்று
பானாற்றுப்படுத்தவிருமுதுபனுவலும்
ஏனோர்கூறியபாடாண்டுறையுளும்
இலம்படுநம்மரபேற்றங்கண்டனை
அல்லதூஉம்
அரசுவீற்றிருந்ததமிழாய்சங்க
மினிதுவீற்றிருந்தபழம்புகழ்க்கூடலுள்
இன்னிசைவீணையிசைசந்தோன்காணகவென்
றம்மறைகிளந்தமெய்ம்முறைதேற்றுக்
கோலஞ்சிறந்தவாலவாயில்
அழகமாந்தணனருட்புரிந்தேத்திய
அந்நாள்
பாணபத்திரனெனும்பண்பமர்நம்முனோன்

திருமுற்றத்துப்பலகைபெற்றதூஉம்
திருந்தலர்த்தேய்க்கும்பருந்துவீழ்நெடுவேல்
கடாங்கவிழ்கவுட்டுக்கூர்ங்கோட்டாம்பல்
எருத்தம்பொலிந்துவருதிருத்தகுநாளினும
அடிச்சேரலனெனமுடித்தாழ்ந்தொருநாள்
நொடித்தான்மலையினுலாத்தனைப்படித்தான்
கோப்பெருமுதலிகேட்ப
மதிமலிபுரிசைநொதுமலில்லாப்
பாணற்றுப்படையிற்பரிசுபெற்றதூஉம்
கேட்டனைபோலுமிந்நாள்
நின்னின்மெலிந்தவென்னைநோக்கத்தை
அம்மையிம்மையும்மைவீடறியா
மம்மர்நோய்த்தெறூஉச்செம்மையுற்றனன்போல்
வெஃகாவுள்ளுமஃகாவியல்பு
மிசைஇயகாண்டிநசைஇயினையெனினே
வாழியோபெரிதேவாழியோபெரிதே
பாழிமால்வரைப்பின்வாழியோபெரிதே
கள்ளங்கரந்தனையுள்ளஞ்சிறந்தனை
கடன்மடைதிறந்தவன்பிற்பொலிந்தனை
மெய்ம்மயிர்பொடிப்பக்கண்ணீர்வார
வியர்வரநகையெழநெக்குநெக்குற்றனை
தலையளிபழுத்தபத்தியி
னூற்றிருந்தன்னதோற்றஞ்சான்றனை
கண்டனைகலுழ்ந்தனைவிண்டவாய்குழறினை
மலைமகள்கொழுநவலைமகண்மகிழ்ந
தனதனற்றோழதமிழ்மறைமுதலி
கடவுட்கண்ணுதற்புனிதமால்வரை
கோட்டியதோளமாட்டியசிந்தை
மைந்தர்தம்வெறுக்கைமதமலைமதமலை
சுந்தரவிருண்டகந்தரக்கந்தர
காலற்காய்ந்தகழற்கால்வீர
பாலற்காத்தபவளப்படிய
மூவுலகிற்கொருதாயகநாயக
பாவலர்பரிசாம்பால்வண்ணநாத
தேவரிற்பெரியதேவதேவ
மூவருக்கொருமுதல்சேவலந்தலைவ
யாவரும்பெறலருமிறைவவானவ

விருளட்டதேசமருளட்டகாச
எந்தையெம்மனையீசநேச
சிந்தனைக்கினியசெல்வவாழ்க
பந்தனைதெறூஉம்பகவவாழ்க
வச்சந்தவிர்த்தசேவகவாழ்க
நிச்சலுமீர்த்தாட்கொள்வோய்வாழ்க
சூழிருந்துன்பந்தொடைப்போய்வாழ்க
எய்தினர்க்காரமுதளிப்போய்வாழ்க
சிறுமதிதேய்த்தசேவடிவெல்க
பொருண்முடிவாயபொலங்கழல்வெல்க
தோன்றாத்துணையாநதுணைத்தாள்வெல்க
சான்றுமெவைக்குந்தனிப்பதம்வெல்க
வெல்கவெல்கவேதியவெல்க
ஐயபோற்றியாரியபோற்றி
சைவபோற்றிதயாபரபோற்றி
குலமுதலடிமைகொள்கொற்றவபோற்றி
நலமுற்றும்புனைநம்பபோற்றி
உள்ளக்கோயிலுறுவோய்போற்றி
வெள்ளக்கருணைவிகிர்தாபோற்றி
போற்றிபோற்றிபுண்ணியபோற்றியென்
றிவைபந்தனவேத்திநயந்தனைபழிச்சிக்
கைதொழூஉப்பரவிக்கழலிணைவணங்கி
நினறனையாயிற்பின்னைறயென்று
தின்னேபெறுதிநீமுன்னியபலவும்
வாழியோபெரிதேவாழியோபெரிதே
யூழியூழியூழ்வலிசிதறி
வாழியோபெரிதேவாழியோபெரிதே
காரணங்கடந்தவாரணனுதவி
னேலவேலச்
சாலப்பெரிதுநல்கும்
காமக்கண்ணியோடு
மாமகிழ்கிழவோன்ஞாலமகிழ்செயவே. (அஉ)

மடக்கு - ஆசிரியவிருத்தம்.

ஞாலங்காட்டும்படியான்மா மகிழின்னம்பியார்நம்பார்
கோலங்காட்டித்தேடிய கோலங்காட்டார்குளிர்மாணி
பாலங்காட்டப்பரிசளித்தார் பாலங்காட்டுமருள்விழியார்
ஆலங்காட்டிக்கண்டமட்டி லாலங்காட்டாரானுரோ (அ௩)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆனார்கொடியாரொவர்க்குமிறை, ஆனார்கொடியாரிடைச்சிமய
மானார்கரவாவொருபாலார், மானார்கரவர்மூமகிழார்
கானார்தரக்குவரித்தோலார், கானார்தரக்குவரித்தோலார்
வானார்மணிமன்றுவர்மண்ணார், வானார்வணங்கும்வளத்தாரே. ()

தலைவிதோழியொடுகூறல் - கலித்துறை.

தாரிற்பொலியுந்தாமந்தாராய்தந்தாயேற்
பேரிற்பெரியார்மாமகிழெய்தப்பெறுகென்றேன்
போரிற்பொலிவேற்கண்ணுண்மாமகிழ்மருனுல்
வாரிக்கொண்டாய்வந்ததுபோதும்வசையென்றாள். (அ௫)

இதுவுமது - இனனிசைவெண்பா.

என்றுங்கருணையில்லானேற்றதிருக்குடந்தை
ஒன்றியதப்பிலியூர்பேருற்றாராருமிலி
இன்றிவற்காதலித்தாய் மாமகிழே - யென்றாளர்
லன்னையிடக்காய்தொடியாயார்ந்து: (அ௬)

இரங்கல் - கட்டளைக்கலித்துறை.

இடக்கருளன்னையுமீயினளேலினியாதினிக்கும்
சுடசுடவூரினுஞ்சொல்லெழும்பிற்றுச்சிலபலவும்
படற்கரும்பாடுகள்பார்த்திருந்தீர்மகிழ்வாணரைக்கும்
பிடத்தகுமாறென்னையேந்திழையீர்தனித்தென்செய்வதே. (அ௭)

தலைவிகையறுநிலையாலிரங்கல் - நிலைமண்டில வாசிரியப்பா.

என்செய்கோவேழையென்செயகோவேழை
என்செய்கோவேழையென்செயகோவேழை
பொன்செய்வானவருமுன்சொன்மாமறையுங்
கொன்செய்மாலயனுமின்செயேழுலகும்
விஞ்சியார்பலருமெஞ்சினார்துருவி
நெஞ்சினுழ்துயரினஞ்சினார்காணார்
என்செய்கோவேழையென்செயகோவேழை
என்செய்கோவேழையென்செய்கோவேழை
பன்னெடுஞ்சமயதண்சினைப்பரப்பி
மன்னறந்தழைப்பவின்னுயிர்கிழற்றி
மின்னொளிபூத்துநன்னலம்பலித்துத்
துன்னருள்பழுத்தபொன்னியன்மாமகிழ்
அண்ணலம்பராஅணாமண்ணுறுத்திருந்த
தவளவெண்பொடிமலிபுவளமேனியர் ,

பித்தெமையகற்றியமத்தமுடிமிலைந்தவர்
கோவணநெற்றியர்வெற்றரைக்கோளினர்
சிலம்பணிகையர்தொலம்புனைபாதர்
ஆயினுமவரைப்பேயும்விட்டகலா
பாவணப்புகழராவணவழகர்
ஆதலின்வைப்பினெப்பூதமயங்கா
துவரைபவரையோநல்விம்முதிரை
அமுதம்படுத்தநாட்டமதுமாலாக்கினர்
மாதரையுழலுமாதரைப்புரிவகை
யோதல்வேண்டுமதோஓதல்வேண்டும்
என்னினுமென்னுறினென்னினுமினியர்
நோவவுரையார்நொந்தகண்பாரார்
நாவலங்காரர்க்கென்னுவலங்காரச்
சொல்லியவிடுக்குவல்லவாவென்னத்
தூதுவேண்டிமேதகத்தெரிந்து
கொண்டனநாடிபணிதெண்டனவெழுத்தீற்
றிமையெமையிடையின்முடிமிசைநின்ற
புயலினொடுமயர்வறப்புணர்மே
அன்னந்தன்னைமுன்னின்முன்னமோர்
அன்னந்தேடியின்னமுநிலைபெறா
தலமந்ததென்றுப்புலனுந்தப்போமே
அறுகாலஞ்சிறைச்சிறுபுளைச்செலுத்தின்
எண்காற்புள்ளுழையெங்ஙனுஞ்செலுமே
சேறினுமதுநுகர்ந்துணர்வுமாயுமே
வண்சிறையஞ்சுகமுய்ஞ்சிடப்போக்கெனில்
என்சுகநாடாகிடைமாறுக்கனே
குயிலைப்போக்கினதுபயில்கொடியாரி
னினத்ததிரங்காதலலதூஉமிறைக்குந்
தனக்கும்பேரொன்றெனத்தருக்கித்திரிமே
காரையையேவநாடாதுள்ளம்
பேரியல்வீடுபெற்றலைவற்றது
முன்றொருநாளைப்பொன்னனைப்பிடமதுரையிற்
பூவையத்திசைபொருந்தாதடல்விடந்
தேவர்முன்வைத்தசெல்வர்க்கவர்தினம்
ஏவுசொற்கேட்டதினினைநினைவிற்றே
தூதுணம்புறவோவுறவாந்தூதெனை
மாலைத்தாரமாலைத்தாரா
மாலைத்தந்தேமாலைத்தருமே

அன்றிலோபேரினுமொன்றுதாமே
நின்றுநெஞ்சுளையநிந்தைகூறியற்றே
தென்றலோசென்றுற்றிரும்பிவாராதே
நன்றவரணிக்கோகாணுக்கோவினையர்ம்
மற்றிவையொழிகபொற்றொடியாளை
வேண்டுகென்னின்மாண்டகுழலாவிற்
கேட்டவையுள்ளநாட்டமுற்றதனுற்
பசையிலவென்னுவிசைவிலவினிநன்
னெஞ்சுதுணையிருந்ததென்றஞ்சறுத்துய்த்தனன்
செய்யதாமரைகுழைத்துய்யவரவணைப்
பொய்யறுதமிழ்சுவைத்தபூந்தாட்கீழ்ப்படூஉ
மீளாவண்ணம்வாளாதேய்ந்ததால்
முன்னமம்மகத்தினம்மவம்மதி
மீண்டுறுமாயினீண்டுமிம்மதியு
மாவாவொருதமிதாவாவிருத்த
லவ்வளவன்றிச்செவ்விதிறுடின்
என்செய்கோவேழையேவென்செய்கோவேழையே
என்செய்கோவேழையேவென்செய்கோவேழையே. (அஅ)

நேரிசைவெண்பா.

கோமதிக்கும்வெம்மைடையேகூமதிக்குந்தண்மடையாம்
மாமதிக்குந்தூய்மைசெயுமாமகிழே-வாமதிக்குப்
பச்சைபழுத்தார்பணிவாருளமிருக்க
விசைபழுத்தாரிடம். (அகூ)

கட்டளைக்கலித்துறை.

இடங்கொண்டமாமகிழ்க்கச்சியுமொற்றியுமென்னக்கல்லா
மடங்கொண்டவென்னுளம்வாழ்வரைத்தாழ்வரைக்கீழரக்க
னடங்கொண்டநெஞ்சமுடங்கொண்டுபீடநடங்கொண்டதாட்
படங்கொண்டபாம்பர்விடங்கொண்டகண்டனைப்பாடுவனே(கூ0)

தேவபாணி - நிலைமண்டிலவாசிரியப்பா

பாடுமின்பாடுமின்பாடுமினுபாடுமின்
பாடுமின்பாடுமின்பத்தருள்ளீரே
முத்தியைவேட்டுளமுழுதுணர்வீரே
புத்திநல்வலைபடப்பாடுமினீரே
ஆரருள்பாடுமின்னாரருள்பாடுமின்
பேரருள்பதிவுறச்சீரருள்பாடுமின்

உள்ளவக்கரவினனுமறுதுயில்போலிய
நெஞ்சமஞ்சேர்ந்து தஞ்சத்தினைக்குபு
வன்புகரைந்துக வென்புநெக்குருகி
மொய்ம்புமெலிந்தறப் பின்பெணம்பிறமு
வம்புபுலம்புகாத் தம்பரமாக
நடையுந்தளர்ந்திட வுடையுநெகிழ்ந்திட
வுடலங்குழையக் கடல்கவிழ்ந்தன்ன
மெய்வியர்வரும்பிடக் கையுநெகிழ்ந்து
செய்வகையின்றிப் பொய்வகையன்றிக்
கண்ணருவிகால வண்ணவாய்குழற
விண்மண்ணறியா துண்ணிறையார்வ
அன்புகனிந்தெங்க ளின்பனைப்பாடுமின்
முன்பனைப்பாடுமின் பின்பனைப்பாடுமின்
கம்பனைப்பாடுமின் செம்பொனினம்பலத்
தென்பொனைப்பாடுமின் றன்பிறப்பாடுமின்
பாடுமின்பாடுமின்னொருருள்பாடுமின்
பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
நாரனைப்பாடுமின்பாடுமினாயிரம்
பேரனைப்பாடுமின்பித்தனைப்பாடுமின்
சீரனையன்பினல்வாரனைப்பாடுமின்
ஊரியற்சிவிகையாங்காரனைப்பாடுமின்
தேவனைப்பாடுமின்றேவர்சொல்லேவல்கொள்
வீரவிற்போர்வலமாரனைநீறுசெய்
கோவனைப்பாடுமின்கோவனைப்பாடுமின்
மூவனைப்பாடுமின்பாடுமின்முத்தமிழ்ப்
பாவனைப்பாடுமின்பகவனைப்பாடுமின்
பாவனைகட்கெட்டாத்தேவனைப்பாடுமின்
மூவருக்குமொருமுதல்வனைப்பாடுமின்
தேவருக்கும்பெருந்தேவனைப்பாடுமின்
பூமனைவாழ்வனையேமணிதலையறுமித்
தாமனைக்கடைதொறுமடுபலிக்கிடைகிலாக்
கோமனைக்கொன்றையந்தாமனைப்பாடுமின்
வாமனைக்கஞ்சுகமாக்கினையப்பாடுமின்
மாமனைமகமழிதரமறித்தலைபுனை
வீமனைப்பாடுமின்னீமனைப்பாடுமின்
மற்றருந்திறலனைத்தோற்றமஞ்சுறவரும்
கூற்றினைக்குமைத்தவாற்றலனையேபாடுமின்
அந்தகன்கழுக்கடைகழுக்கடையாக்கிய

மைந்தனைப்பாடுமின்வானனைப்பாடுமின்
மேருவைக்குழைத்தவல்வீரனைப்பாடுமின்
பாரினைத்தேர்செய்தபண்பனைப்பாடுமின்
முப்புரம்பொடித்தொருமூவரைக்காவல்கொள்
செப்பனைப்பாடுமின்செல்வனைப்பாடுமின
அக்கதமிக்கெழுபக்கடல்புக்குட
னொக்கனைக்கீறுசக்கரத்தனைபபாடுமின்
கக்குமக்கனல்விழியுக்கிரப்பெருவலி
மைக்கடகரியுரிநக்கனைப்பாடுமின்
கொக்கிறகணிசடைக்குழகனைப்பாடுமின்
சக்கரமரிக்கருடயவனைப்பாடுமின்
அண்ணலைப்பாடுமின்கண்ணுதற்பாடுமின்
எண்ணனைப்பாடுமினெழுத்தனைப்பாடுமின்
தண்ணனைப்பாடுமின்சதுமறைபாடிய
பண்ணனைப்பாடுமின்பரமனைப்பாடுமின்
கண்ணனையிடங்கொளங்கண்ணனையெம்பிரு
கண்ணனைப்பாடுமின்காண்வருசெவ்வந்தி
வண்ணனைப்பாடுமின்வரதனைப்பாடுமின.
தண்ணருளான்மிகுதாயனைப்பாடுமின்
நேயனைப்பாடுமினேயமிலார்க்கெலாஞ்
சேயனைப்பாடுமின்றேசனைப்பாடுமின்
றாயனைப்பாடுமின்றென்மைப்பசுக்களி
னாயனைப்பாடுமினாயனைப்பாடுமின்
மாயனைப்பாடுமின்மாயமிலாவேத
வாயனைப்பாடுமின்வள்ளலைப்பாடுமின்
ஐயனைப்பாடுமினப்பனைப்பாடுமின
மெய்யனைப்பாடுமின்விகிர்தனைப்பாடுமின்
றய்யனைப்பாடுமின்சோதியைப்பாடுமின்
கைபெறுநெல்லியங்கனியனைப்பாடுமின்
செய்யனைப்பாடுமின்றிருவனைப்பாடுமின்
உய்யவந்துதவியவொருவனைப்பாடுமின்
ஒருவனையென்னுளக்குருவனைப்ப்பாடுமின்
உருவனைப்பாடுமின்னருவனைப்பாடுமின்
அருளனைப்பாடுமின்பொருளனைப்பாடுமின்
அருவுருவகன்றவத்தெருளனைப்பாடுமின்
இருளனைப்பாடுமின்னொளியனைப்பாடுமின்
மருளறுத்தெழுமலைமருந்தனைப்பாடுமின்
வருங்கலியவிக்கருள்சீரிலையைப்பாடுமின்

பொருந்துறுமதங்களின்விருந்தனைப்பாடுமின்
திருந்தடிமலரையென்கருந்தலையணியவிங்
கிருந்தனைப்பாடுமினெந்தையைப்பாடுமின்
றந்தையைப்பாடுமின்றமையனைப்பாடுமின்
கந்தமுற்றும்மருட்சிந்தனைப்பாடுமின்
சிந்தனைதிருத்தியதீர்த்தனைப்பாடுமின்
முந்தையேமுளைத்தவெம்மூர்த்தியைப்பாடுமின்
வம்பணிமலரினல்வாசனைப்பாடுமின்
நம்பனைப்பாடுமினாதனைப்பாடுமின்
நாதமுங்கடந்தவப்பாதனைப்பாடுமின்
வேதனையறுத்தவவ்வேதியைப்பாடுமின்
சீதளசந்திரசேகரற்பாடுமின்
போதமவ்வாலடியோதியைப்பாடுமின்
சூதளவிளமுலைச்சுவடுபோதப்புனை
மாதுமையாதரப்பாதியைப்பாடுமின்
பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
பாடுமினாரருள்பாடுமினாரருள்
ஆரருள்பெற்றுளார்யாருமாராய்ந்துமெய்
தேருமாறோர்ந்தபல்லாயிரம்பேர்களை
ஆரருள்பெற்றிலார்யாருமாராய்வரு
மாரிருள்போலியவாயிரம்பேர்களை
ஆரருள்பேணுவார்பேணுகின்றார்பெற
வோரியமுந்தையோரோதிவைத்தார்பல
சீரினிற்றேருமாதேரியகூரிதிற்
பேரியற்பேர்வுறுபேரவாவார்வுறு
வோருமினோர்ந்தவாவோதுமினோசநீ
ஆரவாரம்பெருந்தூரமேசேரவே
பாரினிற்பலவழிப்பத்தருள்ளீரெலாம்
பேரினைப்பாடுமின்பாடினீர்பேரினை
ஊரினைப்பாடுகேமூரினைப்பாடுகேம்
ஆரமுதன்வளரூரினைப்பாடுகேம்
பாடுகேம்வம்மினோபாடுகேம்வம்மினோ
பத்தருள்ளீரெலாம்பாடுகேம்வம்மினோ
மெச்சுறுதமிழ்மறையிச்சையிற்பாடிய
பொச்சமில்பலதளிநச்சியபாடுமின்
கச்சியைப்பாடுமின்கச்சியைப்பாடுமின்
நச்சியையாம்பரையச்சனாற்கச்சியை
உச்சிகைவைச்சனிரச்சறப்பாடுமின்

விச்சைமற்றதுவெனேச்சியைப்பாடுமின்
ஒற்றியைப்பாடுமின்னொற்றியைப்பாடுமின்
பெற்றபேறுமுடலொற்றியைப்பாடுமின்
கற்றதன்பயனெனுமொற்றியைப்பாடுமின்
உற்றவாழ்விதுவெனுமொற்றியைப்பாடுமின்
வெற்றிவெள்விடையினொற்றியைப்பாடுமின்
நற்றவமுற்றினுமொற்றியைப்பாடுமின்
வெற்றுடல்வீண்படாதொற்றியைப்பாடுமின்
பெற்றவாபெற்றவாவொற்றியைப்பாடுமின்
பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
ஆடலேறழகனார்கூடலைப்பாடுமின்
வம்பலநம்புபுகுமபிடச்செம்பத
நம்பலமெனுந்திருவம்பலம்பாடுமின்
பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
பாடுமின்பாடுமின்பத்தருள்ளீர்களே
நாத்திகம்பேசுவார்நாத்தழும்பேறித்தேன்
ஊற்றிருந்தாலெனவார்த்தைதேனூறிட
வேத்துமின்வாழ்த்துமின்சோத்தம்வாய்வாய்த்தவா
போற்றுமின்றூற்றலாம்சாற்றுமின்போற்றுமின்
பாடுமின்பாடுமின்பாடுமின்பாடுமின்
பாடுமின்பாடுமின்பத்தருள்ளீரே
முத்தியைவேட்டுளமுழுதுணர்ந்தீரே
பத்திநல்வலைபடப்பாடுமினீரோ (௬௧)

நேரிசைவெண்பா.

பத்தருள்ளீர்வம்மினோபாடுகேமாமகிழைச்
சித்தவிகாரத்தியக்கமறு-முத்தியும்வே
றுற்றதூஉம்வேண்டாவுடையீர்நுமதுகழல்
பெற்றதாம்பேராத்திரு. (௬௨)

நேரிசையொத்தாழிசைக்கலிப்பா.

ஐந்தடித்தரவு.

திருச்சிற்றம்பலமென்றுஞ்செழுங்கனகசபையென்றும்
அருச்சித்தவருட்பேரம்பலமென்றுமண்டமெலாந்
தரிச்சுற்றபொதுவென்றுந்தகுசித்ரமன்றென்றும்
விரிச்சுற்றநலங்கொழிக்கும்வெறுவெளியாம்பெருவெளிக்கே
பெருச்சுற்றமறைபேசும்பெரும்பற்றப்புலியூரே.

தாழிசை நான்கு.

கரித்தோலின்றுருத்தியுற்றுக் காண்சித்ரகூடத்தன்
[illegible] (௧)

பூவிருந்தகளியனொடு பொன்னிருந்தகடற்பள்ளி
தாமிருந்தார்குடியெனினுந் தலைத்தருக்குமிடமிதுவே. (௨)

மலைமகளம்மலர்மகளிர் மருங்கிருப்பப்பெருங்கருணை
நிலைதருசைவத்தேனை நேசித்துநின்றனளே. (௩)

ஆனாலுந்திரையுண்டுங்கமழுதுண்டுதமதென்று
வானாடர்காப்பதுண்டு வறியோருமுங்குறுகினமே. (௪)

அவ்வளவில் - இதுதனிச்சொல.

சுரிதகம்.

உள்ளந்தழைப்ப வுடலங்குளிர்ப்பக்
கள்ளகிரப்புக் காணுதொளிப்பச்
சேமநல்வைப்பா மாமகிழடிக்கே
இன்பப்பெரும் பேறிசைந்தனம்
அன்பனுடலினைய்ந்திசினோரே. (௧௩)

நேரிசை வெண்பா.

ஓராதுரைக்கலுற்றே னோர்மாமகிழின்சீர்
யாராலுந்துணரா வற்றாகும் - பாரு
மரனுகக்காணுமே மாலறலுற்ற
வரனுகக்காணுமே யாய்ந்து. (௧௪)

திருவடிவகுப்பு - 'கட்டளைக்கலித்துறை.'

ஆய்ந்துசிவந்தபடியோவருமறையன்பருள்ளந்
தோய்ந்துசிவந்தபடியோதொழும்பரைச்சூழ்நமனைக
காய்ந்துசிவந்தபடியோவமமாமகிழ்க்கீழ்க்கருணை
வாய்ந்துசிவந்தபடியோவமமாணின்மலரடியே. (௧௫)

பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா.

தரவு.

மலரடிக்குமகிழாதம்மைத்துனன்மைந்தனையழித்தீர்
சிலரடிகரும்விலலடிக்கும்பிரம்படிக்குஞ்சிலையடிக்கும்
பலரடிக்குஞ்சொல்லடிக்கும்பரிந்தருளிமாமகிழின்
புலரடிக்குமகிழ்ந்திருந்தவடிகேளோர்விண்ணப்பம்.

தாழிசைகள்.

தாம்வீழ்வார்மென்றோளின் மயிலினிநாகொலந்தத்
தாமரைக்கண்ணனுலகமென்றதமிழ்சுவைத்ததன்றே. (௧)

திருமேனியணிந்தசெழுமணிகளொடுசேயிழையார்
உருமானவுவமானமுண்ரவனொருமான்மிலேன். (௨)

தென்மதுரைக்கூடல்செய்தசெஞ்சடைவாழெழுழியின்றி
யின்மதுரவாயர்குழற்கேழெழுழியிணையிசையேன். (௩)

தேயாது வளராது திருமுடியார்பிறையன்றி
ஓயாமையுழல்பிறையையுவர் நுதலுக்குவைப்பேனே. (௪)

கண்டத்துக்கொண்ட கடுக்கடவுளர்க் காத்தது விவர்கண்
கொண்டத்திண்கடு நெஞ்சுகுலைத்துக் காபபது காண்பேன். (௫)

குமிழ்மாலையேன்மூக்காங் குலவள்ளைத் தழைமிலைந்தாற்
றமிழாருஞ்செவியாகு மில்லையெனிற் றாங்காணேன். (௬)

அருண்மேனிப் பவளவொளி யல்லதுமற் றவர்துவர்வாய்
உருவாருங்கனியிதழுக் குவமையெந்தப் பவளமதே. (௭)

கையேந்து தழைப்பீலி கவின்றமுருந்தல்லாமே
மையேந்து முறுவலுக்கு மமையுமே பிறிதொன்றும். (௮)

இடப்பாதி காத்திருந்த வெழிற்சங்க மன்றிமற்றை
முடக்கூனற் சங்கமுகொன் மிடற்றினுக்கு முற்றுவமை. (௯)

தோட்கமைந்த கரியுரியிற் றுதிக்கையிவர் தோட்கன்றி
பூட்கைபிற தோற்கையே தோற்கையே புகுந்துதிங்கே. (௧௦)

திருக்கைபடக் குழைந்தசெழு மலையன்றித் திரண்முலைக்குப்
பருக்கைபிற மலையாகப் பார்க்கெனினு நயமின்றே. (௧௧)

இயல்பிறந்த துடியன்றே லியனடக விடனல்லால்
இயல்பிறந்த பொருளெதனை யிவரிடைநே ரியம்புவெனே. (௧௨)

பூணியபொன் னுமையொடு மவ்வாமை புணர்கணையின்
றூணிபிறிதல்லாற் காற்றுணையுளதாந் தகைமைத்தே. (௧௩)

வாய்க்குமின்ப வுறுதிசொலும வாய்மொழியா மறைமொழிபோ
னேய்கழுறுதிரவலதே யிவர்நொடிக்குநுண்ணொடியே. (௧௪)

வல்லதென்னை - இஃது தனிச்சொல்.

சுரிதகம்.

யானேதவமுமின்னியநெஞ்சு
மீனுவுடையனன்றி
மேனோர்விழைந்தமெய்ப்பத்திமேயினனே. (௧௫)

நேரிசைவெண்பா.

இனக்கொன்றைசூடிய மாமகிழெம்மான்
எனக்கொன்றைவேண்டி யிரப்பல்—கனக்குன்றை
வாங்கக்குழைத்தாய் வறிதமார்க்கில்லிலென்னெஞ்
சீங்கக்குழையுய கோவின்று. (௧௭)

செவிலி கவறல் - விருத்தக்கலித்துறை.

இன்றுமாதராயென்னினைந் தென்செய்தாயினிவாய்
ஒன்றுபாதியாய்ச்செய்வதில் வல்லமையுடையான்
என்றறிந்துளார்மாமகி ழாளிசீரிசைத்தல்
நன்றுகேட்டிலைபச்சை மாலுமைசெயனயந்தே. (கூஅ)

செவிலி கவறல்-இரட்டையாசிரியவிருத்தம் - மடக்கு.

பச்சைப்பெண்ணின்பங்குடையார் - பச்சைப்பெண்ணின்பங்குடை
பணிவாரணியாரன்பாலே-பணிவாரணியாரின்பாலே. [யார்
விச்சைநட்டாருலகுயவ-விச்சைநட்டார்விட்டாரோ
வேழவுரியார்மூன்வில்லாம்-வேழவுரியார்விளிந்தாரோ.
கச்சையரவமேபூண்வாங்-கச்சையரவமேமாதர்
கருத்துக்கமஞ்சவழகரெங்கள்-கருத்துக்கமஞ்சவருள்கண்ணார்.
பிச்சையெடுப்பர்மனைதோறும்-பிச்சையெடுப்பொம்முளத்தே
பேரிற்பெரியமாமகிழார்-பேரிற்பெயராப்புகழாரோ. (கூகூ)

இரட்டையாசிரியவிருத்தம்.

புகழ்மாமகிழாற்களவிருந்தீர் புனையம்மலைவாழையயவாழைப்
பொருவில்காஞ்சிப்பலதளியும் போற்றுநாகமாக்கமுகு
மிகைசேரிஞ்சிநொச்சியொரு மூன்றும்வேவமூவாசு
மேவக்கடைகாலீர்க்குக்கோல் விண்டுவங்கிச்சிலீமுகமாத்
தகவேயிருந்தார்மகத்தக்கன் றலையைக்கொய்யாகாரத்தைத்
தலைமேற்றழைப்பவத்தியதடாங்கியெமக்குககதலியதாம்
வகையானைக்காகுரக்குக்கானவத்தீஞ்சமைத்தார்காடாடன்
மதித்தார்விகிர்தவேடரன்றோ வாழியவர்பொன்வணப்புகழே.

வாழ்த்து-ஒருபொருண் மேன்மூனறடுக்கிய வெள்ளொத்தாழிசை.

வாழியர்வாழியர் வாழியர்வாழியர்
ஏழுயர்மாமகிழ்சீர்கழலென்றும்
சூழுமன்பரின்பத் துட்டொக்கு.
மங்களமங்களமங்களமங்களம்
இங்கிதமாமகிழ்சீர்கழலென்றும்
பொங்குலகமின்பம்பொலிந்து.
சோபனஞ்சோபனஞ்சோபனஞ்சோபனம்
ஈபவின்பமாமகிழ்சீர்கழலென்றும்
தாபமறவான்வழக்கந்தந்து. (ளக)

மங்களம்-இறுதியிற்கூன்பெற்றுவந்தவஞ்சித்துறைகள்.

தந்திரச்சீர்மறை
செந்தமிழ்மாமுறை
சந்ததமேததெந்தை
சுந்தரத்தானுக்கு-மங்களஞ்சுபமங்களம். (௱௨)

தாளென்முடிபுனைந்
தானுநித்தமண
வாளனம்மாமகிழ்
ஆளன்பாதங்கட்கு-மங்களஞ்சுபமங்களம். (௱௩)

பாதம்பணிந்தவர்
நோதலறப்புரி
போதனருட்குரு
நாதனந்தேசற்கு-மங்களஞ்சுபமங்களம். (௱௪)

தேசனடியவர்
நேசன்றிருவடல்
வாசனருட்பிர
காசன்பொன்னடிகட்கு-மங்களஞ்சுபமங்களம் (௱௫)

குருவாழ்க.

---

## ஆக்குவித்தோர்க்கெய்திய புறநிலைவாழ்த்து.

சுபமஸ்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்பாட்டிலிருந்தேனையென்பாட்டிவிச்சை
யிசைந்தியல்வல்லோர்முன்

பொன்பாட்டிலாசுவைத்தானிலம்பகமாங்
கலம்பகத்தைப்புனைந்துகேட்டான்

அன்பாட்டுமரங்கினுக்குநாதனுனு
னரங்கநாதனன்றோ

இன்பாட்டுமென்கண்மணிமாமகிழா
னீடூழியினிதுவாழ்க.

சுபமஸ்து.

மகிழ்மாக்கலம்பகம்.
முற்றுப்பெற்றது.

உ

# இந்நூல்செய்தவரால் செய்யப்பட்ட நூல்கள்.

## இதுவரையில் அச்சிடப்பட்டன.

### மொழிபெயர்ப்பு வாசகநடை.

பாராசரஸ்மிருதி ஆசாரகாண்டம்.
சங்கரவிஜயம்.
திருவெண்காட்டடிகள் புராணம்.

---

### பெரியபுராணம்வசனம்.

---

### செய்யுள்நடை.

---

### மூத்தபிள்ளையார்.

துவாதசநாமசங்கீர்த்தனம்.
திருப்பாதப்புகழ்ச்சிமாலை.
சரணதசகம்.
ஷண்முக சரணாஷ்டகம்.
சிவபெருமான அட்டோத்தரசதநாம மஞ்சரி.

---

## இனியச்சிற்பதிப்பிக்கப்படுவன.

### சிவபெருமான்.

சீபாதத்திருப்புகழ்மாலை.
திருவடித்திருபபுகழ்மாலை.
திருப்பதியழகாயிரத்தந்தாதி.
அடைககலமாலை.
அபயமாலை.
சிறுவிண்ணப்பமாலை.
சரணாகதிமாலை.
அம்பலக்குறம்.
கையடைமாலை.
சநிதிமுறையீடடுமாலை.
ஓலமாலை.
தைரியசரணியமாலை.
கையறவுமாலை.
அபராதக்ஷமிப்புமாலை.
இணைமணிமாலை.
சித்திரக்கட்டளைக்கலிமாலை.

தனிப்பதிகங்கள் அடங்கிய அருணமபாராயணத்திரட்டு.

---

### இளையபிள்ளையார்

திருப்பதத்திருப்புகழ்மாலை.
திருக்கழற்பல்லாண்டுமாலை.
சித்திரயமகவநதாதி.
திருத்தணிகைசசித்திரமாலை.
திருத்தணிகைப்பதிற்றுப்பத்தந்தாதி.
வெண்பாவநதாதி.
திருத்தணிகை நானமணிமாலை.
,, மும்மணிக்கோவை.
,, இரட்டைமணிமாலை.
,, கலமபகம்.
திருப்போரூர் கலிவிண்ணப்பம்.
தனிப்பதிகங்கள்.

திருவொற்றியூர் வடிவுடையம்மை திரிபந்தாதி.

உ

கணபதிதுணை.

# கச்சிக்கலம்பகம்.



இரண்டாம்பதிப்பு.

ஸ்ரீமான் டி

அரங்கநாதமுதலியாரால்

இயற்றப்பட்டது.

சென்னைபுரி:

ஸ்ரீ-புஷ்பரதசெட்டியாரவர்களது

கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1890.

உ

கணபதிதுணை.

# கச்சிக்கலம்பகம்.

காப்பு.

நேரிசை வெண்பா.

தங்கச் சிலையேடுந் தந்தவெழுத் தாணியுங்கொள்
துங்கக் கரிமுகத்துத் தூயவனென் - சங்கையொழித்
தேடெழுத் தாணி யெடுத்தறியே னிந்நூலைப்
பாடவளிப் பானற் பதம்.

---

நால்வர்துதி.

ஆசிரியவிருத்தம்.

தறையின்மிசைத் தமிழ்பெருகச் சைவநெறி தழைப்பவவ
தரித்த சால்பின்
மறையுறைவா மொருநால்வர் பதமலரைச் சிரங்கொண்டு
மடத்தைப் போக்கிக்
குறைவறுநாற் றேற்றத்தி னுளதாய துயரகலக்
குறிப்ப னன்னோ
பிறைசுமந்த சடையானொன் பிழைசுமந்த கலம்பகத்தைப்
பெறச்செய் வாரே.

---

ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

இ. து தா வு.

பூமேவு நான்முகனும் புயங்கவணை மாதவனு
மாமேவு கினதுமுடி மலரடிகா ணத்திறத்தை
ஆராயு மறிவினரோ யம்பலக்கூத் தாட்டினையும்
வாரார்ந்த தனத்துமையாண் மகிழ்ந்துறையு மாட்டினையும்
கழையிழைத்த வில்லானின் கண்ணினுறு கேட்டினையும்
பிழையிழைத்த முப்புரத்தார் பீடழிந்த பாட்டினையும்
அறமேய மால்விடையா யம்புதமா யம்பாகித்
திறமேய தேவியுமாய்ச் சேர்ந்தவருங் கூட்டினையும்

கல்லடித்தார் சிலையடித்தார் கண்பறித்தார் முதலடியார்
தொல்லைவிலம் பிறவாமே துயரறுத்த பீட்டினையும்
பாற்கடலி னமுதெழுமுன் பகைத்தெழுந்த வாலத்திற்
கேற்கவிட மமைந்தமரர்க் கின்புறச்செ யூட்டினையுங்
கிழக்குவடக் கறியாத கீழ்மையருஞ் சிறப்பெய்தி
வழக்குமிடப் புரியுணாவு வாய்ப்பளித்த நீட்டினையு
மறிபவரா மன்றியெம்போ லறிவற்ற சிறியவாவீ
டுறுவகைமற் றில்லையென வுணாந்தெளிய காட்சிதரீஇ
மாகம்பத் தொடுமிறைஞ்சி வழிபாடு செயவுமையோ
டேகம்பத் தொருமாவி னினிதுவீற் றிருந்தருள்வோய்!

## ஈரடித்தாழிசைகள் - அ.

இடங்கர்வாய்ப் பட்டகளிற் றின்னுயிரைப் புரந்தசெயல்
கடல்வீழ்த்த நாவரையன் கன்மிதத்தற் கொப்பாமோ (க)

கைகைக்குக் கானடந்த காகுத்தன் பொறையினுமீ
வைகைக்கு மண்சுமந்த வண்மைமிகப் பெரிதன்றே (உ)

கம்பத்த னுயிர்மாயக் கடுஞ்சமாசெய் கைவலியென்
கம்பத்தன் சிலையெடுக்கத் தலைநெரித்த கால்வலிக்கே (ங)

கொம்பனையாள் கல்லுருவிட் டின்னுருவங் கொண்டதினுஞ்
சம்பந்த னென்புப்பெண் ணாக்கியது சால்புடைத்தே (ச)

அம்பொன்றாற் புணரிநீா சுவறச்செ யாற்றலினும்
நம்பொன்றாப் புரமூன்றை நகைத்தழித்தன் மேன்மையதே (ரு)

எழுவிடையைத் தழுவிமண மெய்துமொரு செயலினுஞ்சீா
மொழியரைய னமணர்கரி முனிவொழித்த தற்புதமே (சு)

அண்டரிள மடவாரை யணைந்தவபி ராமமெனோ
பண்டிருடி மனைவியாகள் பாடழிந்த வனப்பினுக்கே (எ)

பற்குனற்கு மாயன்சு பத்திரையைத் தந்தவகை
சற்குணற்குப் பரவைதரு தண்ணளிக்கு நேராமோ (அ)

## அராகம் - சு.

உரையிட வரியதொ ரனலுரு வொளிதர
வரைமக ளிடமுறு வகைபுரி யளியினை (க)

நிழலிடு தருவடி நிலைபெறு கருணையை
வழிபடு மவர்பெற வருள்பர வெளியினை (உ)

பகலவ னனலவ னிறைமதி பரிவுறு
தகவனம யுரைமிகு தமனிய வொளியினை (ங)

பழமறை யொலிகெழு பலதல மருள்பய
னழகுற வருளிவ ணமாதரு பளியினை (ச)

பெயர்த்தும்வந்த

## ஈரடித்தாழிசைகள் - அ.

நறைபூத்த மலர்க்கொன்றை நளினந்தின் மாண்டதுவே
பிறைபூத்த செஞ்சடையாய் பிறங்குபுய முற்றபினே (௧)
பணியணிந்தாய் மற்றதைவிற பற்றியிசைத் தாய்கயிருத்
திணியவைத்நாய் மந்தரத்தே நஞ்சுணவுஞ் சிறப்பாமோ (௨)
மாலுலகங் காக்கநர மடங்கலுருக் கொளவம்மா
லாலுலகுக் கானதுய ரகற்றவல்லா வேறுளரோ (௩)
மகிழிருந்தாய் மனையென்றே மாசுணமேற றுயின்றானுக்
ககங்கனியச் சங்காழி யாண்டகைமுன் னருளியதே (௪)
கவுணியருக் கணிமுத்தங் காதலினீந் தருள்செயலக்
கவுணியருக் கணிமுத்தங் கனிந்திட்ட டரிசன்றே (௫)
மதிவேணி மிசைமேவ மலர்விழியு மதியான
விதிசாறற வறியேமுன் மேனியழ கியம்புவதே (௬)
மூலக்குறியும் விளக்குறியுங் கொண்டதம்பின் முதலவனே
இலைக்குறியுங் குணமுமென லெவ்வண்ண மியைந்திடுமே (௭)
மாவடிக்கீ ழுற்றருயன் மலரடிக்கே மங்கலச்சொற்
பாவடுக்க நாவளிப்பாய் பழமறைசொல் பரமேட்டி (௮)

## நாற்சீரீரடியம்போதரங்கம் - உ.

கரந்தயங் கனன்மழு வேந்தி நெறறியிற்
புரந்தெறு சுடர்க்கணும் பூண்ட மேன்மையை (௧)
கூற்றினைக் குமைத்திடு கோலத் தாளினை
யாற்றினை யருணட மாடும் பான்மையை. (௨)

## நாற்சீரோரடி யம்போதரங்கம் - ச.

ஏரேழ் புவனம் பரிந்துணை றறினை (௧)
காருரா சடையிற் கரந்துமாற்றினை (௨)
பாரார் பெரியோர் பணியுஞ் சாற்றினை (௩)
தேரார் தெளிவறு செருக்கை மாற்றினை. (௪)

## முச்சீரோரடி யம்போதரங்கம் - அ.

புரமெரி படநகை கொண்டனை (௧)
புரிதவ றழிவகை கண்டனை (௨)
புரையறு தசைமிசை யுண்டனை (௩)
புணர்வுற வருமறை விண்டனை (௪)
மணிமிட றாதரு மிருளினை (௫)
மலைவளர் காதலி மருளினை (௬)
மறையொளிர் தோமறு பொருளினை (௭)
மலொடு மாவம ரருளினை. (௮)

## இருசீரோரடி யம்போதரங்கம் - கசு.

| | | | |
|---|---|---|---|
| சடையுறு செல்வினை | (க) | அமுதுகு பாவினை | (கூ) |
| விடையுறு மெல்வினை | (உ) | அனலுறு கோவினை | (க0) |
| கலையளை சொல்லினை | (ங) | சிலையில வாவினை | (கக) |
| சிலைவளை வில்லினை | (ச) | தலைநதி மேவினை | (கஉ) |
| மலைவலி புல்லினை | (ரு) | மறைபடு நாவினை | (கங) |
| வழிபெறு மல்லினை | (சு) | உலகுணு மேவினை | (கச) |
| களமில கல்லினை | (எ) | கரிவளர் காவினை | (கரு) |
| பரவெளி யில்லினை | (அ) | கதிதரு மாவினை | (கசு) |

**தனிச்சொல்.** எனவாங்கு.

### நேரிசையாசிரியச் சுரிதகம்.

ஆரண வகில காரண பூரண
நாரண னறியா நாயக வேயக
முத்தே யறத்தின் வித்தே முக்கட்
சித்தே சுத்தே யெத்தே வரும்பணி
அத்நா வன்று யளிக்கொரு வைப்பே
கத்தா வெனக்கூய்க் கண்ணீர் ததும்ப
உள்ளநெக் குருக வுரோமஞ் சிலிரப்ப்
விள்ளற் கருநின் மேன்மையைப் புகழும்
பாவலர் தமக்குப் பழவநு கூல
மேவலா வேரற வீறிய சீல
மாதுமை பங்குறு மாண்புடைச் சீரிய
தீதெமை யணுகாத் திறமரு ளாரிய
நால்வ ரிசைத்தமிழ் நலனறி நாத
மால்வளை மங்கை மணாள நீத
கொன்றைத் தொடையணி கோனே பசுபதி
குன்றைக் குழைத்த கோதறு குணநிதி
கல்லாப் புல்லேன் கனிவுறு மனத்தேன்
எல்லாப் பிழையு மியற்று மேழையாற்
சொல்லப் படுமோ சொலற்கரு நின்புகழ்
புல்லப் படுமோ புரையறு நின்பதம்
உன்னப் படுமோ உத்தம நின்னெழில்
பன்னப் படுமோ பகவ நின்னருள்
பாடப் படுமோ பண்ணவ நின்சீர்
தேடப் படுமோ சேவடி யெனினும்
அல்லுறு நஞ்சர வக்கு மத்தமும்
புல்லு முவப்புடன் புனைந்தெனக் கனிந்து
சிற்றறி வினனுரை செய்யுளை
முற்று நயப்பாய் மூவர்க் கையனே. (க)

## நேரிசை வெண்பா.

ஐய முறுமனமே யண்ணறிருக் கச்சியரன்
செய்ய மலரடியைச் சிந்தித்தி - னையாமே
இன்மையறி யாவீகை யெச்சமறி யாவாய்மை
புன்மையறி யாப்பொறையைப் பூண். (உ)

## கட்டளைக்கலித்துறை.

பூண்ட வரவ மதியை யுறைது புரந்தருளு
மாண்ட வரவம் புரிவார் செயலை யழித்துவக்குந்
தாண்ட வரவ ரிணையடித் தாமரை தஞ்சமென
வேண்ட வரமளிப் பார்கச்சி யன்பர்க்கு மெய்யரனே. (ந)

## புயவகுப்பு.

### இரட்டை ஆசிரியச்சந்தவிருத்தம்.

தனதன்ன தந்தனத் தனதனன தந்தனந்
தனதனன தந்தனத் தனதான தந்தன.

௧. அரணெரிய வந்தரத் தமராதுயர் சிந்தவெய்
பிணையொருது ரும்பெனச் சிலைகோலி விஞ்சின
அரவமரி கந்துசெக் கரினிலகு செஞ்சடைப்
பணிமதிய ணண்புறப் புரியாம கிழ்ந்தன
அகிலபுவ னங்களுக் கமுதிடுகி ரந்தரிக்
கிடமமாவ ரங்கொடுத் தகலாத ணைந்தன
அழலுருவ மன்றுபெற் றொருருபுறவ மைந்தனுக்
கொளிவடிவு தந்தருட் பொலிவானி மிர்ந்தன

௨. கரடமத கும்பமத் தககபட தந்தியைச
சமாபொருந்து வென்றுரித் ததளாடை கொண்டன
கடலமுதை யும்பருக் குதவவெழில் கந்தரத்
திலகுகறை கொண்டுதிக் கிருநால ளந்தன
களபமணி யம்பிகைக் கனகதன மின்புறத்
தழுவிவரு மங்கலச் சுவடாழ்வி ளங்கின
கதிர்மதிய மங்கிமுக் கணிமொளித யங்கிடக்
கடுவுடைய திண்சினத் தரவாட நின்றன

௩. சரமழைபொ ழிந்தபற் குனனருள்பொ ருந்திடப்
பகைவாகெடு வன்படைக் கொடையாலு வந்தன
சமரபுரி கந்தனைப் புலவருய்ய மண்டமர்த்
திறலவுணர் பங்கமுற் றிடுமாறு தந்தன
சததளம லர்ந்தபொற் றவிசினிலி ருந்தவச்
சதுமுகன்ம றங்கெடத் தலையோட ணிந்தன
சலமிசைது யின்றசக் கரதரன லம்பெறத்
தருமவிடை யம்புறப் பரிவோடி ணங்கின

ச. இரவினவிர் திங்களிற் செறுமொளிபெ றுங்குழைக்
கவுரியிட மன்பினுற் றிடவாசை மிஞ்சின
இரணியனு ரங்கொலைத் தெழுநரம டங்கலைச்
சரபவுரு வந்தரித் தமராடி வென்றன
இடபமிசை வந்துபொற் பதநசைகொ ளன்பருக்
குயர்பதவி தந்திசைப் பருமோகை கொண்டன
புனிமைதரு கம்பமுற் றருளநக வெந்தைநித்
தியநிமல சுந்தரப் பரனாபு யங்களே. (ச)

## ஆசிரியவிருத்தம்.

புயங்கப் பணியாா புவியுண்ட புனித விடையாா புனையின்மதி
தயங்கப் பணியார் சடையாளா தயையின் சாலை தனைநிகர்வார்
இயங்கப் பணியாா புரமெரித்த வீசர் கச்சி யிடையமர்ந்தா
மயங்கப் பணியா ரவாதிருத்தாள் வணங்கி ரிடும்பை வறறிடவே. (ரு)

## அம்மானை. கலித்தாழிசை.

வற்று வளக்காஞ்சி வாழ்ந்தருளோ காம்பரனா
செற்றார் புரியெரித்த தீயர்கா னம்மானை
செற்றார் புரமெரித்த தீயரோ யாமாயிற்
கற்றாக ளந்தணராக் கழறுவதே னம்மானை
கழற லறுதொழில்சேர் காரணத்தா லம்மானை. (சு)

## நேரிசைவெண்பா.

அம்மானைக் கையமைத்தா னக்காலை யோடவைத்தான்
சும்மா விருந்துமதற் சுட்டெரித்தான்—பெம்மான்
பதிக்கச்சி மேய பரமன் பணிந்து
துதிக்கத் தருவன் சுகம். (எ)

## கட்டளைக்கலித்துறை.

சுகந்தரு கச்சிப் பதிவந் தடியா துயர்களைவோா
நகந்தரு மெல்லியற் காம விழியிரு நாழிநெல்லா
லுகந்தரு முப்பத் திரண்டற மோம்பச்செ யுத்தமாபா
தகந்தரு துன்பொழிப் பாாபணி வீரவர் தாண்மலரே. (அ)

## ஆசிரியவிருத்தம்.

மலர்க்கஞ்சன் சிரமிழந்தான் கோப்புரக்க மலையெடுத்தான்
வன்றி யானன்
சிலைக்கரும்பா னுருவழிந்தான் சேணியங்கு மிருகதிருஞ்
சிதைந்து நொந்த
கலக்கரிப பகைப்புரங்க ணீறுபட்ட கச்சியே
கம்பர் மேன்மை
நிலைப்படவா யாமையினன் றேமனமே புகழ்ந்தடைதி
நிமல வாழ்வே. (கூ)

## வலைச்சியார்.

### இரட்டையாசிரியவிருத்தம்.

வாளைக் கயலை நிகர்த்தவெங்கண்
வலைச்சி யீறும் வனப்பெவரான்
மதிக்க வமையு மரன்கச்சி
வந்தீ ரளவா மயறந்தீர
தோளைத் தழுவிற் சுகம்பெறலா
மூட லொழிவீர் நீரக்குமிழி
சுழிதேம் புளினந் தோன்றிடுமால்
துயர முறுவே னடைகிழங்கா
ஞாளைக் கழியா திருலிதழி
னறவைப் பருக நச்சுறக்கொ
ணுணைக் கருப்பஞ் சிலைவேளை
நாணச் செய்வேன் மலங்குறேன்
கோளைப் போக்கற் குறவைமட
வைப்பா மகத்தைக் குழைத்தென்மேழ்
கொள்வீ ரிரதத் தென்பாலான்
கொடிய பகழிக் குடையேனே. (௰)

### கலிநிலைத்துறை.

ஏனங் கொன்று ரேனைக் குருளைக ளிடாதீர்த்தா
மானங் கொன்றை வலன்வைத் துமைமா னிடம்வைத்தார்
தானங் குறைவா தானத் துறையாரா தமிழ்வல்லா
கானத் துறவா கம்பத் திடையே மகிழ்வாரே. (௧௧)

### ஆசிரியச்சந்தத்தாழிசை.

மகிழார மாவாரை மணமேவ விழைவாய்
மணியார மரபேயின் மலைபச்சை யுடையே
இகழ்மி மிசைபாடி நடமாடு மிடமா
மிகவாத தொழிலைய மில்வாழ்வொா மலையின்
மகவாய வொருநீலி மறைவுற்ற சலத்தாள்
வரமைந்த னொருமாதின் வழிநின்ற திருடன்
தகவீது தெரிகாத லொழிவாயென் னுரைகேள்
தரைமீதெந் நலமெய்தி மகிழ்வாய்மின் னரசே. (௧௨)

### விருத்தம். மட்க்கு.

அரசுக விதையாரும் .. .. பரசுக விதையாரும்
அடையமை மாறாரும் .. புடையமை மாறாரும்
வரமா சடையாரு . .. முரமா சடையாரும்
வயமா திரத்தாரும் ... .. .. புயமா திரத்தாரும்
கரமணி வடத்தாருஞ் .. .. சிரமணி வடத்தாரும்

களிமறைப் பரியாரு ... மொளிமறைப் பரியாரும்
அரிபதி யாளுருங் ... ... ... கிரிபதி யாளுரும்
அடியார் மாவாருங் .. .. கடியார் மாவாரோ. (கங)

## இரட்டையாசிரியவிருத்தம்.

மாதுமையாள் பனிமலையில் வளர்ந்தாணின் மதலையரிற் கயமு கத்தோன்
வரமுனிவன் வேண்டவட வரையேட்டிற் பாரதப்போர் வரைந்தா னீபப்
போதலங்க லணிகுமரன் குன்றுதொறும் பேருவகை பூப்ப மேவிப்
புனிதவிளை யாட்டயர்ந்தான் கச்சியமர் புண்ணியநீ கயிலை மேரு
மாதிரத்தே வதிந்தனையென் கல்லனைய மனத்தூடன் குடும்பத் தோடு
மருவவொரு தடையுமிலை மலைசிலையா வனைத்தநினக் கெளிதே யென்றன்
கோதுடைய மனச்சிலையைக் குழைத்தன்பி னெகிழ்வித்த லைய மூன்னாட்
குருகுய்ய வுபதேசங் கூறியநீ யெனக்குரைத்தாற் குறைமட் டாமே. (கச)

## கட்டளைக்கலித்துறை.

மட்டிக்குட் டங்குங் கணுநிகா கஞ்ச மலரனைய
தட்டிக்குட் டங்கை முருகனத் தாகச்சிச் சங்கரனே
பெட்டிக்குட் டம்பண மிட்டுவப் பார்குணம் பெட்டுவினை
கட்டிக்குட் டன்றுய னெல்லா மகன்றிடக் கண்டருளே. (கரு)

## வெண்பா.

கண்டவனை மேவிக் கலந்துண்ட கள்வனெலி
கொண்டவனை நீக்கச்சிக் கோமானே—பண்டுனது
தானை மருவுந் தகைமையிலா னுற்றதெவன்
தோளை மருவுஞ் சுகம். (கசு)

## தூது-கிளி.

## ஆசிரியவிருத்தம்.

சுகமே மறைமா வடிமே வியவென்
றுணைவற் கெளியேன் றுயரைப் பகர்வாய்
மகமே ருசிலைக் குனியா னலனென்
மதனன் கழையே வையம் புகைக்குஞ்
சகமே மூயின்றேன் பெயாகொள் ளெளியேன்
சரணு கதிசோ தலைவேண் டினனென்
றகமே குழையப் புரியா யெனில்யா
னயர்தீ தகலத் தருவாய் சுகமே. (கள)

## கலிநிலைத்துறை.

தீதறு நூலுணர் தெள்ளிய சிந்தையர் மனமூடே
காதலின் வாழே காம்பரர் முடியைக் காணவய
னேதமுறக்கோ லெகின மெனப்போய் முடிகாணு
வேதனை பெற்றே வேதனை யுற்றான் வெளியானுள். (கஅ)

### ஆசிரியவிருத்தம்.

வெளியிட் டாரைக் காட்டானை
வியன்மா வாரைச் சேவானை
ஒளியிட் டோங்குறுங் கச்சியானை
யுபாமா மறையி னுச்சியனைக்
களியுற் றுடுங் கூத்தானை
யகில மனைத்துங் காத்தானை
அளியுற் றினிது புணர்ந்திடுற
கருங்கண் செயலெலாந் திலைமாமே. (௧௯)

### இரங்கல். ஆசிரியவிருத்தம்.

மாமையை யடைந்தாய் வாளைக முற்றாய்
மழைக்கணீ ருகுத்திடப் பெற்றாய்
காமுற வணஞ்சோ விஸ்வனை விட்டாய்
கலைமதி யொளித்தலைப் பட்டாய்
நாமுற விடிக்க மின்னினை யானாய்
நன்னிரு ளம்பரம் போனாய்
ஏமுறு மெனபோற் கொண்டலை கச்சி
யீசனை விழைந்தனை சிறப்பே. (௨௰)

### மடக்கு. விருத்தம்.

சிறுகாலின் மலையளவும் திருக்காஞ்சி யுள்ளீர்
சேயிழையாட் கசலுமிடைத் திருக்காஞ்சி யுள்ளீர்
மறியோடு மழுவிடமார் மாகனகந் துன் புடையீர்
மங்கையணிந் திருமுத்தம் மாகனகத் துன் புடையீர்
வெறிதாசை கூடன்மனைத் துறைவெலங் காட்டூர்
விதிவிழைவு கண்டவிடத் துறையானங் காட்டோர்
அறிவேதுஞ் செயலிட்ட ரம்பரங்கா வணமே
அளிப்பீரங் கொன்றைமல ரம்பரங்கா வணமே. (௨௧)

### ஆசிரியவிருத்தம்.

காரானைத் தோலுரித்த கறுப்பா ரூனைக்
களிந்துடல நீறணிந்த வெண்மை யானை
வாரானை பூர்த்திலங்கு செம்மை யானை
வலத்தானை யிடப்பாகப் பச்சை யானை
நீரானைச் செஞ்சடையி னெறதி யுறற
நெருப்பானைப் பொருப்பானைச் சிகத்தி ரச்சிரப்
பேராளைப் பெரியானைக் கம்பத் தானைப்
பெம்மானை யெம்மானைப் பேசு மாறே. (௨௨)

### கலிவிருத்தம்.

மாறி யாடு மலரடி மாமறை
கூற வாழுங் குவலயத் தின்னறங்

தேற வாடுந் தெளிதமிழ்க் கச்சியின்
பூற வாடு முளமகிழ் பொங்கவே. (உங)

## கைக்கிளை - மருட்பா.

பொங்கு மருணயனப் பூவி னிதழ்குவியு
மிங்கு மலாக் கோதை யிதழ்வாடு—மங்குறவழ்
மாடக் கச்சியில் வாழுமெம் பெருமான்
குறையா வளக்கழுக் குன்றி
லுறைவா ளிவள்பூ வுதித்தரா யவளே. (உச)

## மறம் -ஆசிரியவிருத்தம்.

தூதுவந்த தொழிலிலாத வாவழக்கை யறிதியோ
தொல்லைநந்த மரபினோர்கொ டுந்தரக்கு வாரணம்
பூதலத்தி னிலையெனக்க லைவிழைத்த சிலையரோ
பொன்றிணிந்த கொங்கைமான்ம கட்குறத்தி வள்ளிமுன்
போதகத்தை யேவியந்த மாதபத்தை யச்சுறப்
புரிந்தசெய்கை சாலுநுங்கு லம்புலப்ப டுத்திடச்
சூதவாழ்க்கை யாதுடிப்பி னுகம்னவத்த வாண்மையார்
சொன்மறைக்க வாயசாங்கொ ளேற்புணர்ந்தி சைத்ததே. (உரு)

## கட்டளைக்கலித்துறை.

இசையா ரணத்தின் முடியார் திருக்கச்சி யீசரன்பிற்
பசையா ரணங்கொரு பங்குடை யாரரி பங்கயத்தன்
மிசையா ரணங்கொழித் தோருள மேவிய மெய்யருத்தி
நசையா ரணங்குறு நானவர் நற்பத நாடுவதே. (உசு)

## ஆசிரியவிருத்தம்.

நாடுந் தொண்டர் மகிழ்வெய்த நறுமா நீழ லமர்ந்தானைப்
பாடும் பணியே பணியாகப் படைத்தேன் பழைய வினைதுடைத்தேன்
ஓடுந் துடியுங் கரத்தமைத்தோ னேங்கா ரத்தி னுட்பொருளைத்
தேடுந் திறத்தோர்க் கறிவித்தோன் றேவி யுமையாள் காதலனே. (உஎ)

## ஒருபொருண்மேல்

## மூன்றடுக்கிவந்தஆசிரியத்தாழிசை.

க. காதங் கமழுங் கடியாரு மாந்தருக்கீழ்
நாத னருளாள னண்ணியசீரச் செவ்வி
காதிற் பண்ணூறுங் கவியின்ப மானுமே.

உ. பூவின் மணமார் புனிதநறு மாந்தருக்கீழ்ச்
சேவின் மிசைத்திகழுந் தேசனமை செவ்வி
நாவின் னமுதூறு நற்சுவையை மானுமே.

௯. மண்ணிற் சிறந்த வளமளிக்கு மாந்தருக்கிழ்
விண்ணிற் பொலிந்தான் விளங்கியுறு செய்வி
கண்ணிணையாற் காண்பரிய காட்சியினை மாலுமே. (உஅ)

வெளிவிருத்தம்.

மாக்கைக் குருகின் றமும்புற் றுரு மாவாரோ
ஆக்கைக் கயனை யமைத்திட் டாரு மாவாரோ
காக்கைக் கரியைக் கனிவித் தாரு மாவாரோ
போக்கைக் கனலைப் பொலிவித் தாரு மாவாரோ. (உகூ)

கலி - கட்டளைக்கலிப்பா.

மாவி னீழல் வதிந்தருள் வாகச்சி
வாழு மின்ப மருவு களியரோ
தேவ ரன்று சிறைந்தவ ரோமது
வாவி சீதர னுண்ண மயங்குறின்
நாவ லர்ந்துமெய் பேசுவ ரின்னறை
யுண்ட நன்மையர் நறபனை தெங்குசோ
காவி டைப்பாடி யாடுவர் மண்டரு
கண்ணி றைந்த வமுதை யருந்தயே. (௩0)

இதுவுமது. ஆசிரியவிருத்தம்.

அரவிந்த மலரின்கட் குடியனைய னமராசுரா பானந் தாரோ
வரமுறுகா விரிநதிக்கட் குடியனே திருமருவு மாயி னுனும்
தரணியின்கட் குடியாபெருந் தவமுனிவா சித்தரும்வின் னவர்கடாமும்
கரவடமேன் திருக்கச்சிக் கண்ணுதலார பனையின்கட் குடியர் தாமே. (௩க)

கட்டளைக்கலிப்பா.

பட்ட தும்புமி தழ்த்தெ ரியலைக்
கச்சி நாதா தருவ திலையெனிற
றுட்ட மன்மத னங்கணை யாமலர்ச்
சூத முல்லைய சோகம ரவிந்தங்
கெட்ட வுறபல மஞ்செரி போல்வருங்
கிளிய னீர்மட நாணமச் சம்பயிர்ப்
புட்ட யங்குயி ரைந்தும வைக்கினா
யோவென் றேதிரச் செம்மழு வாளர்க்கே. (௩உ)

ஆசிரியவிருத்தம்.

மழுவேந்து வலக்கரத்தர் மழையேந்து சடைச்சிரத்தா வான்பு ரத்தர்
விழவாய்கு பூதரத்தா வேளெரித்த மாவுரத்த ராத ரத்தா
தொழுவாழு மாதிரத்தா நடமாடு மெரிசுரத்தர் தூவ ரத்தர்

சித்து - ஆசிரியவிருத்தம்.

குன்றைக் குனித்தநகச்சிக் கோமானூர் சித்தவுருக்
கொண்ட நாள்யா
மென்றைக்குஞ் சிறப்பெய்த விச்சையுடன்
கற்றவித்தை யிற்றென் றுமோ
மின்றைக்கு முடிவேந்தா விரும்பவொரு
தினத்திரும்பு தங்கப்பொன் செய்வேம்
இன்றைக்குப் பொன்னளித்து நாளைவெள்ளி
யியற்றினும்பின் சனிய நாமே. (௩௪)

இதுவுமது.

சனியாகு மூழ்வலியாற் சகலகலை யறியுணாச்சி
தகைபெ றுநால்
தனியாகு மெங்களூத வியைப்பெற்றுச் சாற்றும்ப
ரடைந்தார பொன்னில்
கனியாரும் பொழிறகச்சிக் கண்ணுதலார கைச்சிலம்பைக்
கனக மாக்கிப்
பனியாருங் கடல்வண்ணன் மார்பிணைப்பொன் னிருப்பாகப்
பண்ணி னேமே. (௩௫)

கலிநிலைத்துறை.

இருப்புக்கு வெண்பொன் பசும்பொன் னகங்கொண்ட
விறைவாவெனக்
கருப்புக் குழன்றெய்க்க வையாம லருள்கூர்ந்து
காப்பாய்கொலோ
பொருப்புக்கு வீழப் புலிக்காடை பொங்கப்
புரஞ்செற்றசெந்
நெருப்புக்கு வதனத் திடந்தந்த வொருமா
நிழற்சோதியே. (௩௬)

நேரிசைவெண்பா.

சோதிப் பரம்பொருள்வாழ் தூயவிடந் தொண்டர்நெஞ்சோ
வேதத் தனிமுடியோ வேள்விபுரி—மாதவர்வாழ்
தில்லையோ கூடலோ சீர்க்கயிலை மாமலையோ
தொல்லையே கம்பமோ சொல்.

இளவேனில். ஆசிரியச்சந்தவிருத்தம்.

பனிக்கால மேகப்ப லம்பூவி றைக்கும்
பருவத்த ருட்கச்சி யிறையிங்கு வாரான்
குனிக்கோல நம்பன்ற ணிப்பென்ன சொல்வான்
குன்றத்தி ருந்தானை மன்றத்து வைத்தே

தனிப்பாக வென்னைப்ப சப்பிக்க லந்த
சமயத்து ரைச்சத்தி யங்கூறி யரவை
இனிப்பாரு மொழியாள னிதுசெய்த பழியோ
வென்றேயு டன்கேட்ப னினியென்ன குறையே. (௯௮)

## மடக்கு. ஆசிரியவிருத்தம்.

குணதிசைவெய் யோற்கலரு மரவிந்தம் பானலமே
குலைந்திடுந்தென் பொதியில்வரு மரவிந்தம் பானலமே
கணமிகுவெண் முத்துயிர்க்கு நந்தனந்தங் கயலாமே
கச்சியிறை தணத்தலின்வா நந்தனந்தங் கயலாமே
அணங்குறவின் மதன்முளரி முலையெய்திடு மாசுகமே
ஆசறவு ரிதழ்பருக முலையெய்திடு மாசுகமே
வணமணியின் பரஞ்சுமந்த வாழிதயங் கருங்கலமே
வஞ்சருக்கென் னெஞ்சரங்க வாழிதயங் கருங்கலமே (௯௯)

## பாண். நேரிசையாசிரியப்பா.

கலன்பணி யுடைதோல் கலம்பலி யோடுகொண்
டிலந்தொறு மிரந்து ணிறைதரு மொற்றில
மலைவளா காதலி மங்கள வல்லி
சிலைவேட் களித்த சிறசுக மங்கை
இழைவகி நுண்ணிடை யேந்திழை பங்கன்
பழைய கள்வன் பண்டுபின்னை யோராந்தேம்
பாணனே நின்னைப் பண்ணிசை கூட்டி
வீணையிற் பாடி விழைவை யூட்டித்
தன்வயப் படுத்துத் தந்திரங் கற்பித்
தென்வயிற் செலுத்து மிங்கிதந் தோன்றப்
பாடினை யின்புறப் பாடல் கேட்டாங்குக்
கூடிய கொற்றவன் குணமறி வாயோ
மலைப்பெணந் தரியை மகிழ்வாய் மணந்து
மலைப்பெண்ணைச் சடையி லமைத்த தேனுளை
கம்பை நதியயல் காம நயனியா
மம்பை யருச்சனை யாற்றல்கண் டவளை
யுள்ளங் கலங்க வோங்குநீ ரழைத்துக்
கள்ளப் புணர்ச்சி கலந்து வடுப்பட்
டின்னமு மாறு தேய்ந்த தன்மை
யென்னவென் றுரைப்ப னிதுவல தொருநாட்
டாரு வனஞ்செலீஇத் தாபதப் பன்னியா
தெருமா லுற்றுப் பருவர லெய்தக்
கோவண நீத்துத் திவணம் பூத்தும்
மின்னிடை யாருடன் விருப்புறப் பேசித்
துன்னிய தன்மை சொல்லுந் தகைத்தோ
[illegible] வள்ளிகொணர்ந் தன்று

மதுரையில் வந்த வசையே சாலுஞ்
சாலும் பாண சாலும் பாண
யாதுங் கேளேன் யானினி மயங்கேன்
போகென வுரைத்தும் போகா யந்தோ
அன்னை யறியா தணைந்தே னவனைப்
பின்னை யுற்றிடும் பீழை நினைத்திலன்
அகலுதி பாணு வனையறி வாளேல்
நகரு நின்சிரந் தமரும் வெகுளுவா
நெஞ்சி லிட்ட நெருப்பின் வெப்பினை
வஞ்சக னறிய வழுத்துவை பாணு
மறந்தே னன்னையை மன்னனைப் புணர்ந்து
சிறந்தன மென்றே திகைத்தே னித்துணை
பட்டது சாலும் பாணனே மடவார்க்
கிட்டது தானே யியலும் பரமனை
வெறுத்தலும் வீணே விழைவு
பொறுத்தரு நிலனினிப் புரிவ னற்றெண்டே. (ச0)

ஆசிரியவிருத்தம்.

தொண்டர்க் குறவே யாருரைத்
தூய மறைமா நிழலானை
அண்டர்க் கிறையா மடலானை
யக்கு மெலும்பு மணிவானைக்
கொண்டல் வண்ண னெண்கண்ணன்
கூறற கருஞ்சீர கொண்டானைக்
கண்டத் துறையு மாறுகடற்
கடுவுண் டானைத் துதிப்பாமே. (சக)

தூது-மேகம். நேரிசை வெண்பா.

கடுக்கைத் தொடைநயந்தேன் காதலுடை யார்யா
வடுக்கை யுறுமா நயந்தா—கொடுக்கைக்குச்
செல்லே சிறந்தாய் திருக்கச்சி வாணர்பால்
வல்லே தொடையிரந்து வா. (சஉ)

கட்டளைக்கலித்துறை.

இரந்துயி ரோம்பிட வேழை மனங்கொதித் தின்னலுற
வுரங்கோலந் தோயப் படலோ யுட்டற வுறுபசியால்
வருந்துபு மானமுந் தீரமு மங்கி மடிந்தொழிவீர்
திரந்தரு மேகம்ப வாணனை நீரொன்கொல் சேர்கிலிரே. (சங)

தூது - நெஞ்சு. நேரிசைவெண்பா.

என்னெஞ் சினுமினியா ரில்லையென வெண்ணியதைத்
துன்னற் கருங்கச்சித் தூயவர்பா—லின்னமறப்

பூங்கொன்றைத் தாரிரக்கப் போதி யெனவிடுத்தேன்
தீங்கொன்றைச் சூழ்ந்திலா தேன் (சச)

கலிநிலைத்துறை.

ஒன்று சூழின்வே ளென்றுமுந் துறவுணா வுலைந்து
பின்றை யெய்திடும் பெற்றியுத் துணாவிலாப் பேயேன்
என்று நின்னரு ளிருங்கடல் குளிப்பதென் னரசே
மன்றி லாடிய குழகமா நீழல்வாழ் மணியே. (சரு)

வஞ்சித்துறை.

மாநீழ னல்லாா
ஆனேறு தொல்லாா
தேனேறு சொல்லாா
வானேறு கல்லாா. (சசு)

ஆசிரியவிருத்தம்.

கல்லாலின் கீழிருந்து கலைவிரித்துப் புணாவளித்த
கள்வ ளுக்குச்
சொல்லாலா யிரமுகமன் கூறுவையக் கச்சியாக்குச்
சுகுண முண்டேல்
வில்லாடும் புயவிதழி விரும்புவையின் றேலின்றே
விழையப் பெய்ருள்
அல்லோடக் கண்டவிட மாயும்வகை யறிவளௌ
வறைதி மாதே. (சஎ)

நேரிசைச்சிந்தியல் வெண்பா.

மாவுடையான் வெள்ளி மலையுடையா னெண்டிசையாந்
தூவுடையா னல்வேதச் சொல்லுடையான்—தாவிலறச்
சேவுடையா னெங்கள்குலத் தே. (சஅ)

ஊசல், ஆசிரியவிருத்தம.

தேவார முதலியவைந் துறப்பும் வாழச்
சிறந்தமறை யாகமங்கள் செழித்து வாழத்
தாவாத சித்தாந்த சைவம் வாழச்
சந்தவணச் செந்தமிழ்நூல் தழைத்து வாழ
நாவாரும் புகழ்க்கச்சி நகரிற் கிாம
நயனியொடு முறைமையிறைசீா நன்கு பாடிப்
பூவாரு மலர்விழியீ ராடி ரூசல்
புத்தமுத நிகர்மொழியீ ராடி ரூசல். (சகூ)

மதங்கி. ஆசிரியவிருத்தம்.

ஆடரவ மாைக்கசைத்த வமலர்திருக் கச்சிமறு காடி வமைந்த
சுடுகைவ பிணைவிழியோ டிணைவாளு மோச்சிவரு மொருமை தங்கீர்

நாடவருந் மிவைக்கிலக்கம் யாதோநும் மொழியமுத நல்கீர் விண்ணோர்
பாடமையப் பயவாரி கடைந்துகரம் வருந்தியதென் பண்டு தானே. (ருo)

## இடைச்சியார். ஆசிரியவிருத்தம்.

பண்டுமலை கொண்டுபயோ தரத்திகலை வென்றிடுமைம்
படையா னுக்கு
மண்டுபயோ தரகிரியைக் காணிக்கை யிட்டீரால்
வள்ளல் கச்சிக்
கண்டயங்கு மிடைச்சியீ ராடைநீக் காதுருசி
காண்மி னென்பீர
கொண்டவனை யுருக்காமே கொளவிணங்கீர் ததியெண்ணீர்
நயமோா விற்றே. (ருக)

## தூது - வண்டு.

நேரிசைவெண்பா

ஓர்காற் செலினறுகா லுற்றனையென் பாவளமை
ஆர்காஞ்சி மேய வமலாதிரு—மாாபாருந்
தாராய கொன்றை நரச்சேறி வண்டேயான்
பேராத வின்பம் பெற. (ருஉ)

## ஆசிரியவிருத்தம்.

பெரியானைப் பேரின்ப நிறைவீட் டானைப்
பிறைமதியம் பிறங்குசடா தரனை யார்க்கு
மரியானை யடலவுணா புரநீ றுக்க
வழலூற்று நகையானை யரனை வேழ
வுரியானைத் திருக்கச்சி யுடையான் றன்னை
யுன்னரிய குணநிதியை யொப்பில் வேதப்
பரியானை யகநிறுவித் துதிப்பா ரன்றே
பவத்து வக்கைப் பாற்றுறுமா டூவாக ளாவார். (ருந)

## வெறிவிலக்கு. ஆசிரியவிருத்தம்.

ஆடவரும் பெண்மைவிரும் பபிராமாக் கணங்குற்ற
வறிவி லேனைச்
சாடவருஞ் சிறுகாலுந் தழன்மதியுஞ் சாகரத்தி
ஞெலியு நெஞ்சம்
வாடவரு மலாக்கணையு மறிவீய விரிந்திடுமோ
வனசத் தானும்
தேடவரு மேகமபா தாமத்தைக் கொணர்வீரேற்
றேறு வேனே. (ருச)

## கட்டளைக்கலித்துறை.

தேறு மனத்தைத் திருப்பித் தெளிவுறச் செய்துபின்ன
ராறுத மும்மை மலப்பிணி நீக்கால், லாற்றினுய்ப்பர்

மாறு வளக்கச்சி மாநிழ லாரு வனன்றனக்குப்
பாறு தரவ மணிந்தவா பேரருள் பாடுதுமே. (ருரு)

கட்டளைக்கலிப்பா.

பாடு பட்டும் பயன்றரு கச்சிவாழ்
பண்ண வன்னடிப் பத்தியில் பாவிகாள்
கூடு விட்டுயிர் போம்பொழு தொன்றையுங்
கொண்டு போதலி லாமையை யுன்னிலீர்
வீடு கட்டுவீர் வெள்ளிபொன் னீட்டுவீர்
வேண்டு நன்மணி யாடையும் பூணுவீர்
ஏடு கட்டிய பாறயி ருண்ணுவீர்
ரொப்ப டிப்பெறு வீர்பொற்ப தத்தையே. (ருசு)

கட்டளைக்கலித்துறை.

பதஞ்சோத்துப் பாடியென் பூசத் தொடாப்பட்டுப் பாவையரிங்
இதஞ்சோத்துக் கொஞ்ச மயங்கி யிடாப்பட் டூரர்குவனங்
கதஞ்சோத் தணைக்கசைத் தாய்கச்சி வாண கடைபனைந்தி
விதஞ்சோத னின்பதந் தாயனை யாய்கதி வேறிலையே. (ருஎ)

கலிவிருத்தம்.

அனைத்திடமு மொளிமருவ வமைந்ததொரு விழியே
மனத்துயரை மாய்க்கவருள் மலர்ந்ததொரு விழியே
சினத்துலகைச் சிதைக்கவழல் சிறந்ததொரு விழியே
நினைத்துலகந் தொழுகச்சி நின்மலர்மூ விழியே. (ருஅ)

ஆசிரியச்சந்தவிருத்தம்.

விழியால் விழியுறு மிறழ்வால் விதுசிகா
நுதலா னுதலுறு சிலையான்மென்
மொழியான் மொழியுறு சுவையாய் முழுநல
முலையான் முலையுறு பொலிவாமபய்
வழியாற் கணிகையு றுறவாய் வலிகெட
வயாவே னினிமருள் மருவாமே
ஒழியா நலனுற வொருமா நிழலுடை
யொளியா சடையவ ரருள்வாரோ. (ருகூ)

சந்தத்தாழிசை.

சடைகரந்த வரவமிழ்ந்து புகைமைமாறு தகைமையார்
தாமறிந்து கருணைநல்கு தனையிறந்த மகிமையார்
மடைதிறந்த கடலையொத்த மருளகறு மருளினோ
[illegible] மலைகுழைத்தென் விறல்மதன்

படைதுரந்து நெஞ்சிருப்பு வஞ்சரோன் குழைத்திலர்
பகரொணாத பண்பமர்ந்த பரமரின்னு மருகுரு
திடைமறந்த தெனமொலோவெ னிளமைநன் னலம்பெறத்
தெனையணைந்த கச்சிமேவு மிணையிகந்த போதரே. (சுo)

## கட்டளைக்கலித்துறை.

போதவித் தேபுக லேயற வோர்க்கும் புந்தகையரா
நீதவித் தேற்குற செவ்விய னேபுலத் தெவ்வடர
வேதவித் தேமிக வேசறு வேற்கு விரைம்நருணீங்
காதவித் தேன்சுர ருன்கச்சி வாழும்பாக் கண்ணியனே. (சுக)

## நேரிசைவெண்பா.

அண்ணியரா ஞரறவோர்க் கத்த ரலரிதழிக்
கண்ணியாபூங் கச்சிநகாக் கத்தரடி - மண்ணியமுத்
தந்தம்பந் பந்தாம் தனைந்தம் தனவிடையாா
தொரம்நங்கொ ளென்றன் றுணை. (சுஉ)

## ஆசிரியவிருத்தம்

துன்னிமித்தங் கண்டுமஞ்சா தொருதுணையும் பிணையாது
துனைந்து சென்று
பொன்னிமித்தந் சிலைசுமந்து முறுவலித்துப் புரமெரித்த
புராதீ ரொந்தாய்
என்னிமித்த மென்னகத்தே குடிபுகுந்தாய் திருக்கச்சி
யிறைவா வேழை
தன்னிமித்தந் திருவுள்ளங் கனிந்ததன்றித் தகுதிமற்றென்
றருக்கி னேற்கே. (சுங)

## ஆசிரியவிருத்தம்.

தருக்குறு தெரிவையா செருக்கிலே
தனையிடு மவாமொழி யுருக்கிலே
மருக்கமழ் குழலணி சொருக்கிலே
மனமிவ ரிளமுலை நெருக்கிலே
பெருக்குறு விழைவமா திருக்கினேன்
பிசிதரு மறைமுதல் பிறைபினே
டெருக்கணி கச்சியி னிறைவனே
ரிரங்குறு வகையெது புகல்வனே. (சுச)

## மடக்கு. ஆசிரியவிருத்தம்.

கற்றரு மாதின் பங்குடையார்
கச்சிய ரெனதிப் பங்குடையார்
சிற்றனை யுள்ளுறை வாயலவா
தென்வளி காதுறை வீயலவா

சுற்றுமு டைந்து வருந்திடோ
தோற்றுமி டைந்து வருந்திடோ
பெற்றிடு முத்தம ருங்கழையே
பேசரி யானாம ருங்கழையே. (௬௫)

பனிக்காலம். ஆசிரியச்சந்தத்தாழிசை.

அழைக்காம லணுகாவெவ் வலாகூர மாய்வே
னையோவெ னையாக்கு றைப்பாரு மில்லை
கழைக்காம னெய்யுஞ்ச ரந்தைக்க நொந்தேன்
கண்ணாள ரிந்தப்ப னிக்கால மோரார்
குழைத்தாரபொ ழிற்கச்சி வாழண்ண லானைக்
கும்பிட்ட ழைப்பீரு ழைப்பீம னத்தைப்
பிழைத்தேனை லேனென்று பிச்சாக்கி யம்பீர்
பெண்பேதை யுய்யுந்தி றம்பாங்கி மாரே. (௬௬)

மடக்கு. ஆசிரியவிருத்தம்.

மாதனையிற் றருகுறும்பூ விளைவிடுக்குங் காலம்
மதன்சினந்து மங்கையரை விளைவிடுக்குங் காலம்
காதமணங் கமழ்சோலை பண்புணருங் காலம்
கணவரிளம் பேதையர்தம் பண்புணருங் காலம்
சிதம்முறு கழைக்கரும்பின் கண்டழைக்குங் காலம்
சிற்றிடையார் நந்தலைவர்க் கண்டழைக்குங் காலம்
கோதறுசங் கினம்பழனப் பங்கமுறுங் காலம்
குலவுகச்சி யாரபிரியப் பங்கமுறுங் காலம். (௬௭)

வஞ்சிவிருத்தம்.

உறுமன் கச்சி யுத்தமயான்
துறவுங் கொள்ளேன் றூய்மையிலேன்
அறமும் புரியே னமைவில்லேன்
பெறவுந் தருமோ பேரின்பே. (௬௮)

இன்னிசைவெண்பா.

இன்படைய வேண்டி னிலேலறக - வன்பிறவித்
துன்பொழிய வேண்டினவந் துன்னற்க - அன்புருவாம்
போதனருள் வேண்டுமெனிற் பொய்யற்க - சூதகலச்
சூதவிழ லான்கழலைச் சூழ். (௬௯)

நேரிசைவெண்பா.

சூழுந் தளையாய தொல்லைப் பிறவியினைப்
போழு நவியமாம் புத்தேளிர் — ஏழுலகம்
பொன்று வளக்கச்சிப் பூங்கொன்றைக் கண்ணியர்தம்
(௭௦)

கலிநிலைத்துறை.

பச்சைசி றப்புடைந் தொடிவல மேவிய பசுபதியுள்
நச்சின ரொன்றிலு மெச்சமு ருதரு ணனிசூர்வான்
கச்சியு றைந்தருள் கண்ணுதன் மறலிக் கண்டகனுல்
அச்சமு ருதடி யவாமுன மந்தத் தணுகுவனே. (எக)

மடக்கு. ஆசிரியவிருத்தம்.

அணங்காறு தலையுள்ளா ரழக ரொன்மா
னணங்காறு தலையுள்ளா ராகு ரந்தோ
வணங்கூடு தலனலைப்பற் றுற்று மின்னுள்
வணங்கூடு தலனலைப்பற் றறுத்த லோரார
கணம்புரத்தைச் சாம்பருவந் திழைத்தூர கன்னற்
கணம் புரத்தைச் சாம்பருவங் குலைப்ப துன்னா
பணமொளிக்கும் பணிதரித்தார கச்சி யீசா
ணமொளிக்கும் பணிபரித்தார் பான்மை யுற்றே. (எஉ)

கட்டளைக்கலிப்பா.

உற்றுப் பாரக்கிலுன் வாழ்க்கையென் னையமே
யூரும் வெட்ட வெளியுடை தோலுலாப்
பெற்றுப் பாரக்கு ஞறுஞ்சக மில்லையாற்
பேதை நின்னையென் பெறுதிடப் பற்றினள்
கற்றுத் தேர்ந்த பெரியவா வாழ்திருக்
கச்சி மாநகரக் கத்தவென் னத்தனே
பற்றி லாருளம் பற்றுறு பங்கயப்
பாத னேபடப் பாம்பணி காதனே. (எந)

ஆசிரியவிருத்தம்.

படவரவ மரைக்கசைத்த பரமா வாழும்
பதிக்கச்சி மேயவிளம் பாவை கொங்கை
தடவரையே கரிக்கோம்பே சகோர மேமாந்
தளிர்மேனி தமனியத்தி னொளியே கண்கள்
விடவடிவே யாசுகமே வேலே சேலே
மென்மருங்குன் முயற்கோடே விழைந்தே னெஞ்சஞ்
சுடவகைதேர் புருவமதன் சிலையே துண்டஞ்
சுடர்க்குடையே சுந்தரிதூந் தருவ மானே. (எச)

தவம். கட்டளைக்கலித்துறை.

மான்கொண்ட கண்ணியர் மையலற் றேதவ வன்மைமரீஇ
யூன்கொண்ட துன்பை யொழிக்கத் தலைப்படு மூத்தமர்காள்
வான்கொண்ட வுச்சி வரைமுழை புற்று மயர்வதெவன்
கான்கொண்ட சொன்னியர் கச்சியை மெய்யிற் கலியுமனே. (எரு)

இரங்கல். ஆசிரியச்சந்தவிருத்தம்.

எந்தவம்பு தைக்குமுன்ன மற்றொருபகழி தொட்டுவே
ளேழையங்க ணைந்துதேய வட்டுமாரி பொழிகின்றான்
செய்தவம்பு ரிந்திலாதெ னுய்யுமாறு முண்டுகொல்
திகழுமாட மதியுரிஞ்சு கச்சிமேய செம்மலார்
கைதவங்க ணங்கியான்மன் மதனைவென்ற காதையெங்
காதலுக்கி யின்பளிக்க நோவரல்ல ரோவனை
வைதவம்பு நோக்கியேனு மனமுவக்க வந்திலா
மாதர்நோவ வெய்துசெல்வ மென்னவாக்கு மங்கையே. (எசு)

நேரிசைவெண்பா.

என்னபிழை செய்தாலு மேழையே னுக்கிரங்கு
மன்னுபுகழ்க் கச்சியுறை வள்ளறான் - துன்னுமயன்
கம்மாள னீசன் கடையன் பொதுவனென்பேன்
கைம்மாறென் செய்வனோ காண். (எஎ)

சம்பிரதம். ஆசிரியவிருத்தம்.

காற்றைப் பிடித்தொருசிறு கூரகத்துண் மூடுவேங்
கனலைவா ளொங்கவிடுவேம்
சேற்றைப் பிசைந்துசில தேவராயு மாக்குவேஞ்
சீதரனை மாலாக்குவேம்
ஆற்றைச் செலுத்தியரி யேறவைப் பேழுமுதை
யாவலுடன் வாரியுண்பேம்
நீற்றைப் புனைந்தவர் திருக்கச்சி போன்றதல
நோதருஞ் சத்தி யெமதே. (எஅ)

கட்டளைக்கலிப்பா.

சட்டப் பட்டவு ளம்பெற்ற சால்பினோ
தங்கப் பெற்றகச் சிப்பதிச் செல்வவேள்
குட்டப் பட்ட தலைவிதி யென்றலை
கொடுமை கூரெழுத் திட்டனன் மாதாவார
கட்டப் பட்டத னம்பிறை வாணுதல்
கடுவ டங்கிய கண்ணின்ம யங்குவேம்
இட்டப் பட்டமட் டின்பமும் வாய்க்குமோ
வீசனேயரு ளேசவி லாசனே. (எகூ)

ஆசிரியவிருத்தம்.

அருணைப் பதியி னழலுருக்கொண்
டமைந்த கச்சி யங்கணர்முன்
பெருமைப் புரத்தை யழிவெப்பும்

கருமைப் பகடோ காலனைக்காய்
வெப்புந் தணியப் பழவடியாா
அருமைத் தமிழின் னமுதூறு
மழையைச் சொரிந்தார தெரிந்தாரே. (அ0)

கொச்சகக்கலிப்பா.

மழைகொண்ட வுச்சியினா வளங்கொண்ட கச்சியினார்
உழைகொண்ட கரத்தொழிலு முமைகொண்ட விடத்தெழிலுங்
கழைகொண்ட மதவழியுங் கனல்கொண்ட நுதல்விழியும்
இழைகொண்ட வுரத்தழகு மெமக்கினிய வமுதாமே. (அக)

**கோற்றியார்.** ஆசிரியவிருத்தம்.

ஆகமமீன் கோலமுறு மங்கமரீஇ யரவிடையா
லகடு மேவி
மாமையுரு வோடுவளை சக்கரமேந் தித்திகழும்
வகையாற குல்லைத்
தாமனையொப் பீரைந்து சாருஞ்செய்துயர் நீக்கியரு
டந்து காப்பீா
கோமளவா ழிடத்தாகச்சி மறுகுலவு துளவமணக்
கொற்றி யாரே. (அஉ)

கொச்சகக்கலிப்பா.

மணக்கோலஞ் செய்ய மதனன் முயல்கின்றான்
கணக்கோலங் கொங்கைக் கிடவந்தீர் கட்செவிமால்
குணக்கோலன் கச்சிக் குழகன் றிருவுலா
வணக்கோலங் காண வருவீர் மனமகிழ்ந்தே. (அ௩)

கட்டளைக்கலித்துறை.

மதுவிருந் தேயளி பாடுந் தொடைபுனை மன்னருமிங்
கெதுவிருந் தேனும் பெறுமின்ப மென்கச்சி யீசனைவான்
புதுவிருந் தேபுண்ட ரீகன் முராரி புரந்தரனைப்
பொதுவிருந் தேவல் கொளும்பெரு மானெனப் போற்றுவனே. (அச)

இதுவுமது.

போற்றப்பல் பாவுண்டு கேட்கச் செவியுண்டு பூப்பறித்துத்
தூற்றக் கரமுண்டு தாழச் சிரமுண்டு தோத்திரங்க
ளாற்றச்செந் நாவுண்டு தென்கச்சி வாணருண் டல்லலெலா
மாற்ற வருளுண்டு நெஞ்சே துயரெவன் மற்றெனக்கே. (அரு)

கொச்சகக்கலிப்பா.

எனக்கே துணைதருளை யெண்ணுமிய லென்றுயர
முனக்கே தெரியுமகக் கேற்ற துயரமெலா
மனக்கே தெரியுமக வாயுங்கொ லன்னைசெயல்
கனக்கேசுந் தீர்க்கருள் [illegible] (அசு)

கட்டளைக்கலித்துறை.

கணங்கொண்ட பாசத் தொடரறுத் துய்யுங் கருத்துடையிர
மணங்கொண்ட தண்டலை சூழுந் திருக்கச்சி மாநகர்வாழ்
நிணங்கொண்ட சூலப்படை நின்மலன் றனை நிதந்தொழுமின்
பணங்கொண்ட பாம்பின் விடங்கொண்ட கண்ணியர் பற்றஞ்சியே. (அஎ)

மடக்கு. கட்டளைக்கலிப்பா.

பரவை யாலம் பருகிய வண்ணலின்
பரவை யாலம் பயின்றொரு நால்வர்க்குந்
தெரிவை யங்கடி செய்யாட ரவையாந்
தெரிவை யங்கடி யர்க்கருள் செம்மலார்
சிரமந் தாங்கினிச் செஞ்சடை யாதொண்டா
சிரமந் தாக்கு திருக்கச்சி நாதர்தீ
யரவ மாலை யழித்தெனைக் காப்பரால்
அரவ மாலை யணிந்தருள் கூத்தரோ. (அஅ)

தழை. ஆசிரியவிருத்தம்.

கூத்தனார் மகிழ்ந்த கச்சிவெம் புடையாய
காமனு மயர்க்குறு கவினறா
அத்தநீ யளித்தி மாந்தழை யரிவைக்
காருயி ரளித்தகா ரணத்தால்
ஈத்தனு மநுமன் சரிகிக் களிந்த
துணையமை யாழியோ விந்த
சித்தனுன் மடிந்த கவிக்குலம் பிழைப்பச்
செய்தசஞ் சீவியோ தானே. (அகூ)

குறம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தாளமிரண் டென்னுமுலைத் திருவனையாய நாளோர்
தரணிபுகழ் கச்சிநகர்த் தலைவனைநீ புணரும்
வேளையறிந் துரைத்திடுவன் விரைந்தொரடி நெல்லும்
வெறுந்தலைக்கென் னெயும்பழைய கந்தையையுங் கொடுவா
காளவுருக் காமவிழிக் கன்னிநினைக் கந்நாட்
கருதியொரு குணங்குறியு மரியவாக்கோர் குணமுங்
கோளகலக் குறியிரண்டுங் கொடுப்பவெனமொழிந்தோன்
குடியுதித்த குறமகள்யான் குறிக்கொளென்றன் மொழியே. (கூ0)

பிச்சியார். ஆசிரியவிருத்தம்.

என்னதவஞ் செய்தேனோ வுமைக்கம்பா திருக்கச்சி
யிடையே காணத்
துன்னவரு முடனீறுங் கஞ்சுளியினோடு செங்கைச்

பொன்னனைய திருமேனிப் பொலிவுமே யெனைமயங்கப்
புரியுங் கண்டீர்
அன்னநடைக் கன்னன்மொழிப் பிச்சியீ ரணிமுறுவ
லதிக மன்றே. (௯௧)

## ஆசிரியவிருத்தம்.

அதிக மன்றெளி யேன்துயர் புரிந்திடு மறக்கடை யாயுங்காற்
றுதிகொ ளேகம்ப வாணனா் தூயவ ரிதயவா லயத்தூடு
சுருதிகொ ளின்புரு வாயவா மாதொரு கூறுடைக் கோமானா்
நதிகொள் வேணியா நாடுவோா நமக்கமை நலத்தினைத் தெரிந்தாரே. ()

## ஊர். நேரிசைவெண்பா.

தெரிந்தா மலாத்தடத்தின் றெண்ணீர் துலைக்கோல்
பரந்தாழுங் கச்சிப் பதியே—கரந்தாழ்வெண்
மாதங்கத் தானத்தன் வாரிசூத்த னேடரிய
மாதங்கத் தானத்தன் வாழ்வு. (௯௩)

## ஒரொலிவெண்டுறை.

வாழ்வளிக்குந் திருவிழியாா மறையளிக்கு மருமொழியாா வணங்கி னோர்தந்
தாழ்வகற்று மலாப்பதத்தாா தளாவகற்று மைம்பூதத்தார் தணணர் திங்கட்
போழ்வதியும் புரிசடையாா புகழ்க்கச்சி மேய
ஆழ்கருணை மாகடலை யடிபணிமின் கண்டீர். (௯௪)

## இரட்டை ஆசிரியவிருத்தம்.

கரத்தின் வளையுஞ் சுழிவளையுங்
கனிந்த மொழியாற் புனைவளையுங்
கலையு மணியு மேகலையுங்
கல்வி பயின்ற கலையறிவும்
புரத்தின் வனப்பு நூபுரமும்
புனைதீ ரகத்தின் வற்புரமும்
பொலன்றோ டணையும் பூவணையும்
புரியும் பணியும் பொற்பணியும்
வரத்தி னுதித்தா ளொழித்தாளம்
மடமா னுடன்மொழித்தாளும்
வளமா வடியீ ருமைச்சரண
மருவப் பெற்றா ளாதலினாற்
சிரத்தி னலைமான் வைத்தீர்நுஞ்
செந்தா மரைத்தாட் கீழேனுஞ்
சேருந் திறத்தை யறிவாளே
செறியான் மகளை வென்றிடவே. (௯௫)

### இரங்கல். மடக்கு.
### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மதனைவென்றவர் நஞ்சமாந்தவர் வலியர்முண்டக முள்ளியே
மகிழ்வர்வந்திலா மாலைதந்திலா துயர்வதுண்டக முள்ளியே
சதமிருந்தெழு மத்திரீத்துறைப் பெடைபிரிந்தில கம்புளே
கவலைகூரவு குற்றிமேவுறு நறைசொரிந்தில கம்புளே
மதியினைறறரு முத்தமேயவா தருவதென்றரு முத்தமே
பணியுயிரத்திரை சங்கமேயிர வொன்றுபற்பல சங்கமே
நிதிதருந்தவ வங்கமேயினி யடைவதுந்தவ வங்கமே
நெடியனுந்தொழு கம்பமேயுறை நிமலர்திரப்பர்சொல் கம்பமே. (ரு௰)

### செவியறிவுறூஉம் மருட்பா.

கம்பத் திருந்துதவுங் கண்மணியைச் சிந்தித்து
நம்பத் திருந்துவீர் நானிலத்தீர் - வெம்பும்
பிணியு மூப்பும் பீடழி பழியுந்
தணியா வறுமைத் தாழ்வுந் தீரும்
திருவரு ளமக்குச் சிவனத்
தருவ னன்னோன் சற்குரு வாயே. (ருக)

### இரங்கல். இரட்டையாசிரியவிருத்தம்.

குருகு நெகிழுந் திறநவில்வாய்
கழிசேர் நருகே குருகழியக்
கொங்கை திதலை பூப்பவுளங்
குலைந்தே யுடைய வுடைசோரப்
பருகும் பாலு மருந்தனமும்
பகைக்கு மருந்தென் றறையனமே
பழுவ மனைய குழல்பூவைப்
பரியா மையைச்சொல் பூவையே
அருகு பயின்ற கிளேயேயென்
கிளேயால் வந்த தந்தனையு
மளந்த படியே யளந்தாலு
மதுவே சாலு மளியினமே
முருகு விரிபூம் பொழிற்கச்சி
மூவா முதல்வ ரளியினமு
முறையோ வளியேற களியாமை
கேளீ ரிதனைக் கேளீரே. (ருஉ)

### இரட்டை யாசிரியவிருத்தம்.

கேளா துறற கிளேயொறுப்பீர்
கேத முறுவீர் கெடுமதியாற
இளிவாய் வரைவின் மகளிர்பாற்
இட்டு மயங்கித் தியங்குவீர்

வாளா கழிப்பீர் வாழ்நாளை
வசையே பெறுவீர் வல்வினையீர்
வளமாந் தருவா யுலகுய்ய
வந்த கருணை யார்கலியைத்
தோளா மணியைப் பசும்பொன்னைத்
தூண்டா விளக்கைத் தொழுவார்தந்
துயரக் கடற்கோர் பெரும்புணையைத்
துருவக் கிடையா நவநிதியை
வேளா டலைமுன் றீர்த்தானை
வேழ வுரியைப் போர்த்தானை
வெள்ளம் பாய்ந்த சடையானை
வேண்டிப் புரிமின் றொண்டினையே. (௯௯)

## ஆசிரியவிருத்தம்.

தெரிண்டர் சிரத்தின் முடிக்கும்பூ
தொழுவா ரிதய நடிக்கும்பூ
அலன்டர் முடியிற் றுலங்கும்பூ
அருமா மறையி னிலங்கும்பூ
பண்டை வினைப்பற் றழிக்கும்பூ
பணிவா ரல்ல லொழிக்கும்பூ
மதண்ட னிடுவோர்க் கருள்கச்சித்
திருவே கம்பா பதப்பூவே. (௪௦௦)

## கச்சிக்கலம்பகம்

முற்றுப்பெற்றது.

